श्रीः

श्रीमते श्री रङ्गरामानुज महादेशिकाय नमः
श्रीमते वेदान्तरामानुज महादेशिकाय नमः
श्रीमते निगमान्त महादेशिकाय नमः

# ।। श्रीमद्रहस्यत्रयसारम् ।।

## भागम् – ४

## ।। अनुबन्धः ।।

## ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

(பாகம்-4) அநுபந்தம்

परिशोधकः

श्रोत्रियं पैयम्बाडि-चेट्टलूर् , श्री. वा. श्रीवत्साङ्काचार्यः
नडादूर् तिरुक्कुडन्तै, श्री.उ.वे. व. नरसिंहाचार्यः

श्रीरङ्गं श्रीमदाण्डवनाश्रमः
Srirangam Srimad Andavan Ashramam, Chennai.
2011

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்
## பாகம்-4
## அநுபந்தம்

### பொருளடக்கம்

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் (ஸ்ரீமுஷ்ணம்) ஸ்ரீ ரங்கராமாநுஜ மஹாதேஸிகன்

श्री:

श्रीमते श्री रङ्गरामानुज महादेशिकाय नमः

श्रीमते वेदान्तरामानुज महादेशिकाय नमः

श्रीमते निगमान्त महादेशिकाय नमः

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ।।

# திருக்குடந்தை ஆண்டவன்
# ஸ்ரீமத் வேதாந்த ராமாநுஜ மஹா தேசிகன்
## அருளிய
# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார ஸங்கிரஹம்

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் என்னும் திருமந்த்ரம், த்வயம், சரம ச்லோகம், என்கிற ரஹஸ்யங்களின் அர்த்தங்களை விளக்குகிற கிரந்தம், ஸுப்ரஸித்த வைபவமாய்ப் பிறவிக்கடலுள் நின்றுழலுகின்ற ஜீவர்களைக் கரையேற்ற வல்லதாய் ச்ரிய: பதியான ஸர்வேச்வரனுக்குப் பிரியதமமுமாய் விளங்குகிறதென்பது நாடும் நகரமும் நன்கறிந்த விஷயமே!

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தை ஆசார்யனிடம் காலக்ஷேபம் பண்ண உபக்ரமிக்கும் போது ஸ்ரீ குருபரம்பராஸாரம் என்னும் சிறியதோர் கிரந்தத்தைக் காலக்ஷேபம் செய்துவிட்டு தான் ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயத்தை ஸேவிப்பது வழக்கம். ஆனதுபற்றி குருபரம்பராஸாரம் ரஹஸ்ய த்ரய ஸாரத்தோடு ஏகக்ரந்தம் என்றும் பணிப்பாருண்டு. ஆகிலும் முப்பத்திரண்டு அதிகாரங்கள் எனப் பேசப்பட்ட ரஹஸ்யத்ரயஸாரத்தில் இந்நூல் சேராமலிருப்பது பற்றி இது தனி நூல் என்பதே உசிதம். எப்படியிருப்பினும் குரு பரம்பராஸாரம் காலக்ஷேபம் செய்துவிட்டு, பிறகுதான் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் ஸேவிப்பது ஸம்பிரதாய ஸித்தம். ஆதலால் குரு பரம்பராஸாரத்தில் ஆசார்யன் அருளிய விஷயங்கள் சுருக்கமாக விக்ஞாபிக்கப் படுகிறது.

## குருபரம்பரா ஸாரம்

எல்லா ஜீவன்களும் மோக்ஷமடைவதற்குக் காரணம் ஆசார்யன். ஆசார்யன் அருளாலேயே மிகுந்த பாபியான கத்திரபந்து என்பவனும், புண்யவானான புண்டரீகனும் மோக்ஷத்தை அடைந்தார்கள். ஆசார்ய பரம்பரையை பகவான் வரையில் அநுஸந்திக்க வேண்டும். எல்லா உலகங்களுக்கும் முதலாச்சார்யன், ச்ரிய: பதியான நாராயணன்.

ஆதியில் ஸ்ரீமந் நாராயணன் ப்ரம்ம தேவனை ஸிருஷ்டி செய்து அவனுக்கு வேதங்களை உபதேசித்தான். அந்த வேதங்களை மதுகைடபர்கள் திருடிச் சென்ற போது பகவான் மீட்டுக் கொடுத்தான். ஸநகாதிகளான ரிஷிகளைக் கொண்டு லோகத்திற்கு ஹிதம் செய்வித்தான். வியாஸர் முதலானவர்களை அநுப்ரவேசித்து மஹாபாரதம், ப்ரஹ்மஸூத்ரம் முதலிய கிரந்தங்களைச் செய்தருளினான். ஹம்ஸ,மத்ஸ்ய, ஹயக்ரீவ, நரநாராயண, கிருஷ்ணாதிகளாக அவதாரம் செய்து ஹிதோபதேசம் செய்தான். புதிதாகப் பத்து ஆழ்வார்களாக அவதாரம் செய்து திவ்யப் பிரபந்தங்களை அருளிச் செய்தான். ஆனது பற்றி, பகவான் ஆசார்யனாகிறான். பகவான் வரையில் ஆசார்யர்களின் வரிசையை அநுஸந்திக்க வேண்டும். இவ்வாசார்யர்களில் ஈச்வர முனிகளின் பிள்ளை நாதமுனிகள். இவருக்கு நம்மாழ்வார் ஆசார்யர். நாதமுனிகளின் பிள்ளை ஈச்வரப் பட்டாழ்வான். அவர் பிள்ளை ஆளவந்தார். ஸ்ரீமந் நாதமுனிகளின் சிஷ்யர் உய்யக் கொண்டார். அவர் சிஷ்யர் மணக்கால் நம்பி. அவர் சிஷ்யர் ஆளவந்தார். அவர் சிஷ்யர் பெரிய நம்பி. பெரிய நம்பிகளின் சிஷ்யர் எம்பெருமானார் என்கிற ஸ்ரீராமாநுஜர். ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீஆளவந்தார் சிஷ்யரான திருக்கோட்டியூர் நம்பிகளிடம் ரஹஸ்யார்த்தங்களை சிக்ஷித்தார் (அறிந்தார்). திருமாலை ஆண்டானிடம் திருவாய் மொழியைக் கேட்டார். ஆளவந்தாராழ்வாரிடம் திருவாய் மொழியுமோதி ஸ்தோத்ரங்களும் அருளிச் செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினார். திருமலை நம்பி ஸ்ரீபாதத்தில் ஸ்ரீமத் ராமாயணம் கேட்டருளினார். ஸ்ரீபகவத் ராமாநுஜர் திருவடிகளில் ஆச்ரயித்த முதலிகளை, தம்தம் ஸம்பிரதாயப் படிகளிலே அறிந்து கொள்ள வேண்டும்.

ஜீவனுக்கு ஆசார்ய பக்தி இருக்க வேண்டும். ஆசார்ய பக்தி உள்ளவனுக்குத்தான், ஆசார்யன் உபதேசித்த பொருள்கள் தெளிவுடன் விளங்கும். பகவானிடம் போல் ஆசார்யனிடமும் பக்தி பண்ண வேண்டும். ஆசார்யனைப் பிரகாசிப்பிக்க வேண்டும். அபாத்ரங்களில் மந்திரங்களை உபதேசிக்க லாகாது. ஆசார்யனைப் பிரகாசிக்காது மறைத்து வைத்தாலும், மந்திரங்களை வெளிப்படுத்தினாலும் ஸம்பத், ஆயுள் குறைந்து விடும்.

ஆகையால் ஆசார்யனிடம் பக்தி செய்தல் அவசியம். ஆசார்யனுக்கும், ஆசார்யர்களான பரமகுருக்களிடமும் பக்தி பண்ண வேண்டும். நாம் மந்திரங்களை அநுஸந்திக்க வேண்டும். அவ்வாசார்யபரம்பரையிலும் எம்பெருமானார், ஸ்ரீஆளவந்தார், நாதமுனிகள் இவர்கள் பல க்ரந்தங்கள் செய்து உபகரித்திருப்பதால் அவர்களிடம் விசேஷமாக அதிக பக்தி செய்தல் வேண்டும்.

## ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸார ஸங்கிரஹம்

### 1. உபோத்காதாதிகாரம்

*ச்ருத்யந்த லக்ஷ்மணமுநிம் ச்ருத்யந்தாந்வய பாரகம் ।*
*ச்ருதிஸம்பாவிதா சாரம் ச்ரயேஹம் யதிசேகரம் ॥*
*ஸ்ரீநிவாஸ யதீசாநம் தேசிகேந்திரமஹம் பஜே ।*
*யத்க்ருபாலேசத: ஸத்தாம் உபாயாதோஹம் அல்பதீ: ॥*

உபோத்காதம் என்றால் முகவுரை என்று பொருள். இப்புத்தகத்திற்கு முகவுரை இவ்வதிகாரம். இவ்வாத்மாவுக்கு பகவானை அடைந்து அவன் திருவடிகளில் கைங்கர்யம் செய்கையாகிற பிரயோஜனத்தை உத்தேசித்து இந்தக் கிரந்தம் செய்யப்படுகிறது. இவ்விஷயத்தில் சில கேள்விகள் உதிக்கின்றன. 'இக்கிரந்தம் செய்ய வேண்டியது அவச்யம் தானா? கைங் கர்யம் செய்வது கஷ்டமாதலால் அது தான் பிரயோஜனமாகுமா? ஆயினும் பகவான் கைங்கர்யத்திற்கு நித்ய ஸூரிகள் தகுதியுள்ளவர்களோ? தகுதி யிருந்தாலும் இவ்வளவு காலம் ஏன் அதை இழந்திருக்க வேண்டும்? இவ்வளவு நாள் இழந்திருந்த நமக்கு இனிதான் கிடைக்குமோ?'' என்ற பல விதமான கேள்விகள் ஏற்படும். அவைகளுக்கு பதிலுரைத்து இந்தக் கிரந்தம் அவச்யம் அருளிச் செய்ய வேண்டியது தான் என்று இந்த அதிகாரத்தில் பேசுகிறார்.

ஒரு ராஜா அந்தப்புரத்துடனே வேட்டைக்குச் சென்றான். அக் காட்டிலே வேட்டையாடி விளையாட்டிலே ஈடுபட்டான்; மீண்டும் நகரம் வந்தான். அரண்மனையில் வந்த வளவிலே வார்த்தை பேசவுமறியாத தன் புத்திரனைக் காணவில்லை. அவன் காட்டிலே வழி தப்பிப் போனான். ராஜா மிகவும் அனுதாபப்பட்டான்; தேடினான். ராஜகுமாரன் அகப்பட வில்லை; அப்புத்திரனும் எடுத்தார் கைப்பிள்ளையாய் ஒரு வேடு வச்சேரியிலே வேடர்களின் ஆகாரத்தை உட்கொண்டு வளர்ந்தான். அவர்கள் பேச்சே அவனுக்கும் பேச்சாகி விட்டது. அவர்கள் கார்யமே அவனுக்கும் கார்யமாகிவிட்டது. இப்படியே காலம் சென்றது. இவ்விஷ

யத்தையறிந்த சில தார்மிகரான முனிவர்கள், அந்த ராஜகுமாரனைக் கண்டு கிட்டி, ''நீ வேடனல்ல, ராஜகுமாரன். மிருகங்களை அடித்துத் திரிகிறது உனக்குத் தொழிலல்ல; நீ உன்னை வேடனாக நினைத்து இக்கார்யங்களைச் செய்கிறாய். உடம்பில் மாம்ஸ ருதிரங்களின் வாசனை உனக்குத் தகுதி அல்ல, நீ சுத்தனாயிரு. மிருகங்களைக் கொல்லாதே! நீ அரசனாகி விடலாம். உன்னை உன் பிதாவான அரசன் தேடியும் நீ அகப்படவில்லை. ஆதலால் உன்னைக் கை விட்டான். அவனுக்கு நீ அரசனுக்குரிய குணங்களோடு இருப்பதாகத் தெரிவித்தால் அவன் உன்னை அழைத்துக் கொண்டு போய் உனக்கு ராஜ்யத்தைக் கொடுப் பான்'' என்று உபதேசித்துத் திருத்தி வைத்தார்கள். பிறகு சில ராஜாக் களுக்கு அந்தரங்கர்களான மனுஷ்யர்கள் அவனைக் கண்டு, அவனை அரசனிடம் அழைத்துச் சென்று, ''உன் புதல்வன்'' என்று சொல்லி அவனிடம் சேர்ப்பித்தார்கள். அரசனும் மகிழ்ச்சியுடன் பெற்று, அவனுக்கு அபிஷேகமும் செய்வித்தான். அதுபோல ஜீவாத்மாக்கள் பகவானுடைய திருமார்பிலுள்ள கௌஸ்துபரத்னம் போன்றவர்கள். பகவானுக்கு மிகவும் பிரியமானவர்கள். அனாதி காலமாகப் பண்ணின கர்மங்களாலே பகவானை இழந்திருக்கிறார்கள். சில தார்மிகர்கள் ராஜகுமாரனுக்கு உபதேசித்தாற் போல் ஜீவன்களுக்கு உபதேசித்து, ஐம்புலன்களால் அநுபவிக்கும் சுகத்தில் வெறுப்பை உண்டாக்கி, நல்ல வர்ணாச்ரம தர்மங்களை அநுஷ்டிக்கும்படிச் செய்விக்கிறார்கள். பிறகு பகவானுக்கு அந்தரங்கர்களான ஆசார்யர்கள் அவனை நெருங்கி, '' ஜீவன் உடம்பு அல்ல, இந்த்ரியங்களல்ல. பசு-பக்ஷி களல்ல, ஞானரூபன். பகவானுக்கு தாஸன். அவ்வீச்வரனுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டியவன்.'' என்கிற உண்மையை உணர்த்தி பகவானிடமும் சொல்லி பகவான் இந்த ஜீவனைச் சேர்த்துக் கொள்ளும்படி செய்கிறார்கள். வேடனாயிருந்தவன் அரசனானாற்போலே நாமும் பகவானை அடைந்து கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை அடையலாம். நித்யஸூரி களைப் போல நாமும் கைங்கர்யம் பண்ணத் தகுதியுடையவர்களே! கைங் கர்யமும் துக்கமாயிராது. சுகமாகவிருக்கும். கர்மங்களால் ஏற்படுகிற கைங் கர்யம் தான் துக்க ரூபம்.

ஸர்வேச்வரனிடம் செய்யும் கைங்கர்யம் ஸுகரூபம். ஏழையாயிருப் பவன் பணக்காரனாவதில்லையா? மூடன் ஞானவானாகி விடுவதில்லை யா? ஜீவனுடைய கர்மங்கள் பாபபுண்யங்களாய்க்கலந்து மாறிமாறிச் சுழல் கின்றன! ஒரு நல்ல கர்மம் பலம் கொடுக்க வரும் போது அதின் பலமாய் ஆசார்ய ஸம்பந்தம் ஏற்பட்டு பகவத் கிருபையைப் பெற்று மோக்ஷத்தை அடைந்து விடலாம். ஆகையால், முக்தியடைகிற ஜீவனுக்கு அம்முக்தி ஸாதனங்களான தர்மங்களும் அறிய வேண்டியதற்காக இந்தக் கிரந்தம் செய்ய வேண்டியது அவசியம் என்று தலைக்கட்டினார்.

## 2. ஸார நிஷ்கர்ஷாதிகாரம்

இந்தக் கிரந்தத்தில் திருமந்த்ரம், துவயம், சரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களின் பொருள் உரைக்கப்படுகிறது. "முக்தியை ஆசைப் படும் அவர்களுக்கு ஸாங்கியம், யோகம் முதலிய விஷயங்களைப் பேசலாம். அல்லது வேதத்தின் பூர்வ பாகத்தில் சொல்லப்பட்ட கர்மாக் களைப் பற்றி விசாரிக்கலாம். அவைகளை விட்டு ரஹஸ்யத்ரயங்களைப் பேசுவது எதற்கு?'' என்று கேள்வி பிறந்தால், அதற்குப் பதிலாக இந்த அதிகாரம் பேசப்படுகிறது.

தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் பல. கரையல்லாத கடல் போல் பல சாஸ்திரங்களிருக்கின்றன. நமது ஆயுட்காலமோ குறைவு. வாசிப்பதற்கு இடையூறுகளோ பலவுள. ஆதலால் எது மிகவும் ஸார மானதோ அதை, ஜலம் கலந்த பாலில் அன்னப்பறவை பாலை மாத்திரம் அருந்து மாப்போல, கற்றுணர வேண்டும். வேதத்திற்கு விரோதமாயுள்ள ஜைன புத்தாதிகளுடைய உபதேசங்களான மதங்கள் அஸாரங்கள்; விஷம் போல் ஆத்மாவை அழிக்கக் கூடியவை. வேதத்திலும் இவ்வுலகில் அநுபவிக்கும் ஸுகங்களுக்குக் காரணங்களாகச் சொன்ன காம்ய கர்மங்கள் அல்பஸாரங்கள். அநுபவிக்கும் போது இன்பமாயிருந்தாலும் பின்பு துக்கத்தை விளைவிக்கக் கூடியவை. மேல் உலகங்களில் அநுபவிக்கும் ஸ்வர்க்காதி ஸுகங்களைக் கொடுக்கும் கர்மாக்களைச் சொல்லும் வேத பாகம் சிலருக்கு ஸாரமானது. ஆயினும், துக்கத்தைப் பின்பு விளைவிப் பதாகையால் அதுவும் நமக்கு வேண்டாதவையே. தன் ஜீவாத்மாவையே அநுபவிப்பதாகிற கைவல்ய ஸுகத்தைச் சொல்லும் வேதபாகம் ஸாரதரம். ஆகிலும் பரமாத்மாவை அநுபவிக்கும் இன்பத்தைவிட ஆத்மாநுபாவம் மிகவும் ஸ்வல்பமாதலால் அதுவும் அநுபாதேயம். ஆதலால் பரமாத்மாவை அநுபவிக்க வேண்டி, அதற்கு உபாயமான வேதபாகமே நமக்கு உபாதே யம். அதிலும், ரஹஸ்யத்ரயம் ஸாரதமமானது. தத்துவஹித புருஷார்த்தங் களைச் சுருக்கமாகச் சொல்லுகிற ரஹஸ்யத்ரயம் தான் ஸாரதமம். ஆதலால் திருமந்திரம், துவயம், சரமச்லோகம் இவையே அறிய வேண்டியவை.

எவ்வளவு கற்றாலும் போதாது எனக் கருதி, பதினெட்டு வித்யா ஸ்தானங்களை வாசித்தாலும் அது நமக்கு பாரமே. அது முக்திக்கு வழியாகாது. ஆதலால், நமது பூர்வாசார்யர்கள் மூன்று ரஹஸ்யங்களை உபதேசித்துப் போந்தார்கள். இம்மூன்று ரஹஸ்யங்களின் பொருளை நன்குணர்ந்தவர்கள் நமக்கு ஸ்வாமிகள்.

## 3. பிரதான பிரதிதந்திராதிகாரம்

சேதன, அசேதன ஆத்மகமான ப்ரபஞ்சமெல்லாம் ஸர்வேச்வரனான ஸ்ரீமந் நாராயணனுக்கு உடம்பு. அவ்வீச்வரன் பிரபஞ்சங்களுக்கெல்லாம்

ஆத்மாவாகவிருக்கிறான். இவ்வார்த்தைதான் சரீராத்மபாவம் என்கிறது. இப்பொருள்தான் விசிஷ்டாத்வை தஸித்தாந்திகளுக்குப் பிரதானமானது. பிரதி தந்த்ரம் என்றால் இதர மதங்களிலில்லாமல் நம் ஸித்தாந்தத்திலே மாத்திரமுள்ள பொருள். அதில் பிரதானமானது பகவான் உலகங்களுக்கெல் லாம் ஆத்மா, உலகம் அவனுக்கு உடம்பு என்னும் பொருள் தான். இப்பொருள் மனதில் வந்தால் பின்பு வேதங்களில் பிணக்கு உண்டாகாது. ஸ்ரீ வைஷ்ணவ மதத்தில் முக்யமான அடிப்படையாக முதலில் அறிய வேண்டிய இப்பொருள் இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகிறது.

''ஈச்வரன் உலகங்களையெல்லாம் உடலாகக் கொண்டவன்'' என்றால் அறிவுள்ள ஜீவன்கள், அறிவில்லாத பொருள்கள் இவைகளை எப்பொழுதும் தூக்கிக் கொண்டு, ஏவிக்கொண்டு, இவைகளால் ஏற்படும் பயனை அடையபவனாயுமிருப்பவன் எனப் பொருள். ' உலகங்களெல்லாம் அவ்வீச்வரனுக்கு உடம்பு' என்றால் ஈச்வரனால் அவனுடைய உபயோகத் திற்காகவுள்ள பொருள் எனப்படும்.

ஈச்வரன் பிரபஞ்சங்களைத் தரிக்கையாவது, தன் ஸ்வரூபத்தால் பிரபஞ்சம் இருக்கிறது என்கிற தன்மைக்கும் சிறிது காலம் நீடித்து இருப்ப தற்கும் காரணமாயிருக்கை. இப்பிரபஞ்சத்திற்கு நியந்தாவாக விருப்பது என்பது தன் ஸங்கல்பத்தால் (நினைவால்) உலகங்கள் உண்டாவதற்கும் நீடித்திருப்பதற்கும், வேலை செய்வதற்கும் காரணமாயிருப்பது. நமது ஜீவன் நம்முடம்பைத் தூக்குகிறது; ஏவுகிறது; உடம்பின் இருப்புக்குக் காரணமாகிறது. ஆதலால் ஜீவனுடைய உடம்பு என்கிறோம் . அதுபோல, பகவான் பிரபஞ்சங்களை வஹித்துக் கொண்டும் ஏவிக் கொண்டு மிருப்பதால், பிரபஞ்சமெல்லாம் பகவானுக்கு உடம்பு எனப்படுகிறது.

ஈச்வரன் திரவியங்களை நேராகவே தரிக்கிறான்'' திரவியங்களில் குணங்களுக்கு அந்த திரவியத்தின் மூலமாக ஆதாரமாகிறான். எல்லாப் பொருள்களும் பகவானை விட்டுப் பிரியாதவை. ஆதலால் பகவானுடைய இருப்பின் அதீனமாக இவைகளின் இருப்பு ஈச்வரனில்லையென்றால் பிரபஞ்சமும் பிரபஞ்சப் பொருள்களுமில்லை.

பொருள்கள் பகவானின் ஸங்கல்பாதீனங்களாலானவை. பகவான் சில பொருள்களை ' அநித்யங்களாகவிருக்குக' என்று ஸங்கல்பிக்கிறான். அவைகள் அநித்யங்களாக விருக்கின்றன. சிலவற்றை 'நித்யங்களாக விருக்கட்டும்' என்று ஸங்கல்பித்திருக்கின்றான். அவை நித்யங்களாக விருக்கின்றன என்பதுவே.

ஜீவனிருந்தால் உடம்பு இருக்கிறது. ஜீவன் போனால் உடம்பு அழிந்து விடுகிறது. ஜீவனிருப்பதால் இருக்கிறது ஆனது பற்றி உடம்பு ஜீவ ஸ்வரூபாச்ரித மெனப்படுகிறது. அதுபோலவே, பிரபஞ்சமும்

பகவானால் இருக்கிறது. அவனில்லையாகில் இராது. ஆதலால் பிரபஞ்சம் ஈசுவர ஸ்வரூபாச்ரிதம் எனப்படுகிறது.

ஜீவன் இருப்பதால் உடம்பு இருப்பது தூங்கும் போதுமிருப்பதால் தெளியவறியலாம்.

ஒருவன் விழித்துக்கொண்டிருக்கும் நிலையில் ஜீவன் தன் உடம்பை ஸங்கல்பத்தால் தரித்துக் கொண்டிருக்கிறான் என்பது விளங்கும். ஜீவன் உட்கார்ந்து கொண்டே தூங்க ஆரம்பித்தால் உடம்பு சாய்ந்து விழுகிறது. ஜீவன் உள்ளேயிருக்க உடம்பு ஏன் விழுகிறது என்று கேட்டால் ஜீவன் ஸங்கல்பத்தால் தாங்கிக் கொண்டிருந்தது. அந்த ஸங்கல்பம் (நினைவு) தூங்க ஆரம்பித்தவுடன் மறைந்தது. அதனால் உடம்பு சாய்ந்தது என்று சொல்லலாம்.

பகவான் ஆதாரம்: நாம் ஆதேயம் அவன் நம்மைத் தூக்குகிறான்; நாம் தூக்கப்படுகிற பொருள்' என்று தெரிந்தால் ''பகவானை விட்டுப் பிரியாத் தத்துவம் நாம்'', என்று அறியலாம்.

பகவான் சேஷி, நாம் சேஷபூதாள்; பகவான் ஏவுகிறவன். அவனால் நாம் ஏவப்படுபவர்கள்' என்றுணர்ந்தால் அதற்கேற்ற சரணாகதியாகிற உபாயத்தை அறிவது பயனாகவேற்படும்.

திருமந்திரத்தில் 'நாராயணாய' என்கிற பதத்தில் 'நாராணாம் அயனம்' என்கிற வ்யுத்பத்தியாலும், 'நாரா: அயநம் யஸ்ய' என்கிற வ்யுத்பத்தியாலும் நாம் பகவானைத் தவிர வேறு ஆதாரமில்லாதபடி அவனையே ஆதாரமாகக் கொண்ட தத்துவம் என்கிற ஸ்வரூபலாபம் பிறக்கும். திருமந்திரத்திலுள்ள 'ஓம்' என்ற பதத்தால் வேறு பயனில்லாத படி அவ்வீசனே நமக்குப்பயன் எனப்பொருள் கிடைக்கும். 'நம' என்கிற பதத்தால் நாம் அநந்ய சரணங்கள் என்றறியலாம்.

பிரணவத்தின் அர்த்தத்தை அர்ஜுனரதத்திலும் 'அக்ரத; ப்ரயயௌராம' என்கிற சுலோகத்திலும் காணலாம்.

'நம' என்கிற பதத்தின் அர்த்தமான பகவத் பாரதந்திரியத்தை பரதாழ்வான் விருத்தாந்தத்திலே கண்டு கொள்வது.

'நம:' என்கிற பதத்தில் ஆர்த்திகமாகக் கிடைக்கும் பாகவத பாரதந் திரியத்தை சத்ருக்னாழ்வான் விருத்தாந்தத்திலே காணலாம். நாராயண சப்தார்த்தத்தை கோஸல ஜனபதத்தில் ஜந்துக்களையும் ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனையும் உதாஹரணமாக்கிக் கண்டு கொள்வது நாராயண சப்தத் தின் மேலுள்ள நான்காம் வேற்றுமையின் பொருளை இளையபெருமாள் பாதுகை இவர்களுடைய பிரவிருத்தி நிவர்த்திகளிலே கண்டு கொள்வது.

ஆகவே, ஈசுவரன் நமக்கு நிலைதந்த தாரகன்; நம்மை நியமிக்கும் இறைவன். அவனுக்கு நாம் உடம்பு என்பது தான் அறிய வேண்டிய பொருள்.

வேதங்களில் ஈச்வரன் வேறு, ஜீவன் வேறு என்று பேதம் சொல்லி-யிருக்கிறது. சில விடங்களில் ஈச்வரனும் ஜீவனும் ஒன்றே, ஒரே தத்வம் என்றும் கூறியிருக்கிறது. இவை முரண்பாடுள்ளது. விரோதமானது. சிலர் ஒன்று என்பதை எடுத்துக் கொண்டு மதம் செய்தார்கள். சிலர் வேறு என் பதை வைத்துக் கொண்டு மதம் செய்தார்கள். இவர்களுக்குள் சண்டை ஓய வில்லை. இந்த முரண்பாட்டைத் தவிர்ப்பது எப்படி என்று ஆலோசித் தால், ஈச்வரன் ஆத்மா, பிரபஞ்சம் உடம்பு என்கிற பொருளைத் தெரிந்து கொண்டால் சண்டை ஓய்ந்துபோய்விடும். ஜீவனும், உடம்பும், ஈச்வரனும் வேறு தத்துவங்கள் தான், ஒன்று என்று வேதம் சொல்லுகிறது என்று முரண்பாட்டைத் தவிர்க்கலாம். ஆதலால், இந்த உடல் ஆத்மா என்கிற தத்துவத்தை உணர்வது முக்கியமாகும். இது அறியப்பட்டால் முரண்-பாடுகள் முடிந்துவிடும்.

## 4. அர்த்த பஞ்சகாதிகாரம்

ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு அஸாதாரணமான சரீராத்மபாவ ஸம்பந்தத்தோடு அர்த்த பஞ்சகத்தையும் ஆசார்யர்கள் உபதேசித்துப் போந் தார்கள். **'அர்த்த பஞ்சகம்'** என்றால் **'ஐம்பொருள்'** எனப்பெயர். ஐந்து பொருள்களாவன 1. பகவான், 2. ஜீவன், 3. பகவானை அடைவதற்கான உபாயம், 4. அவனை அடைவதற்குத் தடையான பிரதிபந்தகம், 5. அவ்வீச் வரனை அடைந்து அநுபவிக்கும் பயன் ஆக ஐம்பொருள்கள் அறிய வேண்டியவை.

அவற்றில் பகவானுடைய ஸ்வரூபம் திருமந்திரத்திலுள்ள பிரணவத் திலுள்ள 'அ' என்கிற அக்ஷரத்திலும், நாராயணாய என்கிற பதத்திலும் அநு ஸந்திக்கப்பட வேண்டும், துவயம் என்னும் மந்திரத்தில் 'ஸ்ரீமந் நாராயண', 'ஸ்ரீமதே நாராயணாய' என்கிற விடத்தும் சரம சுலோகத்தில 'மாம், அஹம்' என்கிற பதங்களிலும் அநுஸந்திக்கப்பட வேண்டும்.

திருமந்திரம் முதலான மந்திரங்களில் பகவானை அநுஸந்திக்கும் போது ஸர்வப்ரகாரத்திலும் ஸர்வாவஸ்தையிலும் ஸஹதர்ம சாரிணியான பெரிய பிராட்டியாரோடு பிரிவில்லாதவனாகவும் அனந்த ஞானானந்த ஸ்வரூபனாகவும், அனந்த கல்யாண குணங்களை உடையவனாகவும், ஸர்வலோகாச்ரயமான அப்ராக்ருத திருமேனியோடு கூடினவனாகவும்,

அநந்த விபூதி விசிஷ்டமாகவும், லீலாரூப ஜகத் ஸ்ருஷ்டி முதலான வ்யா பாரங்களை உடையவனாகவும் தியானம் செய்ய வேண்டும்.

1. பகவான் லக்ஷ்மியோடு கூடினவன் ஞானாநந்த ரூபி; உயர்ந்த திருமேனியுள்ளவன் கல்யாண குணங்களால் நிறைந்தவன்; அநந்த விபூதி யுள்ளவன்; ஸ்ருஷ்டி ஸ்திதி, ஸம்ஹாரம் முதலிய வியாபாரங்களைச் செய் கிறவன் என்று அறிய வேண்டும்.

2. அப்பொருளை அடைகிற ஜீவன், யார் என்று தெரிந்து கொள்ள வேண்டும் . ஸம்ஸாரியான ஜீவன் அனாதி கர்ம பிரவாஹத்தால் கட்டுண்ட பிரம்மா முதல் புல் புழுக்களான ஜீவர்கள்.

முக்தர்கள் பக்தி அல்லது பிரபத்தி செய்து ஸம்ஸாரத்திலிருந்தும் நிவ்ருத்தி அடைந்து பகவானை அடைந்தவர்கள்.

நித்யர் பகவானைப் போலவே அநாதியாக ஞான ஸங்கோசமில்லா மல் ஸம்ஸார வாஸனையே தெரியாத நித்ய கைங்கர்யம் பண்ணுகிற ஆதி சேஷன், கருடன், விஷ்வக்சேனர், முதலானவர்கள். பொதுவாக எல்லா ஜீவர்களும் அணு, அமலம், ஞானம், ஆநந்தம், பகவத் சேஷம்.

இந்த ஜீவனை திருமந்திரத்தில் பிரணவத்தில் ''ம்'' என்ற எழுத்திலும் நம: என்கிற பதத்தில் மகாரத்திலும் ''நாராயணாய'' என்கிற விடத்தில் 'நார' என்கிற சப்தத்திலும், துவயத்தில் ப்ரபத்யே என்கிற பதத்திலும், சரமசுலோகத்தில் ''வ்ரஜ'', ''த்வா'' என்கிற பதங்களிலும் நினைத்துக் கொள்வது.

3. உபாயம்: அவனை அடைவதற்கு ஸாதனம் மேலே 8,9,10,11,12 அதிகாரங்களில் சொல்லப் போகிறார். அதனால் இங்கே நிரூபிக்கவில்லை. பக்தி அல்லது பிரபத்தி உபாயமாகும்.

4. பகவானை அடைந்தவன் பிரயோஜனம்: பரிபூர்ண ப்ரம்மானு- பவாதிகாரத்தில் பேசப்போகிறார். அங்கே கண்டு கொள்வது (அதாவது கைங்கர்யத்தை எல்லையாகக் கொண்ட பகவதனுபவம்).

5. ப்ராப்தி விரோதி: பகவானையடைய பிரதிபந்தமாயிருப்பவை: அவித்யா, கர்மா, வாஸநா, ருசி, பிரகருதி ஸம்பந்தம். இவைகள் பகவானை அடையத் தடையாயிருப்பன. அவைகளில் பிரதானமானது அநாதி காலமாக பகவானுடைய உத்தரவான வேதங்கள், ஸ்மிருதிகளில் சொன்னவைகளை மீறி நடந்ததால் ஏற்பட்ட பகவானுடைய கோபம். அது நம்மைப் பலபடியாக ஸம்ஸாரத்தில் இருக்கச் செய்து, ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்கள் கொண்ட உடலோடு சேர்க்கும். இந்திரியங் கள் இட்ட வழக்காக நம்மை ஆட்டி வைக்கும் . சாஸ்திரவச்யதை கூடாத

பசு, பக்ஷி ஜாதியில் பிறக்கச் செய்யும். அதிலும் மேலான மனுஷ்ய ஜாதியில் பிறக்கச் செய்து வேதத்தை ஒப்புக்கொள்ளாத வெளி மதங் களாலே கலக்கப் பண்ணும். விபரீத ஞானத்தைக் கொடுத்து சிற்றின்பங் களுக்காகப் பாபங்களைப் பண்ணச் செய்து அதன் பலமாக கர்பவாஸம், பிறப்பு, கிழத்தன்மை, மரணம், என்கிற சக்கரத்திலே சுழலச்செய்யும். க்ஷுத்ர தேவதைகளை வணங்கச் செய்து அவர்கள் கொடுக்கும் அல்ப போகங்களிலே மயங்கச் செய்யும். யோகாப்யாஸம் பண்ணுமவர்களையும் க்ஷுத்ர தேவதா யோகம் அசேதன உபாஸனங்களில் இறங்கச் செய்து, யோகத்தைத் தலை சாய்ப்பிக்கும். யோகத்திலும் தன் ஆத்மாவைப்பார்க் குமவர்களையும் நாலுவிதமான ஆத்மோபாஸனத்திற்குப் பலமான அல் பாஸ்வாதங்களைக் கொடுத்து மறுபடி திரும்பச் செய்யும். பரமாத்மோபா ஸனம் பண்ணுகிறவர்களையும் ஆத்மானுபவம், அஷ்டைச்வர்யம், வஸூஸ் தானம் பிரம்மகாய நிஷேவணம் என்கிற பலங்களில் ஆசையைக் கொ டுத்து பகவானை-யடைய வொட்டாது செய்யும். இப்படி ஏதேனுமொரு படியாக பகவானை- யடைய வொட்டாமல் நம் கர்மத்தின் பலனாக வந்த பகவானுடைய கோபத்திற்குப் பரிஹாரம் சரணாகதியாகிற உபாயம் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்தார்.

இவ்விரோதி வர்க்கத்தை திருமந்திரத்திலும் துவயத்திலும் ''நம: என்கிற பதத்தில் ம: என்னும் பகுதியிலும், சரம சுலோகத்தில் ''ஸர்வ- பாபேப்ய:'' என்கிற விடத்திலும் அறிந்து கொள்ளவேண்டும்.

உபாயத்தைத் திருமந்திரத்தில், ''நம:'' ''அயநம்'' என்கிற பதங்களி லும், துவயத்தில் பூர்வ கண்டத்திலும், சரமசுலோகத்தில் ''சரணம் வ்ரஜ'' என்கிற விடத்திலும் கண்டு கொள்ளவது.

பலத்தை ''நாராயணாய'' என்கிற பதத்தில் நாலாம் வேற்றுமை யிலும். துவயத்தில் மேல்பாதியிலும், சரமசுலோகத்தில் பாபேப்யோ மோ க்ஷயிஷ்யாமி என்கிற விடத்திலும் கண்டு கொள்வது. ஆகவே, பகவான், ஜீவன், உபாயம், பிரதிபந்தகம், பயன் என்று ஐம்பொருள்கள் அறியத்தக் கவை.

## 5. தத்வத்ரய சிந்தனாதிகாரம்

அசேதனம், ஜீவன், பெருமாள் என்கிற மூன்று தத்வங்களுடைய உண்மையை அறிய வேண்டும். இப்படி மூன்று தத்வங்களையும் உணர்ந்தால், 'உடம்பே ஆத்மா' என்கிற எண்ணமும் ''ஆத்மா ஸ்வதந்த்ரன்'' என்கிற எண்ணமும் உண்டாகாது. இந்த எண்ணங்களுக்கு காரணமான ஈச்வரன் இல்லை என்று பேசுவதில் ஆசையும் உண்டாகாது. அதற்காக ஆசார்யர்கள் தத்வத்ரயத்தை உபதேசித்தார்கள்.

அசேதனம் : அறிவில்லாத தத்துவம் மூன்று வகை: ப்ரகிருதி, (த்ரிகுண த்ரவியம்) காலம், சுத்தஸத்வம்.

ஜீவன் மூன்று விதமானது: ஸம்ஸாரிகள், முக்தர்கள், நித்ய ஸூரிகள்.

பெருமாள் ச்ரிய:பதியான நாராயணன் மூன்று வித அறிவில்லாத வஸ்துக்களுடைய இருக்கையும், சிறிது காலம் நீடித்திருப்பதும், ப்ரவ்ருத்திகளும் பகவானுக்கதீனமானது. மூன்று வித ஜீவர்களுடைய இருப்பும் நித்யமாயிருப்பதும் வேலைகளும் பகவானுக்கதீனமானது. பகவான் ஸ்வதந்திரன். ஜீவாத்மாவை ஞானம், ஆநந்தம், அமலம், அணுவென்று சொல்லலாம். பரமாத்மாவான நாராயணனுக்கு ஜீவாத்மா எப்போதும் சேஷபூதன்; வேறு ஒருவனுக்கும் சேஷபூதனில்லை.

பகவான் விபு, எங்கும் வியாபித்திருப்பவன்; எங்கும் நிறைந்திருந்து அறிவுள்ளவனாயிருப்பவன்; ஒருவருக்கு அதீனமல்லாதவன்; எல்லோருக்கும் இயற்கையான சேஷியாயிருப்பவன் என்று பகவானைக் குறிக்கலாம்.

ஜீவன், பெருமாள் இவ்விருவருக்கும் சேதனத்வம், ப்ரத்யக்த்வம், பொதுவான லக்ஷணம். சேதனத்வம் அறிவோடிருப்பது; ப்ரத்யக்த்வம் தனக்குத்தான் தோன்றுகை.

ஜீவனுக்கு சேஷத்வே ஸதி சேதனத்வம், அணுத்வே ஸதி சேதனத்வம் லக்ஷணம்.

ஸம்ஸாரியான ஜீவன் அவித்யா, கர்ம, வாஸநா, ருசி, சரீர ஸம்பந்தம் இவைகளோடு கூடியிருப்பவன். பிரம்மாதிஸ்தம்ப பர்யந்தமாக ஜீவர்கள் ஒருவருக்கொருவர் ஸுகம், துக்கம், ஞானம், இவைகளில் பல விதங்களாயனுபவிப்பார்கள். மோக்ஷம் வருமளவும் ஸம்ஸாரம் இவர்களுக்குத் தொடர்ந்து கொண்டேயிருக்கும். இவர்களுக்கு பிரவ்ருத்தி, புண்யம், பாபம் அநுபயங்களான ப்ரவ்ருத்திகள்.

முக்தர்கள் பக்தி அல்லது பிரபத்தியால் ஸம்ஸார பந்தம் கழிந்து ஸ்வரூபாவிர்பாவம் பெற்றவர்கள். அவர்களுக்கு மேல் ஸ்திதி, தன் ஸ்வரூபாவிர்பாவம் உண்டானதற்கு எல்லையில்லாமல் நீடித்திருக்கை.

வேலை, அநாதி காலம் இழந்திருந்து பெற்ற பகவத் கைங்கர்ய விசேஷங்கள்.

நித்யர்கள் : அநாதியாகவே ஸ்வரூபாவிர்பாவம் பெற்றவர்கள். இவர்களுக்கு ஸ்திதி அநாதியாக வந்த பகவதநுபவம். வேலை அநாதியான கைங்கர்யங்கள்.

இவ்வாத்மாக்களுக்கு ஞானமுண்டு. அந்த ஞானத்தை தர்மபூத ஞானமென்பார்கள். ஒரு ஆத்மாவுக்கு ஒரு பொருளைக் காட்டுகிற ஸமயத்தில் அந்த ஆத்மாவுக்கு அந்த ஞானம் ஸ்வயம் பிரகாசமாயிருக்கும். இது ஈச்வரனுக்கும், நித்யர்களுக்கும் நித்யவிபுவாயிருக்கும். ஸம்ஸாரி களுக்கு கர்மங்களுக்குத் தக்கபடி ஏறியும் சுருங்கியுமிருக்கும். முக்தர் களுக்கு முக்தாவஸ்தையில் மலர்ந்து பின்பு கால தத்வமுள்ள வரையில் விபுவாயிருக்கும்.

இந்த தர்மபூத ஞானம் விஷயங்களைப் பிடிக்கும். பிரயத்னம் என்கிற நிலையையடைந்து உடம்பைக் காரியத்தில் ஏவும் ஸுக துக்கம் என்கிற போகத்தை அடையும். ஜீவனுடைய ஸ்வரூபம் தனக்கு ஸ்வயம் பிரகாசம் ஈச்வரனுடைய ஸ்வரூபமும் அவனுக்கு ஸ்வயம் பிரகாசம்: இந்த ஜீவஸ்வரூபம் நான்; நான் என்று எல்லோருக்கும் தோன்றும். இத் தோற்றத்திற்கு ஒருகாலும் அழிவில்லை. தர்மபூத, ஞானம், ஜீவாத்மா இவை இரண்டுக்கும் ஞானமிருப்பது, ஸ்வயம் பிரகாசமாயிருப்பது என்பது பொதுவாகவிருக்கும்.

தர்மபூத ஞானத்திற்கு விஷயித்வம் அதிகமாயிருப்பது. ஆத்மாவுக்கு ப்ரத்யக்த்வம் அதிகமானது.

அசேதனத்தில் ப்ரகிருதி, காலம் இரண்டும் ஜடங்கள், சுத்த ஸத்வத்தை ஜடமென்றும் சிலர் சொல்லுவார்கள். ஜடமாவது ஸ்வயம் பிரகாசமில்லாதது.

பிரகிருதி ஸ்வரூபமானது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற முக்குணத் துடனிருப்பது. இம்முக்குணங்கள் அந்யோந்யம் ஸமமானபோது மஹாபிரளயம்; விஷமமான போது ஸ்ருஷ்டி ஸ்திதிகள். இப்பிரகிருதியை 24 தத்வங்களாக வகுத்துச் சொல்லுவார்கள். பிரகிருதி, மஹத், அஹங்காரம் 3, கந்த தந்மாத்ரம், ரஸ தந்மாத்ரம், ரூப தந்மாத்ரம், ஸ்பர்ச தந்மாத்ரம், சப்த தந்மாத்ரம் என்கிற 5 பூத ஸூக்ஷ்மங்கள், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்கிற 5 பூதங்கள், ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, மனம் 1, ஆக 24 தத்வங்கள். இவையெல்லாம் ஸர்வேச்வரனுக்கும் அஸ்திர பூஷணாதி ரூபங்களாயிருக்கும். இது ஸ்ரீ வைகுண்டம் என்கிற சுத்த ஸத்வத்தால் பிரிக்கப்பட்ட விடத்தில் அளவற்றதாகச் சொல்லப்படும். இது ஸம்ஸாரிகளுக்குக் கர்மங்களுக் கீடாக பலவித உடம்புகளாக மாறுகிறது, சுத்த ஸத்வம், ரஜஸ், தமஸ் கலக்காத சுத்த ஸத்வ குணமுள்ளது. இது பகவானுக்கு உடம்பாயிருக்கி றது; நித்யருக்கும் முக்தருக்கும் அநித்யங்-களான உடம்புகளாயிருக்கும். இதற்கு வேலை பகவத் கைங்கர்யத்திற்கு உதவியாயிருக்கை.

காலம்: ஜடமாயும் விபுவாயுமிருக்கும், நித்யமானது கலை, நிமிஷம், நாழிகை நாள், மாதம், வருஷம் முதலிய பிரிவுகளை அடையும்.

ஸர்வேச்வர தத்வம்; ஸத்யமாய், ஞானமாய், அமலமாய், அநந்த மாய், ஆனந்தமாயிருக்கும், அவன் ஐந்து ரூபங்களுடனிருப்பான். ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் ரூபம் பரம் என்று பேர் பெற்றிருக்கும்.

வ்யூஹ ரூபங்கள் நான்கு, வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன், எனப்படும். கேசவன், நாராயணன் என்று சொல் லப்படும் பன்னிரண்டு ரூபங்களும் வியூஹாந்தரங்கள்.

விபவங்கள்: பத்மநாபாதிகளான முப்பத்துச் சின்ன ரூபங்கள், ஓரோரு பிரயோஜன விசேஷத்தை முன்னிட்டு தசாவதாரங்களென்று விசேஷித்துச் சொல்லுகிறது.

பரவ்யூஹாதிகள் தானே ஆச்ரிதர்கள் அபேக்ஷித்தபடி பிம்பமாக ஆலயங்களில் நிற்கிற நிலை அர்ச்சாவதாரம். கிருஹங்களில் ஸாளக்ராம ரூபங்களும் அர்ச்சாவதாரமே.

எல்லோருடைய ஹ்ருதயங்களிலே ஸூக்ஷ்மமாயிருப்பதொரு ரூப விசேஷத்தைக் கொண்டு நிற்கிற நிலை அந்தர்யாமி அவதாரம்.

இவ்வீச்சரன் ஜகத் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாராதிகளைப் பண்ணு கிறான். இவன் ஸர்வாவஸ்தையிலும் ஸபத்னீகனாய்க் கொண்டேயிருக் கிறான். இப்படி சித்து, அசித்து, ஈச்வரன் என்கிற மூன்று தத்துவங்களை அழகாகவும் விஸ்தாரமாகவும் உபதேசித்திருப்பது இவ்வதிகாரத்தில் மிகவும் அறிந்து கொள்ள வேண்டிய விஷயமாகும்.

## 6. பரதேவதா பாரமார்த்தியாதிகாரம்

ஈச்வரன், ஜீவன், அசேதனம் என்கிற தத்துவங்களைப் பொது வாகத் தனியே தெரிந்து கொண்டாலும், ஈச்வரன் இன்னார் என்று தனித்து விசேஷித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். பரதத்வம் ஈச்வரன் இன்னார் என்று தெரிந்தால் தான் அவனை ஆச்ரயித்து இஷ்டத்தைப் பெறலாம். ''உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள் அவனையல்லால்'' என்கிற ஆழ்வார் அருளிச் செயல்படி மற்றுள்ள தேவதைகளை ஆச்ரயிக்காது பர தத்வத்தையே தொழும்படியான பாரமேகாந்தயம் பர தேவதை இன்னார் என்று தெரியாமல் போனால் ஸித்திக்காது. பரமே காந்தி அல்லாதவருக்கு காலதாமதமின்றியும் மறுபிறவியின்றியும் மோக்ஷமே கிடைக்காது. ஆதலால் இந்த அதிகாரத்தில் பரதேவதை ச்ரிய:பதியான நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் ஸ்ம்ருதிகளாலும், புராணங்களாலும், இதிஹாஸங்களாலும் ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளாலும் ஸ்தாபிக்கப் படுகிறது.

அறிவுள்ள ஜீவாத்மாக்களுக்கும், அறிவில்லாத பிரக்ருதி முதலிய பொருள்களுக்கும் பலவிதமான வேறுபாடுகள் பிரமாணங்களாலே காணப் படுவதால் எல்லாம் பிரம்ம த்ரவியம் என்கிற மதம் சேராது. ஜீவனுக்கும், ஈச்வரனுக்கும் உள்ள வேறுபாடுகளும், தேவன் மனுஷ்யன் முதலான ஜீவர் களுக்குள் வேறுபாடுகளும், ஒவ்வொருவருக்கும் சுகதுக்கங்களில் மாறுபாடுகளும் பிரமாணங்களால் தெரியப்படுவதால் பிரம்மாதி தேவதை களும் ஈச்வரனோடும் தாங்களும் வேறுபாடற்றவர்(ஒன்று) என்கிற பேச்சும் பிரமாணங்களுக்கு ஒவ்வாது. பிரமன், ருத்ரன், இந்திரன் முதலிய தேவர் கள் கர்மவச்யர்களென்றும், ஸர்வேச்வரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்கள் என்றும், அவர் அவர்களுடைய சரித்திரங்களாலே அறியப்படுவதால் அவர்களும் பரதத்வமல்ல என்பதும் புலப்படும். திரிமூர்த்திகளும் ஸமர் என்றும் திரிமூர்த்திகளும் ஒரே தத்வம் என்றும் திரிமூர்த்திகளிலும் வேறான ஒருவன் பரதத்வம் என்றும் பேசுமவையெல்லாம் பிரமாணங்களுக்குச் சேராது என்று நிரூபிக்கப்பட்டிருப்பதுடன் லக்ஷ்மீபதியும் ஸமஸ்தலோகங் களையும் தனக்கு உடம்பாகப் பெற்றவனும் மோக்ஷம் கொடுப்பவனுமான ஸ்ரீமந் நாராயணன் தான் பரதேவதை என்று நிஷ்கர்ஷிக்கப்பட்டது.

## 7. முமுக்ஷுத்வாதிகாரம்

மோக்ஷத்தில் ஆசையுண்டானால்தான் அதற்குரிய உபாயத்தை செய்ய முயற்சிப்பான். மோக்ஷத்தில் ஆசை எப்படி உண்டாகும் என்று இவ்வதிகாரத்தில் பேசப்படுகிறது. முமுக்ஷுத்வமானது மோக்ஷத்தில் ஆசை. அதை நிரூபிக்கிறார் இவ்வதிகாரத்தில், வேதாந்த சாஸ்திரத்தால் உடல் வேறு, ஆத்மா வேறு என்று உணர்ந்தால், அழியக்கூடிய உடம்புக் காகப் பாடுபடாமல் நித்யமான ஆத்மா, உடலழிந்தபிறகு மேல் லோகங் களில் அடையுமின்பத்தை ஆசைப்பட்டு அதற்கு வேண்டிய தர்மங்களைச் செய்ய விரும்புவான். மேலும், நரகம் முதலிய துக்கங்களை அடையும்படி யான பாபகாரியங்களையும் செய்யமாட்டான். அதற்கு மேல் ஆத்மாவுக்கும் ஸர்வேச்வரனுக்குமுள்ள வேறுபாடுகளைத் தெரிந்து கொண்டால், ஆத்மாவின் ஸ்வரூபத்திற்கேற்ப பகவானை அடைந்து கைங்கர்யம் செய்கையாகிற பரமபுருஷார்த்தத்தை ஆசைப்படுவான். அப்படி ஆத்மா-வையும் ஸர்வேச்வரனையும் அறியவேண்டி திருமந்திரத்தைக் கொண்டு அறியும் போது பிரணவத்தில் மூன்றாவது அக்ஷரத்தின் பொருளைத் தெரிந்து கொண்டால் உடம்பே ஆத்மா என்றும், உடம்பைச் சார்ந்த பொருள்களில் என்னுடையது என்கிற அஹங்கார மமகாரங்கள் நசித்து விடும். முதல் எழுத்தில் மறைந்து கிடக்கும் நாலாம் வேற்றுமையின் பொருளை ஆராய்ந்தால் தன் ஆத்மாவிலுள்ள குணங்களில்

என்னுடையவை என்கிற மமகாரமும் அழிந்து விடும். பிரணவத்திலுள்ள 'உ' என்கிற நடுவெழுத்தின் பொருளை உணர்ந்தால், நான் ச்ரிய:பதியைத் தவிர வேறு ஒருத்தனுக்கு சேஷபூதன் என்றும், எனக்கு வேறு ஒருவர் சேஷி என்கிற அஹங்கார மமகாரங்கள் அழியும். திருமந்திரத்தில் நடுப் பதமான ''நம:'' என்கிற பதத்தை அறிந்தால் நம்மைக் காப்பாற்றிக் கொள்வதில் 'நான் ஸ்வதந்திரன்' என்கிற அஹங்காரமும் 'நான் சேஷி' என்றும் வருகிற அஹங்கார மமகாரங்களும் இனி பெறப் போகிற கைங்கர்ய பர்யந்தமான பலத்திலும், ''நான் ஸ்வாதீனமாகச் செய்கிறேன்,'' ''என் பொருட்டுச் செய்கிறேன்'', 'நான் ஸ்வாதீனமாக அனுபவிக்கிறேன்'' என்கிற அஹங்கார மமகாரங்கள் நடையாடாது. இப்படி அஹங்கார மம காரங்கள் எல்லாவற்றையும் கழித்துப் பின்பு அறிவில்லாத வஸ்துக்களான பிரம்மலோக பர்யந்தமாகவுள்ள ஐச்வர்யானுபவத்திலும் தன் ஜீவனை அனு பவிக்கிற விஷயத்திலும் ஸம்பவிப்பவைகளான: 1. அல்பமாயிருப்பது, 2. துக்கம் கலந்திருப்பது, 3. நிலையில்லாமை, 4. துக்கத்தினால் சம்பாதிப்பது, 5. மேல்துக்கத்தை விளைவிப்பது, 6. ஜீவனுக்கு இயற்கையாகவனுபவிக்க வேண்டிய இன்பத்திற்கு விருத்தமாயிருப்பது, 7. விபரீதாபிமானத்தினால் வந்தது என்கிற ஏழு தோஷங்களையும் நினைத்துப் பார்த்தால் ஐச்வர்ய கைவல்யங்களில் ஆசை ஒழிந்து பரமாத்மாவை அடைய ஆசைப்படு வான். உடனே பகவானை அடைய ஸாதனமான நிவ்ருத்தி தருமங்களில் இழியுமவன் முமுக்ஷு என்று சொல்லப்படுகின்றான். இப்பாவக் கடலிலுள்ள துயரங்களையும் பகவானிடம் சென்று செய்யும் கைங்கர்ய-மாகிற பயனையும் ஆராய்ந்து பார்த்தால் பகவானிடம் ஆசை தானாகவே உண்டாகும் என்று நிரூபிக்கப்பட்டது.

## 8. அதிகாரி விபாகாதிகாரம்

கீழதிகாரத்தில் மோக்ஷத்தில் ஆசைப்படுகையாகிற முமு க்ஷுத்வம் பேசப்பட்டது. மோக்ஷத்தை விரும்பும் அதிகாரிகளின் பிரிவுகள் இவ்வதிகாரத்தில் பேசப்படுகிறது; அவ்வதி காரிகள் இருவராகிறார். பக்தன், பிரபன்னன் என்று. பக்தி யோகம் பண்ணுகிறவன் பக்தன். இவனை ஸத்வாரக பிரபத்தி நிஷ்டன் என்று சொல்லுகிறார்கள். (அதாவது பக்தியோகத்திற்கு அங்கமாகப் பிரபத்தி செய்து அப்பிரபத்தியின் பலமான பக்தியை வழியாகக் கொண்டு மோக்ஷம் பெறுபவன்). சரணாகதி செய்கிறவன் பிரபன்னன்.

இவனை அத்வாரக ப்ரபத்தி நிஷ்டன் என்று சொல்லுகிறது. (அதா வது பிரபத்தியை செய்து அப்பிரபத்தியால் நேராகவே மோக்ஷ பலத்தைப் பெறுபவன்). ஆக இவர்கள், இரண்டுபேர்களும் மோக்ஷாதிகாரிகள்.

இருவருக்கும் மோக்ஷம் என்கிற பயன் ஒன்றாகவிருக்கும். ''இரண்டு அதிகாரிகளாகச் சொல்வதேன்?'' என்றால் பக்தி யோகத்தின் பிரிவான மது வித்யா, தஹரவித்யா முதலான வித்யைகளுக்கு மோக்ஷம் ஒன்றாகவிருக்க அங்கே பிரிவு சொல்வது போல் இங்கேயும் கண்டு கொள்ள வேண்டும். அஷ்ட வஸுக்கள் என்கிற ஸ்தானத்திலிருந்து விட்டுப் பின்பு பகவானை அடைய விரும்புகிறவன் மதுவித்யையில் அதிகாரி. நேராகவே பகவானை அடைய விரும்புகிறவன் தஹரவித்யை முதலான வித்யைகளுக்கு அதிகாரி என்று சொல்லுமாப்போல், இங்கேயும் பிராரப்த கர்மங்கள் கழிந்த பிறகு மோக்ஷத்தைக் கடுகப் பெற வேண்டு மென்று ஆசைப்படுகிறவன் பிரபத்திக்கு அதிகாரி.

பக்தனுக்கு பிராரப்த கர்மங்களைக் கழித்து விட்டு எவ்வளவு ஜன்மங்கள் கழித்தோ மோக்ஷத்தைப் பெற வேண்டும். ஆகையால் பஹுகாலம் தாமஸம் செய்து மோக்ஷம் கிடைக்கும். ஆனால் மோக்ஷம் பெறுமளவும் பகவத்தியானம் செய்வதால் தியான ஸுகத்தைப் பெற்றிருப்பான். அந்த தியானஸுகம் மிகப் பெரியது. அவனுடைய வாழ்நாள் மிகவும் இன்பமாகவே செல்லும். பிரபத்தி செய்கிறவனுக்கு மோக்ஷம் சீக்கிரம் கிடைக்கும். ஆனால் தானிருக்கும் வரையில் ஸுகம் பிராரப்தப்படி பரிமிதமாயிருக்கும். இவ்வளவுதான் பேதம். ஆகவே, பிராரப்தத்தையும் நிவ்ருத்தி செய்துவிட்டு கடுக மோக்ஷத்தை விரும்புகிறவன் பிரபத்திக்கதிகாரி. பிராரப்தத்தை அநுபவித்த பின்பு மோக்ஷத்தை விரும்புபவன் பக்திக்கு அதிகாரி.

ஸ்நாநங்கள், மந்திரம், பௌமம், ஆக்னேயம், வாயவ்யம், வாருணம், மானஸம் என்று ஏழு விதங்களானாற்போலே உக்திநிஷ்டை, ஆசார்ய நிஷ்டை என்கிறவிவையும் பிரபத்தியின் முகபேதங்கள் என்று சொல்லியும், உக்தி நிஷ்டை, ஆசார்ய நிஷ்டை இவைகளின் ஸ்வரூபங்கள் இவ்வதிகாரத்தில் சொல்லப்படுகின்றன.

## 9. உபாய விபாகாதிகாரம்

இவ்வதிகாரத்தில் மோக்ஷத்திற்கு பரம்பரையான உபாயங்களான கர்மயோக ஞானயோகங்களையும் நேராகவே உபாயமாகவிருக்கிற பக்தி யோக சரணாகதிகளையும் பிரித்துக் காட்டுகிறார்.

மோக்ஷத்துக்கு பகவான் தான் உபாயம் என்று உபநிஷத்துக்கள் பேசுகின்றன. அப்பகவானைப் பிரஸன்னனாகச் செய்வதற்கு சரணாகதியும் பக்தியும் சொல்லப்பட்டிருக்கிறது.

கர்மயோகமாவது சாஸ்திரங்களால் ஜீவபரமாத்ம ஞானமுண்டாகி, தன்னாலே செய்ய முடிந்தவைகளாய் பலத்தில் ஆசைப்பட்டாலும் நான் செய்கிறேன் என்கிற நினைவுமில்லாமலும் செய்யப்படுகிற, கார்யகர்மங் களோடும் நித்ய நைமித்தி கங்களோடுங்கூட ஸநியமமாகச் செய்கின்ற கர்ம விசேஷம். இந்தக் கர்ம யோகத்தால் அந்தக்கரண ஜயம் பிறந்து ஞான யோகம் பின்பு பிறக்கும். கர்மயோகம், ஞானயோகம், யோகாப்யாஸம், ஜீவாத்ம தர்சனம், பக்தி என்று கிரமம் பேசப்பட்டிருக்கிறது. கர்மயோகம் நடுவே ஞானயோகமில்லாமலே யோகாப்யாஸத்தைக் கொடுத்து ஆத்ம தர்சநத்தைப் பண்ணுவிப்பதுமுண்டு.

ஞானயோகமாவது சரீரத்திலும் வேறான பகவானுக்கு விதேயனா கவும் சேஷனாயும் நியாம்யனாயுமிருக்கிறதன் ஜீவ ஸ்வரூபத்தை இடை விடாமல் நினைத்துக் கொண்டிருக்கை. இதன்பின் யோகாப்யாஸம் ஏற்பட்டு ஜீவாத்மாவலோகனம் பிறக்கும். பக்தியோகத்துக்கு அதிகார கோடியில் நிற்கும்.

பக்தியோகமாவது ஸ்வதந்த்ரனாய் அனன்ய சேஷபூதனாய் ஸர்வ சேஷியான பகவானை ப்ரீதியுடன் இடைவிடாது நினைத்துக் கொண்டி ருப்பது. இது நேரில் பகவானைப் பார்ப்பது போல் தெளிவாகத் தினந் தோறும் அனுஷ்டிக்க வளருகிறதாய் பரமபதத்திற்கு பிரயாணம் பண்ணும் நாள் வரையில் அனுஷ்டிப்பதாய் அந்திம ஸ்ம்ருதியை எல்லையாகக் கொண்ட ஞானத்தின் வரிசையாயிருக்கும். இதற்கு வர்ணாச்ரம தர்மங்கள் அங்கங்களாக இருக்கும். இந்தபக்தியோகத்தை நான்குவித பலன்களுக் காகவும், செய்யலாம். புதிதாக ஐச்வர்யத்தை விரும்பியும், இழந்த ஐச்வர் யத்தை மீண்டும் பெற விரும்பியும், கைவல்யத்தை விரும்பியும், பகவானைப் பெற விரும்பியும் இப்பக்தி யோகத்தைச் செய்யலாம்.

பகவானை அடைவதாகிய மோக்ஷத்தை வேண்டி இப்பக்தியை செய்தால் இப்பக்திக்கு ப்ரபத்தி என்று பெயரிடுகிறார்கள்.

இப்பக்தியே பகவானைக் காண வேண்டுமென்று ஆசையை உண்டாக்கும். அதனால் அவன் ''ஒருநாள் காண வராய்'' என்னும்படி பகவானை ப்ரார்த்திப்பான். ஈச்வரனும் தத்கால நியதமான தனது பரிபூர்ண ஸாக்ஷாத் காரத்தைக் கொடுப்பான். அந்த ஸாக்ஷாத்காரத்திற்குப் பரஞானம் என்று பெயர்.

அவனைப் பார்த்த பிறகு முன்னிலும் பதின்மடங்கு பெரிதாய் அவனிடம் பிரீதி பிறக்கும் . அதுதான் பரமபக்தி எனப்படும். அது மேலும் பகவானை அடைந்தே தீரவேண்டும் என்கிற பெருவிடாயை உண்டாக்கி

அவனை ஆணையிட்டு வளைத்துக் கூப்பிடச் செய்து வீடுபெறச் செய்யும்.

இப்பக்தியோகம் பிராமண, க்ஷத்ரிய, வைச்யர்களென்கிற மூன்று வர்ணங்களில் பிறந்தவர்கள் தான் செய்யலாம். ஞானமில்லாதார்க்கும் ஞான மிருந்து சக்தியில்லாதார்க்கும் செய்யவியலாது. இவையிருந்து கால தாமதத்தை பொறுக்காமல் கடுக வீடுபெற விரும்பினாலும் இப்பக்தி காரியகரமாகாது. ஆகையால் த்ரைவர்ணிகரல்லாதார்க்கும், ஞான சக்திகள் யில்லாதார்க்கும், கால தாமதத்தைப் பொறாதவர்களுக்கும் பிரபத்தி என்கிற சரணாகதிதான் மோக்ஷோபயமாகிறது.

## 10. பிரபத்தி யோக்யாதிகாரம்

சரணாகதி என்கிற உபாயத்தைச் செய்பவனுக்கு யோக்யதை இவ்வதிகாரத்திலே சொல்லப்படுகிறது. இங்கு மோக்ஷமாகிற பலத்தை ஆசைப்படுவது முதல் யோக்யதையாகும். ஒரு பலத்தை ஆசைப்படுமவன் தான் அதற்கு வேண்டிய உபாயத்தைச் செய்வான். ஆதலால் முதலில் மோக்ஷத்தில் ஆசைவேண்டும். அடுத்தபடியாக இப்பிரபத்திக்கு விசேஷித்த அதிகாரம் ஆகிஞ்சன்யம், அனன்யகதித்வம் என்பவை. அனன்யகதித்வமாவது வேறு பலனை விரும்பாமை, வேறு தேவதைகளை ஆச்ரயிப்பதில் விமுகனாயிருப்பதும். வேறு பலன்களை ஆசைப்படா திருந்தாலே வேறு தேவதைகளை ஆசைப்படமாட்டான். பகவானைத் தவிர ஒன்றையும் ஆசைப்படாமலும் வேறு தேவதைகளைக் கண்ணெடுத்துப் பார்க்காதவனும் பிரபத்திக்கு அதிகாரி.

நிற்க: ஆகிஞ்சன்யமாவது பக்தி யோகத்தில் ஸாமர்த்தியமில்லாமை. பக்தியோகத்தில் ஸாமர்த்தியமாவது அது செய்யத் தகுந்த ஜாதியில் பிறந்திருப்பது, அதை அறிந்து கொண்டிருப்பது, பக்தி செய்வதற்கு வேண்டிய சக்தியுடனிருப்பது. இம்மூன்று மில்லாமை ஆகிஞ்சன்யம். இந்த ஆகிஞ்சன்யமும் அநந்யகதித்வமுமிருந்தால் எல்லோரும் பிரபத்திக் கதிகாரிகள். ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனிடம் சரணம் புகுந்த காகாசுர னிடம் பிரபத்தி யோக்யதையைக் காணலாம். ஆகவே, பக்தியோகத்திற்கு வேண்டிய ஞானம் 1, சக்தி 2, பிராமண, க்ஷத்ரிய வைச்யர்களென்கிற மூன்று ஜாதிக்குள் பிறப்பு 3, கால தாமதத்தைப் பொறுப்பது 4, என்ற இந்நான்குமிருந்தால் பக்தியோகம் செய்ய வேண்டும். நான்குமில்லாவிடி னும், இந்நான்கில் மூன்றில்லாவிடினும், இரண்டு இல்லாவிடினும், ஒன்றில்லா விடினும் அவன் பிரபத்திக்கதிகாரி, பிரபத்தி யோக்யன் என்று பொருள்.

## 11. பரிகர விபாகாதிகாரம்

பிரபத்தியின் அங்கங்களை இவ்வதிகாரம் சொல்லுகிறது. பிரபத்திக்கு ஆநுகூல்ய ஸங்கல்பம், பிராதிகூல்ய வர்ஜனம், மஹாவிசுவாஸம், கோப்ருத்வ வரணம், கார்ப்பண்யம் இவைகள் வேண்டும். அஹிர்புத்ன்ய முனிவர் பலத்யாகம் என்று ஒரு அங்கம் சொல்லியிருக்கிறார். அது மோக்ஷத்திற்காகச் செய்யும் பிரபத்தியில் தான். ஆகையால் பொதுவாக எல்லாப் பிரபத்திக்கும் ஐந்து அங்கங்கள். இந்த ஐந்து அங்கங்களையும் அதன் பிரயோஜனங்களையும் விசதமாகக் காட்டுகிறது இவ்வதிகாரம். ஸ்ரீவிபீஷணாழ்வான் செய்த சரணாகதியில் இவையெல்லாம் ஸ்ரீ வால்மீகி பகவானால் நன்றாகக் காட்டப்பட்டிருக்கிறது.

## 12. ஸாங்க ப்ரபதநாதிகாரம்

கீழதிகாரத்தில் பிரபத்தியின் அங்கங்களை நிரூபித்தார். இப்போது அங்கி ஸ்வரூபத்தை சொல்லுகிறார். இவ்வுபாயத்திற்கு அங்கிஸ்வரூப மாவது ஆபரணத்தை உடையவனுக்கு அவன் தானே ரக்ஷித்துக் கொண்டு பூணக் கொடுக்குமாப்போலே யதாவஸ்திதமான ஆத்மநிக்ஷேபம். அதாவது, ஸர்வேச்வரனைப் பற்றி என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றுவதனால் உண்டாகும் பலத்திலும், எனக்கு ஸ்வாதீனமாகவோ ஸ்வபிரயோ ஜனமாகவோ ஸம்பந்தமில்லாதபடி மிகவும் பராதீனமான ஜீவன் பகவானுடையதே என்று அநுஸந்திக்கை. 'நானும் எனக்குரியேனல் லேன். ஒன்றை எனது என்று சொல்லவும் உரியேனல்லேன். என்னுடையது என்று பேர் பெற்றவைகளை ரக்ஷித்துக்கொள்ள யோக்யனுமல்லேன். என்னுடைய ஆத்மாவும் என்னைச் சேர்ந்தவைகளும் அவ்வீச்வரனுடை யதே, இவைகளைக் காப்பாற்றுகிற பாரமும் அவ்வீச்வரனுடையதே'' என்று பாவிக்கை சரணாகதியாகும்.

''என் ஆத்மாவும் உன்னுடையது. இதைக் காப்பாற்றும் பாரமும் உன்னுடையது'', என்று எல்லாவற்றையும் பகவானிடமும் ஸமர்ப்பிப்பது மான சரணாகதி. இதன் விரிவுகளும் ஸூக்ஷ்மமான விஷயமும் பேசப் பட்டிருக்கிறது. ஆகவே, அங்கிஸ்ரூபத்தைச் சொல்லுகிறது இவ்வதிகாரம்.

## 13. க்ருத க்ருத்யாதிகாரம்

ஒருவன் மோக்ஷோபாயமாகச் சரணாகதி செய்த பிறகு தனக்கு இனி செய்ய வேண்டிய கார்யமில்லாமையால் நிர்பரனாய், சரண்யனுடைய 'ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்கிற வார்த்தையைக்கண்டு நிர்பயனுமாய், ஸந்தேஹமுமில்லாதவனாயிருக்கும் நிலையைச் சொல்லு கிறது.

'க்ருதக்ருத்யன் என்றால் 'செய்ய வேண்டிய காரியத்தைச் செய்து முடித்தவன்' என்று பொருள். மோக்ஷத்திற்காகச் செய்ய வேண்டிய கார்ய மான பிரபத்தியைச் செய்து விட்டபடியாலும், பிரபத்தி ஒரு தடவை செய் தாலே போதும் என்று சொல்லுவதாலும், நமக்கு இனிச் செய்ய வேண்டிய கார்யமொன்றுமில்லை என்றும், நமக்கு இனி பாரம் ஒன்றுமில்லை என் றுமிருக்க வேண்டும். நம்பத்தகுந்தவனான பரமாத்மா உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன் என்று சொல்லியிருப்பதால் பின்பு நரகாதிகள் வருமோ என்று பயப்பட வேண்டியதுமில்லை. ஒரு யத்னமுமில் லாமல் ஒருவனுக்கு ஒரு புதையல் (மஹாநிதி) கிடைத்தால் எப்படி ஸந்தோஷப்படுவானோ, அம்மாதிரி தனக்கு வரப்போகிற மோக்ஷத்தை நினைத்து ஸந்தோஷத்துடனுமிருக்க வேண்டும். ஒருவன் பிறக்கும் போதே தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும், ரிஷிகளுக்கும் கடன் பட்டவ னாகவே பிறக்கிறான் என்றும், யாகம் பண்ணுவதாலும், புத்ர ஸந்ததி யாலும், வேதாத்யயனத்தாலும் அக்கடன்கள் நிவ்ருத்தியாகின்றன என்றும் சொல்லியிருப்பதால், அத்யயனம், புத்ரஸந்ததி, யஞ்ஞானுஷ்டாநமுமில் லாதவர்கள் அக்கடன்கள் நிவ்ருத்தியாகவில்லையே என்றும் வருந்த வேண்டாம். பிரபன்னர்கள் விஷயத்தில் அக்கடன்கள் பாதிக்கமாட்டா என்றும் பிரமாணங்கள் பேசுவதால் அக்கவலையில்லை. ஆகவே, சரணா கதனை எல்லா யாகங்களும் செய்தவர், ராஜாக்கள், விண்ணவரென் றெல்லாம் பிரமாணங்கள் கொண்டாடுகின்றன. உபாய பூர்த்தி ஏற்பட்டு விட்டதால் க்ருதக்ருதத்யன் ,பிரபன்னன் உத்தர காலத்தில் செய்யும் ஆஞ் ஞா-னுஞ்ஞாரூபங்களான அநுகூல விருத்திக்கெல்லாம் கைங்கர்யங்களா கை-யால் புருஷார்த்த பூர்த்தியாய் கிருதார்த்தனாயுமிருக்கிறான்.

## 14. ஸ்வநிஷ்டாபிஞ்ஞாநாதிகாரம்

ஒரு பிரபன்னன் தனக்கு ஆத்ம ஸ்வ ரூபத்திலும், சரணாகதியாகிற உபாயத்திலும் கைங்கர்யமாகிற புருஷார்த்தத்திலும், நிஷ்டை (நிலை அதாவது ஸ்திரமான ஞானம்) இருக்கிற தென்பதற்கு அடையாளங்களை யும் சொல்லுகிறார் இவ்வதிகாரத்தில்.

உடம்பைக் காட்டிலும் ஆத்மா வேறு. அணுரூபம், அமலம், பகவா னுக்கு சேஷபூதன் என்கிற நினைவு தனக்கு இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ள வேண்டும். மேல் சொல்லப்புகும் அடையாளங்கள் இருந்தால் தனக்கு நிஷ்டையுண்டென்றறியலாம். தன் உடம்பைப் பற்றி பரிபாவுகர் சில குற்றங்களைச் சொன்னால் தன் ஆத்மா வேறு, உடம்பைச் சொல்லு கிறான், நம்மைச் சொல்லவில்லை என்று துக்கப்படாமலிருக்க வேண்டும். நாம் செய்த பாபங்களைச் சொல்லி நம் ஆத்மாவையே பிறர் நிந்தனை

செய்தால், நிந்திக்கப்படுகிறவனுடைய பாபங்களை நிந்தனை செய்கிற வன் வாங்கிக் கொள்கிறான் என்கிற சாஸ்திரத்தால் 'ஐயோ! நம் பாபங்களை இவன் வாங்கிக் கொள்கிறானே,' என்று நிந்தனை செய்தவர்களிடம் கருணை காட்ட வேண்டும். நாம் பகவானிடம் நம் பாபங்களைச் சொல்லி அவைகளை க்ஷமிக்கும்படி பிரார்த்திக்க வேண்டுமாதலால் நம் பாபங்களை ஞாபகப்படுத்தினார்களே என்று அவர்களிடம் நன்றி காட்ட வேண்டும். பகவான் நிந்தனை செய்கிறவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து அவனால் தூண்டப்பட்டு நிந்தனை செய்கிறார்களென்று அவர்களிடம் கோபமில்லா மலிருக்க வேண்டும். பிராரப்த பாபங்கள் கழிகிறது என்று ஸந்தோஷமா யிருக்க வேண்டும். இப்படி இருந்தால் ஸ்வரூபத்தில் நிஷ்டையுண் டென்று அறியலாம்.

உபாயத்தில் நிஷ்டை உண்டென்பதற்கு அடையாளங்கள் சொல்லுகிறார்.

ஸர்வேச்வரனைத் தவிர தானும் மற்ற ஜீவன்களும் நமக்கு காப்பாற்றுகிறவர்களல்ல. ஈச்வரனே ரக்ஷகன் என்கிற புத்தி இருக்க வேண்டும். மரணபர்யந்தமான பயஹேதுக்களைக் கண்டாலும் இவ்வுடம்பு நீங்கினால் ஸுகிக்கப் போகிறோம். நாம் செய்ய வேண்டிய கார்யம் செய்தாய் விட்டது.

பகவானை அடையப் போகிறோம் என்று ஸந்தோஷத்துடனிருக்க வேண்டும். ரக்ஷகனான பகவான் நம்மை ரக்ஷிக்கிறான் என்று தைரியத் துடன் தான் பகவானை அடைவதில் பிரயத்னமில்லாமலிருக்க வேண்டும். இப்படியிருந்தால் உபாய நிஷ்டை உண்டென்று அறியலாம்.

புருஷார்த்தத்தில் நிஷ்டை உண்டென்பதற்கு அடையாளமாவது:

எப்படி தேஹயாத்ரை நடக்கும், குடும்ப ரக்ஷணம் பண்ண வேண்டுமே என்கிற கவலை யிருக்கலாகாது. நம்மை உண்டு பண்ணின ஈச்வரன் நம்மை ரக்ஷிக்கிறான். பூர்வகர்மாதீனமாக நடந்தே தீரும். ஸமுத்ரம் தாண்டினாலும், ஆகாசத்தில் பறந்தாலும், பாதாள லோகத்தில் சென்றாலும் நமக்கு உள்ளதுதான் கிடைக்கும். நாம் நினைத்தபடி நடப்பதில்லை. நாம் ஒன்று நினைத்தால் ஈச்வரன் ஒன்று நினைக்கிறான். நமது பூர்வ கர்மானு ஸாரமாக ஜீவனம் நடக்கும் என்று நினைத்து தேஹயாத்ரைக்குக் கவலைப் படாமலிருக்க வேண்டும்.

நாம் ஸம்பாதிப்பதற்காகப் பிரயத்னம் செய்யலாகாது. மலைப் பாம்பு போல் நாமிருந்த விடத்தில் வந்ததை வைத்துக் கொண்டு ஜீவனம் நடத்த வேண்டும். அகப்படாத பொருளுக்கு அலையக் கூடாது. ஸுகங்கள் வந்தால் கர்வமடையக் கூடாது. துக்கம் வந்தாலும் கரையக்கூடாது. இது

தான் புருஷார்த்த நிஷ்டைக்கு அடையாளம். இது முதலான விஷயங்கள் இவ்வதிகாரத்தில் அழகாகப் பேசப்பட்டுள்ளன.

## 15. உத்தர க்ருத்யாதிகாரம்

சரணாகதிக்குப் பின்பு தேஹம் விடுமளவும் உத்தர காலத்தில் செய்ய வேண்டிய கார்யங்களைப் பேசுகிறது இந்தவதிகாரம்.

சாஸ்திரார்த்தங்களில் நிஷ்டையுடைய பெரியவர்களுடனே நெருங்கி வர்த்தித்து அனுஷ்டாநங்களில் தனது வர்ணாச்ரமங்களுக்கு அநுகுணமான தர்மங்களை நிஷ்கர்ஷம் பண்ணி அதை அநுஷ்டாநம் செய்ய வேண்டும். தன்னைப் புகழ்வதும் பிறரை நிந்தனை செய்கிறது மாகிற படுகுழியில் விழாமல் நடக்க வேண்டும். தன்னுடைய அஞ்ஞாநத் தையும், அசக்தியையும், அயோக்யதனத்தையும் எப்போதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். ஆஞ்ஞானு ரூப கைங்கர்யங்களை விடாமல் ஸாத்விக ஆஹாரங்களாலே இந்திரியங்களை யோக்யமாக்கி பகவதனுப வத்திலே மூட்டி, சிற்றின்பங்களில் இந்திரியங்களைப் புகவிடாமலிருக்க வேண்டும். நித்ய கர்மங்களை பகவத் ப்ரீதிக்காக அநுஷ்டிக்க வேண்டும். அர்ச்சாவதாரத்தில் ஈடுபாடு செய்தல் வேண்டும். தனது யோக க்ஷேமங் களை ஸர்வேச்வரன் பக்கல் ஸ்ரீபரதாழ்வானைப் போல் ஸமர்ப்பிக்க வேண்டும். ஆசார்யன் விஷயத்திலும் ஸர்வேச்வரன் விஷயத்திலும் கிருதஞ்ஞனாயிருத்தல் வேண்டும். மேலே மனம், வாக்கு, உடல் என்கிற மூன்றாலும் செய்ய வேண்டியதைச் சுருக்கமாகவும் அருளிச் செய்கிறார்.

மனத்தால் ஆசார்யன் செய்த உபகாரங்களை நினைக்க வேண்டும். சிற்றின்பங்களை அநுபவிக்க வேண்டுமென்கிறதை மறக்கவேண்டும். வாக்கினால் துவயம் என்னும் மந்திரத்தைச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். சொல்லாதிருக்க வேண்டிய விஷயம் தன் பெருமைகள். உடம் பினால் செய்யக் கூடாததில் முக்கியமானது பாகவதாபசாரம். செய்ய வேண்டியது பகவத் கைங்கர்யமும், பாகவத கைங்கர்யமும். இவைகள் உத்தர கிருத்யங்களாகப் பேசப்பட்டுள்ளன.

## 16. புருஷார்த்த காஷ்டாதிகாரம்

புருஷார்த்தத்தின் எல்லை பாகவத கைங்கர்யம் என்று பேசப்படு கிறது. நாம் பகவானுக்கு உகப்பான கைங்கர்யங்களைச் செய்ய வேண்டுவதே நம் ஸ்வரூபத்திற்குச் சேர்ந்ததாதலால், பகவானுக்கு உகந்தது எது என்று ஆலோசிக்குமளவில் அவ்வீச்வரன் தன்னடியார் களுக்குக் கைங்கர்யம் செய்வதே தமக்குப் பெரிய உகப்பாகப் பேசுவதால்

நமக்கு பாகவத கைங்கர்யம் பண்ணப் பிராப்தம். பாகவத கைங்கர்யத்தை இழந்தால் பகவத் கைங்கர்யமும் ஸித்தியாகாது. ''அடியார்க் கென்னை யாட்படுத்த விமலன்,'' ''உற்றது முன்னடியார்க் கடிமை,'' ''அடியார்கள் எந்தேம்மை விற்கவும் பெறுவார்கள்'', என்கிற ஆழ்வார்கள் அருளிச் செயல்களாலும் இவ்வர்த்தம் தெளியலாகும்.

## 17. சாஸ்த்ரீய நியமனாதிகாரம்

'' பிரபன்னனான பின்பு பூமியிலிருக்கும் வரையில் தன் இஷ்டப்படி கைங்கர்யம் செய்யலாமா ? சாஸ்திரப்படி செய்ய வேண்டுமா?'' என்கிற ஸந்தேஹம் வர, சாஸ்திரம் சொன்னபடியே நடக்க வேண்டுமென்று இவ்வதிகாரம் பேசுகிறது.

பிரபன்னனுக்கு ஆத்மாவைப்பற்றி விசாரப்பட வேண்டியதில்லை. அதின் ரக்ஷண விஷயத்தை பகவானிடம் ஒப்படைத்தாய் விட்டது.

உடம்பைப் போஷிப்பது பற்றியும் கவலை வேண்டியதில்லை. அது பூர்வகர்மப்படியே நடக்கிறது. ஆனால் இஷ்டப்படி நடக்கலாமோ வென்னில் அது கூடாது. பின்பு இவன் பண்ண வேண்டிய கைங்கர்யங்கள் ஐந்து உண்டு. ஸ்ரீபாஷ்யத்தை வாசித்துப் பிரவர்த்திப்பித்தல், திவ்யப் பிரபந்தங்களைக் கேட்டுப் பிரவர்த்திப்பித்தல், அதற்கு யோக்யதை இல்லையாகில் அர்ச்சாவதாரங்களுக்கு திருமாலை, அமுதுபடி, சாற்றுபடி, முதலிய கைங்கர்யங்களைப் பண்ணுதல், அதுவும் முடியாவிடில் த்வயத்தின் அர்த்தானு ஸந்தானம் பண்ணுதல், அதுவும் முடியாவிடில் ஸ்ரீ வைஷ்ணவனின் அபிமானத்தில் ஒதுங்கி இருத்தல். இவை முக்கிய மாகப் பேசப்பட்டுள்ளன.

பிரபன்னனுக்கு அநுகூலர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்கள். அவர்களைக் கண்டால் நிலவு, தென்றல்களைக் கண்டாற் போல், உகந்து வர்த்திக்க வேண்டும். பிரதிகூலர்கள் என்கிற பகவத் த்வேஷிகளைக் கண்டால் ஸர்ப்பம், அக்நி இவற்றைக் கண்டாற் போல் பயந்து வர்த்திக்க வேண்டும்.

அநுபயர்கள் ஸம்ஸாரிகளைக் கண்டால் காஷ்டம், சல்லி, ஓடு இவைகளைக் கண்டாற்போல் அலக்ஷியமாயிருத்தல் வேண்டும்.

மற்றுள்ள நித்ய நைமித்திக தர்மங்களையும், அநுஞ்ஞாஸித்தங் களான தர்மங்களையும் ச்ருதி ஸ்ம்ருதி ரூபங்களான சாஸ்திரங்கள் சொல்லு கிறபடியே நடத்தவேண்டும். சாஸ்திரத்தை மீறி நடந்தால் பகவான் திருவுள்ளம் அழன்றுபோம். அவனும் ''மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ:'' என்கிறான். சாஸ்திரம் சொன்னபடி நடக்க வேண்டும்.

## 18. அபராத பரிஹாராதிகாரம்

ஒருவன் பிரபன்னனானாலும் அவன் செய்த பாவங்கள் நரகம் முதலிய துக்கங்களைக் கொடுத்தால் என் செய்வது என்று வினவ, பிரபத்தியினால் ஸகல பாபங்களும் கழிந்து இவன் கோலின காலத்தில் முக்தனாகிறான். பாவங்கள் தடையாகமாட்டா வென்று உத்தரம் சொல்லி பிரபன்னனுடைய பாபங்கள் தீரும் வழியைச் சொல்லுகிறார்.

இவனுக்கு பாபங்கள் ஸஞ்சிதங்கள், பிராரப்தங்கள் என்று இரு வகையாகும். ஸஞ்சிதங்கள் ஸம்பாதிக்கப்பட்டவை. அனாதிகாலம் ஸம்பாதிக்கப்பட்ட பாபங்களை சரணாகதி செய்கிற காலத்தின் முதல் க்ஷணத்திலேயே பகவான் விலக்கி விடுகிறான்.

பிராரப்த பாபங்கள், நமக்கு பலம் கொடுக்க ஆரம்பித்திருக் கின்றவை. அவைகளை நாம் மோக்ஷம் கேட்கும் காலப்படி வேண்டுமளவு வைத்துக் கொண்டு மிகுதியானவைகளையும் விலக்கிவிடுகிறான். அதாவது நாம் சரீரத்தின் முடிவில் மோக்ஷம் வேண்டுமென்றால் இச்சரீரம் முடியும் வரை வேண்டிய பிராரப்தத்தை வைத்துக் கொண்டு ஜன்மாந் திரங்களுக்குக் காரணமான பிராரப்தங்களை யெல்லாம் போக்கி விடு கிறான். இப்பொழுதே மோக்ஷம் வேண்டுமென்று கேட்டால் பிராரப்தங் களை முழுமையும் போக்குகிறான். சரணாகதிக்குப் பிறகு தேசம், காலம், நிலைமை இவைகளுடைய அஸௌகர்யத்தாலும் அறியாமையாலும் பண்ணும் பாபங்களையும் நம்மோடு ஒட்டாமல் செய்து விடுகிறான். சரணா கதி பண்ணிய பின்பு தெரிந்து பண்ணுகிற பாபங்களை இவனுக்கு அநுதா பத்தை உண்டாக்கி பிராயச்சித்த ரூபமாகப் பிரபத்தி செய்து அம்முகத் தாலே போக்கிவிடுகிறான். புத்தி பூர்வமான பாபங்களுக்கு பிராயச்சித்தங் களோ, அல்லது பிராயச்சித்த பிரபத்தியோ செய்யாவிடில் இலேசான தண்டனைகளைக் கொடுத்து அவற்றையும் ஒழித்து விடுகிறான். ஆகவே, பிரபன்னனை ஒருபடியாலும் கைவிடுவதில்லை. மேல் நரகங்களும் கிடையா. இவன் கோலின காலத்திற்குள் இவனை சுத்தனாக்கி முக்த னாக்குகிறான்.

## 19. ஸ்தான விசேஷாதிகாரம்

இவ்வதிகாரத்தில் ஸ்வயம் பிரயோஜனமான பகவத் கைங் கர்யத்திலே ஆசையுடைய பிரபன்னனுக்கு வாஸம் செய்யுமிடத்தைச் சொல்லுகிறது.

'' ஆர்யாவர்த்த: புண்யபூமி: '' என்று சொல்லப்பட்ட ஆர்யாவர்த்தம் முதலான விடங்களும், முத்திதரும் நகரங்களான அயோத்யா, மதுரா, மாயா,

காசி, காஞ்சீ, அவந்தி, துவாரகை முதலான நகரங்களும் வாஸஸ்தானமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் யுகஸ்வபாவத்தால் வ்யாகுலங்களானாலும் வர்ணாசிரம தர்மம் நிலையாயுள்ள விடத்தில் வஸிப்பது இப்போதைக்கு உபாதேயம். அதிலும் எம்பெருமானடியார்களான பாகவதாள் உகந்து வாஸம் செய்கிறவிடமே நமக்கு வாஸஸ்தானம். ஆதலால் பகவத்பாத ஸேவாதிகளுக்கு பாங்கான பரமைகாந்திகளான பாகவதாள் உகந்து வர்த்திக்கிற ஸ்ரீரங்கம், திருமலை, பெருமாள் கோவில், திருநாராயணபுரம், முதலிய பகவான் உகந்தருளிய நிலங்களே நமக்கு யோக்யம். அதிலும் பாகவதாள் வஸிக்குமிடம் தான் நமக்கு கங்கை, காவிரி, கடல், இமயமலை முதலான புண்ய தீர்த்தங்களும் புண்ய ஸ்தலங்களுமாம்.

## 20. நிர்யாணாதிகாரம்

ஜீவாத்மா சரீரத்திலிருந்தும் புறப்படும் கிரமத்தைச் சொல்லுகிறது இவ்வதிகாரம். பகவான் பிராரப்த சரீராவஸானத்தில் இவனுக்கு பரமபதம் கொடுப்பதாகக் கோலி, பந்தங்களான பூர்வோத்தர புண்யபாபங்களையும், பிராரப்தத்தில் இவன் ஒப்புக் கொண்டதைத் தவிர மற்றுமுள்ள அம்சங்களையும் சரீர பாதஸமயம் வந்தவாரே இவனுடைய ஸுஹ்ருத்துக்களிடத்திலும், துவேஷிகளிடத்திலும் பகிர்ந்து கொடுத்து பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம் என்கிற கால நிர்பந்தமில்லாமல், இரவிலோ பகலிலோ தக்ஷிணாயத்திலோ, உத்தராயணத்திலோ தான் ஸங்கல்பித்த ஸமயத்தில் சரீரம் பிரிவதற்கு ஏதேனுமொரு காரணத்தை உண்டாக்கி, கர்மேந்திரிய ஞானேந்திரியங்கள் பத்தையும் மனஸ்ஸிலே சேர்த்து அந்த மனஸ்ஸை பிராண வாயுவோடே சேர்த்து, அந்தப் பிராணவாயுவை ஜீவனோடே சேர்த்து அந்த ஜீவனை ஹிருதயஸ்தனான அந்தர்யாமியான தன் பக்கலில் இளைப்பாற்றி, இப்படி ஸ்தூல சரீரத்திலிருந்து புறப்படும் 101 நாடிகளில் ஸ்வர்க நரகங்களுக்குப் போகும் மார்க்கங்களான நாடிகளில் ஜீவனைப் போகாதபடி வழிவிலக்கி 101வது நாடியான பிரம்ம நாடியிலே பிரவேசிப்பித்து, ஸூர்ய கிரணங்களைப் பிடித்துக் கொண்டு புறப்படும்படி செய்யும். இந்தக் கிரமத்தை விஸ்தாரமாகச் சொல்லுகிறது இவ்வதிகாரம்.

## 21. கதிவிசேஷாதிகாரம்

ஜீவாத்மா ஸ்தூல சரீரத்திலிருந்து புறப்பட்டுச் செல்லும் அர்ச்சிராதி மார்க்கத்தைப் பேசுகிறார். கீழ்ச்சொன்னபடி சிரஸ்ஸிலுள்ள பிரம்ம நாடியிலே பிரவேசித்த ஜீவனை முகவாச்யனான ராஜகுமாரனை ராஜா எடுத்துக்கொண்டு புறப்படுமாப் போல புறப்பட்டு தேவயான மார்க்கத்திலே

செல்லும்படி செய்து அர்சிஸ், அஹஸ், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், வாயு, சூரியன், சந்திரன், வைத்யுதன், அமானவன் என்று பேருள்ள வைத்யுதனுக்கு ஸஹாதிகாரிகளான வருணன், இந்திரன், பிரஜாபதிகளென்னும் தேவர்களைவிட்டு தான் பிரதானனாய் வழி நடத்தி, அவ்வவ்வோர் எல்லைகளில் போகங்களையுமனுபவித்து வைகுண்ட தேச விசேஷத்திலே சென்றவளவில் ஸூக்ஷ்ம சரீரத்தை விடுவித்து, விரஜை என்னும் நதிக்கு அக்கரைப் படுத்தி, அப்ராக்ருத சரீரத்தைக் கொடுத்து, ஐரம்மதீய மென்கிற ஸரஸ்ஸினளவும் சேர்த்து, ஸோமஸவநம் என்கிற அச்வதத்தைக் கிட்டுவித்து, ஐந்நூறு திவ்ய அப்ஸர ஸ்த்ரீகளையிட்டு எதிர் கொள்ளவித்து ப்ரம்மாலங்காரத்தால் அலங்காரம் செய்து துவார கோபுரம் குறுகுவித்து, வைகுந்தம் புகுதலும்,' என்று துடங்கி மூன்று பாட்டுக் களிலும் நம்மாழ்வார் அருளிச் செய்தபடி அப்ராக்ருத ராஜோபசாரங்களைப் பண்ணி வத்து, ஆனந்தமயமான மண்டபத்தில் அழகோலக்கலத்திலே புகுர விட்டு, தன்னைக் காட்டித் தன் திருவடிகளின் கீழே கொள்ளும். அவன் பின்பு அவ்விடமிருந்து மீள்வதில்லை. இவ்வநுபவம் மிக அழகா கப் பேசப்பட்டுள்ளது.

## 22. பரிபூர்ண ப்ரம்மானுபவாதிகாரம்

அர்ச்சிராதி கதியாலே சென்றவனுடைய பரிபூர்ண பிரம்மானுபவ மிருக்கும்படி சொல்லுகிறது இவ்வதிகாரம். ''அனைத்துலகமுடைய அரவிந்த லோசனைத் தினைத்தனையும் விடாள்'' என்கிறபடி ஸர்வதேச, ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வேச்வரனை விக்ரஹ குண விபூதி களில் ஒன்றும் குறையாமே யோக்யமாக அநுபவிப்பது மோக்ஷாநுபவம். இவ்வநுபவம் பகவானுக்கும் முக்தனுக்கும் ஸமானமாகையால் சுருதிகள் பரமஸாம்யம் சொல்லுகின்றன. ராஜ மகரிஷிக்கு ராஜா போக்யனானால், ராஜாவினுடைய ஐச்வர்யம், குணங்கள், அவனது ராஜ்யம், எல்லாம் ராஜாவினுடையது என்னுமாகாரத்தால் போக்யங்களாகுமாப்போல பகவானுடைய குண விக்ரஹ விபூதிகளெல்லாம் போக்யங்களாகின்றன. ஆனால், லீலா விபூதியாகிற பதினாலு லோகங்களும் இவ்வுலகத்தில் பிரத்யக்ஷமாகத் தோன்றுகிற பொருள்களும் போக்யங்களாமோ? என்னில் எல்லாம் போக்யங்களாகவேயிருக்கும். கர்மாவினால் தான் வஸ்துக்கள் பிரதிகூலங்களாயும் அநுகூலங்களாயும் தோன்றுகின்றன. கர்மம் கழிந்தால் எல்லாம் அநுகூலமாகவே தோன்றும். இந்த பரிபூர்ண பிரம்மானுபாவம் பிறந்தவாறே அதன் பரீவாஹமாக ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தை களிலும் கைங்கர்யங்கள் செய்கிறான்.

இவ்வநுபவத்துக்கு மேல் ஒரு நாளும் குறைவில்லை. மோக்ஷ

மடைந்தவர்கள் இப்புவியில் அவதாரங்கள் செய்தாலும் இவ்வநுபவத் துக்குக் குறைவில்லை. துக்கானுபவமுமில்லை. மீண்டும் ஸம்ஸார வாஸனையு மில்லை. ப்ரம்மாநுபவத்தோடு இருக்கிறான். இவ்வனுபவம் வைகுண்டம், பரமபதம் என்னும் சொல்லுகிற லோகத்தில் சென்றால் தான் ஏற்படுகிறது. முக்தனுக்கு ஜகத் வ்யாபாரம் இல்லையென்றாலும் அத னால் பகவானுக்குள்ள ஆனந்தம் ஜீவனுக்குமுண்டு. ஆனந்தத்தில் முக்தரானவர்களுக்கும், நித்யர்களுக்கும், பகவானுக்கும் வாசியில்லை. சமானமானவனுபவமே. 'ஸாயுஜ்யம் ஸார்ஷ்டிதா' என்று வேதம் சொல்லு கிறது. ஸாயுஜ்யம் என்றால் ஒரே வஸ்துவைச் சேர்த்து அநுபவிப்பது. ஸார்ஷ்டிதா என்றால் அநுபவத்தில் தாரதம்யமில்லாமலிருப்பது. இவை களையடைகின்றான் முக்தன் என்று சுருதி சொல்லுகிறது. மற்றும் இதன் விரிவுகளெல்லாம் இவ்வதிகாரத்தில் பரக்கப் பேசியிருப்பது நோக் கத்தக்கது.

## 23. ஸித்தோபாய சோதனாதிகாரம்

கீழே இருபத்திரண்டு அதிகாரங்களில் சொல்லப்பட்ட விஷயங்களே ஒரு முமுக்ஷுவுக்குத் தெரிய வேண்டியவை. இதற்கு அர்த்தானுசாஸந பாகம் என்று பெயர். இந்த இருபத்திரண்டு அதிகாரங் களில் சொல்லியுள்ள விஷயங்களில் தெளிவு பிறந்து ஸம்ஸய விபரீத ஞானங்களின்றி யிருப்பானாகில் அவனே கிருதார்த்தன். பரம ஆஸ்திகனா யிருப்பானுக்கு இவ்வுபதேசமே பிரதானம். மற்றுமுள்ளார்க்குத் தங்கள் தெளிகைக்காகவும், குதர்க்கங்களாலே கலங்குவாரைத் தெளிவிக்கைக் காகவும் நல்ல யுக்தகங்களோடு கேட்கவேண்டும். அதற்கு மேல் நான்கு அதிகாரங்கள் சொல்லப்படுகின்றன. இதற்கு ஸ்திரீகரணபாகம் என்று பெயர். அதில் முற்பட ஸித்தோபாயமான பகவானைப் பற்றி வரும் கலக் கங்களுக்குப் பரிஹாரம் முதலிய சொல்லுகிறார். ஸித்தோபாய சோதனாதி காரத்தில், பகவான் நாம் செய்யும் உபாயத்தை எதிர்பாராது நிர்ஹேதுக மாகவே மோக்ஷம் கொடுக்கிறான். ''பிரபத்தி முதலான உபாயங்கள் எதற்கு?'' என்ற கேள்விக்கு பஹுமுகமாக பிரமாண ஸம்பிரதாயங்களுடன் பிரபத்திவசீக்ருதனான ச்ரிய:பதியே ஸித்தோபாயம் என்று ஸ்தாபிக்கிறார். பெரிய பிராட்டியாரும் உபாயமாகிறாள். இவ்விஷயத்திலும் சுருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸ, பூர்வாசார்ய, ஸூக்திகளையும் பிரமாணமாகக் காட்டி லக்ஷ்மீ விசிஷ்டனான நாராயணனே ஸித்தோபாயம் என்று ஸ்தாபிக்கிறார். அதன் பிரகாரங்களை எழுதுவது விஸ்தாரமாகு மாதலால் முக்கியமான விஷயத் தைச் சொல்லி உபஸம்ஹாரம் பண்ணப்படுகிறது.

## 24. ஸாத்யோபாய சோதனாதிகாரம்

இவ்வதிகாரத்தில் சரணாகதியைப் பற்றி வரும் கலக்கங்களுக்குப் பரிஹாரங்கள் சொல்லுகிறார். ப்ரபத்தியின் அதிகாரத்திலும், ஸ்வரூபத்திலும், அங்கங்களிலும் வரும் கலக்கங்களுக்குப் பரிஹாரங்களான யுக்திகள் பிரமாணங்களுடன் சொல்லப்படுகின்றன. ஆத்மா எம்பெருமானுக்கு சேஷபூதன் என்று சாஸ்திரத்தால் நன்கு தெரிந்து கொண்டவனுக்கு அதிகார விசேஷத்தோடும் ஐந்து அங்கங்களோடும் பல ஸங்கல்பத்தோடும் கூடி பகவானுக்கு சேஷபூதன் என்கிற நினைவுடன் கூடின ஸ்வாத்ம ரக்ஷாபரந்யாஸம் சரணாகதி என்று சரணாகதி ஸ்வரூபத்தை நிரூபிக்கிறார். ஸர்வாதிகாரம் என்று ஸ்தாபிக்கிறார். ஐந்து அங்கங்களும் அவசியம் வேண்டும் என்றும் நிரூபிக்கிறார். இன்னும் ஸாத்யோபாய விஷயமாக வரும் பல வித கலக்கங்களுக்குப் பரிஹாரங்கள் பரக்கப் பேசியுள்ளார்.

## 25. ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரம்

பகவானை ஆச்ரயிப்பதனால் சூத்ரர் முதலானவர்களுக்கு சூத்ரஜாதி போய் பிராம்மண்ய முண்டாகிறதென்று சாஸ்திரத்தை மீறிச் சிலர் பாகவதப் பிரபாவம் சொல்லுகிறார்கள். அந்தக் கலக்கத்துக்குப் பரிஹார மாக ஜாதி வ்யவஸ்தை குலையாதே சாஸ்திரம் சொல்லுகிற வளவுக்கே பாகவத பிரபாவம் சொல்லவேண்டும் என்றும் பகவானை ஆச்ரயித்தவன் சாஸ்திரத்தை மீறி நடந்தாலும் அவனுக்குக் குறைவில்லை என்று சொல்லும் பக்ஷத்திற்குப் பரிஹாரமாக சாஸ்திரம் சொன்னபடியே பிரபன்னன் நடக்கவேண்டும் என்று இவ்வதிகாரம் சொல்லுகிறது. பாகவத பிரபாவத்தை அதிகமாகச் சொல்லாமல் சாஸ்திரங்கள் பேசுமளவுக்கு வியவஸ்தையை சொல்லுவது பிரபாவ வியவஸ்தை எனப்படும்.

## 26. ப்ரபாவ ரக்ஷாதிகாரம்

சிலர் பாகவதர்களுக்கு பிரபாவம் சாஸ்திரங்களில் சொல்லியிருந்தாலும் அது அதிவாதம், பிரபாவம் கிடையாது என்கிறார்கள். அக்கலக்கத்திற்குப் பரிஹாரமாக பாகவதப் பிரபாவம் ஸ்தாபிக்கப்படுகிறது. இவ்வதிகாரத்தில் பாகவதப் பிரபாவத்தைக் குறைய நினையாமல் சாஸ்திரம் சொல்லுகிறபடி ரக்ஷிக்கை பிரபாவரக்ஷை. ஆகையால் பாகவத பிரபாவம் ரக்ஷிக்கப்படுகிறது இந்த அதிகாரத்தில்.

## 27. மூலமந்திராதிகாரம்

இனி மூன்று அதிகாரங்களில் திருமந்த்ரம், துவயம், சரமசுலோகம் அர்த்தம் சொல்லப்படுகிறது. இந்த பாகத்திற்கு பதவாக்ய யோஜனை என்று

பெயர். முதலில் மூலமந்த்ரம் என்கிற திருவஷ்டாக்ஷரத்திற்குப் பொருள் கூறப்படுகிறது. திருமந்த்ரத்தினுடைய பிரபாவம் விஸ்தாரமாகப் பேசப் படுகிறது. மந்த்ரங்களுக்கு விரிவாகப் பொருளுரைப்பது ஸாத்யமில்லாத படியாலும் காலக்ஷேபத்திலேயே கேட்டறிய வேண்டியிருப்பதாலும் இங்கு ஸமுதாயார்த்தத்தை ஸங்கிரஹமாகவே எழுதப்படுகிறது.

ப்ரணவார்த்தம்: ஸகல ஜகத்காரணமாயும், ஸர்வ லோக ரக்ஷக னாகவும் லக்ஷ்மீ விசிஷ்டனாயுமிருக்கிற பகவானுக்கே இருபத்தைந்தாவது தத்துவமாயும், ஞானரூபியாயும், ஞானாச்ரயமாயுமிருக்கிற ஜீவாத்மா சேஷபூதன்.

நம: என்கிற இரண்டாவது பதத்தின் பொருளாவது: நான் எனக்கு உரியனல்லேன். ஒரு பொருளையும் பற்ற எனக்கு நிருபாதிக ஸ்வாமித்வ மில்லை. எனக்கு ஸ்வாதந்த்ரியமுமில்லை. பாகவத சேஷத்வம் அர்த்த ஸித்தமான பொருள். சரணாகதியாகிற உபாயத்தையும் சொல்லுகிறது.

நம:- என்கிற பதத்திற்கு ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம் என்று மூன்று பொருள்கள் அஹிர்புதன்யன் வ்யாக்யானம் பண்ணியிருக்கிறார்.

ஸ்தூலார்த்தம்:- உயர்ந்தவனான புருஷனைக் குறித்து நீசனானவன் தன் வணக்கத்தைக் காண்பிக்கிற வியாபாரம். இயற்கையாகவே ஸ்ரீமந் நா ராயணன் புருஷோத்தமன், ஜீவர்கள் இயற்கையாகவே தாழ்ந்தவர்கள். மேலானவனைக் குறித்து தாழ்ந்தவனுடைய வணக்கம் 'நம' என்கிற பதத்தினர்த்தம். பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் சேஷசேஷிபாவேனே அந்வயம் சொல்லப்படுகிறது.

ஸூக்ஷ்மார்த்தமாவது:- அங்க பஞ்சக ஸம்பந்தமான சரணாகதி.

பரமாவது: ஸர்வேச்வரன் பிரதானமான உபாயமாயிருக்கிறான்.

நாராயண சப்தார்த்தம்:- ஸமஸ்த சேதந அசேதநாத்மகமான ஜகத்துக்கு ஆதாரமாயிருப்பவன் ஜகத்தை ஆதாரமாகக் கொண்டவன் நரனிடத்திலிருந்துண்டான பிரம்மருத்ராதி ஸகல சேதனர்களுக்கும் ஆதார பூதன். பிரளயத்தில் ஜலத்தில் சயனித்திருந்தவன். ஸர்வ ஜீவன்களுக்கும் கதியாயிருப்பவன். ஸர்வ ஜீவன்களுக்கும் ஸர்வ வித பந்துவாயிருப்பவன்; மூன்று வித ஆத்மாக்களுக்கும் உபேயமானவன் அபேக்ஷிக்கப்பட்ட புருஷார்த்தங்களைக் கொடுப்பவன் ஸகல கல்யாண குணங்களுக்கும், அஸ்த்ர பூஷணாகதிகளுக்கும், விக்ரஹத்திற்கும் ஆச்ரயமாயிருப்பவன்.

நாலாம் வேற்றுமைக்குப் பொருள்:- பல ஸித்திக்குக் காரணமான வனிடம். இம் மந்த்ரத்தின் சக்தி ரூபம். இங்கு பல பிரார்த்தனை செய்யப் படுகிறது. சேஷித்வம் பொருள். கைங்கர்யமும் பொருள். பிரணவத்தைத்

தவிர ஏழு திருவக்ஷரங்களுக்கு மந்த்ர ஸ்ம்ருதிகளில் சொன்ன பொருள் களும் நோக்கத்தக்கவை.

இத் திருமந்த்ரத்தில் வாக்யமும் வாக்யார்த்தமும் இருக்கும்படியும் சொல்லுகிறார். இதை ஒரு வாக்யமென்றும், இரண்டு வாக்யங்களென்றும், மூன்று வாக்யங்களென்றும் அவரவர் ஸம்பிரதாயங்களாலே அநுஸந்திப் பார்கள்.

**ஏக வாக்யம்**

1. ஓம் நாராயணாய நம: (உபாய விருத்திபரம்)
2. ஓம் நாராயணாய நம: (சேஷ விருத்திபரம்)

**இரண்டு வாக்யங்கள்**

3. ஆய நாராயணாய உம், 1. நம: 2 (முழுக்க ஸ்வரூபம்)
4. ஆய நாராயணாய உம், 1. நம: 2 (முழுக்க உபாயபரம்)
5. ஆய நாராயணாய உம் ஸ்யாம்: 1. நம: (ஸ்யாம், 2. இஷ்டப்ராப்தி அநிஷ்ட நிவ்ருத்திரூப புருஷார்த்த பிரார்த்தனாபரம்)

**மூன்று வாக்யங்கள்**

6. ஓம்,1., நம: 2., நாராயணாய ஸ்யாம் 3. (இரண்டு வாக்யம் ஸ்வரூபபரம். மூன்றாவது வாக்யம் புருஷார்த்த பிரார்த்தனாபரம்)
7. ஓம்,1., நம: ஸ்யாம் 2., நாராயண ஸ்யாம் 3. (முதல் வாக்யம் ஸ்வரூபபரம். இரண்டாவது வாக்யம் அநிஷ்ட நிவ்ருத்திப் பிரார்த் தனை. மூன்றாவது வாக்யம் புருஷார்த்த பிரார்த்தனாபரம்)
8. ஓம், 1, நம: ஸ்யாம் 2., நாராயண ஸ்யாம் 3. முதல் வாக்யம் ஸ்வரூபபரம் மேல் இரண்டு வாக்யங்கள் கோப்த்ருத்வவரண முகேன உபாயபரம்)
9. ஓம், 1., நம: 2., நாராயண ஸ்யாம் 3. (முதல் வாக்யம் பரந்யாஸ பரம் மேல் இரண்டு வாக்யங்கள் பல ப்ரார்த்தனை)
10. ஓம், 1., நம: 2., நாராயணாய 3. ஸ்வரூப உபாய புருஷார்த் தங்கள் அடையவே சொல்லப் படுகின்றன.

இப்படி பத்துப்படியாக வாக்யார்த்தங்களை நிர்வஹிப்பார்கள். இத் திருமந்திரத்தை அநுஸந்தானம் பண்ணுகிறவர்களுக்கு எட்டு புஷ்பங்கள், எட்டு ஸித்திகள், எட்டு வித பக்திகள், எட்டு யோகங்கள், எட்டு ஐச்வர் யங்கள், எட்டு குணங்கள், அறுபத்துநாலு கலைகள், ஒன்பதாவது சாந்தி

ரஸம் எல்லாம் கிடைக்கும். இவைகளில் கிடையாதவை ஒன்றுமில்லை. இவ்வதிகாரத்தில் இவ்வர்த்தங்கள் எல்லாம் பரக்க நிரூபிக்கப்பட்டிருக் கின்றன. இங்கு சொல்லியிருப்பது மூலக்கிரந்தமாகிற கடலின் ஒரு திவலையே.

## 28. த்வயாதிகாரம்

உபாயம், புருஷார்த்தம் இவையிரண்டைச் சொல்லுகையாலும் இரண்டு வாக்யமாயிருப்பதாலும் இம்மந்த்ரத்திற்கு துவயம் என்று பெயர். இது சுருதி மூலமான தாந்த்ரிக மந்த்ரம்.

ஸ்ரீ சப்தார்த்தம்:- ஆத்ம உஜ்ஜீவனத்தை விரும்பும் ஜீவர்களாலே ஆச்ரயிக்கப்படுகிறாள்.

ஜீவர்களை உஜ்ஜீவிப்பிக்கைக்காக ஸர்வேச்வரனை ஆச்ரயித் திருக்கிறாள்.

நம்முடைய ஆர்த்த த்வனியைக் கேட்கிறாள். அதை ஸர்வேச்வரன் கேட்கும்படி விண்ணப்பம் செய்கிறாள்.

ஸர்வேச்வரனிடம் ''ஆந்ருசம்ஸ்யம் பரதர்ம:'' முதலானவைகளைக் கேட்டு ஜீவர்கள் ஆச்ரயிக்கும் காலத்தில் அவன் சொன்னது அவனுக்கு ஞாபகத்துக்கு வரும்படி கேட்பிக்கிறாள்.

ஸர்வேச்வரன் பக்கல் லோகஹிதத்தைக் கேட்டு ராவணாதி களுக்குப் போலே நம்மைக் கேட்பிக்கிறாள்.

ஆக, பகவானை ஆச்ரயிக்கப் புருஷாகாரமாயிருக்கிறாள் என்பது பொருள். ஜீவர்களுடைய விரோதிகளான கர்மங்கள் முதலானவைகளை நாசம் செய்கிறாள். ஜீவர்களுக்கு கைங்கர்யம் அளவான குணபரிபாகத்தை உண்டாக்குகிறாள்.

ஸ்ரீமந் நித்ய ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. லக்ஷ்மியோடு ஸர்வ காலத்திலும் சேர்ந்திருப்பவன்.

நாராயண சப்தத்தில் வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌலப்பயம, ஸர்வஞ்ஞத்வம்,ஸர்வ சக்தித்வம், ஸத்ய ஸங்கல்பத்வம், பரமகாருணி கத்வம், கிருதஞ்ஞத்வம், ஸ்திரத்வம், பரிபூர்ணத்வம், பரமோதாரத்வம், முதலான குணங்களுடன் கூடின நாராயணன் என்று பொருள் நினைக் கத்தக்கது.

ஸ்ரீமந் நாராயண சரணௌ என்று ஒரு பதமாகவும் சொல்லுவார்கள்.

ஸ்ரீமந், நாராயண சரணௌ என்று மூன்று பாதங்களாகவும் சொல்லு வார்கள். இரண்டும் ஸம்பிரதாய ஸித்தங்களே.

சரணௌ என்பதால் சுபாச்ரயமான பகவானுடைய திருமேனி யையும் தியானம் செய்து கொள்ளவேண்டும்.

சரணம்: உபாயம் என்கிற பொருளை சொல்லுகிறது.

பிரபத்யே: காப்பாற்றுவான் என்கிற மஹாவிசுவாஸத்தைச் சொல்லுகிறது.

சரணம், ப்ரபத்யே என்கிறவிடத்தில் மஹாவிச்வாஸம், கார்ப் பண்யம் , கோப்த்ருத்வ வரணம், பரஸமர்ப்பணம் ஆகிய அர்த்தங்கள் சொல்லப்படும் கிரமத்தை மூலக் கிரந்தத்தில் நிரூபித்திருப்பது நோக்கத் தக்கது.

ஸ்ரீமதே : லக்ஷ்மியோடு கூடினவன்

நாராயணாய : ஸ்வாமித்வம், போக்யத்வம் முதலான ப்ராப்யதைக்கு உபயோகமுள்ள குணங்களோடு கூடின நாராயணன் பொருட்டு கைங்கர்யம் பண்ணக்கடவேன். நாம் லக்ஷ்மீ நாராயணன் இருவர்களுக்கும் கைங்கர்யம் செய்ய வேண்டும். கைங்கர்ய பிரதிஸம்பந்திகள் இருவருமே.

நம: ஸ்யாம் என்று ஒரு சிறிய பதம் சேர்த்துக் கொண்டு எனக்காகவேனல்லேன் என்று பொருள் கூறி 'நமம கிம்சித் ஸ்யாத்' என்று ஸர்வ அநிஷ்ட நிவ்ருத்தியைப் பிரார்த்திக்கிறது.

ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளில் அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வக கைங்கர்யங்களெல்லாம் செய்யும் பொருட்டு ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன் என்பது திரண்ட பொருள்.

இம்மந்திரத்தை ஒரு தடவை பகவான் கேட்கும்படி சொல்வானே யானால் அவன் கிருதக்ருத்யனாகி விடுகிறான்.

பல தடவைகள் துவயத்தையே சொல்லிக் கொண்டிருந்தால் கிருதார்த்தனாகிறான். இம்மந்திரம் ஸம்ஸாரமாகிற காளராத்திரிக்கு விடியற் காலை நேரமாகிறது. மோக்ஷத்தைக் கொடுக்குமது வேறு உலகிலில்லை. ஆதலால் இம்மந்திரத்துக்கு மந்த்ர ரத்னம் என்று பெயர்.

## 29. சரம ச்லோகாதிகாரம்

ச்ரிய:பதியான ஸர்வேச்வரன் துவாரகா நாதனான கண்ணனாக அவதாரம் செய்து சரணாகதர்களான பாண்டவர்களுக்காக அன்னார் தூதன் என நின்று, அர்ஜுனனை ரதியாக்கித் தான் ஸாரதியாய் நின்றவளவில் பந்துவிநாசம் ஸித்தமென்று அஸ்தான காருண்யத்தாலும், அஸ்தான ஸ்நேஹத்தாலும், ஆசார்யாதிகளுடைய வதத்தால் பாபம் வருமோ என்கிற

பயத்தாலும் 'யத் ச்ரேய: ஸ்யாத் நிச்சிதம் ப்ரூஹி தந்மே' என்று கண்ணனிடம் விண்ணப்பம் செய்ய, கண்ணனும் ஆத்ம ஸ்வரூபத்தையும் அதன் பரம புருஷார்த்தமான மோக்ஷத்திற்குக் காரணமான கர்மயோக, ஞானயோக, பக்தியோகங்களையும், ஸபரிகரமாக உபதேசிக்க அர்ஜுனன் மோக்ஷத்தைக் கடுகப் பெறவேண்டுமென்று ஆசைப்படுவதாலும், அந்த கர்ம ஞான பக்திகள் கஷ்டப்பட்டும் செய்ய முடியாதவைகளாகயிருப்ப தாலும், செய்தாலும் சீக்கிரம் மோக்ஷத்தைக் கொடுக்க முடியாதவைகளாக இருப்பதாலும் முன்னிலும் பதின் மடங்கு சேவிக்கிற அர்ஜுனனைப் பார்த்து பகவான் பரம காருண்யத்தால் இச்சுலோகம் அருளிச் செய்கிறான். இச்சுலோகத்தின் பொருள் மிகவும் விரிவாக இவ்வதிகாரத்தில் காட்டி யிருந்தும் சிறிதளவு இங்கு எழுதப்படுகிறது.

ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய : சாஸ்திரங்களைக் கொண்டே தெரிந்து கொள்ள வேண்டியிருக்கும் புருஷார்த்த ஸாதனங்கள் தர்மங்கள் 'அங்கங் களோடு கூடின தர்மங்களெல்லாவற்றையும் விட்டு' என்று பொருள்.

'ஸர்வதர்மாந் பரித்ஜய' என்பதற்கு ஆறு விதமான பொருள்கள் கூறுகிறார்.

1. உன்னால் செய்ய முடியாத தர்மங்களில் முயல வேண்டாம்.
2. முதலில் செய்ய முடியாத தர்மங்களில் ஆசையை விடுவது நல்லது.
3. சரணாகதி அதன் அங்கங்களைத் தவிர வேறொன்றின் துணையை வேண்டாது.
4. சரணாகதி வேறொன்றைக் கூட்டாக வேண்டினால் அது பிரம் மாஸ்திரம் போல் வெட்கப்பட்டுக் கொண்டு பலன் கொடுக்காது.
5. கர்ம, ஞான, பக்திகளாகிற உபாயாந்தரங்களைச் செய்ய முடியாத அசக்தன் சரணாகதிக்கு அதிகாரி என்றபடி.
6. 'உன்னுடைய ஆகிஞ்சன்யத்தை முன்னிட்டுக் கொண்டு என்னைச் சரணாகதி பண்ணு' என்று கார்ப்பண்யமாகிற அங்கத்தைச் சொன்னபடி.

மாம் - 1. ஸுலபனுமாய் ஸ்வதந்த்ரனுமான என்னை.
2. உன்னைக் காப்பாற்றுவதற்கு அபிமுகனாக விருக்கிற என்னை.
3. உயர்ந்த திருமேனியோடு கூடிய என்னை.
4. பரம காருணிகனான என்னை.

ஏகம் -1. உனக்கு உபாயமும் ப்ராப்யமும் நான் ஒருவனே.
2. பராதீன கர்த்தாவான நீ சரணாகதி பண்ணுகிறேன் என்று உன்னையும் என்னைப்போல உபாயமாக நினைக்காதே.

3. கிருபை, ஸ்வாதந்த்ரியாதி குணங்களோடு கூடின நான் ஒரு அபிமத பலத்தைத் தருவதால் நீ பண்ணுகிற சரணாகதியும் ஒரு வியாஜமாத்ரமாதலால் நீ பண்ணும் சரணாகதியையும் முக்ய உபாயமாக நினைக்காதே.
4. சரணாகதிக்கு பக்திக்கு போல் வர்ணாச்ரமாதி தர்மங்களை அங்கமாக அநுஷ்டிக்க வேண்டாம்.
5. சரணாகதிக்கு, கர்மயோகம் முதலான தர்மங்களையும் இதற்கு உதவியாக அநுஷ்டிக்க வேண்டாம்.
6. எல்லா பலத்திற்கும் நான் ஒருவனே அமையும் எந்தெந்த பலன் களைத் தரவல்லவையோ, அந்தந்த ஸகல தர்மங்களின் ஸ்தா நத்தில் நானே நிற்கிறேன்.

இவ்வண்ணம் ஏக சப்தத்திற்கும் ஆறு பொருள்கள் கூறப்பட்டன.

சரணம் வ்ரஜ: அங்கபஞ்சக ஸம்பந்தமான சரணாகதியைப் பண்ணு.

அஹம்: ஸர்வசக்தனாய், ஸத்யஸங்கல்பனாய் ஸ்வதந்த்ரனாயு மிருக்கிற நான்.

த்வா: தத்வஹித புருஷார்த்தங்களைத் தெளிந்து ஸர்வேச்வரனான என் பக்கலிலே பரந்யாஸம் பண்ணி பல லாபத்தைப்பற்ற இனிச் செய்ய வேண்டுவதொன்றுமில்லாதபடியிருக்கிற உன்னை.

ஸர்வபாபேப்ய: முமுக்ஷுவைப்பற்றி அநிஷ்டபலங்களான ஸகல புண்ய பாபங்களினின்றும்.

மோக்ஷயிஷ்யாமி: விடுவிக்கிறேன் ஸகல பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன் என்பதால் ஐச்வர்ய கைவல்யங்களில் உன்னை விடாமல் பரிபூர்ண ப்ரம்மானுபவமாகிற மோக்ஷானந்தத்தை அடைவிக்கிறேன்.

மாசுச: நீ ஒருபடியாலும் சோகிக்க வேண்டாம் இங்கு பத்துப்படி யாகச் சோகம் ஸம்பாவித மென்று பத்துப் பிரகாரங்களாகவும் நீ சோகிக்க வேண்டாம் என்று பரக்க வருளிச் செய்திருப்பது நோக்கத்தக்கது.

அல்பஞ்ஜனாய் அல்ப சக்தியாய் பரிமித காலவர்த்தியாய் கால தாமதமாய் பொறுக்காத நீ அநுஷ்டிக்க முடியாத வேறு உபாயங்களில் அலையாதே. என்னை ஒருவனையே உபாயமாக அத்ய வசித்துக் கொண்டு ஐந்து அங்கங்களோடு கூடிய சரணாகதியைப் பண்ணு. இப்படி சரணாகதி பண்ணி, க்ருதக்ருத்யனானவுன்னை விரோதி வர்க்கங்களான ஸகல பாபங் களிலிருந்தும் விடுவித்து என்னோடொக்க துல்யபோகனாக்கி பரிபூர்ணா னுபவ பரீவாஹங்களான ஸகல கைங்கர்யங்களையும் கொடுத்து காப்பேன்'' என்பது சரம ச்லோகத்தின் திரண்ட பொருள்.

## 30. ஆசார்ய க்ருத்யதிகாரம்

ஆசார்யன் செய்ய வேண்டிய காரியத்தைச் சொல்லுகிறார். இந்த ஸம்பிரதாயம் ஒரு தீபம் போன்றது. நல்ல பாத்திரத்தில் நல்ல திரியையிட்டு சுத்த எண்ணையோடும் கூடின அத்திரியை ஏற்றிவைக்குமாப்போல, ஆசார்யன் பரமபதத்தையடையப் போகிறவனாய்க் கொண்டு நன்றாகப் பரீக்ஷித்துப் பார்த்து சிஷ்ய குணங்களோடு கூடின பக்தியுள்ளவொரு பாத்திரத்தில் சீரிய ஸம்பிரதாயமான இவ்வர்த்த விசேஷங்களை உபதே சிக்க வேண்டும். ஸர்வேச்வரன் முதலாக ஸதாசார்ய ஸம்பிரதாயமாக தங்களாலான ரஹஸ்யத்ரயார்த்தங்களை அயோக்யர்களுக்கு உபதேசிக் காமல் பாத்திரமறிந்து உபதேசிக்க வேண்டும். தபஸ்ஸில்லாதவனுக்கும், பக்தி இல்லாதவனுக்கும், சுச்ரூஷை செய்யாதவனுக்கும், பகவானை துவேஷிப்பவனுக்கும், பொய் சொல்லுகிறவனுக்கும், சடனுக்கும், வஞ்சக னுக்கும், வக்ர புத்தியுள்ளவனுக்கும், தன்னைப் பண்டிதனாக நினைத் திருப்பவனுக்கும், பிறருக்கு ஹிம்ஸை பண்ணுபவனுக்கும், உபதேசிக்க லாகாது. ஆஸ்திகனுக்கும், ஆத்ம குணங்களுள்ளவனுக்கும், வேதத்தில் சொல்லிய தர்மங்களை அநுஷ்டிக்க ஆசையுள்ளவனுக்கும், பக்தியுள்ளவ னுக்கும், உபதேசிக்க வேண்டும், சரண்யனனுமதி பண்ணும்படியான ஸாத் வீகதாஸ்தி க்யாதி குணங்களை யுடையவனுக்கும் அஷட்கர்ணமாக வெளியிட்டு அஸுர பிரக்ருதிகளுக்கும் மறைத்து கிருதார்த்தர்களாய் சீரிய தனமுடையார் சேமித்து வாழுமாப்போல் கிருதார்த்தராய் இருக்க வேண்டும். ஸங்கிரஹருசிகளுக்கு (அதாவது சுருக்கமாகக் கேட்க வேண்டும் என்று நினைக்கிற சிஷ்யர்களுக்கு) தத்வஹித புருஷார்த்தங் களை சுருக்க அருளிச் செய்வார்கள், இப்படியிருக்கும் போது ஆசார்யர்கள் சிஷ்யனை ரக்ஷிக்கிற வ்யாஜத்தால் தன் ஸ்வரூபத்தையும் ரக்ஷித்துக் கொள்கிறார்கள்.

## 31. சிஷ்யக்ருத்யாதிகாரம்

இதில் சிஷ்யனிருக்கவேண்டிய நிலையைப் பேசுகிறார். ஆசார்ய னிடம் பக்தி குறையாமல் இருத்தல் வேண்டும். எப்போதும் ஆசார்யனைத் துதித்துக்கொண்டிருக்க வேண்டும். ஆசார்ய ஸம்பந்தமுள்ளவர்களிடம் பஹுமானம் வேண்டும். ஆசார்யனிடம் கிருதஞ்ஞனாயிருக்க வேண்டு மென்றும், துரோஹம் செய்யாமலிருக்க வேண்டும் என்றும் சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. சிஷ்யன் ஆசார்யனுக்குச் செய்கிறது பிரத்யுபகாரமல்ல. சிஷ்யனை ஹிரண்ய ராவணாதிகளைப்போல் ஜனங்கள் சீச்சீஎன்று வெறுக் காமைக்காகவும், தண்ட்யனாகாமைக்காகவும் ஆசார்யனுக்குப் பிரத்யுப காரம் செய்யமுடியாது என்று பிரமாணங்கள் சொல்லுகின்றன. ஆசார்யன்

உபதேசித்த அர்த்தங்களை மண்டை ஓட்டில் வைத்த கங்காதீர்த்தம் போலவும் நாய்த்தோலில் வைத்த பால் போலவும் ஆக்கக் கூடாது. ஆதாவது சிஷ்யன் ஆசார சீலனாயிருக்க வேண்டும்.

ஆசார்யன் உபதேசித்தபடி நடக்கவேண்டும். தான் உபதேசிக்கிற படி தானும் நடக்க வேண்டும். விலைமாதர்கள் பிறருக்காத் தாங்கள் அலங் காரங்கள் செய்து கொள்வது போல் தான் கேட்ட அர்த்தங்களைப் பிறருக் காக ஆக்குவது தகாது. ஆசார்யன் உபதேசித்த அர்த்தங்களைச் சொல்லி அத்தால் வயிறு வளர்த்தலாகாது. உபதேசிக்கப்பட்ட வித்யை கமை கணிக் கலங்காரம் ஆக்குதல், குரங்கின் கையில் பூமாலை ஆக்குதல், அம்பலத் தில் அவல் பொறி ஆக்குதல் செய்யலாகாது. சாஸ்திர முறை மீறிப் பிறருக் கும் உபதேசிக்கலாகாது. ஆசார்யனை பிரகாசிப்பிக்க வேண்டும். ஆசார் யன் திருவடிகளே இங்குமங்கும் நமக்குச் சரண் என்றிருத்தல் வேண்டும்.

இப்படி பல ப்ரகாரங்கள் சிஷ்ய குணங்கள் கண்டு கொள்வது,

## 32. நிகமநாதிகாரம்

இப்படி முப்பத்தொன்று அதிகாரங்களிலே அர்த்தங்களையெல்லாம் ஸதாசார்யன் பக்கலிலே கேட்டு நம் பூர்வாசார்யர்கள் நடந்த வழியிலே நடந்தால் நமக்கு வருவதொரு தப்பில்லை என்று கிரந்தத்தை முடித்து இக்கிரந்தத்தால் ஏற்படும் பிரயோஜனத்தையும் சொல்லி தலைக்கட்டு கிறார். இக்கிரந்தத்தில் சொல்லியபடி ஆசார்யன் பக்கல் கேட்டு கேட்ட படியே நடந்தால் மஹரிஷிகள் நெஞ்சாறல்படும் நரக மார்க்கங்கள் காண வேண்டாம். பஞ்சாக்நி வித்யையில் சொன்னபடி தூமாதி மார்க்கத்திலே சுழலவும் வேண்டாம். பகவானுக்கு லீலோபகரணமாயு மிருக்கவேண்டாம். அர்ச்சிராதி வழியே சென்று, பரமபதமேறி, ஸபத்நீகனான ஸர்வேச்வரன் திருவடிகளின் கீழ் ஸர்வதேச, ஸர்கால, ஸர்வாவஸ்தோசித, ஸர்வவித கைங்கர்யங்களையும் பெற்று வாழலாம். ஆகவே ச்ரிய:பதியான நாரா யணன் திருவடிகளே உபாயதசையிலும் பல தசைகளிலும் உபஜீவ்யங்கள், வாகீச்வரனான ஹயக்ரீவன் உள்ளத்தெழுதியதை ஓலையிலிட்டேன், என்று சொல்லி இக்கிரந்தத்தை அம்ருதம் போல் யாவரும் பானம் பண் ணுங்கோள் என்று சொல்லித் தலைக் கட்டினார்.

சுபமஸ்து.

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாண குணசாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம: ।।

---

।। श्री:।।

श्रीमते निगमान्तमहादेशिकाय नम:।।

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

## அதிகாரங்களின் ஆத்யந்த ஸ்லோகங்கள்

श्रीमान् वेङ्कटनाथार्य: कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ।।

### ஸ்ரீ குருபரம்பரா ஸாரம்

गुरुभ्यस्तद्गुरुभ्यश्च नमोवाकमधीमहे ।
वृणीमहे च तत्राद्यौ दम्पती जगतां पती ।। १ ।।

एते मह्यमपोढमन्मथशरोन्माथाय नाथादय:
त्रय्यन्तप्रतिनन्दनीयविविधोदन्ता: स्वदन्तामिह ।
श्रद्धातव्यशरण्यदम्पतिदयादिव्यापगाव्यापका:
स्पर्धाविप्लवविप्रलम्भपदवीवैदेशिका देशिका: ।। २ ।।

हृद्या हृत्पद्मसिंहासनरसिकहयग्रीवहेषोर्मिघोष
क्षिप्तप्रत्यर्थिदृप्तिर्जयति बहुगुणा पङ्क्तिरस्मद्गुरूणाम् ।
दिक्सौधाबद्धजैत्रध्वजपटपवनस्फातिनिर्धूततत्त-
त्सिद्धान्तस्तोमतूलस्तबकविगमनव्यक्तसद्वर्तनीका ।। ३ ।।

### 1. உபோத்காதாதிகாரம்

आभगवत्त: प्रथितामनघामाचार्यसन्ततिं वन्दे ।
मनसि मम यत्प्रसादाद्वसति रहस्यत्रयस्य सारोऽयम् ।। ४ ।।

कर्मब्रह्मात्मके शास्त्रे कौतस्कुतनिवर्तकान् ।
वन्दे हस्तिगिरीशस्य वीथीशोधककिङ्करान् ।। ५ ।।

मणिवर इव शौरेर्नित्यहृद्योऽपि जीव:
कलुषमतिरविन्दन् किङ्करत्वाधिराज्यम् ।
विधिपरिणतिभेदात् वीक्षितस्तेन काले
गुरुपरिषदुपज्ञं प्राप्य गोपायति स्वम् ।। ६ ।।

कर्माविद्यादिचक्रे प्रतिपुरुषमिहानादिचित्रप्रवाहे
तत्तत्काले विपक्तिर्भवति हि विविधासर्वसिद्धान्तसिद्धा ।
तल्लब्धस्वावकाशप्रथमगुरुकृपागृह्यमाण: कदाचित्
मुक्तैश्वर्यान्तसम्पन्निधिरपि भविता कश्चिदित्थं विपश्चित् ।। ७ ।।

2. ஸாரநிஷ்கர்ஷாதிகாரம்

श्रुतिपथविपरीतं क्ष्वेलकल्पं श्रुतौ च
प्रकृतिपुरुषभोगप्रापकांशो न पथ्य: ।
तदिह विबुधगुप्तं मृत्युभीता विचिन्वन्ति
उपनिषदमृताब्धेरुत्तमं सारमार्या: ।। ८ ।।

शास्त्रानामुपरि स्थितेन मनुना मूलेन लब्धात्मक:
सत्ताहेतुसकृज्जपेन सकलं कालं द्वयेन क्षिपन् ।
वेदोत्तम्सविहारसारथिदयागुम्भेन विस्रम्भित:
सारज्ञो यदि कश्चिदस्ति भुवने नाथ:स यूथस्य न: ।। ९ ।।

3. ப்ரதாந ப்ரதிதந்த்ராதிகாரம்

आधेयत्वप्रभृतिनियमैरादिकर्तु: शरीरं
सत्तास्थेमप्रयतनफलेष्वेतदायत्तमेतत् ।

विश्वं पश्यन्निति भगवति व्यापकादर्शदृष्टे
गम्भीराणामकृतकगिरां गाहते चित्तवृत्तिम् ।। १० ।।

यद्येतं यतिसार्वभौमकथितं विद्यादविद्यातमः
प्रत्यूषं प्रतितन्त्रमन्तिमयुगे कश्चिद्द्विपश्चित्तमः ।
तत्रैकत्र झटित्युपैति विलयं तत्तन्मतस्थापना -
हेवाकप्रथमानहैतुककथाकल्लोलकोलाहलः ।। ११ ।।

4. அர்த்த பஞ்சகாதிகாரம்

आदौ प्राप्यं परममनघं प्राप्तृरूपं च मादौ
इष्टोपायं त्वयननमसोरीप्सितार्थं चतुर्थ्याम् ।
तद्व्याघातं ममकृतिगिरि व्यञ्जयन्तं मनुं तं
तत्प्रायं च द्वयमपि विदन् सम्मतः सर्ववेदी ।। १२ ।।

प्राप्यं ब्रह्म समस्तशेषि परमं प्राप्ताऽहमस्योचितः
प्राप्तिर्दायधनक्रमादिह मम प्राप्ता स्वतः सूरिवत् ।
हन्तैनामतिवृत्तवानहमहंमत्या विमत्याश्रयः
सेतुः सम्प्रति शेषिदम्पतिभरन्यासस्तु मे शिष्यते ।। १३ ।।

5. தத்துவத்ரய சிந்தநாதிகாரம்

प्रकृत्यात्मभ्रान्तिर्गलति चिदचिल्लक्षणधिया
तथा जीवेशैक्यप्रभृतिकलहस्तद्विभजनात् ।
अतो भोक्ता भोग्यं तदुभयनियन्तेति निगमैः
विभक्तंनस्तत्त्वत्रयमुपदिशन्त्यक्षतधियः ।। १४ ।।

आवापोद्वापतः स्युः कतिकति कविधीचित्रवत् तत्तदर्थे-
ष्वानन्त्यादस्तिनास्त्योरनवधिकूहनायुक्तिकान्ताःकृतान्ताः ।

तत्त्वालोकस्तु लोप्तुं प्रभवति सहसा निस्समस्तान् समस्तान्

पुंस्त्वे तत्त्वेन दृष्टे पुनरपि न खलु प्राणिता स्थाणुतादिः ।। १५ ।।

6. பரதேவதா பாரமார்த்யாதிகாரம்

आत्मैक्यं देवतैक्यं त्रिकसमधिगता तुल्यतैक्यं त्रयाणाम्

अन्यत्रैश्वर्यमित्याद्यनिपुणफणितीराद्रियन्ते न सन्तः।

त्रय्यन्तैरेककण्ठैः तदनुगुणमनुव्यासमुख्योक्तिभिश्च

श्रीमान् नारायणो नः पतिरखिलतनुः मुक्तिदो मुक्तभोग्यः ।। १६ ।।

जनपदभुवनादिस्थानजैत्रासनस्थेषु

अनुगतनिजवार्तं नश्वरेष्वीश्वरेषु ।

परिचितनिगमान्तः पश्यति श्रीसहायं

जगति गतिमविद्यादन्तुरे जन्तुरेकः ।। १७ ।।

7. முமுக்ஷுத்வாதிகாரம்

कालावर्तान् प्रकृतिविकृतीः कामभोगेषु दोषान्

ज्वालागर्तप्रतिमदुरितोदर्कदुःखानुभूतिम् ।

याथातथ्यं स्वपरनियतं यच्च दिव्यं पदं तत्

काराकल्पं वपुरपि विदन् कस्तितिक्षेत बन्धम्? ।। १८ ।।

विषमधु बहिष्कुर्वन् धीरो बहिर्विषयात्मकं

परिमितरसस्वात्मप्राप्तिप्रयासपराङ्मुखः।

निरवधिमहानन्दब्रह्मानुभूतिकुतूहली

जगति भविता दैवात् कश्चिज्जिहासितसंसृतिः ।। १९ ।।

### 8. அதிகாரி விபாகாதிகாரம்

मुमुक्षुत्वे तुल्ये सति च मधुविद्यादिषु यथा
व्यवस्था संसिद्ध्यत्यधिकृतिविशेषेण विदुषाम् ।
विकल्प्येत न्यासे स्थितिरितरविद्यासु च तथा
नियत्या वैयात्यं नियमयितुमेवं प्रभवति ।। २० ।।

प्रपन्नादन्येषां न दिशति मुकुन्दो निजपदं
प्रपन्नश्च द्वेधा सुचरितपरीपाकभिदया ।
विलम्बेन प्राप्तिर्भजनसुखमेकस्य विपुलं
परस्याशु प्राप्तिः परिमितरसा जीवितदशा ।। २१ ।।

### 9. உபாயவிபாகாதிகாரம்

उपायः स्वप्राप्तेरुपनिषदधीतः स भगवान्
प्रसत्त्यै तस्योक्ते प्रपदननिदिध्यासनगती ।
तदारोहः पुंसः सुकृतपरिपाकेण महता
निदानं तत्रापि स्वयमखिलनिर्माणनिपुणः ।। २२ ।।

कर्म ज्ञानमुपासनं च शरणव्रज्येति चावस्थितान्
सन्मार्गानपवर्गसाधनविधौ सद्वारकाद्वारकान् ।
एकद्व्याकृतियोगसंभृतपृथग्भावानुभावानिमान्
सम्यक् प्रेक्ष्य शरण्यसारथिगिरामन्ते रमन्ते बुधाः ।। २३ ।।

### 10. ப்ரபத்தி யோக்யாதிகாரம்

अर्थित्वेन समर्थता त्रिकतनुः सम्पिण्डिताधिक्रिया
सा चाष्टाङ्गषडङ्गयोगनियतावस्था व्यवस्तापिता ।

श्रौती सर्वशरण्यता भगवतः स्मृत्याऽपि सत्यापिता
सत्यादिष्विव नैगमेष्वधिकृतिः सर्वास्पदे सत्पथे ।। २४ ।।

भक्त्यादौ शक्त्यभावः प्रमितिरहितता शास्त्रतः पर्युदासः
कालक्षेपाक्षमत्वं त्विति नियतिवशादापतद्भिश्चतुर्भिः ।
एकद्वित्र्यादियोगव्यतिभिदुरनिजाधिक्रियाः सम्श्रयन्ते
सन्तः श्रीशं स्वतन्त्रप्रपदनविधिना मुक्तये निर्विशङ्काः ।। २५ ।।

## 11. பரிகரவிபாகாதிகாரம்

इयानित्थम्भूतः सकृदयमवश्यम्भवनवान्
दयादिव्याम्भोधौ जगदखिलमन्तर्यमयति ।
भवध्वंसोद्युक्ते भगवति भरन्यासवपुषः
प्रपत्तेरादिष्टः परिकरविशेषः श्रुतिमुखैः ।। २६ ।।

प्रख्यातः पञ्चषाङ्गः सकृदिति भगवच्छासनैरेष योगः
तत्र द्वाभ्यामपायाद्विरतिरनितरोपायतैकेन बोद्धया ।
एकेन स्वान्तदार्ढ्यं निजभरविषयेऽन्येन तत्साध्यतेच्छा
तत्त्वज्ञानप्रयुक्तात्त्विह सपरिकरे तादधीन्यादिबुद्धिः ।। २७ ।।

## 12. ஸாங்கப்ரபதநாதிகாரம்

अभीष्टे दस्साधे स्वत इतरतो वा क्वचन त-
द्भरन्यासं याच्ञान्वितमभिवदन्ति प्रपदनम् ।
इतः पश्चादस्मद्यतननिरपेक्षेण भवता
समर्थ्योऽसावर्थस्त्विति मतिविशेषं तदविदुः ।। २८ ।।

युग्यस्यन्दनसारथिक्रमवति त्रय्यन्तसन्दर्शिते
तत्वानां त्रितये यथार्हविविधव्यापारसन्तानिनि ।

हेतुत्वं त्रिषु कर्तृभाव उभयोः स्वाधीनतैकत्र तत्
स्वामिस्वीकृतयद्भरोऽयमलसस्तत्र स्वयं निर्भरः ।। २९ ।।

13. க்ருதக்ருத்யாதிகாரம்

समर्थे सर्वज्ञे सहजसुहृदि स्वीकृतभरे
यदर्थं कर्तव्यं न पुनरिह यत्किञ्चिदपि नः ।
नियच्छन्तस्तस्मिन् निरुपधिमहानन्दजलधौ
कृतार्थीकुर्मः स्वं कृपणमपि कैङ्कर्यधनिनः ।। ३० ।।
भगवति हरौ पारं गन्तुं भरन्यसनं कृतं
परिमितसुखप्राप्त्यै कृत्यं प्रहीणमकृत्यवत् ।
भवति च वपुर्वृत्तिः पूर्व कृतैर्नियतक्रमा
परमिह विभोराज्ञासेतुर्बुधैरनुपाल्यते ।। ३१ ।।

14. ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்

स्वरूपोपायार्थेष्ववितथनिविष्टस्थिरमतेः
स्वनिष्ठाभिज्ञानं सुभगमपवर्गादुपनतात् ।
प्रथिम्ना यस्यादौ प्रभवति विनीतः स्थगयितुं
गभीरान् दुष्पूरान् गगनमहतश्छिद्रनिवहान् ।। ३२ ।।
स्वापोद्बोधव्यतिकरनिभे भोगमोक्षान्तराले
कालं कश्चिज्जगति विधिना केनचित् स्थाप्यमानाः ।
तत्त्वोपायप्रभृतिविषये स्वामिदत्तां स्वनिष्ठां
शेषां कृत्वा शिरसि कृतिनः शेषमायुर्नयन्ति ।। ३३ ।।

### 15. உத்தரக்ருத்யாதிகாரம்

सन्तोषार्थं विमृशति मुहुः सद्भिरध्यात्मविद्यां
नित्यं ब्रूते निशमयति च स्वादुसुव्याहृतानि ।
अङ्गीकुर्वन्ननघललितां वृत्तिमादेहपातात्
दृष्टादृष्टस्वभरविगमे दत्तदृष्टिः प्रपन्नः ।। ३४ ।।

प्रणयिनमिव प्राप्तं पश्चात् प्रिया स्वसमन्वितं
महति मुहुरामृष्टे दृष्ट्वा मनौ मणिदर्पणे ।
प्रपदनधनाः सन्तः शुद्धैः प्रभुं परिभुञ्जते
प्रसृमरमहामोदस्मेरप्रसूनसमैः क्रमैः ।। ३५ ।।

### 16. புருஷார்த்தகாஷ்டாதிகாரம்

स्वतन्त्र स्वामित्वात् स्वबहुमतिपात्रेषु नियतं
श्रियःकान्तो देवःस खलु विनियुङ्क्ते चिदचितौ ।
यथालोकाम्नायं यतिपतिमुखैराहितधियां
ततो नः कैङ्कर्यं तदभिमतपर्यन्तमभवत् ।। ३६ ।।

नाथे नस्तृणमन्यदन्यदपि वा तन्नाभिनालीकिनी-
नालीकस्पृहणीयसौरभमुचा वाचा न याचामहे ।
शुद्धानां तु लभेमहि स्थिरधियां शुद्धान्तसिद्धान्तिनां
मुक्तैश्वर्यदिनप्रभातसमयासत्तिं प्रसत्तिं मुहुः ।। ३७ ।।

### 17. சாஸ்த்ரீயநியமநாதிகாரம்

मुकुन्दे निक्षिप्य स्वभरमनघो मुक्तवदसौ
स्वतन्त्राज्ञासिद्धां स्वयमविदितस्वामिहृदयः ।
परित्यागे सद्यः स्वपरविविधानर्थजननात्
अलङ्घ्यामामोक्षादनुसरति शास्त्रीयसरणिम् ।। ३८ ।।

श्रुतिस्मृत्याचारैः स्वमतिगतिभिः शुद्धमनसां
सुसङ्कल्पैः धर्म्यैः कुलचरणदेशादिसमयैः ।
नियोगैर्योग्यानां नियमयितुरादेरभिमतं
निमित्तस्वप्नाद्यैरपि निपुणमन्विच्छति बुधः ।। ३९ ।।

## 18. அபராதபரிஹாராதிகாரம்

स्वच्छस्वादुसदावदातसुभगां दैवादयं देहभृत्
मालिन्यप्रशमाय माधवदयामन्दाकिनीं विन्दति ।
यद्यप्येवमसावसारविषयस्रोतःप्रसूतैःपुनः
पङ्कैरेव कलङ्कयन् निजतनुं प्राज्ञैर्न संश्लिष्यते ।। ४० ।।
प्रारब्धेतरपूर्वपापमखिलं प्रामादिकं चोत्तरं
न्यासेन क्षपयन्ननभ्युपगतप्रारब्धखण्डं च नः ।
धीपूर्वोत्तरपाप्मनामजननाज्जातेऽपि तन्निष्कृतेः
कौटिल्ये सति शिक्षयाऽप्यनघयन् क्रोडीकरोति प्रभुः ।। ४१ ।।

## 19. ஸ்தாநவிசேஷாதிகாரம்

यत्रैकाग्र्यं भवति भगवत्पादसेवार्चनादेः
यत्रैकान्त्यव्यवसितधियो यस्यकस्यापि लाभः ।
वासस्थानं तदिह कृतिनां भाति वैकुण्ठकल्पं
प्रायो देशा मुनिभिरुदिताः प्रायिकौचित्यवन्तः ।। ४२ ।।

सा काशीति न चाकशीति भुवि साऽयोध्येति नाध्यास्यते
साऽवन्तीति न कल्मषादवति सा काञ्चीति नोदञ्चति ।
धत्ते सा मधुरेति नोत्तमधुरां नान्याऽपि मान्या पुरी
या वैकुण्ठकथासुधारसभुजां रोचेत नो चेतसे ।। ४३ ।।

20. நிர்யாணாதிகாரம்

मनसि करणग्रामं प्राणे मनः पुरुषे च तं
झटिति घटयन् भूतेष्वेनं परे च तमात्मनि ।
स्वविदविदुषोरित्थं साधारणे सरणेर्मुखे
नयति परतो नाडीभेदैर्यथोचितमीश्वरः ।। ४४ ।।

दहरकुहरे देवस्तिष्ठन्निषद्वरदीर्घिका-
निपतितनिजापत्यादित्सावतीर्णपितृक्रमात् ।
धमनिमिह नस्तस्मिन् काले स एव शताधिका-
मकृतकपुरप्रस्थानार्थं प्रवेशयति प्रभुः ।। ४५ ।।

21. கதிசிந்தநாதிகாரம்

ज्वलनदिवसज्योत्स्नापक्षोत्तरायणवत्सरान्
पवनतपनप्रालेयांशून् क्रमादचिरद्युतिम् ।
जलधरपतिं देवाधीशं प्रजापतिमागतः
तरति विरजां दूरे वाचस्ततः परमद्भुतम् ।। ४६ ।।

पितृपथघटीयन्त्रारोहावरोहपरिभ्रमैः
निरयपदवीयातायातक्रमैश्च निरन्तरैः ।
अधिगतपरिश्रान्तीनाज्ञाधरैरतिवाह्य नः
सुखयति निजच्छायादायी स्वयं हरिचन्दनः ।। ४७ ।।

22. பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரம்

वितमसि पदे लक्ष्मीकान्तं विचित्रविभूतिकं
सचिवगमितः सम्पद्याविर्भवत्सहजाकृतिः ।
स्फुटतदपृथक्सिद्धिः सिद्ध्यद्गुणाष्टकतत्फलो
भजति परमं साम्यं भोगे निवृत्तिकथोज्झितम् ।। ४८ ।।

अविश्रान्तश्रद्धाशतकलहकल्लोलकलुषाः
ममाविर्भूयासुर्मनसि मुनिसिद्धादिसुलभाः ।
मधुक्षीरन्यायस्वगुणविभवासञ्जनकन-
न्महानन्दब्रह्मानुभवपरिवाहा बहुविधाः ।। ४९ ।।

सन्दृष्टः सारवाग्वित् स्वपरनिशितधीः सङ्गजिन्नैकसम्स्थः
स्पष्टोपायोऽतिखिन्नः सपरिकरभरन्यासनिष्पन्नकृत्यः ।
स्वावस्थार्हं सपर्याविधिमिह नियतं व्यागसं क्वापि बिभ्रत्
निर्मुक्तस्थूलसूक्ष्मप्रकृतिरनुभवत्यच्युतं नित्यमेकः ।। ५० ।।

## 23. ஸித்தோபாயசோதநாதிகாரம்

युगपदखिलं प्रत्यक्षेण स्वतः सततं विदन्
निरवधिदयादिव्योदन्वानशक्यविवर्जितः।
जलधिसुतया सार्धं देवो जगत् परिपालयन्
परमदुरुषः सिद्धोपायः प्रतीष्टभरः सताम् ।। ५१ ।।

विश्राम्यद्भिरुपर्युपर्यपि दिवानक्तं बहिर्दर्शनैः
अस्मद्देशिकसंप्रदायरहितैरद्यापि नालक्षितः।
स्वप्राप्तेः स्वयमेव साधनतया जोघुष्यमाणः श्रुतौ
सत्त्वस्थेषु भजेत सन्निधिमसौ शान्तावधिः शेवधिः ।। ५२ ।।

## 24. ஸாத்யோபாயசோதநாதிகாரம்

यथाधिकरणं प्रभुर्यजनदानहोमार्चना-
भरन्यसनभावनाप्रभृतिभिः समाराधितः ।
फलं दिशति देहिनामिति हि सम्प्रदायस्थितिः
श्रुतिस्मृतिगुरूक्तिभिर्नयवतीभिराभाति नः ।। ५३ ।।

तत्तद्वैतुकहेतुके कृतधियस्तर्केन्द्रजालक्रमे
बिभ्राणाः कथकप्रधानगणने निष्ठां कनिष्ठाश्रयाम् ।
अध्यात्मश्रुतिसम्प्रदायकतकैरद्धा विशुद्धाशयाः
सिद्धोपायवशीक्रियामिति हि नः साध्यां समध्यापयन् ।। ५४ ।।

## 25. ப்ரபாவவ்யவஸ்தாதிகாரம்

स्वरूपं यद्यादृग्गुणविभवलीलादि च विभोः
तदाज्ञासेतुश्च श्रुतिभिरवसेयं तदखिलम् ।
तथा तद्भक्तानां तदुपसदनादेश्च महिमा
यथाऽधीतं सद्भिर्यतिपतिमुखैरध्यवसितः ।। ५५ ।।
चातुर्वर्ण्यचतुर्विधाश्रममुखे भेदे यथावस्थिते
वृत्तं तन्नियतं गुणानुगुणया वृत्तया विशिष्टं श्रिताः ।
त्यागोपप्लवनित्यदूरशरणव्रज्याविधौ कोविदाः
चिन्तामभ्युपगन्तुमन्तिमयुगेऽप्येकान्तिनः सन्ति नः ।। ५६ ।।

## 26. ப்ரபாவரக்ஷாதிகாரம்

शिलादेः स्त्रीत्वादिर्विपरिणतिरस्त्वद्भुतमिदं
ततोऽप्येतच्चित्रं यदुत दहनस्यैव हिमता ।
तृणस्यैवास्त्रत्वं रिपुषु निहतेरेव हितता
पदत्रेणैवेह त्रिभुवनपरित्राणमिति च ।। ५७ ।।
रागद्वेषमदादिकैरिह महारक्षोभिरक्षोभिते
नित्ये रक्षितरि स्थिते निजभरन्यासाभिधानं तपः ।
यत् कक्षीकृतमत्यशेत विविधान् धर्मानधर्मद्रुहः
तद्भूमार्णवलेशवर्णनमपि प्राचां न वाचां पदम् ।। ५८ ।।

27. மூலமந்த்ராதிகாரம்

तारं पूर्वं तदनु हृदयं तच्च नारायणाये-
त्याम्नायोक्तं पदमवयतां सार्थमाचार्यदत्तम् ।
अङ्गीकुर्वन्नलसमनसामात्मरक्षाभरं नः
क्षिप्रं देवः क्षिपतु निखिलान् किङ्करैश्वर्यविघ्नान् ।। ५९ ।।

कल्याणमावहतु कार्तयुगं स्वधर्मं
प्रख्यापयन् प्रणिहितेषु नरादिकेषु ।
आद्यं कमप्यधिगतो रथमष्टचक्रं
बन्धुः सतां बदरिकाश्रमतापसो नः ।। ६० ।।

यदन्तस्थमशेषेण वाङ्मयं वेदवैदिकम् ।
तस्मै व्यापकमुख्याय मन्त्राय महते नमः ।। ६१ ।।
इह मूलमन्त्रसंवृतमर्थमशेषेण कश्चिदनुभवति ।
स्फटिकतलनिहितनिधिमिव देशिकदत्तेन चक्षुषा जन्तुः ।। ६२ ।।

इत्थं सङ्घटितः पदैस्त्रिभिरसावेकद्विपञ्चाक्षरैः
अर्थैस्तत्त्वहितप्रयोजनमयैरध्यात्मसारैस्त्रिभिः ।
आद्यस्त्र्यक्षरवेदसूतिरजहत्स्थूलादिवृत्तित्रयः
त्रैगुण्यप्रशमं प्रयच्छति सतां त्रय्यन्तसारो मनुः ।। ६३ ।।

28. த்வயாதிகாரம்

आकर्णितो वितनुते कृतकृत्यकक्ष्याम्
आम्रेडितो दिशति यश्च कृतार्थभावम् ।
प्रत्यूषतां भजति संसृतिकालरात्रेः
पद्मासहायशरणागतिमन्त्र एषः ।। ६४ ।।

न वेदान्ताच्छास्त्रं न मधुमथनात् तत्त्वमधिकं
न तद्भक्तात् तीर्थं न तदभिमतात् सात्त्विकपदम् ।
न सत्त्वादारोग्यं न बुधभजनाद्बोधजनकं
न मुक्तेः सौख्यं न द्वयवचनतः क्षेमकरणम् ।। ६५ ।।

## 29. சரமஸ்லோகாதிகாரம்

य उपनिषदामन्ते यस्मादनन्तदयाम्बुधेः
त्रुटितजनताशोकः श्लोकः स्वयं समजायत ।
तमिह विधिना कृष्णं धर्मं प्रपद्य सनातनं
शमितदुरिताः शङ्कातङ्कत्यजः सुखमास्महे ।। ६६ ।।

दुर्विज्ञानैर्नियमगहनैर्दूरविश्रान्तिदेशैः
बालानर्हैर्बहुभिरयनः शोचतां नः सुपन्थाः ।
निष्प्रत्यूहं निजपदमसौ नेतुकामः स्वभूम्रा
सत्पाथेयं किमपि विदधे सारथिः सर्वनेता ।। ६७ ।।

व्यासाम्नायपयोधिकौस्तुभनिभं हृद्यं हरेरुत्तमं
श्लोकं केचन लोकवेदपदवीविश्वासितार्थं विदुः ।
येषामुक्तिषु मुक्तिसौधविशिखासोपानपङ्क्तिष्वमी
वैशम्पायनशौनकप्रभृतयः श्रेष्ठाः शिरःकम्पिनः ।। ६८ ।।

## 30. ஆசார்யக்ருத்யாதிகாரம்

अधिजिगमिषुराद्यं धाम दिव्यं त्रिधाम्नः
श्रुतविविधपरीक्षाशोधिते क्वापि पात्रे ।
अनघगुणदशायमाहितस्नेहमार्यः
प्रदिशति निरपायं सम्प्रदायप्रदीपम् ।। ६९ ।।

निरवधिदयादिव्योदन्वत्तरङ्गनिरङ्कुशैः
नियमयति यः शिष्यान् शिक्षाक्रमैर्गुणसङ्क्रमैः ।
अचरमगुरोराज्ञापारंपरीपरवानसौ
न परमिह तांस्तल्लक्षेण स्वमप्यभिरक्षति ।। ७० ।।

31. சிஷ்யக்ருத்யாதிகாரம்

अशिथिलगुरुभक्तिस्तत्प्रशंसादिशीलः
प्रचुरबहुमतिस्तद्वस्तुवास्त्वादिकेऽपि ।
गुणवति विनियोक्तुं गोपयन् सम्प्रदायं
कृतविदनघवृत्तिः किं न विन्देन्निधानम् ।। ७१ ।।

अध्यासीनतुरङ्गवक्त्रविलसज्जिह्वाग्रसिंहासनात्
आचार्यादिह देवतां समधिकामन्यां न मन्यामहे ।
यस्यासौ भजते कदाचिदजहद्भूमा स्वयं भूमिकां
मग्नानां भविनां भवार्णवसमुत्ताराय नारायणः ।। ७२ ।।

32. நிகமநாதிகாரம்

करबदरितविश्वः कश्चिदाचार्यदृष्ट्या
मुषितनिखिलमोहो मूलमन्त्रादिभोगः ।
सगुणविषयसिद्धौ सम्प्रदायं प्रयच्छन्
सुचरितसिलहारी सूरिबृन्दाभिनन्द्यः ।। ७३ ।।

इति यतिराजमहानसपरिमलपरिवाहवासितां पिबत ।
विबुधपरिपन्निषेव्यां वेदान्तोदयनसम्प्रदायसुधाम् ।। ७४ ।।

कलकण्ठगणास्वाद्ये कामस्यास्त्रे निजाङ्कुरे ।
निम्बवृत्तिभिरुद्गीर्णे न चूतः परितप्यते ।। ७५ ।।

निर्विष्टं यतिसार्वभौमवचसामावृत्तिभिर्यौवनं
निर्धूतेतरपारतन्त्र्यनिरया नीताः सुखं वासराः ।
अङ्गीकृत्य सतां प्रसत्तिमसतां गर्वोऽपि निर्वापितः
शेषायुष्यपि शेषिदम्पतिदयादीक्षामुदीक्षामहे ।। ७६ ।।

आस्तिक्यवान् निशितबुद्धिरनभ्यसूयुः
सत्सम्प्रदायपरिशुद्धमनाः सदर्थी ।
सङ्केतभीतिरहितः सतृणेष्वसक्तः
सद्वर्तनीमनुविधास्यति शाश्वतीं नः ।। ७७ ।।

रहस्यत्रयसारोऽयं वेङ्कटेशविपश्चिता ।
शरण्यदम्पतिविदां सम्मतः समगृह्यत ।। ७८ ।।

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ।।

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ।

---

।। श्रीः ।।

श्रीमते वेदान्तरामानुजमहादेशिकाय नमः ।।

श्रीमते गोपालार्यमहादेशिकाय नमः ।।

ज्ञानवैराग्यानुष्ठानशेवधये श्रीमते वेदान्तरामानुज महादेशिकाय नमः ।।

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ।।

## அதிகாரஸங்கிரஹ சுலோகங்கள்

श्रीमान्वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ।।

---

गुरुभ्यस्तद्गुरुभ्यश्च नमोवाकमधीमहे ।
वृणीमहे च तत्राद्यौ दम्पती जगतां पती ।। १ ।।

(பதவுரை) गुरुभ्यः=நம்முடைய குருவுக்கும், तद्गुरुभ्यःच=அவருடைய குருக்களுக்கும், नमोवाकम्=நமः என்கிற சொல்லை, अधीमहे= சொல்லு கிறோம். तत्र=அவர்களில், आद्यौ=முதல் குருக்களான, जगतांपती=உலகங் களுக்கு ஸ்வாமிகளான दम्पतीच=பிராட்டியையும் எம்பெருமானையும், वृणीमहे=நாம் அடைய வேண்டியவர்களாகவும், அதற்கு உபாயமாகவும் வரிக்கிறோம்.

குறிப்பு:- (1) ஸ்ரீ தேசிகன் தன்னுடைய ஆசாரியனான அப்புள்ளாரை "गुरुभ्यः" என்கிற பன்மைச் சொல்லால் சொன்னது அவரிடம் தனக்குள்ள கௌரவத்தைக் காண்பிப்பதற்காக.

(2) இந்த முதற் சொல்லாலேயே அவர் குருக்களையும் சொல்லக் கூடியதாயிருக்கையில், "तद्गुरुभ्यः" என்று தனித்துச் சொன்னதற்கு கருத்து-ஒருவன் தன்னுடைய குருவையும், அவருடைய குருக்களையும் வணங்கவேண்டும் என்று சொல்லுகிற பிரமாணத்தைக் காட்ட வேண்டும்— என்று.

(3) 'च' என்கிற சொல், குருவையும் வணங்க வேண்டியது, அவர் குருக்களையும் வணங்கவேண்டியது, ஒன்றை விட்டு ஒன்றைச் செய்யக் கூடாது—என்று காட்டுகிறது. இப்படி அர்த்தத்தைச் சொல்லும்போது சகாரமானது இதரேதரயோகத்தைச் சொல்லுகிறது. சுலோகத்தில் பின்

பாதியிலிருக்கும் 'च' என்பதானது ஸமுச்சயம் என்சிற பொருளைச் சொல்லுகிறது. அதாவது-சொல்லப்பட்ட இரண்டு விஷயங்களில் ஒன்றைச் செய்யலாம், ஒன்றைச் செய்யாமலிருக்கலாம் என்று காட்டுகிறது.

(4) ''नमः'' என்கிற சொல் நமஸ்காரத்தையும், பிரபத்தியையும், பெரியோர்களிடம் இருக்கவேண்டிய வணக்கத்தையும் சொல்லுகிறது. இந்த மூன்று பொருள்களும் இங்கே வேண்டுமென்ற கருத்தினுல் இங்கு ''நம: என்கிற சொல்'' என்று சொல்லியிருக்கிறது. நமஸ்காரம் பண்ணு கிறேன் என்று சொன்னுல் ஒரே பொருள் தான் கிடைக்கும்.

(5) ''अधीमहे'' என்பதற்கு குருவை வணங்குவது வேதத்தைப் போல் இருக்கிறதென்று கருத்து.

(6) ''जगतांपती'' என்று இரண்டுபேர்களை உலகத்துக்குப் பதி என்று சொல்லுவதால் இரண்டு பேர்களுக்குள் கலஹம் வருமோ என்று ஸந்தேஹம் வரும். அதைத் தீர்ப்பதற்காக— ''दम्पती'' என்கிற சொல். பிராட்டி-எம்பெருமானுக்குப் பத்திநியாய், அவன் அபிப்பிராயத்தை ஒத்து இருப்பவளாகையாலே கலஹம் வராதென்று கருத்து.

(7) இந்த சுலோகத்தில் குருவை வணங்கினதைச் சொன்னபடி யாலே, ஒருவன் ஆசாரியனை யடையவேண்டு மென்றும், ''तद्गुरुभ्यः'' என்பதால், தன் ஆசாரியனை வணங்கும் போது அவர் ஆசாரியர்களையும் வணங்க வேண்டும் என்றும், '' तत्राद्यौ'' என்பதால், இதை எம்பெருமான் உள்படச் செய்யவேண்டு மென்றும் காட்டப்படுகிறது. இது இதில் சொல்லப் போகிற முதலாவது இரண்டாவது விஷயங்கள்.

---

அவ:- ஒருவன் குருவினிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவனுயிருக்க வேண்டுமென்று சொல்லப்பட்டது. ஸம்ஸாரத்திலிருக்கும் போது, அந்த பக்தி வருவதற்கு அநேகம் தடைகளிருக்கின்றன. அவைகள் போய் பக்தி உண்டாக வேண்டுமென்று ஒவ்வொரு நாளும் பிரார்த்திப்பதற்காக ஒரு சுலோகத்தை யருளிச் செய்கிருர்:-

एते मह्यमपोडमन्मथशरोन्माथाय नाथादय
स्त्रय्यन्तप्रतिनन्दनीयविविधोदन्ता:स्वदन्तामिह ।
श्रद्धातव्यशरण्यदम्पतिदयादिव्यापगाव्यापका:
स्पर्धाविप्लवविप्रलम्भपदवीवैदेशिका देशिकाः ।। २ ।।

(ப-ரை) एते=இந்த, नाथादय:=நாதமுனிகள் முதலான, देशिका: = ஆசாரியர்கள், इह =இந்த ஸம்ஸாரத்திலிருக்கும்போதே, अपोडमन्मथ शरोन्माथाय=மன்மதனுடைய பாணங்களாலுண்டான கலக்கங்கள் நீங்குவதற்காக, मह्यम्=எனக்கு, स्वदन्ताम्=ருசிக்க வேண்டும். அவர்கள் எப்படி யிருந்தார்கள் என்ருல், त्रय्यन्त=உபநிஷத்துக்களால், प्रतिनन्दनीय= ஸந்தோஷத்துடன் கொண்டாடும் படியான, विविध=அநேகவிதங்களான, उदन्ता:=சரித்திரங்களை யுடையவர்கள், श्रद्धातव्य= விச்வாஸம் பண்ணத் தகுந்த, शरण्य=சரண்யர்களாகிய, दम्पति=பிராட்டியினுடையவும் எம்பெரு மானுடையவும், दयादिव्यापगा=தயையாகிய கங்கையை, व्यापका:= நம்மிடத்தில் வரும்படி செய்தவர்கள், स्पर्धा=தாம் படித்தவர்கள் என்கிற கர்வத்தாலே மற்றவர்களை அவமானப்படுத்துவதில் விருப்பம், विप्लव= முன்னோர்களால் ஏற்படுத்தப்பட்ட நல்ல மார்க்கத்தையழிப்பது, विप्रलम्भ= வஞ்சனை, पदवीवैदेशिका=இவைகளிருக்கிறவிடத்தில் இல்லாதவர்கள்.

(கருத்து) எனக்கு விஷயங்களிலிருக்கிற ஆசை போய், இந்த ஆசாரியர்களிடம் பக்தி யுண்டாகவேண்டும். அவர்களுடைய ஜ்ஞாந மானது உபநிஷத்துக்களும் கொண்டாடும்படியாயிருக்கிறது. அவர்கள் மிகுந்த தாழ்ந்த என்னிடத்திலும், எம்பெருமானுடைய கிருபை வரும்படி செய்தார்கள். அவர்களிடத்தில் உரையில் சொன்ன குற்றங்கள் ஒன்று மில்லை.

குறிப்பு:- (1) மன்மதனுடைய பாணத்தினுலுண்டான கலக்கம் என்று சொல்லியபோதிலும், எல்லாவிஷயங்களிலுமுள்ள ஆசை போக வேண்டு மென்பது கருத்து.

(2) இவர்களுடைய அநுஷ்டாநத்தையும், இவர்கள் வாதிகளைக் கண்டிக்கும் போது சொன்ன ஸூக்திகளையும் பார்த்து, ''ஆ! இவர்கள் வேதத்தின் அர்த்தத்தை நன்ருய் அறிந்திருக்கிருர்கள்'' என்று உபநிஷத் துக்களே ஸந்தோஷப்பட்டுக் கொண்டாடும்படியாயிருந்தது.

(3) பகீரதன் கங்கையைப் பாதாளலோகம் கொன்டுபோய் தன் பாட்டனார்களின் சாம்பலை நனைத்தது போல், ஆசாரியர்கள் எம்பெருமா னுடைய கிருபைக்கு நம்மை விஷயமாகப் பண்ணினார்கள். இதனால் அவர்களுடைய கருணை காட்டப்படுகிறது.

(4) ஒருவன் குணமுள்ளவனாயும், குற்றமில்லாதவனாயுமிருந்தால் தான் அவனிடத்தில் பக்தியுண்டாகும். சுலோகத்தில் பக்தி வேண்டப்

படுவதால், குணமுடைமையும், தோஷமில்லாமையும் சொல்ல வேண்டியது. இதைச் சுலோகம் சொல்லுகிறது. சிஷியனுக்கு வேண்டிய ஆசாரியனுடைய குணம் - ஜ்ஞாநமும் கருணையும். அந்த இரண்டும் இங்கே காட்டப்பட்டன. (2)

---

அவ:- குருவைப் பிரகாசிப்பிக்கவேண்டுமென்று சொல்லப்பட்டது. அப்படிப் பிரகாசம் பண்ணும்விதத்தைக் காண்பிக்கிறார்-

हृद्या हृत्पद्मसिंहासनरसिकहयग्रीवहेषोर्मिघोष
क्षिप्तप्रत्यर्थिदृप्तिर्जयति बहुगुणा पङ्क्तिरस्मद्गुरूणाम् ।
दिक्सौधाबद्धजैत्रध्वजपटपवनस्फाति निर्द्धूत
तत्तत्सिद्धान्तस्तोम तूलस्तबकविगमनव्यक्तसद्वर्तनीका ॥ ३ ॥

(ப-ரை) बहुगुणा-அநேக குணங்களை யுடையதும், हृद्या-மனதிற்குப் பிடித்ததுமான, अस्मद्गुरूणाम् पङ्क्तिः-நம்முடைய ஆசாரியர்களுடைய வரிசை, जयति-நன்றாய் விளங்குகிறது. அந்த குருக்களின் வரிசை எவ்விதமிருந்த தென்றால், हृत्पद्म-ஹிருதயகமலமாகிற, सिंहासनरसिक-ஸிம்ஹாசனத்தில் ஆசையுடன் எழுந்தருளியிருந்த, हयग्रीव-ஹயக்ரீவ னுடைய, हेषोर्मि-அலைகள் போல் வரும் கனைப்புகளுடைய, घोष-சப்தத்தாலே, क्षिप्त-போக்கடிக்கப்பட்ட, प्रत्यर्थिदृप्तिः-வாதிகளின் கர்வத்தை யுடையது, दिक्सौध-திக்குகளாகிற மாடிகளில், बद्ध-கட்டப்பட்ட, जैत्र-ஜயத்தைத் காட்டும், ध्वजपट-கொடிகளின் துணிகளுடைய, पवन-காற்றினுடைய, स्फाति-விருத்தியினாலே, निर्धूत-பறக்கடிக்கப்பட்ட, तत्तत्सिद्धान्तस्तोम-அந்தந்த ஸித்தாந்தங்களுடைய கூட்டமாகிற, तूलस्तबक-பஞ்சுக்கொத்துக்களுடைய, विगमन-போனமையாலே, व्यक्त-நன்றாய்த் தோன்றுகிற, सद्वर्तनीका- நல்லமார்க்கத்தை யுடையது.

(கருத்து) ஆசாரியர்கள் வாதஞ்செய்து, எதிரிகளினுடைய கர்வத்தைப் போக்கினார்கள். வாதிகள் அந்தந்த மதத்தை ஸ்தாபித்து, மோக்ஷமார்கத் தைத் தெரியாதபடி பண்ணியிருந்தார்கள். ஆசாரியர்கள் கிரந்தங்களை எழுதி அந்தந்த மதங்களைத் கண்டித்து, மறைந்து போன நல்ல மார்க்கத்தை எல்லாரும் அறியும்படி செய்தார்கள்.

குறிப்பு:- (1) மூலத்தில் எம்பெருமானே ஆசாரியரூபமாக அவதரிக்

கிறானென்று சொல்லியிருக்கிறது. இந்த ச்லோகத்தில் ஹயக்ரீ வனைச் சொன்னதினால் அது காட்டப்படுகிறது.

(2) ஒரு ஊரில் மாடிகளில் கட்டப்பட்ட கொடிகளுடைய காற்றானது தெருவை மறைத்துக் கொண்டிருக்கும் பஞ்சைப் பறக்கடித்து, தெருவை தெரியும்படி செய்வது போல, ஆசாரியர்கள் கிரந்தமெழுதி துர்வாதிகளின் மதங்களைக் கண்டித்து, அவைகளால் தெரியாதிருந்த மோக்ஷமார்க்கத்தை நன்றாய் அறியும்படி செய்தார்கள்.

(3) மதங்களைப் பஞ்சுக் கொத்தாகச் சொன்னதாலே, அவைகளைக் கண்டிப்பதில் வருத்தமில்லை என்று காட்டப்படுகிறது. (3)

---

## ।। श्री रहस्यत्रयसारः ।।

## 1-வது உபோத்காதாதிகாரம்

आभगवत्तः प्रथितामनघामाचार्यसन्ततिं वन्दे ।
मनसि मम यत्प्रसादाद्वसति रहस्यत्रयस्य सारोऽयम् ।। ४ ।।

(ப-ரை) अनघाम्-ஒருவிததோஷமுமில்லாத, प्रथिताम्-பிரஸித்தமான, आचार्यसन्ततिं-ஆசாரியர்களின் வரிசையை, आभगवत्तः-எம்பெருமானுள் பட, वन्दे-நமஸ்காரஞ்செய்கிறேன். यत्प्रसादात्-எவர்களுடைய அநுக் கிரஹத்தால், मम-என்னுடைய, मनसि-மனதில், रहस्य त्रयस्य सारोऽयम्-இந்த ரஹஸ்ய த்ரயத்தின் ஸாரமான அர்த்தம், वसति-நிலையாயிருக்கிறதோ.

குறிப்பு:- ''अयम्'' என்பதால் எழுதப்போகிற கிரந்தத்தின் அர்த்தமானது ஸ்ரீதேசிகன் முன்னாலேயே இருந்தது என்று காட்டப்படுகிறது. (4)

---

कर्मब्रह्मात्मके शास्त्रे कौतस्कुतनिवर्तकान् ।
वन्दे हस्तिगिरीशस्य वीथीशोधककिङ्करान् ।। ५ ।।

(ப-ரை) कर्मब्रह्मात्मके-கர்மவிசாரம் பிரும்மவிசாரம் என்கிற இரண்டு பாகத்தையுடைய, शास्त्रे-சாஸ்திரத்தில், कौतस्कुतनिवर्तकान्- ஹைதுகர் களைக் கண்டித்தவர்களும், हस्तिगिरीशस्य-ஹஸ்திகிரியில் எழுந்தருளி யிருக்கும் நியந்தாவான எம்பெருமானுடைய, वीथीशोधक किङ्करान्-

வீதிகளிலிருந்தும் குப்பைகளைப் போக்கி சுத்தஞ் செய்வதாகிய கைங்கரியம் செய்தவர் களுமான அப்புள்ளாரை, वन्दे-நமஸ்காரம் செய்கிறேன்.

குறிப்பு:-(1) வாதிகளைக் கண்டித்ததையும், தெருக்களை சுத்தி செய்ததையும் சேர்த்துச் சொன்னதினாலே, குப்பையைப் பெருக்குவது போல் வாதிகளைக் கண்டித்து அவருக்கு லகுவாயிருந்தது என்று காட்டப்படுகிறது. (5)

---

இந்த அதிகாரத்தின் முதல் சுலோகம்.

मणिवर इव शौरेर्नित्यहृद्योऽपि जीवः
कलुषमतिरविन्दन् किङ्करत्वाधिराज्यम् ।
विधिपरिणतिभेदात् वीक्षितस्तेन काले
गुरुपरिषदुपज्ञं प्राप्य गोपायति स्वम् ॥ ६ ॥

(ப-ரை) शौरेः-சூரன் என்கிறவருடைய குலத்தில் கிருஷ்ணனாய் அவதரித்த எம்பெருமானுக்கு, मणिवर इव-கௌஸ்துபம் என்கிற சிலாக்கியமான ரத்தினம்போல, जीवः-ஜீவன், नित्यहृद्यःअपि எப்போதும் வேண்டியவனாயிருந்தபோதிலும், कलुषमतिः-கலங்கின புத்தியை யுடையவனாய், அதினால், किङ्करत्वाधिराज्यम्-எம்பெருமானுக்குக் கைங் கரியம் செய்வதாகிய பெரியபாக்யத்தை, अविन्दन्-அடையாதவனாய், विधिपरिणतिभेदात्=ஒரு புண்ணியம் பலனைக் கொடுக்கும்போது, काले =ஒரு காலத்தில், तेन=அந்த எம்பெருமானாலே, वीक्षितः=பார்க்கப்பட்டவ னாய், गुरुपरिषदुपज्ञं=குருக்களின் கூட்டத்தை அடைவது முதலாக, தன் ஸ்வரூபத்தை, प्राप्य-தெரிந்து, गोपायति-அதை ரக்ஷிக்கிறான்.

(கருத்து) எம்பெருமானுக்கு ஜீவன் எப்போதும் வேண்டியவன். ஆகையால் அவனிருக்கும் பரமபதத்தில் போய் அவனும் பிராட்டியுமிருப் பதை அநுபவித்து, அவர்களுக்குக் கைங்கரியம் செய்யத் தகுந்தவன். ஆனால், அவன் அதை இப்போது அடையவில்லை. இதற்குக் காரணம், அவன் தன்னை உடம்பாகவும், உடம்பைச் சேர்ந்தவர்களை தன்னு டையவர்களென்றும் எண்ணி, அவர்களுக்காகப் பாடுபட்டு, அவன் மனது கலங்கியிருக்கிறது. எம்பெருமான், ஸஹஜமான கருணையினாலே,

அவனை ரக்ஷிப்பதற்கு எப்போது இடம் அகப்படப்போகிறது என்று பார்த்துக் கொண்டிருப்பதால், ஜீவன், அறியாமல் செய்த ஒரு நல்ல வேலையைப் புண்ணியமாகக் கணக்கிட்டு, அதை வியாஜமாகக் கொண்டு அவன் பிறக்கும் போது எம்பெருமான் அவனைப் பார்க்கிறான். இதைக் காரணமாகக் கொண்டு படிப்படியாக ஜீவன் ஆசாரியர்களை அடைந்து, அவர்களிடமிருந்து தன் ஸ்வரூபத்தை அறிந்து பிரபத்தியைச் செய்து, கைங்கரியமாகிற ஸம்பத்தை அடைந்து தன்னை ரக்ஷித்துக் கொள்ளுகிறான்.

குறிப்பு:- (1) சுலோகத்தின் முதல் பாதத்தால், ஜீவன் இருக்க வேண்டிய இருப்பும், இரண்டாவது பாதத்தால் அவன் இப்போது இருப்பதும், பாக்கி சுலோகத்தால், எப்படி அவன் நல்ல கதியடையலாம் என்பதும் சொல்லப்படுகின்றன.

(2) ''स्वम्'' என்கிற சொல்லானது, மூலமந்திரத்தின் அர்த்தத்தையும், ''गोपायति '' என்பதால் பிரபத்தியைச் சொல்லுகிற த்வயமந்திரத்தின் பொருளும், ''किङ्करत्व '' என்பதால் புருஷார்த்தத்தைச் சொல்லுகிற சரம ச்லோகத்தின் பொருளும் காட்டப்படுகின்றன. ஆகையால் இந்த மூன்று ரஹஸ்யங்களும் இந்த கிரந்தத்திற்கு விஷயமென்றும் ஸ்வரூபத்தை அறிவதும், பிரபத்தி பண்ணுவதும், கைங்கரியத்தைப் பெறுவதும் இந்த கிரந்தத்தின் பிரயோஜநங்கள் என்றும் காட்டப்படுகின்றன.

(3) கௌஸ்துப உதாஹரணத்தால், ஜீவன் ஸ்வபாவத்தில் குற்றமில்லாதவன் (निर्मलன்) என்றும் அவனுடைய ஸ்வரூபம் ஆநந்த மென்றும், அவன் எம்பெருமானுக்கு அதிசயத்தை அதாவது -ப்ரீதியைச் செய்யத் தகுந்தவன் என்றும் காட்டப்படுகிறது.

(4) किङ्करत्वाधिराज्यम्- எம்பெருமானுடைய கைங்கரியமானது ஒரு பெரிய பாக்கியம். இப்போது கர்மத்தினால் அது அப்படித் தோன்றவில்லை.

(5) எம்பெருமான் ஜீவனைப் பார்ப்பதற்குக் காரணமும், அதின் பலனும், அடியில் வரும் சுலோகத்தால் தெரியவரும்,

ईश्वरस्य च सौहार्दं यदृच्छासुकृतं तथा ।
विष्णोः कटाक्षमद्वेषमाभिमुख्यं च सात्विकैः ।।
सम्भाषणं षडेतानि ह्याचार्यप्राप्तिहेतवः ।।

நியந்தாவான எம்பெருமான் எல்லா ஜீவன்களும் நன்றுயிருக்க வேணும் என்று எண்ணுவது, அறியாமலும் எண்ணமில்லாமலும் செய்யப் பட்ட ஒரு

புண்ணியம், எம்பெருமான் அவன் பிறக்கும் போது அவனைக் கடைக் கண்ணுல் பார்ப்பது, ஸாத்துவிகர்களிடத்தில் இருந்த த்வேஷம் போவது, அவர்களுக்கு முகங்கொடுப்பது, அவர்களுடன் பேசுவது-ஆகிய இந்த ஆறும் ஒருவன் ஆசாரியனை அடைவதற்குக் காரணங்கள். (6)

---

அவ:- முன் சுலோகத்தில் ''विधिपरिणतिभेदात्'' என்கிற பாகத்தை கடைசி சுலோகத்தால் விரிவாய்ச் சொல்லுகிருர்:-

कर्माविद्यादिचक्रे प्रतिपुरुषमिहानादिचित्रप्रवाहे
तत्तत्काले विपक्तिर्भवति हि विविधा सर्वसिद्धान्तसिद्धा ।
तल्लब्धस्वावकाशप्रथमगुरुकृपागृह्यमाणः कदाचिन्
मुक्तैश्वर्यान्तसम्पन्निधिरपि भविता कश्चिदित्थं विपश्चित् ॥ ७ ॥

(ப-ரை) अनादिचित्रप्रवाहे =அநாதியாயும் வெவ்வேருயும் பிரவஹித்துக் கொண்டிருக்கிற, इह=இந்த, कर्माविद्यादिचक्रे= கர்மம் அவித்யை இவை முதலான சக்ரத்தில், प्रतिपुरुषम्=ஒவ்வொருவனுக்கும், तत्तत्काले=அந்த அந்த காலத்தில், विपक्तिः=பலன் கொடுப்பதானது, विविधा=வெவ்வேருக, भवति=வருகிறது. हि= இது பிரஸித்தமான விஷயம். (இது) सर्वसिद्धान्तसिद्धा= எல்லா ஸித்தாந்திகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. तल्लब्ध=இதிஞலே அடையப்பட்ட, स्वावकाश=தன்னுடைய இடத்தையுடைய, प्रथमगुरुकृपा= முதல் குருவான எம்பெருமானுடைய கருணையாலே, गृह्यमाणः=பிடிக்கப் பட்டவனுய், कश्चिद् विपश्चित्=ஜ்ஞாநமுள்ள ஒருவன், इत्थं=இப்படி, (முதல் சுலோகத்தில் சொன்னபடி) मुक्तैश्वर्यान्त=முக்தனுடைய ஐசுவரியம் வரையி லுள்ள, सम्पन्निधिरपि=பாக்கியத்திற்கு இருப்பிடமாகவும், भविता=ஆவன்.

(கருத்து) ஒருவனுடைய கர்மங்கள் ஒன்றின் பின் ஒன்ருக ஆறுபோல் பெருகிக்கொண்டிருக்கின்றன. ஒருவனுடைய கர்ம ப்ரவாஹம் மற்றவர் களின் கர்ம ப்ரவாஹங்களைக் காட்டிலும் வேருயிருக்கும். அது இப்போது ஆரம்பித்ததென்று சொல்லமுடியாது. இந்தக் கர்மப்ரவாஹங்கள் வெவ்வேருயிருப்பதால், கர்மங்கள் பலன்கள் கொடுக்கும் காலங்களும் வெவ்வேருக இருக்கும். ஆகையால் ஒருவனுக்கு ஒரு புண்ணியம் பலன் கொடுக்க ஆரம்பித்ததும் எம்பெருமாஞல் அவன் பார்க்கப்படுகிருன். ஆதலால், ஏன் இது முன் உண்டாகவில்லை, இப்போது ஏன் நேர்ந்தது என்று

கேட்கக்கூடாது. எம்பெருமானுடைய கருணை ஒரு ஜீவனை ரக்ஷிப்பதற்கு எப்போது இடம் அகப்படப் போகிறதென்று பார்த்துக்கொண்டிருக்கிறது. ஒரு புண்ணியம் பலன் கொடுக்கும்போது, அதற்கு இடம் அகப்பட்டு அந்த ஜீவனை ஆசாரியனிடம் கொண்டு போய் சேர்த்து, பிரபத்தியைப் பண்ணுவித்து, முக்தனுக்கி, எம்பெருமானுடைய கைங்கரியத்தைப் பெறும்படி செய்கிறது.

குறிப்பு:- (1) அவித்யை என்பது-உடம்பை ஆத்மாவாக எண்ணுவது. சுலோகத்தில் ''आदि'' என்கிற சொல்லால், வாஸனையும், ருசியும், உடம் போடு சேர்க்கையும் சொல்லப்படுகின்றன.

(2) கர்மத்திஞல் ஒரு வாஸனை உண்டாகிறது. அதஞல் மறுபடியும் அவ்வித கர்மத்தில் ருசி உண்டாகிறது. மறுபடியும் கர்மம் செய்கிருன், அதஞல் உடம்புடன் சேர்க்கை உண்டாகிறது. இவை எல்லாவற்றுக்கும் அவித்யை காரணம். இவைகள் வண்டிச்சக்ரம் போல் சுழன்று சுழன்று வருகின்றன.

(3) இந்த விஷயத்தைச் சார்வாகன் தவிர, மற்றவர்கள் ஒப்புக் கொள்ளுகிருர்கள். சார்வாகனுக்கு பிரத்யக்ஷமொன்றே பிரமாணம். உடம்பே ஆத்மா.

(4) இப்படி எவஞவது ஒருவன் முக்தஞகக் கூடுமென்று சொன்ன திஞல், எழுதப்போகிற கிரந்தம் பிரயோஜநமில்லாமல் போகாதென்று காட்டப்படுகிறது.

(5) ''विपत्तिः'' என்கிற சொல்லாலே, ஒருவனுக்கு இந்திரப்பட்டம் வருவதற்கும், ஒருவனுக்கு ப்ரம்மபட்டம் வருவதற்கும், ஒருவனுக்கு மோக்ஷம் வருவதற்கும் தகுந்தபடி கர்மங்கள் வெவ்வேருகப் பலனைக் கொடுக்கின்றன என்று காட்டப்படுகிறது. (7)

---

## 2-வது ஸாரநிஷ்கர்ஷாதிகாரம்

அவ:- புஸ்தகங்கள் அநேகமாக இருக்க, இந்த மூன்று ரஹஸ்யங்களை மாத்திரம் இந்த க்ரந்தத்திற்கு விஷயமாகப் பண்ணுவதற்குக் காரணத்தை அதிகாரத்தின் முதல் சுலோகத்தால் சொல்லுகிருர்.

**श्रुतिपथविपरीतं क्ष्वेलकल्पं श्रुतौ च प्रकृतिपुरुषभोगप्रापकांशो न पथ्यः ।**
**तदिह विबुधगुप्तं मृत्युभीता विचिन्त्युपनिषदमृताब्धेरुत्तमं सारमार्याः ।।**

(ப-ரை) श्रुतिपथविपरीतं = வேத மார்க்கத்திற்கு விருத்தமானது, क्ष्वेलकल्पं= விஷத்திற்கு ஸமாநமானது, श्रुतौ च = வேதத்திலும், प्रकृतिपुरुषभोग = பிரகிருதியினுடையவும், ஜீவனுடையவும் போகத்தை அடைவதற்கு, प्रापकाम्श: = உபாயமானவைகளைச் சொல்லுகிற இடங்கள், न पथ्य: = ஜீவனுக்கு அநுகூலங்களன்று. तत् = ஆகையினாலே, मृत्युभीता: आर्या:= ஸம்ஸாரத்தைக் கண்டு பயப்படுகிற நல்ல விவேகமுள்ள பெரியோர்கள், इह = இந்த வேதத்தில், उपनिषदमृताब्धौ = உபநிஷத்துக்களாகிற திருப் பாற்கடலில், विबुधगुप्तं = முன்னிருந்த ஆசாரியர்களால் ரக்ஷிக்கப்பட்டு வந்த, उत्तमं सारम्=மிகவும் ஸாரமானதை, विचिन्वन्ति=தேடுகிறார்கள்.

குறிப்பு:- (1) பிரகிருதியினுடைய போகமாவது - இந்த உலகத்தில் அநுபவிக்கக்கூடிய விஷயங்களால் வரும் போகமும், ஸுவர்க்கம் முதலான இடங்களில் கிடைக்கக்கூடிய போகமும். புருஷனுடைய போகமாவது- உடம்பைக் காட்டிலும் வேறான ஆத்மாவை யோகம்செய்து, அதை அநுபவிப்பதனால் வரும் போகம்.

(2) '' विबुध'' என்கிற சொல்லுக்கு தேவர்கள் என்றும் பொருள். அந்தச் சொல்லாலும், '' अमृताब्धौ'' என்கிற சொல்லாலும் '' मृत्युभीता: '' என்கிற சொல்லாலும், தேவர்கள் அஸுரர்களோடு சண்டையில் மரணம் அடைவதைக் கண்டு பயப்பட்டு, திருப்பாற்கடலைக் கடைந்து, அதிலிருந் துண்டானவைகளில் மற்றவைகளைத் தள்ளி, அமிருதத்தை எடுத்துக் கொண்டு, அதைச் சாப்பிட்டு மரணமில்லாமலிருக்கிறார்கள் என்கிற புராண கதை சொல்லப்படுகிறது. இந்த மூன்று ரஹஸ்யம் சொல்லும் பொருளானது அமிருதம் போலிருக்கிறது. அதை அறிகிறவனுக்கு ஸம்ஸாரம் போய், கிழத்தனம், மரணமுமில்லாத நல்ல இருப்புண்டாகும்.

(3) மீதியிருந்த அமிருதத்தைத் தேவர்கள் இரக்ஷிப்பது போல் இந்த மூன்று ரஹஸ்யங்களை முன்னிருந்த ஆசாரியர்கள் தகாதவர்களுக்கு உபதேசம் செய்யாமல் ரக்ஷித்து வந்தார்கள்.

(4) உபநிஷத்துக்களை ''अमृताब्धि'' என்று சொன்னதினால், அவைகளுக்கு அளவில்லை என்றும், வேதங்களின் முன்பாகம் போலில்லாமல், நமக்கு அவசியம் வேண்டுமதைச் சொல்லுகிறபடியாலே போக்கியமாயிருக்கும் என்று காட்டப்படுகிறது.

(5) ''विचिन्वन्ति'' என்று நிகழ்காலச் சொல்லாலே, இப்போதும் தேடிக்கொண்டிருக்கிறார்கள் என்று காட்டப்படுகிறது. (8)

அவ:- இந்த மூன்று ரஹஸ்யங்களால் ஒருவன் அடைய வேண்டிய பிரயோஜநங்களைச் சொல்லி அவைகளை அடைகிறவனைக் கொண்டாடுகிருர்:-

शाखानामुपरि स्थितेन मनुना मूलेन लब्धात्मक:
सत्ताहेतुसकृज्जपेन सकलं कालं द्वयेन क्षिपन् ।
वेदोत्तंसविहारसारथिदयागुम्भेन विस्रम्भित:
सारज्ञो यदि कश्चिदस्ति भुवने नाथ: स यूथस्य न: ।। ९ ।।

(ப-ரை) शाखानामुपरि = வேதங்களின் சாகைகளுக்குமேல் (உபநிஷத்துக்களில்), स्थितेन = இருக்கிற, मूलेन मनुना = மூலமந்திரத்தாலே, लब्धात्मक: = தன் ஸ்வரூபத்தைத் தெரிந்தவனுய், सत्ता = தன் ஸ்வரூபத்துக்குப் பொருந்தின கைங்கரியத்திற்கு हेतुसकृज्जपेन=காரணமாக ஒரு தடவை சொல்லுவதையுடைய, द्वयेन=த்வயம் என்கிற மந்திரத்தினுல், सकलं कालं क्षिपन् = பிரபத்திக்கு மேல்பட்ட எல்லா காலத்தையும் போக்கிக் கொண்டு, वेदोत्तंस=வேதத்திற்கு தலை ஆபரணம்போலிருக்கிற, विहारसारथि=லீலைக்காக அர்ஜுநனுக்கு ஸாரதியாயிருந்த எம்பெருமானுடைய, दयागुम्भेन = தயையால் தொடுக்கப்பட்ட சரம ச்லோகத்தாலே, विस्रम्भित:=மஹாவிச்வாஸமுள்ளவனுகச் செய்யப்பட்டவனுய், இப்படி, सारज्ञ:= ஸாரங்களான அர்த்தங்களையறிந்த, कश्चिद्=ஒருவன், भुवने यदि अस्ति=இந்த உலகத்திலிருந்தால், स:=அவன், न:यूथस्य नाथ: = நம்முடைய கூட்டதிற்குத் தலைவனுவன்.

(கருத்து) மூலமந்திரத்திற்குப் பிரயோஜநம்-ஒருவன் தன் ஸ்வரூபத்தை அறிவது. த்வய மந்திரத்திற்குப் ப்ரயோஜனம் அதைச் சொல்லி பிரபத்திசெய்வதும், அது போக்கியமாயிருப்பதால், அதை எப்பொழுதும் சொல்லிக்கொண்டு காலத்தைப் போக்குவதும். சரமச்லோகத்தின் பிரயோஜநம்-தான் செய்த பிரபத்தியாலே பிரீதியடைந்த எம்பெருமான் தன்னைக் கட்டாயம் இரக்ஷிப்பன் என்று மஹாவிச்வாஸமுள்ளவனுய்ச் செய்யப்படுவது. இப்படி ஒருவன் தன் ஸ்வரூபத்தைத் தெரிந்து, பிரபத்தி பண்ணி, மஹாவிச்வாஸத்துடன் பின் காலம் எல்லாம் போக்குகிறவனுயிருந்தால், அவனே நம்முடைய ஸம்பிரதாயத்தை பிரவர்த்தநம் பண்ணத்தகுந்தவன்.

குறிப்பு:-(1) ''विहारसारथि''என்பதால், நம்மைப் போல கர்மத்துக்கு உட்பட்டு, அர்ஜுநனுக்கு வண்டியோட்டவில்லை, லீலையாக அந்த வேலை செய்தான் என்று காட்டப்படுகிறது. ஏனென்றால், அவனே வேதமானது தலையாபரணம்போல் பிரீதியுடனே காட்டுகிறது.

(2) दयागुम्भेन=என்பதால், எம்பெருமான் சரம ச்லோகத்தாலே பிரபத்தி மார்க்கத்தை தன் தயையினாலேயே வெளியிட்டான் என்று காட்டப்படுகிறது. (9)

---

## 3-வது பிரதாந பிரதிதந்திராதிகாரம்

அவ- இப்படிக் கிரந்தத்திற்கு விஷயத்தையும் பிரயோஜநத்தையும் சொல்லி, மேல் நான்கு அதிகாரங்களால் தத்துவ நிரூபணம் செய்கிறார். தத்துவங்கள் மூன்று-எம்பெருமான், ஜீவன்கள், பிரகிருதி-என்று. அவைகளுள் முதல் அதிகாரத்தால் எம்பெருமானுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள உறவைச் சொல்லுகிறார்-

आधेयत्वप्रभृतिनियमैरादिकर्तुः शरीरं
सत्तास्थेमप्रयतनफलेष्वेतदायत्तमेतत् ।
विश्वं पश्यन्निति भगवति व्यापकादर्शदृष्टे
गम्भीराणामकृतकगिरां गाहते चित्तवृत्तिम् ।। १० ।।

(ப-ரை) भगवति - எம்பெருமான், व्यापकादर्शदृष्टे=மூல மந்திரமாகிய கண்ணாடியிலே பார்க்கப்படும்பொழுது, एतत् विश्वं = இந்த உலகமானது, सत्ता=ஒரு வஸ்துவாக உண்டாவது, स्थेम=உண்டானது அப்படியே இருப்பது, प्रयतन=ஒரு வேலை செய்வது, फलेषु = எம்பெருமானுக்குப் பிரீதி உண்டாக்குவதான பலன்-இந்த விஷயங்களில், एतदायत्तम्=இவனுக்கு உட்பட்டிருக்கிறது. ஆகையால், आधेयत्वप्रभृति=அவனால் தூக்கப்படுவது முதலானவைகளுடைய, नियमैः=எப்போதுமிருப்பதாலே, आदिकर्तुः शरीरं=அதற்கு முதல்காரணமான எம்பெருமானுக்கு உடம்பு इति=என்று, पश्यन्=பார்க்கிறவன், गम्भीराणाम्=ஆழமான, अकृतकगिरां=ஒருவனாலும் செய்யப்படாத சொற்களாகிய வேதத்தினுடைய, चित्तवृत्तिम्=உட்கருத்தை, गाहते =உள்ளபடி அறிகிறான்.

(கருத்து) உலகத்தை எம்பெருமான் ஒரு வஸ்துவாகப் பண்ணி, அது அப்படியேயிருக்கும்படி தன் ஸ்வரூபத்தாலும் ஸங்கல்பத்தாலும் தூக்குகிறான். ஆகையால் அது தூக்கப்பட்டது. அது ஒரு வேலையைச் செய்யும்படி அதை ஏவுகிருன். அது ஏவப்பட்டது. அது செய்யும் வேலை யின் பலஞகிய பிரீதியை அவன் அடைகிருன். ஆகையால் அவன் சேஷி, அது சேஷம். இந்த மூன்றுவிதமான உறவு எப்போதும் இருக்கும். ஒருபோதும் அதை விட்டுநீங்காது. ஆகையால் உலகம் அவனுக்கு உடம்பு. இந்த விஷயங்களை மூலமந்திரத்தைக் கொண்டு ஒருவன் அறியவேண்டியது. இப்படி அறிந்தவன்தான் வேதத்தினுடைய உட்கருத்தை அறிந்தவன். இப்படி அறியாதவனுக்கு வேதத்தின் உட்கருத்து தெரியாது.

குறிப்பு:-(1) ''गम्भीराणाम्'' என்கிற சொல்லாலே, வேதத்தின் பொருளை அறிவது கஷ்டமென்றும், அது மூலமந்திரத்தினால் ஏற்படும் சரீரம் ஆத்மா என்கிற உறவாலேயே கண்டு பிடிக்க வேண்டிய தென்றும் சொல்லப் படுகிறது. வேதத்தில் உலகமும் எம்பெருமானும் ஒன்று என்றும், வேறு தத்துவங்கள் என்றும் சொல்லுவதால் ஸந்தேஹம் உண்டாகிறது. ஆகையால் அதன் உட்கருத்தை அறிவது கஷ்டம்.

(2) உடம்பு என்பது ஒரு அறிவுள்ளவனுலே தூக்கப்பட்டு அவனுல் ஏவப்பட்டு, அவனுக்காகவே இருப்பது. இந்த அறிவுள்ளவன் அதற்கு ஆத்மா. ஆகையால் எம்பெருமான் உலகத்திற்கு ஆத்மா. அது அவனுக்கு உடம்பு.

(3) சேஷன் என்பவன் ஒருவனுக்கு அதிசயத்தைப் பண்ணுவதற் காகவே இருக்கிறவன். அதைப் பெற்றுக் கொள்ளுகிறவன் சேஷி. அதிசயமென்பது முன்னுலில்லாமல் பிறகு உண்டாகிற ஒரு விஷயம். எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கரியத்தாலே யுண்டாகும் அதிசயம் அவனுக்குப் பிரீதி.

(4)एतत्= என்கிற சொல்லாலே, கண்ணுலே பார்க்கிற இந்த உலகம் என்று காட்டப்படுகிறது. இதனுல் அது ஒருவனுக்கு உட்படாதது என்கிற எண்ணம் பிசகு என்றும், எப்பொழுதும் எம்பெருமானுக்கு உட்பட்டே யிருக்குமென்றும் காட்டப்பட்டது. (10)

அவ-முதல் சுலோகத்தில் சொன்ன விஷயமானது, எல்லாவாதிகளை ஜயிப்பதற்கு உதவுகிறபடியால் அது பிரதாநம் என்று கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிருர்-

यद्येतं यतिसार्वभौमकथितं विद्यादविद्यातमः
प्रत्यूषं प्रतितन्त्रमन्तिमयुगे कश्चिद्विपश्चित्तमः ।
तत्रैकत्र झटित्युपैति विलयं तत्तन्मतस्थापना-
हेवाकप्रथमानहैतुककथाकल्लोलकोलाहलः ।। ११ ।।

(ப-ரை) यतिसार्वभौमकथितं= ஸ்ரீபாஷியகாரராலே சொல்லப்பட்டதும், अविद्यातमःप्रत्यूषं=அவித்யையாகிற இருட்டுக்கு விடியற்காலம் போல் இருக்கிறதுமான; एतं= இந்த, प्रतितन्त्रम् = பிரதிதந்திரத்தை, कश्चित् विपश्चित्तमः = நல்ல அறிவை உடைய ஒருவன், अन्तिमयुगे = இந்த கடைசி யுகத்தில், यदि विद्यात्=அறிவானேயாளுல், तत्र एकत्र-அவன் ஒருவனிடத்தில், तत्तन्मतस्थापना = அந்தந்த மதத்தை ஸ்தாபிப்பதில், हेवाक= குதூஹலத்தால், प्रथमान = பரவுகிற, हैतुककथा = ஹைதுகர்களுடைய வாதமாகிற, कल्लोल= அலைகளுடைய, कोलाहलः= இரைச்சலானது, झटिति= சீக்கிரத்தில், विलयम् उपैति = இருந்தவிடம் தெரியாமல் போகிறது.

(கருத்து) ஸ்ரீபாஷியகாரர் அருளிச்செய்த இந்த பிரதிதந்த்ரத்தை ஒரு புண்ணியத்தாலே அறிந்தவனிருக்கிறவிடத்தில் வாதிகளுடைய வாதங்கள் இருந்தவிடம் தெரியாமல் போய்விடும்.

குறிப்பு:-(1) பிரதிதந்திரம்-ஒரு ஸித்தாந்தத்திலேயே உள்ளதாய், வேறு ஸித்தாந்தங்களிலில்லாததான ஒரு விஷயம்.

(2) விடியற்காலம் வந்தவுடன் இராத்திரியின் இருட்டுப் போவதுபோல், இந்த பிரதிதந்திரத்தாலே எம்பெருமானை அடைவதற்கு விரோதியான பாபங்கள் போய், அவனை அடைவதற்கு வேண்டிய உபாயங்களைச் செய்ய அதிகாரமுண்டாகும். இருட்டுப் போல் பாபங்கள், விடியற்காலம்போல் இந்த பிரதிதந்திரம். மேல் வரும் பகல்போல், உபாயத்தைச் செய்வதும், எம்பெருமானை அடைவதும்.

(3) கடைசி யுகத்தில் என்பதால், மற்ற யுகங்களில் அதை எல்லாரும் ஒப்புக்கொண்டவர்களென்றும், இந்த யுகத்தில் அதை ஒப்புக் கொள்பவர்கள் கர்மத்தினுல் குறைந்திருக்கிருர்களென்றும் காட்டப்படுகிறது.

(4) यतिसार्वभौमक्थितं=என்பதால், இது ஸம்பிரதாயத்தால் நமக்கு வந்திருக்கிறதென்று காட்டப்படுகிறது. क्थितं என்கிற சொல்லாலே இதை ஸ்ரீ பாஷியகாரரும் தாம் சொல்லவில்லை என்றும், இது ஸூத்திரகாரரின் அபிப்பிராய மென்றும், அதையே வெளிப்படுத்தினர் என்றும் காட்டப் படுகிறது.

विपश्चित्तम:=என்பதின் கருத்து- विपश्चित्=(இதை அறிந்தவன்) எம்பெருமானை அடைவதற்கு விரோதியான பாபங்களிலிருந்து விடுபவன், विपश्चित्तम:= (இதை மிகவும் நன்ருய் அறிந்தவன்) வாதிகளை ஜயிப்பவன், என்று. (11)

---

## 4-வது அர்த்தபஞ்சகாதிகாரம்

அவ:- இதில் கீழ் அதிகாரத்தில் சொன்ன உறவோடுகூட, ஐந்து விஷயங்களை அறியவேண்டியதென்றும், அவைகளை மூலமந்திரம் எந்த எந்த விடங்களில் சொல்லுகிறதென்றும் முதல் சுலோகத்தால் அருளிச் செய்கிருர்.—

आदौ प्राप्यं परममनघं प्राप्तृरूपं च मादा
विष्टोपायं त्वयननमसोरीप्सितार्थं चतुर्थ्याम् ।
तद्व्याघातं ममकृतिगिरि व्यञ्जयन्तं मनुं तं
तत्प्रायं च द्वयमपि विदन् सम्मतः सर्ववेदी ।। १२ ।।

(ப-ரை) आदौ = அஎன்பதை முதலாக உடைய சொற்களில், (அகாரத்திலும், நாராயண என்கிற சொல்லிலும்) अनघ=தோஷமில்லாத தாயும், परमम् = மிகவும் உயர்ந்ததாயுமிருக்கிற, प्राप्यं = அடையவேண்டிய வஸ்துவையும், मादौ= மஎன்கிற எழுத்துக்களிலும், நர என்கிற சொல்லி லும், प्राप्तृरूपं= அடைகிறவனுடைய ஸ்வரூபத்தையும், अयननमसो:तु = அயநம் நமஸ் என்கிற சொற்களில், इष्टोपायं= ஜீவனுக்கு இஷ்டமான உபாயத்தையும், चतुर्थ्याम्=நாராயண என்கிற சொல்லிலிருக்கிற நான்காம் வேற்றுமையில், ईप्सितार्थं = அடைய வேண்டுமென்று ஆசைப்படுகிற பொருளையும், ममकृतिगिरि = மமகாரத்தைச் (என்னுடையது) சொல்லுகிற சொல்லில், तद्व्याघातं=அதற்கு விரோதியையும், व्यञ्जयन्तं=காட்டுகிற,

तं मनुं=அந்த மூல மந்திரத்தையும், तत्प्रायं च= அது போலிருக்கிற, द्वयम्= த்வயத்தையும், अपि=என்பதால் சரம சுலோகத்தையும், विदन् =அறிகிறவன் सर्ववेदी= எல்லாவற்றையும் அறிந்தவனுக, सम्मत:= ஒப்புக் கொள்ளப் பட்டவன்.

(கருத்து) ஒருவன் அறியவேண்டிய விஷயங்கள் ஐந்து- அடையவேண்டியவன் எம்பெருமான்; அடைகிறவன் ஜீவன், அடைவதற்கு உபாயம் எம்பெருமானும், ஜீவன் செய்யும் பிரபத்தியும்; அவன் அடையவேண்டிய பொருள் எம்பெருமானுடைய கைங்கரியம்; அதை இதுவரையில் அடையாததற்குக் காரணம் அவனுடைய 'என்னுடையது' என்கிற எண்ணம். இவைகளைக் காட்டுகிற மூன்று ரஹஸ்யங்களையும் அறிந்தவனே அறியவேண்டிய எல்லாம் தெரிந்தவன்.

குறிப்பு-சுலோகத்தில் மமகாரத்தைச் சொன்னபோதிலும், அதற்குக் காரணமான அஹங்காரமும் சொல்லப்படுகிறது. அஹங்காரம் என்ருல், உடம்பை ஆத்மாவாக எண்ணுவது. மமகாரம் என்பது-உடம்பைச் சேர்ந்தவைகளைத் தன்னுடையவைகளென்று எண்ணுவது.

(2) तम् =பிரஸித்திமான, இதை ஒன்றை அறிவதிஞலேயே, அறியவேண்டியவைகள் எல்லாம் அறியப்படுகிறது என்கிற பிரஸித்தியை உடையது என்று கருத்து.

---

அவ:- மோக்ஷம் வேண்டும் என்று ஆசைப்படுகிறவன், தான் கீழ்ச் சொல்லிய ஐந்து அர்த்தங்களை அறியவேண்டியவைகளாக நினைத்து, பிரபத்தியைச் செய்யவேண்டும் என்று தீர்மானம் பண்ணுவது அந்த அறிவுக்கு பிரயோஜநம் என்று காட்டி, அவைகளை நினைக்கவேண்டிய விதத்தை அதிகாரத்தின் கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிருர்:-

प्राप्यं ब्रह्म समस्तशेषि परमं प्राप्ताऽहमस्योचित:
प्राप्तिर्दायधनक्रमादिह मम प्राप्ता स्वत: सूरिवत् ।
हन्तैनामतिवृत्तवानहमहम्मत्या विमत्याश्रय:
सेतु: सम्प्रति शेषिदम्पतिभरन्यासस्तु मे शिष्यते ।। १३ ।।

(ப-ரை) प्राप्यं=(நான்) அடையவேண்டியதோ, परमं=மிகவும் உயர்ந்த தாயும், समस्तशेषि = எல்லாருக்கும் சேஷியாயும், இருக்கிற,

ब्रह्म=எம்பெருமான்; प्राप्ता अहम्=அடைய வேண்டியவனுன நான், अस्योचित: =அடைய வேண்டிய எம்பெருமானுக்குத் தகுந்தவன். प्राप्ति:= அடைவதானது, दायधनक्रमात्= தகப்பனுருடைய ஸொத்தானது உறவினு லேயே பிள்ளைக்கு வருவது போலவும், सूरिवत्=நித்தியஸூரிகளுக்கு அவனுடைய கைங்கரியம் கிடைத்திருப்பது போலவும், मम=எனக்கு इह=(பிரயாஸப்பட்டு கிடைக்கும் ஸ்வர்க்கம்போல் இல்லாமலிருக்கிற) ப்ராப்யத்தில், स्वत:=ஸ்வரூபத்தோடு சேர்ந்ததாய் தானுகவே, प्राप्ता= கிடைக்க வேண்டியது, हन्त=ஐயோ! अहम्मत्या=அஹங்காரத்தாலே (உண்டான) विमत्याश्रय: =தப்பெண்ணத்திற்கு இருப்பிடமாய்க் கொண்டு, अहम्=நான், एनाम्=இதை, अतिवृत्तवान्= இழந்திருக்கிறேன். सम्प्रति= இப்பொழுது, मे= எனக்கு, शेषिदम्पति=சேஷிகளான தம்பதிகளிடத்தில் செய்யவேண்டிய, भरन्यास:=பிரபத்தியாகிற, सेतु:=உபாயமானது, शिष्यते=பாக்கியிருக்கிறது.

(கருத்து) நான் இதுவரையில் எம்பெருமானிடம் போகாததற்கு என்ன காரணம் என்று விசாரிக்கையில், அது எம்பெருமானுடைய குற்றமன்று; ஏனென்ருல், அவன் மிகவும் உயர்ந்தவன், அவன் எனக்கு சேஷி, என்னை ரக்ஷிப்பதற்கு ஸித்தமாய் இருக்கிருன். என்னுடைய குற்றமும் அன்று; ஏனென்ருல், நான் அவனுடைய சேஷனுனதாலேயும், ஸ்வபாவத்தாலே நான் தோஷமில்லாதவனுனதாலும், நான் அவனிடம் போகத்தகுந்தவன். அவனை அடைவது கஷ்டப்பட்டு கிடைக்கவேண்டுமோ என்ருல், அதுவு மில்லை. அது தானுகவே வரவேண்டியது. ஆகையாலிதுவரையில் அதை இழந்ததற்குக் காரணம் என்னுடைய தப்பெண்ணமே. ஆகையால் நான் இப்போது செய்யவேண்டியது அவன் திருவடிகளில் விழுந்து என் பிழைகளைப் பொறுக்கவேணுமென்று வேண்டுவதாகிய பிரபத்திதான் பாக்கியிருக்கிறது.

குறிப்பு:—(1) எம்பெருமான் தோஷமுள்ளவனுயும் குணமில்லாதவனு யும் நம்மோடு ஸம்பந்தமுமில்லாதவனுயுமிருந்தால், அப்போது அவனை அடையவேண்டியதில்லை; அவன் அப்படி இல்லை என்று காட்டுவதற்காக परमं=என்றும், समस्तशेषि=என்றும் சொல்லப்பட்டது.

(2) दायधन=உதாஹரணமானது உலக வழக்கம்; இது பரலோக விஷயங்களில் வரக்கூடுமோ என்கிற ஸந்தேஹத்தைத் தீர்ப்பதற்காக நித்யஸூரி உதாஹரணம் சேர்க்கப்பட்டிருக்கிறது.

(3) शेषिदम्पति भरन्यास:=என்பதால் பிராட்டியும் எம்பெருமானுமாகிய இருவரிடத்திலேயே பிரபத்தி செய்யவேண்டுமென்று காட்டப்படுகிறது.

(4) ஸேது என்பது ஒரு ஆற்றில் இக்கரையிலிருந்து அக்கரைக்குப் போவதற்கு உபாயமான பாலத்தைச் சொல்லுகிறது. இங்கு ஸம்ஸாரமாகிய இக்கரையிலிருந்து மோக்ஷமாகிய அக்கரைக்குப் போவதற்குப் பிரபத்தி உபாயமாயிருப்பதால், அது ஸேது என்று சொல்லப்படுகிறது. (13)

---

## 5-வது தத்துவத்ரயாதிகாரம்

அவ:- கீழ் இரண்டு அதிகாரங்களில் சொன்ன விஷயங்களில் அடங்கிய மூன்று தத்துவங்களைப் பற்றிச் சில தப்பு எண்ணங்கள் போவதற்காக மறுபடியும் விசாரிக்கபடுகிறது:-

प्रकृत्यात्मभ्रान्तिर्गलति चिदचिल्लक्षणधिया
तथा जीवेशैक्यप्रभृतिकलहस्तद्विभजनात् ।
अतो भोक्ता भोग्यं तदुभयनियन्तेति निगमैः
विभक्तंनस्तत्त्वत्रयमुपदिशन्त्यक्षतधियः ॥ १४ ॥

(ப-ரை) प्रकृति = உடம்பாயும் இந்திரியங்களாயும் மாறியிருக்கிற பிரகிருதியில், आत्मभ्रान्तिः=ஆத்மா என்கிற மயக்கம், चिदचिल्लक्षणधिया அறிவுள்ளவர்களுடையவும் அறிவில்லாதவைகளுடையவும் லக்ஷணங் களுடைய அறிவினால், गलति=தானாகவே போய்விடும். तथा=அப்படியே, जीवेशैक्य प्रभृतिकलहः=ஜீவனும் ஈஶ்வரனும் ஒன்று என்பது முதலான விஷயங்களில் உண்டாகும் கலஹமும், तद्विभजनात्=ஜீவனையும் ஈஶ்வரனையும் பிரித்துச் சொல்லுவதினால், गलति=போய்விடும். (अतः- ஆகையினாலே) இந்த எண்ணங்கள் போவதற்காக, भोक्ता=போகத்தை அடைகிறவன், (அறிவுள்ளவன்) भोग्यं=போகத்தைக்கொடுப்பது, (அறிவில்லாதது) तदुभयनियन्ता=இவையிரண்டையும் நியமநம் பண்ணு கிறவன், (எம்பெருமான்) इति=என்று,निगमैः=வேதங்களால், विभक्तं= பிரிக்கப்பட்டிருக்கிற, तत्त्वत्रयम् = மூன்று தத்துவங்களை, अक्षतधियः= ஒன்றாலும் கலங்காத அறிவை உடைய நம்முடைய ஆசாரியர்கள், नः=நமக்கு, उपदिशन्ति-உபதேசம் செய்கிறார்கள்.

(கருத்து) உலகத்தில் சில தப்பெண்ணங்கள் இருக்கின்றன-உடம்பே நான், எம்பெருமானென்று ஒருவன் கிடையாதென்றும், நானும் எம்பெருமானும் ஒன்று என்றும், நான் ஒருவனுக்கும் உட்படாதவன் என்றும். பிரகிருதி, ஜீவன், எம்பெருமான் ஆகிய இவர்களைப் பிரித்து இவைகளின் லக்ஷணங்களைச் சொல்லுவதால், இந்தத் தப்பெண்ணங்கள் போய்விடுகின்றன. வேதமே அவைகளைப் பிரித்துச் சொல்லுகிறது. இவைகளை நம்முடைய ஆசாரியர்கள் நமக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள்.

குறிப்பு:- உடம்பே ஆத்மா என்கிற எண்ணம் படிக்காதவர்களுக்கு வருகிறது. ஜீவனும் எம்பெருமானும் ஒன்று என்கிற எண்ணம் படித்தவர்களுக்கு வருகிறது. அது போவது வருத்தமென்று காட்டுவதற்காக ஒன்றை भ्रमம் என்றும், மற்றொன்றை कलहं என்றும் சொல்லியிருக்கிறது. (14)

---

அவ:- இந்த மூன்று தத்துவவிஷயமான விசாரம் பண்ணினது போதுமா? ஸ்ரீபாஷியத்திற்குப் பின்னால் உண்டாகும் மதங்களால் கலக்கங்கள் வருமே, அவைகள் எப்படிப் போகுமென்பதற்கு, அதிகாரத்தின் கடைசி சுலோகத்தால் பதில் சொல்லுகிறார்:-

आवापोद्वापतः स्युः कतिकति कविधीचित्रवत् तत्तदर्थे-
ष्वानन्त्यादस्तिनास्त्योरनवधिकुहनायुक्तिकान्ताः कृतान्ताः ।
तत्त्वालोकस्तु लोप्तुं प्रभवति सहसा निस्समस्तान् समस्तान्
पुंस्त्वे तत्त्वेन दृष्टे पुनरपि न खलु प्राणिता स्थाणुतादिः ।। १५ ।।

(ப-ரை) आवाप-ஒன்றைக் கொண்டுவந்து சேர்ப்பது, उद्वापतः- இருக்கிற ஒன்றை எடுத்துவிடுவது, ஆகிய இவைகளால், तत्तदर्थेषु - அந்தந்த அர்த்தங்களில், अस्ति नास्त्योः-இது இருக்கிறது இது இல்லை என்று பிரயோகம் பண்ணுவதற்கு, आनन्त्यात् - முடிவில்லாமையாலே, अनवधि- எல்லையில்லாத, कुहनायुक्ति- கபடமான யுக்திகளால், कान्ताः- நல்லது போல் தோன்றுகிற, कति कति-சில சில, कृतान्ताः- ஸித்தாந்தங்கள், कविधी चित्रवत् -கவிகளுடைய புத்தியினுடைய வேறுபாட்டால் உண்டான காவியங்கள் போல், स्युः- உண்டாகின்றன. (ஆனபோதிலும்) निस्समः-ஒப்பில்லாத, तत्त्वालोकः-தத்துவங்களுடைய அறிவானது, तान् समस्तान्-அவைகள் எல்லாவற்றையும், सहसा-உடனே लोप्तुम् - இருந்த

விடம் தெரியாதபடி போக்குவதற்கு प्रभवति-சக்தியுள்ளதாயிருக்கிறது. पुंस्त्वे- (முன்பிருக்கிற வஸ்துவில்) 'இது கட்டையோ? புருஷனோ' என்கிற ஸந்தேஹமுண்டானபோது புருஷத்தன்மையானது,तत्त्वेन-உள்ளபடி,दृष्टे-பார்க்கப்பட்டபோது, पुनरपि-மறுபடியும், स्थाणुतादिः-இது கட்டை முதலானவைகள் என்கிற எண்ணம், न प्राणिता - உயிருடன் இருப்ப தில்லை.

(கருத்து) ஒரு ஸித்தாந்தத்தில் இருக்கிறவைகளில், ஒன்றை எடுத்து விடுவதாலும், வேறு ஸித்தாந்தத்திலிருந்து ஒன்றைக் கொண்டுவந்து சேர்ப்பதாலும், அதுவே வெவ்வேறு ஸித்தாந்தமாக ஆகிறது. ஒரே தத்துவத்தின் விஷயத்தில் இந்த குணமிருக்கிறது, இது இல்லையென்று சொல்லக்கூடிய விஷயங்களுக்குக் கணக் கில்லாமையால் பல பல ஸித்தாந்தங்கள் உண்டாகின்றன. எப்படி ஸ்ரீமத்ராமாயணகதை ஒன்று யிருக்க, ஒரு கவி ஒன்றை அதில் சேர்ப்பதாலும், வேறொரு கவி அதி லிருந்து ஒன்றை எடுப்பதாலும் அது வெவ்வேறு காவியமாக ஆகிறதோ, அப்படியே இந்த ஸித்தாந்தங்களும் உண்டாகின்றன. இவைகளை நல்லதுபோல் தோன்றுகிற யுக்திகளைக்கொண்டு ஸ்தாபிக்கையால் இவைகள் நல்ல ஸித்தாந்தங்கள்போல் தோன்றுகின்றன. இப்படி இருந்தபோதிலும் தத்துவங்கள் இத்தனையென்றும், அவைகளுடைய குணங்கள் இன்னவையென்றும் உள்ளபடி அறிவதால் இந்த மதங்கள் உடனே மறைந்துவிடும். கட்டையைப் போலிருக்கும் ஒரு வஸ்துவைப் பார்த்து 'இது கட்டையோ, புருஷனோ' என்று ஸந்தேஹமுண்டான போது அது புருஷன் என்பதாகத் தெரிந்தால், அது கட்டையோ என்கிற ஸந்தேஹமானது மறுபடியும் உயிருடன் இருக்காது.

குறிப்பு:-(1) தத்துவங்கள் மூன்றாயிருக்க, அவைகளில் எம் பெருமானுன தத்துவத்தை ஸாங்கியனும் பௌத்தனும் ஜைநனும் எடுத்துவிடுகிறார்கள். ஸாங்கியன் ஜீவனை ஒப்புக்கொள்ளுகிறான். பௌத்தன் ஜீவனை ஒப்புக்கொள்ளுகிறதில்லை. ஜ்ஞாநமொன்றையே சங்கரனும், யோகாசாரனென்கிற பௌத்தனும், தத்துவமென்று சொன்ன போதிலும், சங்கரன் அது நித்தியம் என்றும், ஒன்றென்றும் சொல்லுகிறான். யோகாசாரன் அதை ஒரு க்ஷணம்தான் இருக்கிறதென்றும், ஜ்ஞானப்பிர வாஹங்கள் வெவ்வேறு என்றும் சொல்லுகிறான். இப்படி சுலோகத்தில் சொன்னபடி வெவ்வேறு மதங்கள் உண்டாகின்றன.

(2) கடைசி பாதத்திற்கு வேறு விதமாயும் அர்த்தம் காட்டப்பட்டதாக

வுமாகிறது. पुंस्त्वे–பரதேவதையானது, புருஷோத்தமனுன ஸ்ரீமந்நாரயணன் என்று, तत्त्वेन–உள்ளபடி, दृष्टे–பார்க்கப்பட்டபோது, स्थाणुतादिः–அது ருத்திரனே, பிரம்மாவோ என்கிற ஸந்தேஹமானது, पुनरपि न खलु प्राणिता– மறுபடியுமிருக்கிறதில்லை.

(3) निस्सम: என்பதற்கு ஸமமில்லை யென்று பொருள். இதனுல் மேற்பட்டதுமில்லை என்று காட்டப்படுகிறது. இந்த ஜ்ஞாநத்துக்கு எதிரான ஜ்ஞாநமும், அதைப்போக்கும்படியான ஜ்ஞாநமும் இல்லை என்று கருத்து. (15)

---

## 6-வது பரதேவதாபாரமார்த்யாதிகாரம்

அவ:- இதுவரையில் எம்பெருமானுன தத்துவம் பொதுவான சொற்களாலே சொல்லப்பட்டது. அது இன்னதென்று முதல் சுலோகத்தில் காட்டப்படுகிறது:-

आत्मैक्यं देवतैक्यं त्रिकसमधिगता तुल्यतैक्यं त्रयाणाम्
अन्यत्रैश्वर्यमित्याद्यनिपुणफणितीराद्रियन्ते न सनत: ।
त्रय्यन्तैरेककण्ठैः तदनुगुणमनुव्यासमुख्योक्तिभिश्च
श्रीमान् नारायणो नः पतिरखिलतनुः मुक्तिदो मुक्तभोग्यः ।। १६ ।।

(ப-ரை) आत्मैक्यं–ஆத்மாக்கள் எல்லாம் ஒன்று, देवतैक्यं–தேவதைகளெல்லாம் ஒன்று, त्रिकसमधिगता तुल्यता– பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய த்ரிமூர்த்திகள் ஸமர்கள், त्रयाणाम् ऐक्यम्–த்ரிமூர்த்திகளும் ஒன்று, अन्यत्र ऐश्वर्यम् – இவர்களைக் காட்டிலும் வேருன ஒருவன் ஈஶ்வரன், इत्यादि– என்று சொல்லுவது முதலிய, अनिपुणफणिती:–அறிவில்லாதவர்கள் சொல்லுகிற வார்த்தைகளை, सन्त:– (இது ஸாரம், இது ஸாரமல்ல என்று இவைகளைப் பிரித்து அறியக்கூடிய) பெரியோர்கள், न आद्रियन्ते – ஸரியானவை என்று ஒப்புக்கொள்ளுகிறதில்லை. एककण्ठै:–ஒரே விதமாய்ச் சொல்லுகிற, त्रय्यन्तै:–உபநிஷத்துக்களாலும், तदनुगुण–அவைகளோடு ஒத்திருக்கிற, मनुव्यास मुख्योक्तिभि:– மநு, வியாஸர் முதலா னவர்களுடைய ஸூக்திகளாலும், अखिलतनु:–எல்லாவற்றையும் தனக்கு உடம்பாக உடையவனுகவும், मुक्तिद:–மோக்ஷத்தைக் கொடுக்கிறவனுகவும்,

मुक्तभोग्यः-முக்தர்களால் அநுபவிக்கக் கூடியவனாயுமிருக்கிற,श्रीमान् नारायणः-லக்ஷ்மியுடன் சேர்ந்திருக்கிற நாராயணனே, नः-நமக்கு, पतिः-சேஷி.

(கருத்து) பரதேவதையைத் தெரியாதவர்கள் வெவ்வேறாகச் சொல்லுகிறார்கள். அதைப் பெரியோர்கள் ஒப்புக்கொள்ளுவதில்லை, வேதம் முதலான பிரமாணங்களைக்கொண்டு லக்ஷ்மியோடு கூடிய நாராயணனே பரதேவதை என்று பெரியோர்கள் தீர்மானம் செய்கிறார்கள்.

குறிப்பு:- (1) ஆத்மா என்கிற தத்துவம் ஒன்று என்பது யாதவப் பிரகாசன் மதம். சேதநம் என்றும், அசேதநம் என்றும் ஈசுவரன் என்றும் பிரிவுகள் இல்லை. ஒரு அவஸ்தையில் ஸத்து என்கிற ஒரே திரவியமாயிருக் கிறது. இன்னொரு அவஸ்தையில் அதுவே மூன்றாகக் காணப்படுகிறது. இது அவன் மதம். இதைக் கண்டிப்பதாலேயே பிரம்மம் ஒன்றேயிருக்கிறது என்கிற சங்கரமதமும், பிரம்மாவும் ஆத்மாவும் ஒன்று என்கிற பாஸ்கரமதமும் கண்டிக்கப்பட்டதாக ஆகின்றன.देवतैक्यं- என்பது பிரம்மா, ருத்திரன், இந்திரன், அக்கினி முதலானவர்களுக்கு ஒரே ஆத்மா உடம்புகள் மாத்திரம் வேறு என்கிற மதம். தேவதைகளுக்கு வெவ்வேறு ஆத்மாக் களிருந்தாலும், பிரம்மாவும், ருத்திரனும் விஷ்ணுவும் ஜ்ஞாநத்தாலும், சக்தியாலும், மற்ற குணங்களாலும் ஸமம் என்று ஒரு மதமுண்டு. இந்த மூன்று பேர்களுடைய ஸ்வரூபம் ஒன்று; ஒருவனே மூன்று விதமாய்த் தோன்றுகிறான் என்று ஒரு மதம். இந்த மூன்று பேர்களுக்கும் மேற்பட்ட வனாய் பரமசிவன் என்று ஒரு தேவதையிருப்பதாக ஒரு மதம்; இது சைவர்களின் மதம். சுலோகத்தில் ''ஆதி'' என்கிற சொல்லால் வேறு மதங்களும் இருப்பதாகக் காட்டப்படுகிறது. அவைகளாவன- த்ரிமூர்த்தி களில் ப்ரம்மாவே பரதேவதை என்றும், ருத்திரனே பரதேவதை என்றும், பிராட்டியை விட்டு நாராயணனே பரதேவதை என்றும்.

(2) ''अखिलतनुः'' என்பதால், வேதத்தில் ஜகத்காரணத்தையும், உபாஸநங்களையும் சொல்லுகிற இடங்களில் ருத்திரன் முதலானவர்களைச் சொன்னபோதிலும், அவர்கள் நாராயணனுக்கு உடம்புகளாயிருப்பதால், அவர்கள் பரதேவதை அன்று, அவர்களுக்கு ஆத்மாவான நாராயணனே பரதேவதை என்று காட்டப்படுகிறது.

(3) தேவதை என்பது ஒரு ஜீவனால் ஆராதிக்கப்பட்டு, அவன் வேண்டுவதைக் கொடுக்குமவன். தேவதைகளுக்குள்ளே மோக்ஷத்தைக் கொடுக்கிறவன் நாராயணனேயாகையால் அவனே பர-எல்லாருக்கும் மேலான, தேவதை.

(4) ‘‘अनिपुण’’ என்கிற சொல்லுக்கு, நல்ல யுக்திகளைக் கொண்டு விசாரிக்காதவர்கள் என்று பொருள். இதனால் கீழே சொன்ன மதங்கள், அப்படி விசாரிக்கப்பட்டவைகள் அன்று என்று கருத்து.

(5) உம்முடைய மதம் இப்படி விசாரிக்கப்பட்டதோ என்கிற கேள்விக்கு ‘सन्त:’ என்கிற சொல் பதில் சொல்லுகிறது. இது ஸாரம், இதில் ஸாரமில்லை என்று பிரித்து அறிய சக்தியுள்ளவர்கள் தம்முடைய மதத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்று கருத்து.

(6) நீர் சொல்லுவதற்கு என்ன பிரமாணம் என்கிற கேள்விக்கு ‘‘त्रय्यन्तैरेककण्ठै:’’ என்கிற சொற்கள் பதில் சொல்லுகின்றன, இதற்குப் பிரமாணங்கள் வேதாந்தங்கள் என்றும், பன்மைச் சொல்லாலே எல்லா உபநிஷத்துகளும் இதையே சொல்லுகின்றன என்றும், அவைகளுக்குள்ளே இந்த விஷயத்தால் ஒரு விரோதமில்லை என்றும் காட்டப்படுகிறது.

(7) லிங்கம் முதலான புராணங்கள் வேறு விதமாய்ச் சொல்லவில்லையா என்பதற்கு ‘तदनुगुण’ என்கிற சொல் பதில் சொல்லுகிறது. வேதமொன்றே பிரமாணமாகையால், அதற்கு விருத்தமானவைகள் பிரமாணங்கள் அன்று என்றும், லிங்கம் முதலானவைகள் வேதத்துக்கு விருத்தங்களாய் இருப்பதால், அவைகள் பிரமாணங்கள் அன்று என்றும் கருத்து. உபநிஷத்துக் களுக்கு ஒத்து இருப்பதால் மநுஸ்மிருதியும், மஹாபாரதமும் பிரமாணங்கள். ‘‘मुख्योक्तिभि:’’ என்பதால், ஸ்ரீமத்ராமாயணமும், விஷ்ணு புராணமும், ஸ்ரீபாகவதமும் சௌநகஸ்மிருதியும் பிரமாணங்கள் என்று காட்டப்படுகிறது. (16)

---

அவ:- நாராயணனே பரதேவதையாகையாலே அவனைத் தவிர, வேறொருவனையும் எந்த விஷயத்திலும் நமக்கு ரக்ஷகன் என்று எண்ணக் கூடாதென்று காட்டுவதற்காக அதிகாரத்தின் கடைசி சுலோகம்:-

जनपदभुवनादिस्थानजैत्रासनस्थषभेषु-
वनुगतनिजवार्तं नश्वरेष्वीश्वरेषु ।
परिचितनिगमान्त: पश्यति श्रीसहायं
जगति गतिमविद्यादन्तुरे जन्तुरेक: ।। १७ ।।

(ப-ரை) जनपद-தேசங்கள், भुवन-உலகங்கள்,आदि-இவைமுதலான, स्थान-இடங்களில், जैत्रासनस्थेषु -அவைகளில் உள்ளவர்களை ஆளுவதற்குத் தகுந்த ஸிம்ஹாஸநங்களிலிருந்த, ईश्वरेषु-ஈசுவரர்கள், अनुगतनिजवार्तम्- தங்களுடைய கதைகளும் தங்களுடன்போகும்படி नश्वरेषु-நாசத்தை யடையும் போது, अविद्यादन्तुरे- அவித்யை நிறைந்திருக்கிற, जगति- இந்த உலகத்தில், परिचितनिगमान्त:- வேதாந்தங்களை அடிக்கடி படிக்கிற, एक:जन्तु:- ஒரு ஜந்துவானவன், श्रीसहायम्- ஸ்ரீமந் நாராயணனை, गतिम्-ரக்ஷகனாக, पश्यति-பார்க்கிறான்.

(கருத்து) உலகத்தில், தங்களுக்கு ரக்ஷகராக வெவ்வேறு ஜீவன்களை அறிவில்லாதவர்கள் தேடுகிறார்கள், அவர்களில் சிலர் தேசத்திற்கு அதிபதியான ராஜாவை; சிலர் மூன்று உலகங்களுக்கும் அதிபதியான இந்திரனை; சிலர் அண்டத்திற்கு அதிபதியான பிரம்மாவை. இந்த அதிபதிகள் எல்லாரும் தங்களுடைய காலங்கள் முடிந்தவுடன் போய்விடுகிறார்கள். அவர்களுடைய கதைகளும் அவர்களுடன் பின்னாலே போய்விடுகிறது. ஆகையால் அவர்களைத் தங்களுக்கு ரக்ஷகராக எண்ணுவது பிசகு. உபநிஷத்துக்களை நன்றாய்ப் படித்தவன் ஸ்ரீமந்நாராயணனையே ரக்ஷகனாகத் தேடுவன். உலகத்தில் அவித்யையினால் வெகு ஜநங்கள் மயங்கி இருந்தபோதிலும் இதைத் தெரிந்தவன் ஒருவனாவது இருப்பன்.

குறிப்பு:- (1) जनपद-என்றும்,भुवन-என்றும் பிரித்துச்சொன்னதாலே, ஒரு தேசத்தின் அதிபதிக்கு வேறு தேசத்திலும், ஒரு லோகத்தின் அதிபதிக்கு வேறு உலகத்திலும், ஒரு அண்டத்தின் அதிபதிக்கு வேறு அண்டத்திலும் அதிகாரமில்லை என்று காட்டப்படுகிறது.

(2) ''जैत्रासनस्थेषु'' என்று சொன்னதால், அந்த அந்த அதிபதிகளுக்குத் தங்களுக்குத் தகுந்த அதிகாரத்தைச் செலுத்துவதற்காகவே அவர்களுக்கு ஸிம்மாஸநம் கிடைத்திருக்கிறது, அவர்களுடைய ஸ்வபாவத்தினால் அவைகள் வந்ததன்று என்று காட்டப்படுகிறது.

(3) இந்த உலகத்து ராஜாவோடும், இந்திரனோடும் சேர்த்து பிரம்மாவைச் சொன்னதினால், குறித்த காலம் போனவுடன் மற்றவர்களைப் போல அவனும் போய்விடுகிறானென்று காட்டப்படுகிறது. ஆகையால் அவன் பரதேவதை அன்று என்று ஏற்படுகிறது.

(4) இங்கு அவித்யை என்பது ஒருவன் முன் செய்த கர்மம். அதனுல் ஒருவன் வேதாந்தங்களைப் படிக்காமலும், ரக்ஷிக்கத் தகுதியில்லாதவனை ரக்ஷகனுக எண்ணிக் கொண்டுமிருக்கிருன்.

(5) 'पश्यति' என்று நிகழ்காலச் சொல்லாலே நாராயணனையே ரக்ஷகனுக எண்ணுகிறவனை நாம் இப்போதும் பார்க்கிருேம். முன் காலத்திலும் அப்படிப்பட்டவன் இருந்தான். இனி மேலும் இருப்பன் என்று காட்டப்படுகிறது.

(6) ஒரு தடவை வேதாந்தங்களைப் படிப்பது போதாது என்றும், அதை அடிக்கடி படிக்கவேண்டியதென்றும், அப்படிச் செய்கிறவனுக்குத்தான் உண்மையான அர்த்தம் தெரியுமென்றும் "परिचित" என்கிற சொல்லால் காட்டப்படுகிறது. (17)

---

## 7-வது முமுக்ஷுத்வாதிகாரம்

அவ:- இப்படி நான்கு அதிகாரங்களால், தத்துவங்களைச் சொல்லி மேல் ஆறு அதிகாரங்களால் உபாயங்களை விசாரிக்கிருர். அவைகளில் இந்த அதிகாரத்தில் முமுக்ஷுவின் லக்ஷணத்தைச் சொல்லுகிருர்:-

कालावर्तान् प्रकृतिविकृतीः कामभोगेषु दोषान्
ज्वालागर्तप्रतिमदुरितोदर्कदुःखानुभूतिम् ।
याथातथ्यं स्वपरनियतं यच्च दिव्यं पदं तत्
काराकल्पं वपुरपि विदन् कस्तितिक्षेत बन्धम् ? ॥ १८ ॥

(ப-ரை) कालावर्तान्-சுழல்கள்போல் திரும்பித் திரும்பி வருகிற காலங்களையும், प्रकृतिविकृतीः-பிரகிருதியையும், அதிலிருந்து உண்டான மஹத் முதலானவைகளையும், कामभोगेषु दोषान्-இந்த லோகத்திலும், பரலோகத்திலும் இருக்கும் போகங்களில் தோஷங்களையும், ज्वालागर्त प्रतिम-நெருப்பு நிறைந்த குழிபோலிருக்கும், दुरित-பாபங்களுக்கு, उदर्क-பலன்களான, दुःखानुभूतिम्-துக்கத்தின் அநுபவத்தையும், स्वपरनियतम्-தன்னிடத்திலும் எம்பெருமானிடத்திலும் எப்போதும் சேர்ந்திருக்கும், याथातथ्यं-உண்மையான ஸ்வபாவத்தையும், यत् तत्- பிரஸித்தமான, दिव्यं पदं च-பரமபதத்தையும், काराकल्पम्-ஜெயில்போலிருக்கும் वपुरपि-

உடம்பையும், विदन्-அறிகிற, कः-எவன், बन्धम् -கர்மத்திஞல் கட்டுப்பட்டிருப்பதை, तितिक्षेत-பொறுப்பன்.

குறிப்பு:- (1) சுலோகத்தில் சொன்னவைகளை உள்ளபடி தெரிந்த எவன் தான் கர்மபந்தத்தைப் பொறுப்பன், ஒருவனும் பொறுக்கமாட்டானென்று கருத்து.

(2) காலத்தைச் சுழலாகச் சொன்னதால், அதில் அகப்பட்டவன் அடிக்கடி பிறந்து, கிழத்தனத்தை அடைந்து இறந்துபோகிருன் என்றும், வருஷரூபமான காலமானது வெயிற்காலமாயும், மழைகாலமாயும், குளிர்காலமாயும் இருந்து வருத்தத்தை உண்டு பண்ணுவதுபோல், பிறப்பு முதலானவைகளால் அவனுக்குத் துன்பத்தை உண்டுபண்ணுகிற தென்றும், இதற்கு ஒய்வு கிடையாதென்றும், அதிலிருந்து தன் இச்சையால் வெளிக்கு வரமுடியாதென்றும் காட்டப்படுகிறது.

(3) பிரகிருதியானது பிரளயகாலத்தில், ஜீவனுடைய குணமான ஜ்ஞாநத்தை மிகவும் சுருங்கும்படி செய்து அவனை அறிவில்லாததைப் போல் செய்கிறது.

(4) 'विकृती:' என்பதால், பிரகிருதியிலிருந்து உண்டான மஹத் முதலானவைகள் ஜீவனுக்கு உடம்பு முதலானவைகளாயிருந்து, அவனு டைய அறிவைக் குறைத்துப் பலவிதங்களான தொந்திரவுகளைச் செய் கின்றன என்று காட்டப்படுகிறது.

(5) விஷய போகங்களின் தோஷங்கள் மூலத்தில் சொல்லப் பட்டிருக்கின்றன.

(6) '' याथातथ्य'' என்பதால், தனக்கும், எம்பெருமானுக்கும் இருக்கும் உறவும், அதஞல் அவனுக்குக் கைங்கரியம் செய்வதாகிய பாக்கியத்தை அடையக்கூடியதான தனக்கு இயற்கையான இருப்பும் காட்டப்படுகிறது.

(7) '' यत् तत्'' என்பதால், முன் சொன்ன குற்றங்கள் பரமபதத்தில் ஒன்றுமில்லை யென்றும், எல்லா நல்ல விஷயங்களுமிருக்கின்றன என்றும் சாஸ்த்ரங்களில் சொல்லுகிற பிரஸித்தி காட்டப்படுகிறது.

(8) உடம்பைச் சிறையாகச் (ஜயிலாக) சொன்னதால், ராஜாவின் பிள்ளை சிறையில் இருப்பதுபோல், நித்தியஸூரிகளோடு கூட இருக்கத் தகுந்த தான் இந்த உடம்பிலிருக்கிருனென்றும், அதஞல், அவனுக்குக் கிடைக்கக்கூடிய கைங்கரியத்திற்குத் தடை உண்டாயிருக்கிறதென்றும், மோக்ஷதசையில் ஒரு சரீரமோ, பல சரீரங்களோ எடுத்துக்கொண்டு

இஷ்டப்படி ஸஞ்சரிப்பது இப்பொழுது முடியாதிருக்கிறது என்றும், சேஷியான எம்பெருமானுடைய விருத்தாந்தங்களை இப்போது அறிய முடியாதென்றும், இருக்கிற இடத்தினுடைய பல விதக்குற்றங்களினால் அதிக அருவறுப்பாயும் பொறுக்கமுடியாததாயும் இருக்கிறதென்றும் காட்டப்படுகிறது.

(9) இதனுல் முமுக்ஷு என்பவன் தன் ஸ்வரூபத்தைத் தெரிந்து பாபங்களைச் செய்யாமல் காம்ய கர்மங்களில் வெறுப்புள்ளவனுய், பரமபதத்திற்குப் போவதில் மிகுந்த ஆவலுள்ளவனுய் அவ்விடம் போவதற்கு உபாயத்தைச் செய்யத்துடிப்பன் என்று ஏற்படுகிறது. (18)

---

அவ:- ஒருவன் கீழ்ச் சொல்லியபடி முமுக்ஷுவாக ஆவதற்கு முக்கியமான காரணம் எம்பெருமானுடைய ஸஹஜகாருண்யமென்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறுர்:-

विषमधु बहिष्कुर्वन् धीरो बहिर्विषयात्मकं
परिमितरसस्वात्मप्राप्तिप्रयासपराङ्मुखः ।
निरवधिमहानंन्दब्रह्मानुभूतिकुतूहली
जगति भविता दैवात् कश्चिज्जिहासितसम्सृतिः ।। १९ ।।

(ப-ரை) जगति–உலகத்தில், कश्चित् धीरः–கலக்கமுடியாத மனதை உடைய ஒருவன், बहिर्विषयात्मकं–ஆத்மாவைக் காட்டிலும் வேருயிருக்கிற விஷயங்களாகிய, विषमधु–விஷத்தோடுகலந்த தேனை, बहिष्कुर्वन् – தள்ளிவிட்டு, परिमितरस–கொஞ்சமான ஸுகத்தை உடைய, स्वात्मप्राप्ति–தன்னை அறிந்து ஸுகப்படுவதில், அதாவது-கைவல்யமென்கிற அநுபவத்தை அடைவதில், प्रयासपराङ्मुखः–பிரயாஸத்தை விட்டவனுய், निरवधि–அளவில்லாத, महानन्द–மிகுந்த ஆநந்தத்தைக்கொடுக்கக் கூடிய, ब्रह्मानुभूति–எம்பெருமானுடைய அநுபவத்தில், कुतूहली–மிகுந்த ஆவலுள்ள வனுய், दैवात्–எம்பெருமானுடைய அநுக்கிரஹத்தினுல், जिहासितसंसृतिः– ஸம்ஸாரத்தை விடவேண்டுமென்று ஆசையுள்ளவனுய், भविता–ஆவன்.

(கருத்து) துக்கத்தோடு கலந்த விஷயஸுகங்களையும், இப்படித் துக்கத்துடன் கலக்காமல் ஆத்மாநுபவம் முழுவதும் ஸுகமாயிருந்தாலும், அது கொஞ்சமாயிருப்பதால் அதையும் தள்ளிவிட்டு, இவைகளுக்கு

எதிர்த் தட்டாயிருக்கிற, அதாவது-துக்கத்துடன் கலப்பில்லாமலும், அளவில்லாத தாயும் இருக்கிற எம்பெருமானுடைய அநுபவத்தில் மிகுந்த ஆவலுள்ளவனுய் ஸம்ஸாரத்தை விட்டு வெளிக்கிளம்ப ஒருவன் ஆசைப் படுத்துவதற்கு பிரதாந காரணம் எம்பெருமானுடைய அநுக்கிரஹமே.

குறிப்பு:- ஒரு மலையைக் கல்லி எலியைப் பிடிப்பது போலாகும் ஆத்மாநுபவத்திற்குப் பிரயாஸப்படுவது. (19)

---

## 8-வது அதிகாரிவிபாகாதிகாரம்

அவ:- இதில் முமுக்ஷுவான அதிகாரிகள் இருவர்களென்று காட்டுகிருர்:-

मुमुक्षुत्वे तुल्ये सति च मधुविद्यादिषु यथा
व्यवस्था सम्सिद्ध्यत्यधिकृतिविशेषेण विदुषाम् ।
विकल्प्येत न्यासे स्थितिरितरविद्यासु च तथा
नियत्या वैयात्यं नियमयितुमेवं प्रभवति ।। २० ।।

(ப-ரை) विदुषाम् - பிரம்மவித்யையைச் செய்யும் அதிகாரிகளுக்கு, मुमुक्षुत्वे- மோக்ஷம் வேண்டுமென்கிற ஆசையானது, तुल्ये सति च-ஒரே விதமாயிருக்க, अधिकृति विशेषेण-அதிகாரபேதத்தாலே, मधुविद्यादिषु-மதுவித்யை முதலானவைகளில், यथा-எப்படி, व्यवस्था-இவன் இதைச் செய்ய வேண்டியது, இன்னெருவன் வேறென்றைச் செய்யவேண்டியது என்கிற ஏற்பாடு, संसिद्ध्यति-கிடைக்கிறதோ, तथा- அப்படியே, न्यासे- பிரபத்தியிலும், इतरविद्यासु च- வேறு வித்யைகளிலும், स्थिति:- இருப் பானது विकल्प्येत-அதிகாரத்துக்குத் தகுந்தபடி வேறுபடுகிறது. नियत्या:- அதிருஷ்டத்தினுடைய, वैयात्यं- இஷ்டப்படி நடக்கும் ஸ்வபாவமானது, एवं- இப்படி नियमयितु- வியவஸ்தை பண்ணுவதற்கு, प्रभवति- சக்தியுள்ளதாக இருக்கிறது.

(கருத்து) பிரம்மவித்யைகளில் சிலவற்ருல் ஒருவன் வஸு முதலான தேவக் கூட்டங்களில் சேர்ந்து ஸுகத்தை அநுபவித்து, பிறகு மோக்ஷம் அடைகிருன். சிலவற்ருல் நேராகவே மோக்ஷம் பெறுகிருன். இரண்டு பேர்களுக்கும் மோக்ஷம் வேண்டுமென்கிற ஆசை ஒன்ருயிருக்கிறது. ஆனபோதிலும், அவர்களுடைய ஆசைக்குத் தகுந்தபடி இந்த பேதம்

ஏற்படுகிறது. ஆகையால் மோக்ஷத்தை மாத்திரம் வேண்டுகிறவன் தகரவித்யை முதலானவைகளைச் செய்யவேண்டியது. மோக்ஷத்தோடு வேறொன்றை ஆசைப்படுகிறவன் மதுவித்யை முதலானவைகளைச் செய்ய வேண்டியது. இப்படியே ஒரு முமுக்ஷு பிரபத்தியைச் செய்து அதினால் பக்தி செய்வதற்கு விரோதிகளைப் போக்கி பக்தி வழியாக மோக்ஷத்தை அடைகிறான். மற்றொருவன் பக்தியில்லாமலே மோக்ஷத்தை அடைகிறான். இருவருக்கும் மோக்ஷத்தில் ஆசை ஸமம். ஆனபோதிலும் ஒருவன் ப்ராரப்தம் என்கிற கர்மம் முழுவதும் போனபிறகு மோக்ஷத்தை ஆசைப் படுகிறான். மற்றொருவன் அவைகளும் போய் உடனேயோ அல்லது, இருக்கும் உடம்பு போனபோதோ மோக்ஷத்தை வேண்டுகிறான். ஆகை யால் அவர்கள் செய்யவேண்டிய உபாயங்கள் வெவ்வேறாக இருக்கின்றன. இப்படி வெவ்வேறான ஆசையிருப்பதையும், மற்றொருவனுக்கு அப்படி இல்லாமையையும் செய்கிறது. அவரவர்களுடைய அதிருஷ்டம். அதை ஏன் இப்படி செய்கிறாய் என்று கேட்க ஒருவனுக்கும் அதிகாரமில்லை. (20)

---

அவ:- கீழ்ச் சொன்ன இரண்டு அதிகாரிகளுக்கு எந்த விஷயத்தில் ஸாம்மியமும், எந்த விஷயத்தில் வேறுபாடும் இருக்கிறதென்று கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

प्रपन्नादन्येषां न दिशति मुकुन्दो निजपदं
प्रपन्नश्च द्वेधा सुचरितपरीपाकभिदया ।
विलम्बेन प्राप्तिर्भजनसुखमेकस्य विपुलं
परस्याशु प्राप्तिः परिमितरसा जीवितदशा ।। २१ ।।

(ப-ரை) मुकुन्दः- மோக்ஷங்கொடுக்கிற எம்பெருமான், प्रपन्नात् अन्येषाम्- பிரபத்தி பண்ணினவனைக் காட்டிலும் வேறானவர்களுக்கு, निजपदं- தன்னுடைய இடத்தை, न दिशति-கொடுக்கிறதில்லை. प्रपन्नश्च- பிரபந்நர்களோ, सुचरितपरीपाकभिदया-அவர்கள் செய்த புண்ணியங்களின் பலன்களின் வேறுபாட்டாலே, द्वेधा- இரண்டு வகைப்படுவர்கள், एकस्य- அவர்களுள் ஒருவனுக்கு, विलम्बेन-தாமதித்து, प्राप्तिः-அடைய வேண்டியது வரும். भजनसुखं- எம்பெருமானைத் தியாநம் பண்ணுகிற ஸுகமானது, विपुलम्- அதிகம். परस्य-மற்றொருவனுக்கு, आशुप्राप्तिः-

சீக்கிரம் பலன் கிடைக்கிறது. ஆனால், जीवितदशा- இங்கே இருக்கும் காலமானது, परिमितरसा- குறைந்த ஸுகத்தை உடைத்தாயிருக்கும்.

(கருத்து) பக்தன் பிரபந்நன் என்கிற இரண்டு அதிகாரிகளும் பிரபத்தி செய்தே மோக்ஷத்தை அடையவேண்டியது. இந்த விஷயம் இருவருக்கும் ஸமம். பிரபந்நனைத் தவிர, வேறொருவனுக்கும் எம்பெருமான் மோக்ஷத்தைக் கொடுக்கிறதில்லை. ஒருவன் பக்தனுகவும், மற்றொருவன் பிரபந்நனாகவும் ஆவதற்குக் காரணம் அவனவன் செய்த புண்ணியத்தின் பலன். ஆனால், மோக்ஷம் அடைவதில் பக்தனுக்குத் தாமதம் உண்டு, பிரபந்நனுக்கு அது கிடையாது. பிரபந்நன் உடனே இந்த சரீரத்தை விடவேண்டும் என்று ஆசைப்பட்டால், எம்பெருமானுடைய கைங்கரியம் உடனே கிடைக்கும். இங்கே கொஞ்ச காலம் இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிற பிரபந்நனுக்குக் கைங்கரியம் உடனே ஆரம்பித்தபோதிலும், அதினாலுண்டாகும் ஆநந்தமானது கொஞ்சமாயிருக்கும். பக்தனுக்கோ எம்பெருமானைத் தியாநம் பண்ணுவதில் மிகுந்த ஸுகமுண்டு. (21)

---

## 9-வது உபாயவிபாகாதிகாரம்

அவ:- உபாயமானது இருவகைப்படுமென்றும், அவைகளுள் பலனைக் கொடுப்பதாலே, எம்பெருமானும் அநுக்கிரஹம் பண்ண வேண்டும் என்கிற எண்ணத்தை எம்பெருமானுக்கு உண்டுபண்ணுவதால்- பக்தியும் பிரபத்தியும் உபாயங்களென்றும், எம்பெருமானே முக்கியமான உபாயமென்றும் முதல் சுலோகத்தாலே அருளிச் செய்கிறார்:-

उपाय: स्वप्राप्तेरुपनिषदधीत: स भगवान्
प्रसत्तयै तस्योक्ते प्रपदननिदिध्यासनगती ।
तदारोह: पुम्स: सुकृतपरिपाकेण महता
निदानं तत्राऽपि स्वयमखिलनिर्माणनिपुण: ।। २२ ।।

(ப-ரை) स: भगवान्-அந்த பகவான், स्व प्राप्ते:- தன்னை ஒருவன் அடைவதற்கு, उपाय:- உபாயமாக, उपनिषदधीत:-உபநிஷத்துக்களால் சொல்லப்பட்டிருக்கிறான். प्रपदननिदिध्यासनगती-பிரபத்தி பத்தி என்கிற ஜ்ஞாநங்கள், तस्य- அந்த எம்பெருமானுடைய, प्रसत्यै-பிரஸாதமுண்டாவதற்காக, उक्ते- உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. पुंस:-

ஒருவனுடைய, (ஒருவன்) तदारोहः-அந்த பத்தி பிரபத்திகளைச் செய்வ தானது, महता-பெரியதான, सुकृतपरिपाकेण- புண்ணியத்தின் பலத்தி னாலே, உண்டாகிறது. तत्र अपि- அந்த உபாயங்களைச் செய்வதிலும், अखिलनिर्माणनिपुणः-எல்லாவற்றையும் செய்ய ஸமர்த்தனான எம்பெருமான், स्वयं-தானே, निदानम् - காரணம்.

(கருத்து) முமுக்ஷுவுக்குக் கேட்கும் பலனைக் கொடுப்பதாலே எம்பெருமானை உபநிஷத்துக்கள் உபாயம் என்று சொல்லுகின்றன. முமுக்ஷு அநாதிகாலமாக எம்பெருமான் சொன்னவைகளைச் செய்யாம லும், செய்ய வேண்டாமென்பவைகளைச் செய்ததாலும், அவனைத் தண்டிக்கவேண்டும் என்கிற எண்ணம் எம்பெருமானுக்கு உண்டாயிருக் கிறது. அந்த எண்ணத்தை மாற்றி, முமுக்ஷுவுக்கு அநுக்கிரஹஞ் செய்யவேண்டும் என்கிற எண்ணமுண்டாவதற்காக பக்தியையோ, பிரபத்தியையோ முமுக்ஷு செய்யவேண்டுமென்று உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. ஆகையால் அவைகளும் உபாயங்கள். அவை களிரண்டும் ஜ்ஞாநவிசேஷங்கள். இவன் முன்னால் எண்ணமில்லாமல் செய்த ஒரு புண்ணியத்தினால் சொன்ன உபாயங்களைச் செய்கிறான். அப்படி அவனைச் செய்யும்படி பண்ணுவதும் எம்பெருமான் தான்.

குறிப்பு:- (1) सः என்பதால், எம்பெருமான் மிகுந்த கருணையு ள்ளவ னென்றும், அவன் எல்லாருக்கும் சேஷி என்றும், அவன் ஒருவனை ரக்ஷிக்கவேண்டுமென்று எண்ணினால், அவனை ஒருவனும் தடுக்க முடியாதென்றும் உபநிஷத்துக்களில் சொல்லுகிற பொருள் காட்டப் படுகிறது. கருணையினாலேயே ஒருவனை ரக்ஷிக்கிறான்; சேஷியான தாலே ரக்ஷிக்கவேண்டியவன்; ஸ்வதந்திரனாகையாலே ரக்ஷிக்க சக்தன்.

(2) உபநிஷத்துக்களில் ஜ்ஞாநத்தாலேயே மோக்ஷம் வரும் என்று சொல்லுகிறபடியினாலேயும், பத்தி ஜ்ஞாநமாயிருப்பதாலேயும், அதன் ஸ்தாநத்தில் விதிக்கப்பட்ட பிரபத்தியும் ஜ்ஞாநமாகவே இருக்க வேண்டியது. இதைக் காட்டுவதற்கு, 'गती' என்கிற சொல்லைச் சுலோகத் தில் சேர்த்திருக்கிறது. இந்தச் சொல்லின் பகுதி (धातु)க்கு ஜ்ஞாநம் என்கிற அர்த்தமுண்டு.

(3) இங்கு புண்ணியமென்று சொன்னது ஒருவன் அறியாமலும் புண்ணியம் செய்யவேண்டுமென்கிற எண்ணமில்லாமலும் செய்கிற ஒரு வேலை. கீரைப்பாத்தியில் ஒரு துளஸிச் செடி இருப்பதை ஒருவன் அறியாமலும், அதுக்கு ஜலம் பாய்ச்ச வேண்டுமென்கிற

எண்ணமில்லாமலும் கீரைப்பாத்திக்கு ஜலம் பாய்ச்சுகிறான். அது துளஸிக்கும் பாய்கிறது. இதை எம்பெருமான் ஒரு புண்ணியமாகக் கணக்கிடுகிறான். இது யாதிருச்சிக ஸுகிருதம் என்று சொல்லப்படுகிறது.

(4) ஒருவன் பக்தியையோ, பிரபத்தியையோ செய்தபோதிலும் அதை எம்பெருமானே செய்விக்கிறான். யாதிருச்சிகமான புண்ணியம் பலன் கொடுக்கும்போது, அவனைக் கடாக்ஷித்து, படிப்படியாக ஒரு ஆசாரிய னிடம் கொண்டுவந்து விட்டு, அவனிடம் ஸ்வரூபஜ்ஞாநம் முதலியவை களைத் தெரிந்து கொண்டு பக்தி பிரபத்திகளைச் செய்யும்படி செய்கிறான். அந்தக் காரணத்தினாலேயும், பலன் கொடுக்கிறவன் எம்பெருமானே யாகையாலேயும் அவனே முக்கியமான உபாயம்.

(5) பக்தி பிரபத்திகள் செய்வதற்கு முன்பே எம்பெருமான் இருப்பதாலே அவன் ஸித்தமான உபாயம். பக்தியும் பிரபத்தியும் செய்யப்படுவதால் ஸாத்யங்களான உபாயங்கள். (22)

---

அவ:- ஸாத்யங்களான உபாயங்களில் சிலவற்றுக்கு ஒரே ஆகார மிருக்கிறது என்றும், பிரபத்திக்கு இரண்டு ஆகாரங்களிருக்கின்றன என்றும், அதையே புத்திமான் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

कर्म ज्ञानमुपासनं च शरणव्रज्येति चावस्थितान्
सन्मार्गानपवर्गसाधनविधौ सद्वारकाद्वारकान् ।
एकद्व्याकृतियोगसम्भृतपृथग्भावानुभावानिमान्
सम्यक् प्रेक्ष्य शरण्यसारथिगिरामन्ते रमन्ते बुधाः ।। २३ ।।

(ப-ரை) कर्म- கர்மயோகம், ज्ञानम् - ஜ்ஞாநயோகம், उपासनं च- பக்தி என்றும், शरणव्रज्या इति च -பிரபத்தி என்றும், अपवर्गसाधनविधौ- மோக்ஷத்துக்கு உபாயமாக விதிப்பதில், अवस्थितान् -விஷயங்களாய் இருப்பவைகளும், सद्वारक- ஒன்றை நடுவில் வைத்துக்கொண்டும், अद्वारकान् -ஒன்றை நடுவில் வைத்துக் கொள்ளாமலிருப்பவைகளும், एकद्व्याकृतियोग-ஒரு ஆகாரமுள்ளதாயும், இரண்டு ஆகாரமுள்ளதாயு மிருப்பதால், सम्भृत- உண்டு பண்ணப்பட்ட, पृथग्भाव- வேறுபாட்டை உடைய தென்கிற, अनुभावान्- பெருமையை உடையவைகளுமான, इमान्

सन्मार्गान् -இந்த நல்ல உபாயங்களை, बुधा:- ஸாராஸாரத்தை அறியக் கூடியவர்கள், सम्यक् प्रेक्ष्य- நன்றாகப்பார்த்து, शरण्यसारथि- சரண்யனான அர்ஜுநனுக்கு ஸாரத்யம் பண்ணின எம்பெருமானுடைய, गिरामन्ते- உபதேச வார்த்தைகளில் கடைசியான சரம ஸ்லோகத்தில், (அதில் சொல்லியிருக்கிறபிரபத்தியில்) रमन्ते-பிரீதியுள்ளவர்களாக இருக்கிறார்கள்.

(கருத்து) கர்மயோகம் முதலானவைகளும், பிரபத்தியும், மோக்ஷத்தை உண்டுபண்ணுவதற்கு உபாயங்கள். அவைகளில் கர்ம யோகமும், ஜ்ஞாநயோகமும் பக்தியின் வழியாகப் பலனைக் கொடுக்கும். பிரபத்தியானது பக்திவழியாகவும், பக்தி இல்லாமலும் பலனைக் கொடுக்கும். ஆகையாலே கர்மயோகத்திற்கும் ஜ்ஞாந யோகத்திற்கும் ஒரே ஆகாரமுண்டு. பக்திக்கும் அப்படியே. அது பலனை நேராகக் கொடுத்த போதிலும், அது வேறொன்றுக்கு ஸாதநமாக இருப்பதில்லை. பிரபத் திக்கோ கீழ்ச் சொன்ன இரண்டு ஆகாரங்களுமுண்டு. இதினுடைய இந்தப் பெருமையைக்கண்டு தெரிந்தவர்கள் பிரபத்தியையே கொண்டாடு கிறார்கள்.

குறிப்பு:- (1) ''उपासनं च '' என்கிற சகாரத்தினால் கர்மயோகம், ஜ்ஞாந யோகம், பக்தியோகம் ஒரு கூறு என்றும், ' शरणव्रज्या इति च ' என்பதால், அது வேறு கூறு என்றும், காட்டப்படுகிறது.

(2) ''सन्मार्गान्'' என்பதால், பக்தியும், பிரபத்தியும் ஸ்வரூப விருத்தங்களென்று சிலர் சொல்லுவது துர்வாதங்கள் என்று காட்டப் படுகிறது.

(3) பிரபத்தி என்று சொல்லாமல், ''गिरामन्ते'' என்று சரம சுலோகத்தைச் சொல்லுவதால், பிரபத்திக்கு இரண்டு ஆகாரங்களிருக் கின்றன என்பதற்கு, சரமசுலோகமே பிரமாணம் என்று காட்டப்படுகிறது. அதின் பாஷியத்தில் இரண்டாவது யோஜனையில் அது பக்திக்கு அங்க மாயிருப்பது சொல்லப்படுகிறது, அது நேராகவே உபாயமென்பது பிரஸித்தமானது. கத்யத்திலும் காட்டப் பட்டிருக்கிறது.

(4) கர்மயோகத்தையும் ஜ்ஞாநயோகத்தையும் பண்ணுகிறவர் களுக்கு மேலே பக்தியோகம் வேண்டும். பக்தியோகம் பண்ணுகிறவனுக்கு அது உண்டாவதற்கு கர்மயோகமும், ஜ்ஞாநயோகமும் வேண்டும். பிரபத்திக்கு நேராகவும் பலன் கிடைக்கும். தனக்கு உதவியாக வேறொன் றையும் வேண்டுகிறதில்லை. இது மற்றவைகளுக்கு இல்லாமல்

பிரபத்திக்கு மாத்திரமுள்ள பெருமை. ஆகையால் தான் தெரிந்தவர்கள் பிரபத்தியைக் கொண்டாடுகிறார்கள், பக்தி ஸ்வரூபத்துக்கு விருத்த மென்று எண்ணி அன்று. (23)

---

## 10-வது பிரபத்தியோக்யாதிகாரம்

அவ:- அதிகாரத்தின் லக்ஷணத்தைச் சொல்லி, பிரபத்தியில் எல்லாருக்கும் அதிகாரம் இருக்கிறதென்று முதல் சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

अर्थित्वेन समर्थता त्रिकतनुः सम्पिण्डिताधिक्रिया
सा चाष्टाङ्गषडङ्गयोगनियतावस्था व्यवस्थापिता ।
श्रौती सर्वशरण्यता भगवतः स्मृत्याऽपि सत्यापिता
सत्यादिष्विव नैगमेष्वधिकृतिः सर्वास्पदे सत्पथ ॥ २४ ॥

(ப-ரை) अर्थित्वेन-ஒருபலனில்ஆசையுள்ளவனாய் இருப்பதுடன், सम्पिण्डिता-ஒன்றாகச் சேர்ந்திருக்கிற, त्रिकतनुः-மூன்றுவிதமான ஸ்வ ரூபத்தை வைத்துக்கொண்டிருக்கிற, समर्थता-ஸாமர்த்தியம், अधिक्रिया-அந்தந்தப் பலனுக்கு வேண்டிய உபாயத்தைச் செய்ய அதிகாரம். सा च-அதுவும், अष्टाङ्ग-ஏழு அங்கங்களோடுகூடிய பக்திக்கும், षडङ्गयोग- ஐந்து அங்கங்களோடு கூடினபிரபத்திக்கும், नियतावस्था- அததற்கே உள்ள அவஸ்தையை உடையதாய், व्यवस्थापिता-இதற்கு இது அதிகாரம், இதற்கு இது அதிகாரமென்று பிரித்து சொல்லப்பட்டிருக்கிறது. भगवतः-எம்பெருமானுடைய, सर्वशरण्यता- எல்லாராலும் பிரபத்தி செய்யத்த குந்தவனுயிருப்பதானது श्रौती-வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. स्मृत्याऽपि- ஸ்மிருதிகளாலேயும், सत्यापिता-உறுதி செய்யப்படுகிறது. सत्यादिषु- உண்மையைப் பேசு என்பதுமுதலான, नैगमेषु इव- வேதத்தில் சொல்லப்பட்ட தர்மங்களில் போல, सर्वास्पदे-எல்லாருக்கும் தகுதியான, सत्पथे- நல்ல மார்க்கத்தில்; அதாவது பிரபத்தியில், अधिकृतिः- அதிகாரம் உண்டு.

(கருத்து) ஒரு பலனுக்கு உபாயமாக ஒரு வேலையைச் செய்வதற்கு அதிகாரம்-பலனில் ஆசையும், அந்த உபாயத்தைச் செய்வதில் மூன்று

பிரகாரங்களை உடைய ஸாமர்த்தியமும். மூன்று பிரகாரங்களாவன- அந்த உபாயத்தை இன்னபடி செய்கிறது என்று உள்ளபடி அறிவதும், அதைச் செய்யத்திறமையும், அதைச் செய்வதற்கு சாஸ்திரம் இடம் கொடுப்பதும். இவ்விதமான அதிகாரம் பக்திக்கு வேறு, பிரபத்திக்கு வேறு. பக்தி செய்ய பிராம்மணன் முதலான மூன்று வர்ணத்தாருக்குத் தான் சாஸ்திரம் இடங் கொடுக்கிறது. மற்றவர்களுக்கு அதில் இடமில்லை. பிரபத்தியை எல்லாரும் செய்வதற்கு சாஸ்திரம் அநுமதி கொடுக்கிறது. வேதமானது, எம்பெருமான் எல்லாருக்கும் உபாயம்; பிரபத்தியால் அடையத் தகுந்தவன் என்று சொல்லுகிறது. அப்படியே எல்லா உலகங்களுக்கும் எம்பெருமான் சரண்யன் என்று ராமாயணம் முதலான ஸ்மிருதிகளாலும் உறுதி செய்யப் படுகிறது. பிரபத்தியானது நியாஸ வித்யைஎன்று வேதம் அதை விதித்தபோதிலும் சொன்ன பிரமாணங்களால் அது எல்லாருக்கும் பொதுவென்று ஒப்புக் கொள்ளவேண்டியது. உதாரணம்- உண்மையைப் பேசு, தாநம் செய் என்று வேதம் விதித்த போதிலும், அந்த தர்மத்தை எல்லாரும் அநுஷ்டிக்க வேண்டியது. அதுபோல இங்கும்.

குறிப்பு:- (1) பிரம்மஸூத்திரத்தில் பக்தியானது பிராம்மணன் முதலான மூன்று வர்ணத்தார் தவிர, வேறு ஒருவராலும் செய்யத் தகுந்தது அன்று என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அவ்விதமான தீர்மானம் பிரபத்தி விஷயத்திலில்லை.

(2) ஸாமர்த்தியத்தின் மூன்று பிரகாரங்களும் சேர்ந்தே இருக்கவேண்டியது. அவைகளில் ஏதாவதொன்று இல்லாமல் போனால் பக்தி செய்ய அதிகாரமில்லை.

(3) ''सत्पथे''என்று பொதுவாய்ச் சொன்னதால், எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லுவதும், அர்ச்சிப்பதும், நமஸ்காரம் பண்ணுவதும் எல்லாருக்கும் தகுந்தவைகள் என்று காட்டப்படுகிறது. (24)

---

அவ:- முதல் சுலோகத்தில் பிரபத்திக்கு அதிகாரம் வேறு என்று பொதுவாய்ச் சொன்னதைக் கடைசி சுலோகத்தில் விரிவாய் அருளிச் செய்கிறார்:-

भक्त्यादौ शक्त्यभाव: प्रमितिरहितता शास्त्रत: पर्युदास:

कालक्षेपाक्षमत्वं मिवति नियतिवशादापतद्भिश्चतुर्भि: ।

एकद्वित्र्यादियोगव्यतिभिदुरनिजाधिक्रियाः संश्रयन्ते
सन्तः श्रीशंस्वतन्त्रप्रपदनविधिना मुक्तये निर्विशङ्काः ।। २५ ।।

(ப-ரை) **भक्त्यादौ**- பக்தியிலும், அதற்கு உதவியான கர்ம யோகத்திலும், ஜ்ஞாநயோகத்திலும், **शक्त्यभावः**- சக்தி இல்லாமை, **प्रमितिरहितता**- அவைகளைச் செய்யும்வழி அறியாமை, **शास्त्रतः पर्युदासः**- அவைகளைச் செய்யத்தகாதவன் என்று சாஸ்திரத்தினால் விலக்கப் படுவது, **कालक्षेपाक्षमत्वं**- அவைகளைச் செய்வதில் ஏற்படும் கால தாமதத்தைப் பொறுக்காமை, **इति**- இப்படி, **नियतिवशाद्**-அதிருஷ்ட வசத்தினால், **आपतद्भिः**-வருகிற, **चतुर्भिः**-நான்கினாலும், **एकद्वित्र्यादियोग**- அவைகளில் ஒன்றிருப்பதாலும், இரண்டிருப்பதாலும், மூன்றிருப் பதாலும், நாலு மிருப்பதாலும், **व्यतिभिदुर**-அநேகவிதமாய் நன்றாய் பிரிந்திருக்கிற, **निजाधिक्रियाः**- தங்களுக்கே உள்ள அதிகாரங்களை உடையவர்களான, **सन्तः**பெரியோர்கள், **श्रीशं**-லக்ஷ்மீபதியை, **स्वतन्त्र प्रपदनविधिना**-பக்தியை எதிர்பார்க்காத பிரபத்தி செய்வதால், **मुक्तये**- மோக்ஷத்தைப் பெறுவதற்காக, **निर्विशङ्काः**-ஸந்தேஹமில்லாமல், **संश्रयन्ते**- அடைகிறார்கள்.

(கருத்து) பக்தியைச் செய்யத்தகாமையே பிரபத்திக்கு அதிகாரம். அந்தத் தகாமையானது அதைச் செய்யச் சக்தி இல்லாமையாலும், அதைச் செய்யும் வழியை அறியாமையாலும், அதைச்செய்யத் தகுந்தவன் என்று சாஸ்திரம் ஒப்புக் கொள்ளாமையாலும், பலன் சீக்கிரம் கிடைக்க வேண்டுமென்கிற ஆசையாலும் வரும். இவைகளில் ஒன்றிருந்தாலும், இரண்டிருந்தாலும், மூன்றிருந்தாலும், நாலுமிருந்தாலும், பிரபத்தியைச் செய்ய அதிகாரமுண்டு. இப்படித் தங்களுடைய அதிகாரத்தைத் தெரிந்த பெரியோர்கள் பிரபத்தியையே செய்து எம்பெருமானை அடைகிறார்கள்.

குறிப்பு:- (1) கீழ்ச்சொன்ன நான்கில், ஒன்றே இருக்கிறவர் நாலு பேர்கள்; இரண்டு இருப்பவர்கள் ஆறு பேர்கள்; மூன்று இருப்பவர்கள் நாலு பேர்கள்; நாலுமிருப்பவர் ஒருவர். ஆகப் பதினைந்து அதிகாரிகள்.

(2) ''निर्विशङ्काः'' என்பதற்கு பிரபத்தியில் நமக்கு அதிகாரமிருக்கிறதோ இல்லையோ என்கிற ஸந்தேஹமில்லாதவர்கள் என்று பொருள்.

(3) இப்படி பக்தியில் அதிகாரமில்லாதவனை 'அகிஞ்சநன்' என்று சொல்லுகிறது. அகிஞ்சநன் என்றால், ஒன்றுமில்லாத ஏழை. பக்தி யோகமே மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லியிருப்பதாலே, அதைச்

செய்யத் தகாதவன் ஒரு உபாயமுமில்லாத ஏழைதான். இதனால் பக்தியோகத்திற்கும் அதிகாரம் இன்னதென்று காட்டப் பட்டதாயிற்று.

(4) ''सन्तस्संश्रयन्ते'' என்று நிகழ்காலமாகச் சொன்னதாலே இது யுக்தியைக் கொண்டே சொல்லப்பட்டதன்று; பெரியோர்களும் இதை இப்படியே அநுஷ்டித்து வருகிறார்கள் என்று காட்டப்படுகிறது. (25)

---

## 11-வது பரிகரவிபாகாதிகாரம்

इयानित्थम्भूत: सकृदयमवश्यम्भवनवान्
दयादिव्याम्भोधौ जगदखिलमन्तर्यमयति ।
भवध्वंसोद्युक्ते भगवति भरन्यासवपुष:
प्रपत्तेरादिष्ट: परिकरविशेष: श्रुतिमुखै: ।। २६ ।।

அவ:- பக்தியைப்போல பிரபத்திக்கும் அங்கங்களுண்டு என்றும், அவைகள் பக்தியின் அங்கங்களைக் காட்டிலும் வேறு என்றும் காட்டுவதற்காக அங்கங்கள் விஷயமாக முதல் சுலோகத்தை அருளிச் செய்கிறார்:-

(ப-ரை) दयादिव्याम्भोधौ-தயைக்கு பெரிய ஸமுத்திரமாகவும், अखिलं जगत्-எல்லா உலகத்தையும், अन्तर्यमयति-ஆத்மாவாக உள்ளிருந்து ஏவுகிறவனாகவும், भवध्वंसोद्युक्ते ஸம்ஸாரத்தை நாசஞ் செய்வதற்கு ஸித்தனாகவுமிருக்கிற, भगवति-எம்பெருமானிடத்தில், भरन्यासवपुष:-பரத்தைக் கொடுப்பதையே ஸ்வரூபமாக உடைய, प्रपत्ते:-பிரபத்தியினுடைய, परिकरविशेष:-அங்கங்கள், अयं-இவைகள் என்றும், इयान् -இத்தனை என்றும், इत्थम्भूत:- இன்னபடி இருக்கின்றன என்றும், सकृत्-ஒரு தடவை, (பிரபத்தி பண்ணுகிற காலத்தில் மாத்திரம்) இருக்க வேண்டும் என்றும், अवश्यम्भवनवान्- பிரபத்தியில் கட்டாயம் இருக்க வேண்டுமென்றும், श्रुतिमुखै:- வேதம் முதலானவைகளாலே, आदिष्ट:-விதிக்கப் பட்டிருக்கின்றன.

குறிப்பு:- (1) அநாதிகாலமாய் குற்றம் பண்ணினவன் எம்பெருமானிடம் போகமுடியுமா? கிட்டப்போனாலும், இவன் பரத்தை எம்பெருமான் ஒப்புக்கொள்ளுவனோ? ஆகையால் பிரபத்திக்கே

இடமில்லையே; ஆகையால், அதன் அங்கங்களைப் பற்றி விசாரம் பண்ணுவானேன் என்கிற கேள்விக்குப் பதிலாக பிரபந்நனுடைய பரத்தை ஒப்புக்கொள்ள எம்பெருமான் ஸித்தமாயிருக்கிறான் என்று காட்டுவதற்காக 'भवध्वंसोद्युक्ते' என்கிற விசேஷணம். எம்பெருமான் ஜீவனை இரக்ஷிப்பதற் காக எப்பொது இடம் அகப்படப்போகிறது என்று பார்த்துக்கொண்டிருக் கிறான். அவனுடைய யாதிருச்சிக ஸுகிருதத்தை வியாஜமாகக் கொண்டு அவன் ஸம்ஸாரத்தைப் போக்கி அவனை ரக்ஷிக்கிறான். ஆகையால் பிரபத்தியைச் செய்யலாம். அதின் அங்கங்களையும் பற்றி விசாரம் செய்யலாம்.

(2) எதற்காக எம்பெருமான் ஜீவனை ரக்ஷிக்க இப்படி இடம் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதற்குக் காரணத்தை "दयादिव्याम्भोधौ" என்பது சொல்லுகிறது. அவன் ஸ்வபாவமாய் கருணை உள்ளவன். அதற்குக் கடல்போல் எல்லை இல்லை; ஒரு போதும் குறைவதுமில்லை; வற்று கிறதுமில்லை.

(3) எம்பெருமான் ஒரு வியாஜத்தினால் நேரே ஜீவனை ரக்ஷிப்ப தில்லை. அவனை ஆசாரியனிடம் கொண்டு சேர்த்து ஸ்வரூபத்தைத் தெரிவித்து, வைராக்கியத்தையும், மோக்ஷத்தில் ஆசையையும் உண்டு பண்ணி, கடைசியில் பிரபத்தியைச் செய்வித்து இரக்ஷிக்கிறான். இவை எல்லாவற்றையும் அந்தர்யாமியாக இருந்து செய்கிறான்.

(4) பிரபத்திக்கு அங்கங்கள் வேண்டியதில்லை என்று சில இடங்களில் சொல்லுவதற்கு, விதிக்கப்பட்ட அங்கங்களைக் காட்டிலும் வேறு அங்கங்கள் வேண்டியதில்லை என்று கருத்து, இதைக் காண்பிப் பதற்காக "परिकरविशेष:" என்று சொல்லியிருக்கிறது. (26)

---

அவ:- பிரபத்தியின் அங்கங்கள் இன்னவைகள் என்பதையும், அவைகளின் உபயோகங்களையும் விரிவாய்க் கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

प्रख्यात: पञ्चषाङ्ग: सकृदिति भगवच्छासनैरेष योग:
 तत्र द्वाभ्यामपायाद्विरतिरनितरोपायतैकेन बोध्या ।
एकेन स्वान्तदार्ढ्यं निजभरविषयेऽन्येन तत्साध्यतेच्छा
 तत्त्वज्ञानप्रयुक्ता त्विह सपरिकरे तादधीन्यादिबुद्धि: ।। २७ ।।

(ப-ரை) एष योग:- இந்த பிரபத்தி என்கிற உபாயமானது, पञ्चषाङ्गः- ஐந்து அங்கங்களுள்ளதென்றும், ஆறு அங்கங்களுள்ளது என்றும், सकृदिति-அது ஒரே தடவை செய்யப்பட வேண்டியது என்றும், भगवच्छासनैः-பாஞ்சராத்திரங்களால், प्रख्यातः-நன்றாய் சொல்லப்பட்டிருக் கிறது. तत्र-அவைகளில், द्वाभ्याम् -(எம்பெருமானுக்கு அநுகூலனாயிருக் கிறேன் என்கிற ஸங்கல்பமும், பிரதிகூலனா யிருப்பதை விடுவதும் -ஆகிய) இரண்டால், अपायात् विरतिः- எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறி நடப்பதிலிருந்து ஒழிவதும், एकेन-ஒன்றாலே, अनितरोपायता- மோக்ஷத்திற்கு வேறு உபாயமில்லாமலிருப்பதும், एकेन - வேறொன்றாலே, स्वान्तदार्ढ्यम्-தன் மனது உறுதியாயிருப்பதும், अन्येन-வேறொன்றாலே, निजभरविषये-தன்னுடைய பரத்தை உத்தேசித்து, तत्साध्यतेच्छा- ஜீவன் வேண்டும் பலனை நான் கொடுக்க வேண்டு மென்கிற எம்பெருமானு டைய இச்சையும், बोध्या-காட்டப் படுகின்றன, सपरिकरे इह-அங்கங் களோடு கூடிய இந்தப் பிரபத்தியில், तादधीन्यादि बुद्धिः-இது எம்பெரு மானாலே செய்யப் படுகிறது என்பது முதலான எண்ணமோ, तत्त्वज्ञानप्रयुक्ता-தத்துவங்களை அறிவதால் வருவது.

(கருத்து) பிரபத்திக்கு அங்கங்கள் ஐந்து, மோக்ஷத்திற்காகச் செய்யும்போது ஸாத்துவிகத் தியாகத்தையும் சேர்த்து அங்கங்கள் ஆறு ஆகின்றன. இவைகள் பிரபத்தியைச் செய்யும்போது மாத்திரம் இருக்க வேண்டியது. அவைகளாவன:- (1) எம்பெருமானுக்கு அநுகூலனா யிருப்பேன் என்று எண்ணுவது (2) பிரதிகூலனாயிருப்பதை விடுவது; (3) வேறு உபாயமில்லாமல் தான் வருத்தப்படுவதைத் தெரிவிப்பது; (4) தன்னை எம்பெருமான் கட்டாயம் இரக்ஷிப்பன் என்று திருடமான நம்பிக்கை; (5) இரக்ஷிக்கவேண்டும் என்று எம்பெருமானைக் கேட்பது. இவைகளின் பிரயோஜநங்கள்- முதலிரண்டு அங்கங்களால் எம்பெருமா னுடைய ஆஜ்ஞையை மீறாமலிருப்பது. மூன்றாவதால் தன்னுடைய வருத்தப்படுகிற இருப்பைப் பார்த்து எம்பெருமானுக்கு இரக்கம் மேலிடுவது. பிறகு வேறு உபாயத்தைச் செய்யாமை, நான்காவதால் எம்பெருமானிடம் கூசாமல் தன் பரத்தை ஒப்புவிப்பதும், பிறகு அதைப் பற்றி விசாரப்படாமலிருப்பதும். ஐந்தாவதால்- எம்பெருமானுக்கு இவனை இரக்ஷிக்கும்படியாக எண்ணம் உண்டாவது. செய்யும் பிரபத்தி யானது எம்பெருமானாலேயே செய்யப்படுகிறதென்றும், அதில் பலன்

அவனுடையதென்றும், அதுவும் அவனுடைய வேலை என்றும், அதுவும் உபாயமன்று, எம்பெருமானே பிரதாநமான உபாயம் என்றும் முமுக்ஷு எண்ணவேண்டியது. இந்த எண்ணத்துக்கு ஸாத்துவிகத் தியாகம் என்று பெயர். இது ஒருவன் தன் ஸ்வரூபத்தை அறிவதால் ஏற்படும்.

குறிப்பு:-(1) ஸாத்துவிகத் தியாகமானது சாஸ்திரத்தினால் சொல்லப் பட்ட எந்த கர்மத்துக்கும் வேண்டியது. ஆகையால் அது மோக்ஷத்திற் காகச் செய்யும் பிரபத்தியில் வரும். மற்ற பிரபத்திகளில் வராது. இதைக் காட்டு வதற்காக "து" என்கிற சொல் சுலோகத்தில் சேர்த்திருக்கிறது.

(2) அங்கியான பிரபத்தியைச் செய்யும்போது அது எப்படி வேண்டியதோ அப்படியே அங்கங்களைச் செய்யும்போதும் அது வேண்டியது. (27)

---

## 12-வது ஸாங்கப் பிரபதநாதிகாரம்

அவ:- பிரபத்தி இன்னதென்று முதல் சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

> अभीष्टे दु:साधे स्वत इतरतो वा क्वचन तद्-
> भरन्यासं याञ्चान्वितमभिवदन्ति प्रपदनम् ।
> इत: पश्चादस्मद्यतननिरपेक्षेण भवता
> समर्थ्योऽसावर्थस्त्विति मतिविशेषं तदविदु: ।। २८ ।।

(ப-ரை) अभीष्टे-இஷ்டமான பலனானது, स्वत: इतरतो वा-தன்னாலும் வேறு உபாயத்தாலும், दु:साधे- ஸம்பாதிக்க முடியாதிருக்கையில், क्वचन- ஒருவனிடத்தில், याञ्चान्वितम्-கேட்டுக்கொள்ளுவதோடு கூடின, तद्भरन्यासं-அதின் பரத்தைக் கொடுப்பதை, प्रपदनम्-பிரபத்தி என்று, अभिवदन्ति-சொல்லுகிறார்கள். इत:पश्चाद्-இந்த க்ஷணத்திற்குமேலே, भवता-தேவரீராலே, अस्मद्यतननिरपेक्षेण- என்னுடைய பிரயத்திநத்தை எதிர் பார்க்காதவராய், असौ अर्थ: तु - நான் வேண்டும் இந்தப் பிரயோஜநமானது, समर्थ्य:-வேலை செய்து முடித்து வைக்கத்தகுந்தது, इति-என்கிற, मतिविशेषम्-புத்தி விசேஷ மென்று, तत्- அதை, (பரத்தைக் கொடுப்பதை) अविदु:-அறிகிறார்கள்.

(கருத்து) ஒரு பலனை ஆசைப்பட்டு அது தன்னாலும் அடைய முடியாதது, வேறொரு உபாயத்தைக் கொண்டும் அடையமுடியாதது என்று தெரிந்து, ஸமர்த்தனாயும், இரக்கம் உள்ளவனாயுமிருக்கிற ஒருவனிடத்தில் அந்தபலனை ஸாதிக்கவேண்டிய வேலையை நீயே செய்து இதை முடித்துவைக்க வேண்டும் என்று சொல்லி பாரத்தை ஒப்புவிப்பதே தான் பிரபத்தி. ஒப்புவிப்பதாவது இது என்னால் முடியாது, தேவரீர் என்னை எதிர்பார்க்கக்கூடாது. தேவரீரே இதை முடித்துக் கொடுக்க வேண்டுமென்று எண்ணுவது.

குறிப்பு:- (1) ''मतिविशेषम्''என்பதற்கு எண்ணமே என்று பொருள். ஆகையால் கேட்டுக்கொள்ளுவது மாத்திரமே பிரபத்தி அன்று. அதோடு கூடின பரத்தைக் கொடுப்பதே பிரபத்தி.

(2) ' वा ' என்பதற்கு च என்று பொருள்.

(3) ஆசாரியர்கள் சிஷ்யர்களுக்கு இதை அபிநிவேசத்துடன் உபதேசம் செய்கிறார்கள் என்று ''अभिवदन्ति'' என்பதில் ''अभि'' என்பதின் கருத்து. (28)

---

அவ:- பிரபத்தி விஷயத்தில் சிலர் சொல்லுவது அதிவாத மென்று காட்டிக்கொண்டு, பரத்தை எம்பெருமானிடம் ஒப்புவிப்பதாலேயே முமுக்ஷு நிர்பரனாவான் என்று கடைசி சுலோகத்தாலே அருளிச் செய்கிறார்:-

युग्यस्यन्दनसारथिक्रमवति त्रय्यन्त सन्दर्शिते
तत्त्वानां त्रितये यथार्हविविधव्यापारसन्तानिनि ।
हेतुत्वं त्रिषु कर्तृभाव उभयोः स्वाधीनतैकत्र तत्
स्वामिस्वीकृतयद्भरोयमलसस्तत्र स्वयं निर्भरः ।। २९ ।।

(ப-ரை) युग्य-குதிரைகள், स्यन्दन-ரதம், सारथि-வண்டி ஓட்டுகிறவன், क्रमवति-இந்தக் கிரமத்தை உடையதாக, त्रय्यन्त सन्दर्शिते-வேதாந்தங்களால் காட்டப்படுகிற, यथार्ह-அவரவர்களுக்குத் தகுந்தபடி, विविध-வெவ்வேறான, व्यापारसन्तानिनि-வியாபாரங்களின் வரிசைகளை உடைய, तत्त्वानां त्रितये-தத்துவங்களுடைய மூன்றில், हेतुत्वं-ஒரு வேலைக்குக் காரணமாயிருப்பது, त्रिषु-மூன்று பேர்களிடத்திலும், कर्तृभावः-

அவனுக்கு வரும். ஆகையால் ஒரு வியாஜத்தை முன்னிட்டுக் கொண்டே இவனை இரக்ஷிக்கிறான். அந்த வியாஜம் பக்தியும், பிரபத்தியும். ஒருவன் பிரபத்தி செய்ய வேண்டியதில்லை என்பது அதிவாதம்.

(4) பிராட்டியுடன் சேர்ந்தே எல்லா வேலைகளையும் செய்வது போல், முமுக்ஷுவினுடைய பரத்தையும் அவளுடன்கூடவே இருந்தே ஒப்புக்கொள்ளுகிறான். இதில் பிராட்டிக்கு ஸம்பந்தம் இல்லை என்பது அதிவாதம். (51)

---

அவ:- இந்த விஷயங்கள் மற்றவர்களுக்கு ஏன் தெரியவில்லை என்பதற்குப் பதில் கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

विश्राम्यद्भिरुपर्युपर्युपरि दिवानक्तं बहिर्दर्शनैः
अस्मद्देशिकसम्प्रदायरहितैरद्यापि नालक्षितः ।
स्वप्राप्तेः स्वयमेव साधनतया जोघुष्यमाणः श्रुतौ
सत्त्वस्थेषु भजेत सन्निधिमसौ शान्तावधिः शेवधिः ॥ ५२ ॥

(ப-ரை) उपर्युपरि- (புதையலுக்கு) மேன் மேலே दिवानक्तं- பகலிலும், இராத்திரியிலும், विश्राम्यद्भिः-உட்கார்ந்து சிரமபரிஹாரம் பண்ணிக் கொண்டிருக்கிறவர்களான, बहिर्दर्शनैः-மேலே பார்க்கிறவர்களான, अस्मद्देशिक- நம்முடைய ஆசாரியர்களுடைய, सम्प्रदायरहितैः - ஸம்பிரதாயம் இல்லாதவர்களாலே, अद्यापि - இதுவரையில், न आलक्षितः பார்க்கப் படவில்லை, स्वप्राप्तेः- தன்னை அடைவதற்கு, स्वयमेव-தானே, साधनतया - உபாயமாக இருப்பதாக, श्रुतौ- வேதத்தில், जोघुष्यमाणः- இறைஞ்சு சொல்லப்பட்ட, शान्तावधिः-அளவில்லாத, शेवधिः-புதையலானது, सत्त्वस्थेषु - ஸத்துவகுணம் உடையவர்களிடத்தில், सन्निधिं भजेत- ஸமீபத்தில் இருப்பதை அடைகிறது. அதாவது காணத்தகுந்ததாக ஆகிறது.

(கருத்து) ஒரு இடத்தில் புதையல் இருப்பதை அறியாமல் அதன் மேலே ஜநங்கள் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் உள்ளே பார்க்காததினால், அது இருப்பதை அறியவில்லை. அதுபோல நம்முடைய ஆசாரியர்களுடைய ஸம்பிரதாயம் இல்லாதவர்கள் எம்பெருமானே தன்னை அடைவதற்கு ஸாதநம் என்று உபநிஷத்துக்கள் முறையிடுவதை அறிய வில்லை. ஸத்துவகுணம் உடையவர் களால் தான் அப்படி அவனைக் காணக்கூடும்.

குறிப்பு:— ''बहिर्दर्शनै:'' என்பதற்கு வேதத்திற்கு வெளிப்பட்ட ஸித்தாந்தங்களாலே இந்த விஷயம் அறியப்படவில்லை என்று கருத்து. வேதாந்தத்தை ஒப்புக்கொண்டு நம்முடைய ஆசாரியர்களுடைய மதத்தை அநுஸரிக்கிறவர்கள்தான் வேதத்தில் இருக்கிற அர்த்தத்தை உள்ளபடி பார்க்கிறார்கள். (52)

---

## 24-வது ஸாத்தியோபாய சோதநாதிகாரம்

அவ:- பிரபத்தி என்பது ஒருவன் செய்யவேண்டிய வேலை அன்று என்றும், பக்தியைச் செய்யக்கூடாது என்றும் சொல்லுகிற அதிவாதங்கள் இதில் கண்டிக்கப் படுகின்றன:-

**यथाधिकरणं प्रभुर्यजनदानहोमार्चना**
**भरन्यसनभावनाप्रभृतिभि: समाराधित: ।**
**फलं दिशति देहिनामिति हि सम्प्रदायस्थिति:**
**श्रुतिस्मृतिगुरूक्तिभिर्नयवतीभिराभाति न: ।। ५३ ।।**

(ப-ரை) **प्रभु:**- யஜமாநனான எம்பெருமான், **यथाधिकरणं**- அவரவர்கள் அதிகாரத்துக்குத் தகுந்தபடி செய்யப்பட்ட, **यजन**-யாகம், **दान**-தாநம், **होम**-ஹோமம், **अर्चना**- அர்ச்சநம், **भरन्यसन** - பிரபத்தி, **भावना प्रभृतिभि:**-பக்தி முதலானவைகளாலே, **समाराधित:**-நன்றாய் ஆராதிக்கப்பட்டு, **देहिनां**-உடம்போடு கூடிய ஜீவன்களுக்கு, **फलं**- பலனை, **दिशति**- கொடுக்கிறான், **इति हि**-இப்படிப் பிரஸித்தமான, **सम्प्रदायस्थिति:**- ஸம்பிரதாயத்தின் இருப்பானது, **नयवतीभि:**-நியாயங்களோடு கூடின, **श्रुति**-வேதம், **स्मृति**-ஸ்மிருதிகள், **गुरूक्तिभि:**- ஆசாரியர்களுடைய திவ்விய ஸூக்திகள், இவைகளாலே, **न:**- நமக்கு, **आभाति**-நன்றாய் பிரகாசிக்கிறது.

(கருத்து) உலகத்தில் அவரவர்கள் தங்களுக்கு வேண்டிய பலனை அடைய உபாயமாக யாகம் முதலானவைகளைச் செய்கிறார்கள். அவைகளினாலே ஆராதிக்கப்பட்ட எம்பெருமான் அவர்கள் வேண்டும் பலனைக் கொடுக்கிறான். அந்த உபாயங்கள் இல்லாமல் அவன் பலனைக் கொடுப்பது இல்லை. அதுபோல பிரபத்தியையும், பக்தியையும் ஒருவன் செய்யாவிட்டால் அவன் மோக்ஷத்தைக் கொடுப்பதில்லை. இந்த விஷயம் வேதம், ஸ்மிருதிகள், பெரியோர்களிடம் இருந்து வந்த ஸம்பிரதாயம்,

இவைகளை நல்ல யுக்திகளைக்கொண்டு விசாரம் செய்கிற நமக்குத் தோன்றுகிறது. அப்படிச் செய்யாதவர்களுக்கு அது தோன்றாது.

குறிப்பு:— (1) சுலோகத்தில் ''प्रभृतिभि:'' என்பதாலே கர்மயோகமும், ஜ்ஞாந யோகமும் சேர்த்துக் கொள்ளப் படுகின்றன.

(2) ''प्रभु:'' என்பதற்குக் கேட்கும் பலனைக்கொடுக்க ஸமர்த்தன் என்று பொருள்.

(3) இங்கு ஸம்பிரதாயம் என்பது கிடாம்பி ஆச்சானிடமிருந்து அப்புள்ளார் வழியாக வந்தது.

---

அவ:- ஆசாரியர்களிடம் இருந்து நாம் தெரிந்துகொண்ட விஷயத்தை ஒருவனும் அசைக்க முடியாது என்று கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

तत्तद्धैतुकहेतुके कृतधियस्तर्केन्द्रजालक्रमे
बिभ्राणा: कथकप्रधानगणने निष्ठां कनिष्ठाश्रयाम्।
अध्यात्मश्रुतिसम्प्रदायकतकैरद्धा विशुद्धाशया:
सिद्धोपायवशीक्रियामिति हि न: साध्यां समध्यापयन् ।। ५४ ।।

(ப-ரை) तत्तद्धैतुकहेतुके- அந்தந்த ஹைதுகர்களால் உண்டு பண்ணப் பட்ட, तर्केन्द्रजालक्रमे- தர்க்கங்களாகிய இந்திர ஜால வித்யையில், कृतधिय:-சிக்ஷிக்கப்பட்ட புத்தியை உடையவர்களாயும், कथकप्रधानगणने- வாதம் செய்கிறவர்களில் முக்கியமான வர்களை எண்ணும்போது, कनिष्ठाश्रयां निष्ठां बिभ्राणा:- சுண்டு விரலால் எண்ணத் தகுந்தவர்களாயும், (முதலில் எண்ணத் தகுந்தவர்களாயும்) अध्यात्मश्रुति-வேதாந்த சாஸ்திரத் தினுடைய, सम्प्रदाय- ஸம்பிரதாய மாகிற, कतकै :- தேத்தாங் கொட்டைகளினால், अद्धा-நன்றாய், विशुद्धाशया:- சுத்தம் பண்ணப்பட்ட மனதை உடையவர்களாயும் இருக்கிற நம்முடைய ஆசாரியர்கள், साध्यां- செய்ய வேண்டிய பக்தி பிரபத்திகளை, सिद्धोपायवशीक्रियां- ஸித்தோ பாயனான எம்பெருமானை நமக்கு உட்பட்டவனாகச் செய்யும் வியா பாரங்கள், इति-என்று, न:- நமக்கு समध्यापयन्-சொல்லிக் கொடுத்து இருக்கிறார்கள்.

(கருத்து) பக்தியும் பிரபத்தியும் நாம் செய்யவேண்டிய வேலைகள் என்றும், அவைகளாலேதான் எம்பெருமான் நமக்கு உட்படுவன் என்றும், நமக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிற ஆசாரியர்கள் தர்க்கவித்யையில் நல்ல பழக்கம் உள்ளவர்கள், வாதம் பண்ணுகிறவர்களில் முதலாக எண்ணத் தகுந்தவர்கள். வெறும் யுக்திகளைக்கொண்டு மாத்திரம் அவர்கள் இப்படிச் சொல்லிக் கொடுக்கவில்லை. அவர்கள் வேதாந்தத்தின் ஸம்பிரதாயத்தை நன்றாய் அறிந்து ஒருவிதமான தப்பு அறிவில்லாதவர் களாய் இருக்கிறார்கள். அவர்கள் சொல்லிக் கொடுத்ததை எவன் அசைக்கக்கூடும்.

குறிப்பு:— ஸம்பிரதாயம் என்பது ஆசாரியர்களிடமிருந்து நடுவில் விட்டுப்போகாமல் தொடர்ந்து வருகிற உபதேசம். (54)

---

## 25-வது பிரபாவ வியவஸ்தாதிகாரம்

அவ:- பிரபந்நனுக்கு சாஸ்திரங்களில் சொல்லுகிற பெருமையை அதிகப்படுத்திச் சொல்லும் அதிவாதங்களை இதில் கண்டிக்கிறார். அதில் முதல் சுலோகம்.

स्वरूपं यद्यादृग्गुणविभवलीलादि च विभोः
तदाज्ञासेतुश्च श्रुतिभिरवसेयं तदखिलम् ।
तथा तद्भक्तानां तदुपसदनादेश्च महिमा
यथाऽधीतं सद्भिर्यतिपतिमुखैरध्यवसितः ।। ५५ ।।

(ப-ரை) विभोः:- யஜமாநனாகிய எம்பெருமானுடைய, स्वरूपं- ஸ்வரூபமும், गुणविभवलीलादि च- குணங்களும், விபூதிகளும், லீலை களும், திருமேனியும், यत्- எந்த பிரமாணங்களாலே ஏற்படுகின்றன, यादृक् -எந்த விதங்களாய் இருக்கின்றன, तदाज्ञासेतुश्च- அந்த அந்த ஜாதிகளுக்கும் ஆசிரமங்களுக்கும் தகுந்த நியமங்களாகிய அவனது உத்திரவுகள், यत्- எவைகள், यादृक् -எந்த அங்கங்களோடு சேர்ந்தன; तदखिलम्-அவைகள் எல்லாம், श्रुतिभिः:-வேதங்களாலே, अवसेयं-உள்ளபடி அறியவேண்டியது. तथा-அப்படியே, तद्भक्तानां- அவனிடத்தில் பக்தி யுள்ளவர்களுடையவும், तदुपसदनादेश्च-அவனிடம் போகவேண்டியதற்கு உபாயங்களாகிய பக்தி பிரபத்தி முதலியவைகளுடையவும், महिमा-

பெருமையானது, **यथाऽधीतं**- சாஸ்திரம் சொல்லுகிறபடி, **यतिपतिमुखैः**- ஸ்ரீபாஷியகாரர் முதலான, **सद्भिः**- பெரியோர்களாலே, **अध्यवसितः**- இவ்வளவு என்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

(கருத்து) எப்படி எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலானவை களை வேதத்தைக் கொண்டு அறியவேண்டியதோ, அப்படியே பக்தி பிரபத்திகளையும், அவைகளைச் செய்கிறவர் களையும் பற்றி சாஸ்திரம் என்ன சொல்லுகிறதோ, அதையே நம்முடைய ஆசாரியர்கள் குறைக்காமல் சொல்லி இருக்கிறார்கள். அதற்கு மேல்பட்டு அவர்களின் பெருமையைச் சொல்லுவது ஸரியன்று.

குறிப்பு- எம்பெருமானுடைய ஸ்வரூபம் பிரகிருதியைப் போல் மாறுதலை அடைகிறது இல்லை என்றும், ஸ்வயம் பிரகாசம் என்றும், மூன்று விதமான பரிச்சேதங்கள் இல்லை என்றும் வேதம் சொல்லுகிறது. அப்படியே அவனுக்குக் குணங்கள் உண்டு, அவன் நிர்விசேஷன் (குணமில்லாதவன்) அல்ல என்றும், அவனுக்கு ஒரு கெட்ட குணமும் இல்லை என்றும், எல்லா நல்ல குணங்களுக்கும் அவன் இருப்பிடம் என்றும், ஜகத் என்கிற விபூதி என்று ஒன்று இல்லை என்கிற மதம் பிசகு என்றும், அது உண்மையில் இருக்கிறது என்றும் சொல்லுகிறது. (55)

---

அவ:- வர்ண தர்மங்களையும், ஆச்ரம தர்மங்களையும் விட்டு விட்டு நினைத்தபடி நடக்கிற ஜநங்கள் நிறைந்த இந்தக் காலத்திலும், இந்த அதிகாரத்தில் செய்த விசாரத்தைப் பார்த்து ஸந்தோஷப்படுகிற பெரியோர்கள் இருக்கிறார்கள் என்று கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:-

चातुर्वर्ण्यचतुर्विधाश्रममुखे भेदे यथावस्थिते
वृत्तं तन्नियतं गुणानुगुणया वृत्त्या विशिष्टं श्रिताः ।
त्यागोपप्लवनित्यदूरशरणव्रज्याविधौ कोविदाः
चिन्तामभ्युपगन्तुमन्तिमयुगेऽप्येकान्तिनः सन्ति नः ।। ५६ ।।

(ப-ரை) **चातुर्वर्ण्य**-நாலு ஜாதிகள், **चतुर्विधाश्रम**-நான்கு விதங்களான ஆசிரமங்கள், இவை முதலான, **भेदे**-பேதமானது, **यथावस्थिते**-சாஸ்திரம் சொன்னபடி இருக்கையில், **गुणानुगुणया**-விஷ்ணுபக்தனாய் இருப்பதற்குத்

தகுந்த, वृत्त्या-இருப்புடன், विशिष्ट-கூடின, तन्नियतं-ஜாதிக்கும் ஆசிரமத் திற்கும் பொருத்தமான, वृत्तं- நடத்தையை,श्रिता:-அடைந்திருக்கிறவர் களாயும், त्यागोपप्लवनित्यदूर-வர்ணாசிரமதர்மங்களை விடுவதாகிய தோஷத்திற்கு எப்போதும் தூரத்திலிருக்கிற, शरणव्रज्याविधौ-பிரபத்தி செய்யும் பிரகாரத்தில், कोविदा:- ஸமர்த்தர்களாயும் (நன்றாய்த் தெர்ந்த வர்களாயும்) இருக்கிற, एकान्तिन:-ஏகாந்திகள், अन्तिमयुगेऽपि- இந்த கடைசி யுகத்திலும், न:-நம்முடைய, चिन्तां-செய்த விசாரத்தை, अभ्युपगन्तुं-ஒப்புக் கொண்டு ஸந்தோஷப்பட, सन्ति-இருக்கிறார்கள்.

(கருத்து) இந்த காலத்திலும் தங்களுடைய வர்ணாசிரம தர்மங்களைச் செய்து கொண்டு வேறு தேவதைகளை நெஞ்சால் நினைக்காத பெரி யோர்கள் இருக்கிறார்கள். பிரபத்திக்கு வர்ணாசிரம தர்மங்களை விடுவது அங்கம் அன்று என்று நன்றாய் அறிந்திருக்கிறார்கள். அவர்கள் இந்த அதிகாரத்தில் செய்த விசாரத்தைப் பார்த்து ஸந்தோஷப் படுவர்கள். ஆகையால் செய்த விசாரம் வீண் அன்று.

குறிப்பு- (1) சுலோகத்தின் மூன்றாவது பாதத்தாலே சிலர் வர்ணா சிரம தர்மங்களை விடுவதை பிரபத்திக்கு அங்கமாகச் சொல்லுகிறார்கள். அவைகளை விடுவது ஸரி அன்று என்றும், அப்படி சொல்லுவது துர்வாதம் என்றும் காட்டப்படுகிறது.

(2) வர்ணாசிரம தர்மங்களை அநுஷ்டிக்கிற பெரியோர்கள் என்று சொன்னதால், ஜாதியானது பிரபத்தி பண்ணுவதாலே போய்விடாது என்றும், ஜாதி போகும் என்பது அதிவாதம் என்றும் காட்டப்படுகிறது. (56)

---

## 26-வது பிரபாவ ரக்ஷாதிகாரம்

அவ:- பிரபத்தியின் பெருமையைக் குறைக்கிறவர்களுடைய ஸந்தேஹத்தைத் தீர்ப்பதற்காக முதல் சுலோகம் அருளிச் செய்கிறார்:-

शिलादेः स्त्रीत्वादिर्विपरिणतिरस्त्वद्भुतमिदं
ततोऽप्येतच्चित्रं यदुत दहनस्यैव हि मता ।
तृणस्यैवास्त्रत्वं रिपुषु निहतेरेव हितता
पदत्रेणैवेह त्रिभुवनपरित्राणमिति च ।। ५७ ।।

(ப-ரை) शिलादेः-கல்லு முதலானவைகளுக்கு, स्त्रीत्वादिः-ஸ்திரீயாகவும், புருஷனாகவுமான, विपरिणतिः- மாறுதலான, इदं तु अद्भुतं-இந்த ஆச்சரியம், अस्तु - இருக்கட்டும். ततः अपि-அதைக் காட்டிலும், एतत्-மேலே சொல்லப்போகிறவைகள், चित्रम्-இன்னும் ஆச்சரியங்கள், यत् उत-எவைகளென்றால், दहनस्य एव-நெருப்புக்கே, हिमता-குளிமை உண்டானதும், तृणस्य एव-ஒரு புல்லுக்கே, अस्त्रत्वं-ஆயுதத் தன்மை வந்ததும், रिपुषु- விரோதிகளிடத்தில், निहतेः एव-கொல்லப்படுவதற்கே, हितता-நன்மையைக் கொடுப்பதாக ஆனதும், पदत्रेण एव-திருவடிகளை இரக்ஷிக்கிற பாதுகைகளாலேயே, त्रिभुवनपरित्राणम्-மூன்று உலகங்களையும் இரக்ஷித்ததும், इति च-இப்படிப்பட்டவைகள் ஆச்சரியங்கள்.

(கருத்து) கல்லாய் இருந்த அகலியை சக்கிரவர்த்தித் திருமகனுடைய திருவடி பட்ட உடனே முன்போல் ஸ்திரீயாக ஆகிவிட்டாள். உத்திரையின் கர்ப்பத்தினின்று விழுந்த கரிக்கட்டையானது ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடி பட்ட உடன் பரீக்ஷித்ராஜாவாக மாறிவிட்டது. இவைகள் ஆச்சரியமானவைகள்; இவைகளைக் காட்டிலும் ஆச்சரியமானவைகள் - ஹனுமாருடைய வாலை ராக்ஷஸர்கள் கொளுத்தும்போது பிராட்டியின் அநுக்கிரஹத்தாலே நெருப்பின் உஷ்ணம் போய்விட்டது. பிராட்டியினிடத்தில் அபசாரப்பட்ட காகாஸுரன் பேரில் ஏவின புல்லானது ஒரு பெரிய அஸ்திரத்தின் வேலையைச் செய்தது. கபந்தனையும், விராதனையும், இரட்டையாக இருந்த அர்ஜுந மரங்களையும் கொன்றதினால் அவர்களுக்குச் சாபம் நீங்கி க்ஷேமம் கிடைத்தது. ஸ்ரீ சக்கரவர்த்தி திருமகனுடைய பாதுகைகளைக் கொண்டு பரதாழ்வான் அயோத்தியை இரக்ஷித்து வந்தார். இந்த ஆச்சரியங்களை ஒப்புக் கொள்ளுகிறவன் பிரபத்தியின் மஹிமையைப் பற்றி ஏன் ஸந்தேஹப்படவேண்டியது.

குறிப்பு- எம்பெருமானுடைய பிரபாவம் இப்படி இருக்கையில், அவனிடத்தில் செய்யும் பிரபத்திக்கு பக்தியாலே முடியாத பிராரப்த கர்மத்தைப் போக்கும் சக்தி உண்டாகலாம். (57)

---

அவ:- இந்த நான்கு அதிகாரங்களில் செய்த விசாரத்தின் முடிவில் பிரபத்தியின் மஹிமையைக் கொண்டாடுகிறார்:-

रागद्वेषमदादिकैरिह महारक्षोभिरक्षोभिते
नित्ये रक्षितरि स्थिते निजभरन्यासाभिधानं तपः ।

यत् कक्षीकृतमत्यशेत विविधान् धर्मानधर्मद्रुहः
तद्भूमार्णवलेशवर्णनमपि प्राचां न वाचां पदम् ।। ५८ ।।

(ப-ரை) राग–ஆசை, द्वेष-த்வேஷம், मदादिकैः-கொழுப்பு முதலானவை களாகிய, महारक्षोभिः– பெரிய ராக்ஷஸர்களாலே, अक्षोभिते–கலக்கப்படாதவ ராயும், नित्ये रक्षितरि स्थिते– எப்போதும் இரக்ஷிக்கிறவனாயும் இருக்கிற எம்பெருமானிடத்தில் செய்யப்பட்ட, निजभरन्यासाभिधानं–தன்னுடைய பரத்தை வைப்பதாகிய பிரபத்தி என்கிறபெயரை உடைய, यत् तपः–எந்த தபஸ்ஸானது, अधर्मद्रुहः– அதர்மங்களைப் போக்கும் படியான, विविधान्– வெவ்வேறான, धर्मान्–தர்மங்களை, अत्यशेत– அதிகரித்திருக்கிறது என்று कक्षीकृतम्– -ஒப்புக்கொள்ளப் படுகிறதோ, तद्भूमार्णव– -அந்த தபஸ்ஸி னுடைய பெருமையாகிய ஸமுத்திரத்தினுடைய, लेशवर्णनमपि– ஒரு திவிலையை வர்ணிப்பதும், प्राचां वाचां–எப்போதும் இருக்கிற வேதங் களுக்கும் न पदम् –நிலமன்று.

(கருத்து) பிரபத்தியினுடைய பெருமையானது ஸமுத்திரம் போல் அளவில்லாமல் இருக்கிறது. அதில் ஒரு திவிலையைக்கூட வேதங்களும் வர்ணிக்கமுடியாது. ஏனென்றால், உலகத்தில் பாபங்களைப் போக்கச் சக்தி உள்ளனவாகச் சொல்லப்பட்ட எல்லா தர்மங்களைக் காட்டிலும் பிரபத்தி மேற்பட்டது. அதைச் சீக்கிரம் செய்யலாம். எல்லா அநிஷ்டங்களையும் போக்கும். எல்லா இஷ்டங்களையும் கொடுக்கும். பிரபத்தி செய்தவனுக்கு ஆசை - த்வேஷம் முதலான குற்றங்கள் நேர்ந்தாலும் அவைகளுக்குப் போக்கு விட்டு பிரபந்நன் கேட்டுக் கொண்ட காலத்திலேயே மோக்ஷம் கிடைக்கும்.

குறிப்பு:- (1) ஆசையும் த்வேஷமும் ராக்ஷஸர்களுக்கும் தகாத வைகளாகையால் அவைகளைப் பெரிய ராக்ஷஸர்கள் என்று சொல்லி யிருக்கிறது.

(2) சுலோகத்தில் ''अक्षोभितम्'' என்றும் பாடமுண்டு. அப்போது அது தபஸ்ஸுக்கு விசேஷணம். தண்டகாரணியத்தில் இருந்த ருஷிகளுடைய தபஸ்ஸு ராக்ஷஸர்களாலே கெடுக்கப்பட்டது. ராக்ஷஸர்களைக் காட்டிலும் பொல்லாதவைகளான ஆசை த்வேஷம் முதலானவைகளாலே பிரபத்தி என்கிற தபஸ்ஸை அழிக்க முடியாது என்று கருத்து. இந்த பாடமே சிலாக் கியம் என்று வியாக்கியாந காரர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. (58)

---

## 27-வது மூல மந்திராதிகாரம்

அவ:- மேல் மூன்று அதிகாரங்களால் மூன்று ரஹஸ்யங்ளுக்கு விரிவாய் அர்த்தஞ் சொல்ல ஆரம்பித்து, இதில் மூலமந்திரத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார். முதலில் இந்த மந்திரத்தின் தேவதை விஷயமாகவும், அதின் ருஷிவிஷயமாகவும், அந்த மந்திர விஷயமாகவும் வரிசையாய் மூன்று மங்கள சுலோகங்களை அருளிச் செய்கிறார்:-

तारं पूर्वं तदनु हृदयं तच्च नारायणाये
त्याम्नायोक्तं पदमवयतां सार्थमाचार्यदत्तम् ।
अङ्गीकुर्वन्नलसमनसामात्मरक्षाभरं नः
क्षिप्रं देवः क्षिपतु निखिलान् किङ्करैश्वर्यविघ्नान् ।। ५९ ।।

(ப-ரை) पूर्वं तारं-முதலில் தாரம் என்கிற பிரணவம், तदनु- அதன் மேலே, हृदयं- ஹிருதயம் என்கிற நமஸ்ஸு,तच्च- அந்த பிரஸித்தமான, नारायणाय इति- நாராயணுய என்று, आम्नायोक्तं- வேதத்தால் சொல்லப் பட்ட, पदं-சொல், ஆகிய இவைகளை, सार्थं-அர்த்தத்துடன், आचार्यदत्तं- ஆசாரியர்களால் கொடுக்கப்பட்டு, कवयतां -அதை நினைத்துக்கொண்டு, अलसमनसां-சக்தியில்லாதவர்களாய், (அகிஞ்சநர்களாயிருக்கும்) नः- நம்முடைய, आत्म रक्षाभरं-நம்மை இரக்ஷிக்கும் சுமையை, अङ्गीकुर्वन् - ஒப்புக்கொண்டவனான, देवः-எம்பெருமான், अखिलान् - எல்லா, किङ्करैश्वर्य विघ्नान् - கைங்கரியமாகிற ஸம்பத்துக்கு வரும் விக்கிநங்களை, क्षिप्रं- சீக்கிரம், क्षिपतु- போக்கவேண்டும்.

(கருத்து) மூல மந்திரத்தை அர்த்தத்துடன் நினைத்துப் பார்த்து அகிஞ்சநர்களான நாம், நம்மை இரக்ஷிக்கும் சுமையை எம்பெருமானிடம் கொடுக்கிறோம், அதை அவன் ஒப்புக்கொண்டு அவனுக்குச் செய்ய வேண்டிய கைங்கரியங்களுக்கு வரும் எல்லா விக்கிநங்களையும் சீக்கிரம் போக்க வேண்டும்.

குறிப்பு:— (1) மந்திரத்தின் மூன்று சொற்களைத் தனித்தனியாக சுலோகத்தில் சொல்லி இருப்பதால், மந்திரத்தை மூன்று வாக்கியமாக அர்த்தம் பண்ணவேண்டும் என்று காட்டப்படுகிறது.

(2) 'अलसमनसां ' என்பதாலே, அகிஞ்சநனான ஆத்மாவின் ஸ்வரூப மும், 'आत्म रक्षाभरं' என்பதாலே, பிரபத்தியும், किङ्करैश्वर्य- என்பதாலே

அதின்பலனான கைங்கரியமும் காட்டப்படுகின்றன. இதனால் இந்த மந்திரத்தை ஸ்வரூபத்தைச் சொல்லுவதாகவும், உபாயத்தைச் சொல்லுவ தாகவும், புருஷார்த்தத்தைச் சொல்லுவ தாகவும் அர்த்தம் பண்ணலாம் என்றும் காட்டப்படுகிறது.

(3) பிரணவத்தை ' तारं ' என்றும், நமஸ்ஸை ' हृदयं ' என்றும் மந்திர சாஸ்திரம் சொல்லுகிறது. (59)

---

कल्याणमावहतु कार्तयुगं स्वधर्मं
प्रख्यापयन् प्रणिहितेषु नरादिकेषु ।
आद्यं कमप्यधिगतो रथमष्टचक्रं
बन्धुः सतां बदरिकाश्रमतापसो नः ॥ ६० ॥

(ப-ரை) प्रणिहितेषु- கவனமாய்க் கேட்கிற, नरादिकेषु- நரன், நார்தர் முதலானவர்களிடத்தில், कार्तयुगं-கிருதயுக ஸம்பந்தமான, स्वधर्मं- தன்னு டைய தர்மத்தை, प्रख्यापयन्- சொல்லிக் கொண்டு, अष्टचक्रं- எட்டு சக்கிரங்களை உடைய आद्यं- முதன் முதலான, कमपि-விலக்ஷணமான, रथम्-ரதத்தை, अधिगतः-அடைந்திருக்கிற, सतां- பெரியோர்களுக்கு, बन्धुः-பந்துவாய், (பந்துவான தகப்பனைப்போல் அநுகூலத்தைச் செய்யும்) बदरिकाश्रमतापसः-பதரிகாஶ்ரமத்தில் தபஸ்ஸு செய்து கொண்டு இருக்கிற நாராயணன் என்கிற ருஷியானவர், नः-நமக்கு, कल्याणम्- க்ஷேமத்தை, आवहतु- செய்ய வேண்டும்.

குறிப்பு:- (1) கிருதயுகதர்மமாவது- மோக்ஷத்திற்கு வேண்டிய வியாபாரங்களைச் செய்வது. இதற்கு நிவிருத்தி தர்மம் என்று பெயர்.

(2) மூல மந்திரத்திற்கு எட்டு எழுத்துக்கள் இருப்பதால், அதை எட்டு சக்கிரங்களுள்ள ரதம் என்று சொல்லியிருக்கிறது.

(3) நாராயணன் என்கிற ருஷியானவர் இந்த மந்திரத்தை உபதேசம் பண்ணிக் கொண்டு இருக்கிறார். ஆகையால் அதற்கு அவரே ருஷி. அவரே மந்திரத்திற்கும் தேவதை ஆகையாலே அவரை மந்திரமாகிய ரதத்தில் இருக்கிறதாகச் சொல்லி இருக்கிறது.

(4) எம்பெருமானுக்கு வேண்டியது எல்லாம் இருப்பதாலே இப்படி

உபதேசம் பண்ணிக்கொண்டு இருப்பது வெறும் கிருபையினாலேயே. அவன் செய்யும் வேலைக்குப் பிரயோஜநம் ஸாதுக்களை இரக்ஷிப்பதே. இதை 'सतां बन्धुः' என்பது காட்டுகிறது.

(5) ''प्रणिहितेषु '' என்பதாலே உபதேசம் பண்ணப்பட்டதைக் கவனமாய் கேட்பதாகிய சிஷ்யகுணம் சொல்லப்படுகிறது. (60)

---

यदन्तःस्थमशेषेण वाङ्मयं वेदवैदिकम् ।
तस्मै व्यापकमुख्याय मन्त्राय महते नमः ॥ ६१ ॥

(ப-ரை) वेदवैदिकम्-வேதமும், அதை மூலமாக உடைய ஸ்மிருதிகளும், ஆகிய, वाङ्मयं-சொற்கள், अशेषेण -பாக்கியில்லாமல், यदन्तःस्थम् - எதற்குள் அடங்கி இருக்கின்றனவோ, तस्मै-அந்த, व्यापक मुख्याय- வியாபக மந்திரங்களுக்குள் முக்கியமான, महते-பெருமையை உடைய, मन्त्राय- மந்திரத்திற்கு, नमः-நமஸ்காரம்.

குறிப்பு:- (1) வேதமும் ஸ்மிருதிகளும் இம்மந்திரத்தில் அடங்கி இருப்பதாவது-தத்துவம், உபாயம், புருஷார்த்தமாகிய இவைகளைப் பற்றி அவைகள் சொல்லுவது எல்லாம் மூலமந்திரத்தில் அடங்கி இருக்கிறது என்று கருத்து.

(2) வியாபக மந்திரங்கள் மூன்று. அவைகளுள் மூலமந்திரம் ஒன்று. மற்றவைகளில், '' वासुदेव '' என்கிற சொல்லும், ''विष्णु'' என்கிற சொல்லும் இருக்கின்றன. அவைகள் எம்பெருமான் எங்கும் இருப்பதைச் சொல்லுவதனாலே அவைகளுக்கு வியாபகமந்திரம் என்று பெயர். (61)

---

இந்த அதிகாரத்தின் முதல் சுலோகம்.

इह मूलमन्त्रसंवृतमर्थमशेषेण कश्चिदनुमवति ।
स्फटिकतलनिहितनिधिमिव देशिकदत्तेन चक्षुषा जन्तुः ॥ ६२ ॥

(ப-ரை) स्फटिकतल-ஸ்படிகமயமான இடத்தில், निहितनिधिमिव- வைக்கப்பட்டிருக்கிற புதையலைப் போல், मूलमन्त्रसंवृतम्-மூல மந்திரத்தினால் மூடப்பட்டு இருக்கிற, अर्थं-अर्थं-அர்த்தத்தை, इह -இங்கு, कश्चित्

जन्तुः- யாதேனுமொரு மனிதன், देशिकदत्तेन- ஆசாரியர்களாலே கொடுக்கப் பட்ட, चक्षुषा-கண்ணாலே, अशेषेण-கொஞ்சமும் பாக்கியில்லாமல், अनुभवति- அறிந்து அநுபவிக்கிறான்.

(கருத்து) மிகவும் சுருக்கமாக இருக்கிற இம்மந்திரத்தினுடைய எல்லா அர்த்தங்களையும் ஆசாரியன் உபதேசத்தாலே ஒருவன் அதை அறிந்து அநுபவிக்கிறான்.

குறிப்பு:- (1) இம்மந்திரத்தின் அர்த்ததின் பெருமையைக் காட்டுவதற் காக அதைப் புதையலாகவும், அந்த அர்த்தத்தை அடக்கிக் கொண்டிருக் கிற மந்திரத்தை ஸ்படிகமாகவும் சொல்லி யிருக்கிறது.

(2) ஸ்ரீதேசிகன் அப்புள்ளாருடைய அநுக்கிரஹத்தாலே அறிந்து அநுபவித்ததை மறைபொருளாகச் சொல்லுகிறார். (62)

---

அதிகாரத்தின் கடைசி சுலோகம்.

इत्थं सङ्घटितः पदैस्त्रिभिरसावेकद्विपञ्चाक्षरैः
अर्थैस्तत्त्वहितप्रयोजनमयैरध्यात्मसारैस्त्रिभिः ।
आद्यस्त्र्यक्षरवेदप्रसूतिरजहत्स्थूलादिवृत्तित्रयः
त्रैगुण्यप्रशमं प्रयच्छति सतां त्रय्यन्तसारो मनुः ।। ६३ ।।

(ப-ரை) इत्थं -இந்த அதிகாரத்தில் சொன்னபடி, अध्यात्मसारैः- வேதாந்த சாஸ்திரத்தின் ஸாரமாகிய, एकद्विपञ्चाक्षरैः-வரிசையாய் ஒரு எழுத்து, இரண்டு எழுத்துக்கள், ஐந்து எழுத்துக்கள் உடைய, त्रिभिः पदैः- மூன்று பதங்களோடும், अध्यात्मसारैः-வேதாந்த சாஸ்திரத்தின் ஸாரமாகிய, तत्त्व हितप्रयोजनमयैः-தத்துவம், உபாயம், புருஷார்த்தம் ஆகிய, त्रिभिः अर्थैः- மூன்று அர்த்தங்களோடும், सङ्घटितः-சேர்ந்ததாயும், आद्यः-மூன்று ரஹஸ் யங்களுக்குள்ளும், மூன்று வியாபக மந்திரங்களுக்குள்ளும் முதலாயும், त्र्यक्षरवेदप्रसूतिः-முதல் சொல்லின் மூன்று எழுத்துக்களால் மூன்று வேதங்களுக்குக் காரணமாயும், अजहत् स्थूलादिवृत्तित्रयः-இரண்டாவது சொல்லாலே ஸ்தூலம், ஸூக்ஷமம், பரம் என்கிற அர்த்தங்களைக் காட்டு கிறதாயும், त्रय्यन्तसारः- மூன்றாவதான சொல்லாலே, வேதாந்தத்தினுடைய ஸாரமாகியிருக்கிற, असौ मनुः-இந்த மந்திரமானது, त्रैगुण्यप्रशमं - ஸம்ஸாரம் கழிவதை, सतां-முமுக்ஷுக்களுக்கு प्रयच्छति-கொடுக்கிறது.

(கருத்து) இந்த மந்திரத்தில் மூன்று சொற்கள் இருக்கின்றன. அவைகளில் முதல் சொல்லில் ஒரு எழுத்து; இரண்டாவது சொல்லில் இரண்டு எழுத்துக்கள்; மூன்ருவது சொல்லில் ஐந்து எழுத்துக்கள் இருக்கின்றன. மூன்று சொற்களும் வரிசையாய் ஸ்வரூபத்தினுடைய உண்மையையும், அதை அறிந்தவன் செய்யவேண்டிய உபாயத்தையும், அதினுல் கிடைக்கும் பயனையும் சொல்லுகின்றன. இந்த சொற்களும் அர்த்தங்களும் வேதாந்தத்தில் ஸாரமானவைகள். முதற் சொல்லில் அடங்கி இருக்கும் மூன்று எழுத்துக்களில் இருந்து மூன்று வேதங்கள் உண்டாகி இருக்கின்றன. இரண்டாவது சொல்லிற்கு மூன்று விதமாய் அர்த்தம் பண்ணலாம். நமஸ்ஸு என்பது முழுவதற்கும் பிரபத்தி என்றும் அதின் பலமாகிய எம்பெருமான் கைங்கரியம் என்றும் பொருள். இது ஸ்தூலமான அர்த்தம். இந்த சொல்லில் ந:-என்றும், மஸ் - என்றும் பிரித்தால், நான் எம்பெருமானுக்கு உட்பட்டவன் என்றும், நான் எனக்குச் சேஷன் அன்று என்றும், என்னுடையதாக எண்ணி இருக்குமவைகளுக்கு நான் இயற்கையாகச் சேஷி அன்று என்றும் பொருள் கிடைக்கும். இதற்கு ஸூக்ஷ்மமான அர்த்தம் என்று பெயர். எம்பெருமானே பிரதாநமான உபாயம் என்று பரம் என்கிற அர்த்தம். மூன்ருவது சொல்லானது எம்பெருமான் ஜகத்காரணம் என்றும், எல்லாம் அவனுடைய ஸொத்து என்றும், அவன் எல்லாவற்றிலும் இருக்கிருன் என்றும், அவனே எல்லாவற்றிற்கும் ஆதாரம் என்றும், அவனே ஜீவன்களுக்கு அடைய வேண்டிய புருஷார்த்தம் என்றும், அதற்கும் அவனே உபாயம் என்றும் காட்டுவதால் இதுவே வேதாந்தத்தின் ஸாரமான சொல். இந்த மந்திரத்தை இவ்விதமாக அறிந்து அறியப்பட்ட ஸ்வரூபத்துக்குத் தகுந்த உபாயத்தைச் செய்தால் முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரம் போய்விடும். (63)

---

## 28-வது த்வயாதிகாரம்

आकर्णितो वितनुते कृतकृत्यकक्ष्यां
आम्रेडितो दिशति यश्च कृतार्थभावम् ।
प्रत्यूषतां भजति संसृतिकालरात्रेः
पद्मासहायशरणागतिमन्त्र एषः ।। ६४ ।।

(ப-ரை) यः-எந்த மந்திரமானது, आकर्णितः-எம்பெருமான் கேட்கும்படி முமுக்ஷு ஒரு தடவை சொன்னுல், कृतकृत्यकक्ष्यां- கிருத

கிருத்யனுய் ஆவதை, वितनुते–செய்கிறதோ, आम्रेडित:- அடிக்கடி சொல்லப்பட்டால், कृतार्थभावं च- கிருதார்த்தனுக இருக்கும் தன்மையை யும், दिशति–கொடுக்கிறதோ, एष:- இது, पद्मासहायशरणागतिमन्त्र:- லக்ஷ்மீ பதியான எம்பெருமானிடத்தில் செய்யும் சரணுகதியின் மந்திரமாக இருந்து, संसृतिकालरात्रे:–ஸம்ஸாரமாகிய கொஞ்சமும் வெளிச்சம் இல்லாத இராத்திரிக்கு, प्रत्यूषतां–விடியற்காலமாயிருப்பதை, भजति–அடைகிறது.

(கருத்து) இந்த த்வயம் என்கிற மந்திரத்தை முமுக்ஷு எம்பெருமான் கேட்டுகும்படி ஒருதடவை சொன்னுல் அது அவனை கிருதகிருத்தியனுகச் செய்கிறது. அதாவது- அவன் செய்ய வேண்டிய வேலை இதினுல் செய்யப்பட்டதாக ஆகிவிடுகிறது. அதை அடிக்கடி சொல்லிக்கொண்டு காலத்தைப் போக்கினுல், அவன் ஸுகத்தை அடைவதினுல், அடைய வேண்டிய பிரயோஜநத்தை அடைந்துவிடுகிருன். ஒரு இருட்டான இராத்திரி விடியற்காலம் வந்த உடன் போய், பிற்பாடு பகல் வருவது போல், இந்த மந்திரத்தைக் கொண்டு பிரபத்தி பண்ணினுல் ஸம்ஸாரத் தைப் போக்கி, மேலே அளவில்லாத எம்பெருமானுடைய அநுபவத்தை அது கொடுக்கும். இவ்வித பெருமையை உடையது இம்மந்திரம்.

குறிப்பு:- ''पद्मासहाय'' என்கிற சொல்லால் முமுக்ஷு செய்கிற பிரபத்தி யில் லக்ஷ்மிக்கும் ஸம்பந்தம் உண்டு என்று காட்டப்படுகிறது. (64)

---

இதின் கடைசி சுலோகங்கள்.

**इदमष्टपदं व्यासे समासे षट्पदं विदु: ।**
**वाक्यं पञ्चपदैर्युक्तमित्याख्यातप्रधानकम् ।।**

(ப-ரை) व्यासे–श्रीमन्नारायणचरणौ என்பதை மூன்று சொற்களாகப் பிரித்தால், इदम्- இம்மந்திரமானது अष्टपदं–எட்டு சொற்கள் உள்ளது, समासे– அதை ஒரு சொல்லாக வைத்துக் கொண்டால், षट्पदं–ஆறு சொற்கள் உள்ளது, (என்று) विदु:–பெரியோர்கள் அறிகிருர்கள், पञ्चपदै:–ஐந்து சொற்களோடு, युक्तं–சேர்ந்த, वाक्यं–வாக்கியமானது, आख्यातप्रधानकम्– பிரபத்தி பண்ணுகிறேன் என்கிற வேலையைச் சொல்லுகிற சொல்லை முக்கியமாக உடையது.

---

एकं द्वयं त्र्यवयवं सुखलभ्यतुर्यं व्यक्तार्थपञ्चकमुपात्तषडङ्गयोगम् ।
सप्तार्णवीमहिमवद्विवृताष्टवर्णम् रङ्गे सतामिह रसं नवमं प्रसूते ।।

(ப-ரை) एकं- இது முக்கியமானது; द्वयं- இரண்டு அர்த்தத்தைச் சொல்லுவதாலே, த்வயம் என்று பேர்பெற்றது; त्र्यवयवं- மூன்று வாக்கியங் களுள்ளது; सुखलभ्यतुर्यं- வருத்தமில்லாமல் நான்காவது புருஷார்த்தமான மோக்ஷத்தை அடைவதற்கு உபாயமானது; व्यक्तार्थपञ्चकं - அறியவேண்டிய ஐந்து அர்த்தங்களைத் தெளிவாய்க் காட்டுவது; उपात्तषडङ्गयोगम्- ஐந்து அங்கங்களோடு கூடிய பிரபத்தி என்கிற யோகத்துக்கு ஸாதநமாய் இருப்பது; सप्तार्णवीमहिमवत्- ஏழு ஸமுத்திரங்களுடைய பெருமையை உடையது, (எல்லா அர்த்தங்களையும் அடக்கிக் கொண்டிருப்பது) विवृताष्टवर्णम्- எட்டு எழுத்தாகிற மூலமந்திரத்தின் அர்த்தத்தை விரிவாய்க் காட்டுவது; இவ்விதமான மந்திரமானது, इह-இந்த ஸம்ஸாரமண்டலத் திலே அருமையான, नवमं रसं- சாந்தி என்கிற ஒன்பதாவது ரஸத்தை, रङ्गे- ஸ்ரீரங்கத்தில், सतां-இருக்கிறவர்களுக்கு, प्रसूते-கொடுக்கிறது.

குறிப்பு:- (1) இரண்டு அர்த்தமாவது— உபாயம், புருஷார்த்தம். இவைகளுள் முன் பாதியால் உபாயத்தையும், பின் பாதியால் புருஷார்த் தத்தையும் காட்டுகிறது.

(2) மூன்று வாக்கியங்கள்- முன் பாதி ஒரு வாக்கியம். ''श्रीमते नारायणाय'' என்பது இரண்டாவது வாக்கியம். ''नमः'' என்பது மூன்ருவது வாக்கியம்.

(3) த்வயத்தாலே பிரபத்தியைப் பண்ணும் போது அதை ஒரே தடவை சொன்ஞல் போதும். மூலமந்திரத்தின் ஸித்தியை அடைவதற்காக புரச்சரணம் என்கிற ஒன்றைச் செய்ய வேண்டியது. அதாவது- அதை ஜபம் பண்ணிக்கொண்டிருக்ககும் போது ஹோமங்களையும், தர்ப்பணங்களை யும் ததீயாராதநங்களையுஞ்செய்வது.இந்த சிரமம் த்வயமந்திரத்திஞல் ஸித்தியடைவதற்கு வேண்டியதில்லை.

(4) 'श्रीमन्नारायण' என்பதாலே, அடையவேண்டிய எம்பெருமானும், ''प्रपद्ये''என்பதின் उत्तमपुरुषனாலே அடைகிற ஜீவனும், அந்தச் சொல்லா லேயே செய்யவேண்டிய உபாயமும், ''श्रीमते नारायणाय'' என்பதால் அடைய வேண்டிய பயனும், 'नमः' என்பதில் 'मस्'என்கிற பாகத்திஞல் அவனை அடையவதற்கு இதுவரையில் உண்டாகி இருந்த தடையும்-

ஆகிய ஐந்தும் சொல்லப்படுகின்றன. இவைகள் முக்கியமானவை களாகையால், அவைகளைக் காட்டுகிற இம்மந்திரம் உயர்ந்தது.

(5) ஐந்து அங்கங்களையும் அங்கியான பிரபத்தியையும் சேர்த்து ஷடங்கம்-ஆறு அங்கம் என்று பிரபத்தியைச் சொல்லி இருக்கிறது. இந்த அங்கங்கள் இன்னவை என்பதற்கு 27-வது சுலோகத்தைப் பார்க்க.

(6) நாடகசாலையைப் பார்க்கிறவர்களுக்கு நாடகத்தாலே எட்டு வித ரஸம் கிடைக்கும். ஸ்ரீரங்கத்தில் இருப்பவர்களுக்கு சாந்தி ரஸமும் இம்மந்திரத்தாலே கிடைக்கும்.

(7) 'रङ्ग' என்கிற சொல்லுக்கு நாடகம் ஆடுகிற இடம் என்றும், திவ்வியதேசமான ஸ்ரீரங்கம் என்றும் பொருள். வேறு ரஸங்களில் பற்று உள்ளவர்களாய் நாடகசாலைக்குப் போகிறவர்களுக்கும் சாந்திரஸம் பிரயாஸமில்லாமல் உண்டாகுமென்று இதனுல் காட்டப்படுகிறது. (64)

---

அவ:- த்வயமந்திரத்தின் பெருமையைப் பல உதாரணங்களாலே உறுதிப்படுத்துகிருர்:-

न वेदान्ताच्छास्त्रं न मधुमथनात् तत्त्वमधिकं
न तद्भक्तात् तीर्थं न तदभिमतात् सात्त्विकपदम् ।
न सत्त्वादारोग्यं न बुधभजनाद्बोधजनकं
न मुक्तेः सौख्यं न द्वयवचनतः क्षेमकरणम् ।। ६५ ।।

(பதவுரை) वेदान्तात् - வேதாந்தங்களைக்காட்டிலும், अधिकं शास्त्रं न- உயர்ந்த சாஸ்திரம் இல்லை, मधुमथनात्- மதுவைக் கொன்ற எம்பெருமானைக் காட்டிலும், अधिकं तत्त्वं न-உயர்ந்த தத்துவம் இல்லை, तद्भक्तात् - அவனிடத்தில் பக்தியுள்ளவனைக் காட்டிலும், अधिकं तीर्थं न- பாபத்தைப் போக்குவதில் உயர்ந்தது வேறு ஒன்றும் இல்லை, तदभिमतात्-அந்த பாகவதர்களுக்குப் பிடித்த இடத்தைக் காட்டிலும், न सात्त्विकपदम्- ஸத்துவகுணம் மேலிட்ட வேறு இடம் கிடையாது, सत्त्वात्- ஸத்துவகுணம் மேலிட்ட ஆஹாரத்தைக் காட்டிலும், आरोग्यं न - உடம்புக்கு ஆரோக்கியத்தை உண்டு பண்ணுவது வேறு ஒன்றுமில்லை, बुधभजनात् - நல்ல ஜ்ஞாநமுடைய ஆசாரியனை அடைவதைக் காட்டி லும், बोधजनकं न- தத்துவங்களின் அறிவை உண்டுபண்ணுவது வேறு

ஒன்று இல்லை, मुक्ते:-மோக்ஷத்தைக்காட்டிலும், न सौख्यं- ஸுகம் வேறென்றில்லை, द्वयवचनत:-த்வய மந்திரத்தைச் சொல்லுவதைக் காட்டிலும், क्षेमकरणम् न-அந்த க்ஷேமத்தை உண்டு பண்ணுவது வேறு இல்லை.

(கருத்து) பிரபத்திக்கு உபயோகப்படும் மற்ற மந்திரங்களைக் காட்டிலும் த்வயம் என்கிற மந்திரத்திற்கு பெருமை அதிகம். (65)

---

## 29-வது சரம சுலோகாதிகாரம்

**முதல் சுலோகம்**

य उपनिषदामन्ते यस्मादनन्तदयाम्बुधेः
त्रुटितजनताशोकः श्लोकः स्वयं समजायत ।
तमिह विधिना कृष्णं धर्मं प्रपद्य सनातनं
शमितदुरिताः शङ्कातङ्कत्यजः सुखमास्महे ॥ ६६ ॥

(பதவுரை) यः-எந்த எம்பெருமான், उपनिषदाम्-உபநிஷத்துக்களுடைய, अन्ते-ஸமீபத்தில் இருக்கிறனோ, अनन्तदयाम्बुधेः- அளவில்லாத தயா ஸமுத்திரமாகிய, यस्मात् - எவனிடத்திலிருந்து, श्लोकः-சரம ஶ்லோகமானது, त्रुटितजनताशोकः-ஜநங்களுடைய சோகத்தைப் போக்குவதாய், स्वयं समजायत- தானே உண்டாயிற்றோ, तं- அந்த,सनातनं धर्मं- எப்போதுமிருக்கிற உபாயமான, कृष्णं-கிருஷ்ணனை, विधिना-முறைப்படி, प्रपद्य-பிரபத்தியாலேயே அடைந்து, शमितदुरिताः-பாபங்கள் போனவர்களாயும், शङ्का-மோக்ஷம் கிடைக்குமோ, கிடைக்காதோ என்கிற ஸந்தேஹத்தையும், आतङ्क- நாம் செய்யும் பாபங்கள் போகுமோ போகாதோ என்கிற பயத்தையும், त्यजः- விட்டவர்களாய், सुखम् आस्महे-ஸுகமாய் இருக்கிறோம்.

(கருத்து) எம்பெருமானிடத்தில் பிரபத்தி செய்து பாபங்களைக் கழித்து, ஸந்தேஹத்தையும் பயத்தையும் விட்டு ஸுகமாக இருக்கிறோம்.

குறிப்பு:-1) உபநிஷத்துக்களுக்கு ஸமீபத்தில் என்று சொன்னதாலே, எம்பெருமான் ஒருவன் இருக்கிறன் என்றும் அவன் இப்படி இருக்கிறன் என்றும் உபநிஷத்து வாக்கியங்கள் ஸ்வரஸமாய் எல்லாம் ஒத்துச் சொல்லுகின்றன என்பது காட்டப்படுகிறது. இதையும், சொற்களுக்கு

ஏற்பட்ட பொருளை விட்டு விட்டு அந்தந்த இடங்களுக்குத் தகுந்தபடி பொருளை வைத்துக் கொண்டு அர்த்தம் பண்ணவேண்டிய நிர்ப்பந்த மில்லை, இது ஸ்வரஸம் என்பதின் பொருள்.

2) சரமசுலோகமானது தானுய் வந்தது என்பதற்கு ஜநங்களிடத்தில் கருணையாலே சொல்லப்பட்டது; அர்ஜுநனுக்காக மாத்திரம் சொல்லப் பட்டது அன்று என்று கருத்து.

5) சுலோகத்தில் ''विधिना'' என்பதால் சரமசுலோகத்தின் முதற் பாதத்தினுல் சொன்னபடி அகிஞ்சநலுய் பிரபத்தி பண்ணுவதையும், 'प्रपद्ये' என்பதால் இரண்டாவது பாதத்தின் அர்த்தமும், 'शमितदुरिता:' என்பதால் 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்பதின் அர்த்தமும், 'शङ्कातङ्कत्यज:' என்பதால் 'मा शुच:' என்பதின் அர்த்தமும் காட்டப்படுகின்றன. (66)

---

அவ:- சரமசுலோகத்தில் சொன்ன பிரபத்தியானது அங்கபிரபத்தி மாத்திரபரம் அன்று. நேராக மோக்ஷத்திற்கும் உபாயம் என்று சுலோகத் தாலே அருளிச் செய்கிருர்-

दुर्विज्ञानैर्नियमगहनैर्दूरविश्रान्तिदेशैः
बालानर्हैर्बहुभिरयनैः शोचतां नः सुपन्थाः ।
निष्प्रत्यूहं निजपदमसौ नेतुकामः स्वभूम्ना
सत्पाथेयं किमपि विदधे सारथिः सर्वनेता ॥ ६७ ॥

(பதவுரை) दुर्विज्ञानैः-அறியமுடியாதவைகளாயும், नियमगहनैः- அவைகளுக்கு ஏற்பட்ட நியமங்களாலே செய்ய முடியாத வைகளாயும், दूरविश्रान्तिदेशैः-சிரமபரிஹாரம் பண்ணுகிற இடம் வெகு தூரத்தில் இருப்ப வைகளாயும், (வெகுகாலம் கழித்துப் பலனைக் கொடுப்பவைகளாயும்) बालानर्हैः-அகிஞ்சநனுக்குத் தகாதவைகளாயும் இருக்கிற, बहुभिरयनैः- அநேக உபாயங்களாலே, शोचतां नः-வருத்தப்படுகிற நமக்கு, सुपन्थाः- நல்ல வழியாய், सर्वनेता-எல்லாருக்கும் யஜமாநனுய், असौ सारथिः- அர்ஜுநனுக்கு ஸாரத்யம் பண்ணிக்கொண்டிருந்த இந்த எம்பெருமான், स्वभूम्ना-தன் பெருமையினுலே, निष्प्रत्यूहं-ஒரு தடையும் இல்லாமல், निजपदम्- தன்னுடைய இடத்திற்கு, नेतुकामः-கொண்டுபோக வேண்டுமென்கிற ஆசையை உடையவனுய், किमपि-விலக்ஷணமான,

सत्पाथेयं-நல்ல கட்டுசாதமாகிய பிரபத்தியை, विदधे- ஏற்பாடு செய் திருக்கிருர்.

(கருத்து) ஒருவன் ஊருக்குப்போகும் போது வருத்தப்படாமல் அந்த இடம் போவதற்கு வேண்டிய கட்டுஸாதத்தைக் கொடுத்து போ என்று சொல்லுவது போல, எம்பெருமான் தன்னிடம் நம்மை அழைத்துக் கொண்டு போக பிரபத்தி என்கிற உபாயத்தை ஏற்படுத்தி இருக்கிருன். மோக்ஷத்திற்கு உபாயங்களாகிய பக்தி முதலானவைகளைச் செய்யும் வழி தெரியாமலும், அதைச் செய்ய சக்தி இல்லாமலும், அவைகள் பலன் கொடுக்கிற வரையில் பொறுக்க முடியாமலும் இந்த காரணங்களால் அகிஞ்சநர்களாயிருந்து வருத்தப்படுகிற நம்மைப் பார்த்து கருணையிஞல் இதை உபதேசித்திருக்கிருன்.

குறிப்பு:- அவரவர்களுக்கு வேண்டியவைகளை அடைவதற்கு உபாயங்களாகச் சொல்லப்பட்டவைகள் ஸூக்ஷ்மங்களாய்க் கண்டுபிடிக்க முடியாமலிருக்கிற வழிகள் போலிருக்கின்றன. காடுகள் நெருங்கி இருப்பதாலே அவைகளில் போவது கஷ்டம்; போய்ச்சேர்ந்து வருத்தம் நீங்கும்படியான இடங்கள் வெகுதூரத்தில் இருக்கின்றன. ஆகையாலே அவைகள் நம்மைப் போன்றவர்களுக்குத் தகுந்தவைகள் அன்று. அவைகளில் போய் கஷ்டப்பட வேண்டாம். இந்த இலகுவான வழியாய் போங்கள் என்று சொல்லி நமக்குக் கட்டு ஸாதம் கட்டிக்கொடுத்திருக்கிருர் என்று கருத்து. (67)

---

அவ:- இந்த அதிகாரத்தில் சொன்ன சரமசுலோகத்தின் அர்த்தமானது நல்ல ஸம்பிரதாயத்தின் வழியாய் வந்திருக்கிறது என்றும், அதைப் பெரிய ருஷிகளும் கொண்டாடுகிருர்கள் என்றும் கடைசி சுலோகத்தில் அருளிச் செய்கிருர்:-

व्यासाम्नायपयोधिकौस्तुभनिभं हृद्यं हरेरुत्तमं
श्लोकं केचन लोकवेदपदवीविश्वासितार्थं विदुः ।
येषामुक्तिषु मुक्तिसौधविशिखासोपानपङ्क्तिष्वमी
वैशम्पायनशौनकप्रभृतयः श्रेष्ठाः शिरःकम्पिनः ।। ६८ ।।

(பதவுரை) व्यासाम्नाय-வியாஸருடைய வேதமாகிய, पयोधि- பாற்கடலிருந்து உண்டான, कौस्तुभनिभं-கௌஸ்துபமணிபோல், हरेः हृद्यं-

எம்பெருமானுக்குப் பிடித்ததாய் இருக்கிற, **उत्तमं श्लोकं** -கடைசி சுலோ கத்தை, **केचन**-சில ஆசாரியர்கள், **लोकवेदपदवी**-உலக வழக்கத்தாலும், வேதத்தின் நடையாலும், **विश्वासितार्थं**-நம்பிக்கை உண்டு பண்ணப்பட்ட அர்த்தத்தை உடையது என்று, **विदुः**-அறிகிறார்கள். **येषाम्** -எந்த ஆசாரியர் களுடைய **मुक्तिसौध**- மோக்ஷமாகிற அரண்மனைக்குப் போகும்படியான, **विशिखा** -வீதிக்குக் கொண்டுபோய்விடும், **सोपानपङ्क्तिषु** -படிக்கட்டுக்கள் போலிருக்கிற, **उक्तिषु**-திவ்வியஸூக்திகளில், (அவைகளைக் கேட்டு) **अमी**-இந்த **वैशम्पायनशौनकप्रभृतयः**-வைசம்பாயநர் சௌநகர் முதலான, **श्रेष्ठाः**-உயர்ந்த பெரியோர்கள், **शिरःकम्पिनः**-ஸந்தோஷப் பட்டு நன்றாக இருக்கிறது என்று தலையை அசைக்கிறார்கள்.

(கருத்து) திருப்பாற்கடலில் உண்டான கௌஸ்துபம் என்கிற மணிபோல மஹாபாரதத்தினால் வெளிப்படுத்தப்பட்ட சரம சுலோகமானது எம்பெருமானுக்கு மிகவும் பிடித்ததாக இருக்கிறது. உலகத்தில் அறிவில்லாதவனும் தன்னைச் சரணமாகப் பற்றினவனை இரக்ஷிக்கிறான். வேதத்திலும் சரணாகதி பண்ணினவனை இரக்ஷிப்பது பல இடங்களில் சொல்லி இருக்கிறது. இதைப் பார்த்து சரமசுலோகத்தில் சொன்ன விஷயம் எல்லாருக்கும் நம்பிக்கை உண்டாகும் என்று நம் ஆசாரியர்கள் சொல்லி இருக்கிறார்கள். அவர்கள் ஸூக்திகளைக் கேட்டு வைசம்பாயநர், சௌநகர் முதலான பெரிய ருஷிகளும் வியாஸர் அபிப்பிராயத்தை நன்றாய் அறிந்து சொல்லுகிறார்கள் என்று ஸந்தோஷப்படுகிறார்கள். அரண்மனைபோல் மோக்ஷம். அதற்குப் போகும் வழிபோல் பிரபத்தி. அந்த வழியில் கொண்டு சேர்க்கும் படிக்கட்டுகள் போல் ஆசாரியர்களுடைய ஸ்ரீஸூக்திகள். இவைகள் ஒருவனைப் பிரபத்தி வரையில் கொண்டுபோய் விடுகின்றன.

குறிப்பு:- திருப்பாற்கடலில் உண்டான ஐராவதம் முதவானவைகளை விட்டு கௌஸ்துபத்தையே எம்பெருமான் எடுத்துக் கொண்டான். அது போல சரமசுலோகம் எம்பெருமானுக்குப் பிடித்தது என்று கருத்து. (68)

---

## 30-வது ஆசாரிய கிருத்தியாதிகாரம்

அவ:- மேல் இரண்டு அதிகாரங்களாலே ஆசாரியன் செய்ய வேண்டிய வேலைகளையும், சிஷியன் செய்யவேண்டிய வேலைகளையும் அருளிச் செய்கிறார்

அவைகளில் ஆசாரிய கிருத்தியாதிகாரத்தில் முதல் சுலோகம்.

अधिजिगमिषुराद्यं धाम दिव्यं त्रिधाम्नः
श्रुतविविधपरीक्षाशोधिते क्वापि पात्रे ।
अनघगुणदशायामाहितस्नेहमार्यः
प्रदिशति निरपायं सम्प्रदायप्रदीपम् ।। ६९ ।।

(பதவுரை) त्रिधाम्नः-மூன்று இடங்களை இருப்பிடமாக உடைய எம்பெருமானுடைய, आद्यं-எப்போதும் இருக்கிற, दिव्यं-ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ள, धाम-இடத்தை, अधिजिगमिषुः-அடையவேண்டும் என்கிற ஆசையையுடைய, आर्यः-ஆசாரியன், श्रुत-வேதத்தினுல் சொல்லப்பட்ட, विविध-வெவ்வேருன, परीक्षा-பரீக்ஷைகளாலே, शोधिते-தோஷம் இல்லாதவன் என்று அறியப்பட்ட, क्वापि-ஒரு பாத்திரமாகிய சிஷியனிடத்தில், अनघगुणदशायाम्-தோஷம் கலப்பில்லாமல் நல்ல குணங்களை உடையவனுக இருக்கும் காலத்தில், निरपायं-கெடுதி யில்லாமல் தன்னிடம் வந்திருக்கிற, सम्प्रदायप्रदीपम्-ஸம்பிரதாயமாகிற விளக்கை, आहितस्नेहम् - வைக்கப்பட்ட கருணையோடு கூடினதாய், प्रदिशति- கொடுக்கிருன்.

(கருத்து) ஒருவன் விளக்குப் பாத்திரத்தை அழுக்கு இல்லாமல் நன்ருய் அலம்பி, அதில் அழுக்கில்லாத திரியை வைத்து, எண்ணையை வார்த்து விளக்கை ஏற்றுவதுவோல் ஆசாரியன் வைகுண்டத்திற்குப் போக வேண்டும் என்கிற ஆசை உண்டான போது ஒரு சிஷியனைக் கண்டு பிடித்து, அவனிடத்தில் ஒருவித தோஷமும் இல்லை என்று பலபடியால் பரிசோதித்து, அவனிடத்தில் கருணையினுலேயே தனக்கு ஒருவிதக் குறைவில்லாமல் வந்திருக்கும் ஸம்பிரதாயத்தைக் கொடுத்து விட்டுப் போகிருன்.

குறிப்பு:-(1) விளக்குப் பாத்திரம்போல் சிஷியன். வர்த்தி போல் அவன் நல்ல குணமுள்ளவனுய் இருக்கும் காலம். 'दशा' என்கிற சொல் லுக்கு வர்த்தி என்றும், காலமென்றும் பொருள். எண்ணைபோல் ஆசாரி யன் கருணை. ஸ்நேஹம் என்கிற சொல்லுக்கு இந்த இரண்டும் பொருள்.

(2) ஆசாரியன் ஸம்பிரதாயத்தைத் தகாதவர்களிடம் கொடுக்காமல் வைத்திருந்து தான் இந்த லோகத்தை விட்டுப் போகும் போது ஒரு தகுந்த

சிஷியனிடத்தில் கொடுத்துவிட்டுப் போகவேண்டியது. இப்படி ஸம்பிரதா யத்தை இரக்ஷிப்பதும் அதை நல்ல கிஷியனிடத்தில் கொடுத்து விட்டுப் போவதும் ஆசாரியன் செய்ய வேண்டிய வேலை.

(3) எம்பெருமான் இருக்கும் மூன்று இடங்களாவன- வைகுந்தமும், திருப்பாற்கடலும், ஸூரிய மண்டலமும். (69)

---

அவ:- தெரியவேண்டிய விஷயங்களை சுருக்கமாக அறிய வேண்டு மவர்களுக்கு எப்படி ஆசாரியர்கள் உபதேசம் பண்ணுவார்கள் என்று அடுத்த சுலோகத்தாலே அருளிச் செய்கிறார்-

प्रत्येयस्तु विलक्षणः प्रकृतितस्त्राता पतिस्तत्परः
तस्मिन्नात्मभरार्पणम् हिततमम् तच्छेषवृत्तिः फलम् ।
इत्थं तत्त्वहिते पुमर्थ इति नस्त्रेधा विभक्तं धनं
दायत्वेन दयाधनाः स्वयमदुर्दत्तात्मनां देशिकाः ।।

(பதவுரை) (ஜீவன்) प्रकृतितः-பிரகிருதியைக் காட்டிலும், विलक्षणः- வேறானவனென்று, प्रत्येयः-அறியத் தகுந்தவன், तत्परः-அவனைக் காட்டிலும் வேறான எம்பெருமான், त्राता-ரக்ஷகன், पतिः-சேஷி, तस्मिन्- அவனிடத்தில், आत्मभरार्पणम्- தன்னை இரக்ஷித்துக் கொள்ளும் சுமையைக் கொடுப்பது, हिततमम्-மிகவும் அநுகூலமானது, तच्छेषवृत्तिः- அவனுக்குக் கைங்கரியம் செய்வது, फलम्- அதினுடைய பலம், इत्थं- இப்படி, तत्त्वहिते-தத்துவம், உபாயம், पुमर्थः- புருஷார்த்தம், इति-இப்படி, त्रेधा विभक्तं-மூன்று விதமாகப் பிரிக்கப் பட்டிருக்கிற, धनं- தனத்தை, दत्तात्मनां- அவர்களி டத்தில் இரக்ஷிக்கவேண்டிய பொருளாகக் கொடுக்கப் பட்டிருக்கிற, नः-நமக்கு, दयाधनाः-கருணையையே தநமாக உடைய, देशिकाः-ஆசாரியர்கள், दायत्वेन-தகப்பன் ஸொத்து பிள்ளைக்கு வருவது போல், स्वयं अदुः- தானே கொடுத்தார்கள்.

(கருத்து) ஜீவன் உடம்பையும் இந்திரியங்களையும் காட்டிலும் வேறு. அவனைக் காட்டிலும் வேறான எம்பெருமான் அவனை இரக்ஷிக்க வேண்டியவன். அவனுக்கு சேஷி. அவனிடத்தில் ஜீவன் தன்னை இரக்ஷிக்கும் சுமையைக் கொடுக்க வேண்டியது இதுதான் அவனுக்கு மிகவும் நல்லது. இதனால் எம்பெருமானுடைய கைங்கரியம் கிடைக்கும்

என்று நம்மை தாஸர்களாகக்கொடுக்கப்பட்ட ஆசாரியர்கள் வெறும் கருணையினுலேயே இந்த விஷயங்களைச் சொல்லிக் கொடுத் திருக்கிருர்கள்.

குறிப்பு:- 1) இந்த சுலோகத்தில் சொன்ன விஷயங்கள் மூலமந் திரதின் அர்த்தம்.

2) "पुमर्थ:" என்று பிரித்துச் சொன்னதால், அதுவே பிரதாநம் என்றும், மற்றை இரண்டும் அதற்காக வேண்டியது என்றும் காட்டப்படுகிறது. (69)

---

அவ:- ஆசாரியன் செய்யவேண்டிய இன்னெரு வேலையை கடைசி சுலோகத்தாலே அருளிச் செய்கிருர்-

निरवाधिदयादिव्योदन्वत्तरङ्गनिरङ्कुशैः
नियमयति यः शिष्यान् शिक्षाक्रमैर्गुणसङ्क्रमैः ।
अचरमगुरोराज्ञापारंपरीपरवानसौ
न परमिह तांस्तल्लक्षेण स्वमप्यभिरक्षति ।। ७० ।।

(பதவுரை) य:-எந்த ஆசாரியன், निरवधिदया-அளவில்லாத கருணையாகிய, दिव्योदन्वत्-விலக்ஷணமான ஸமுத்திரத்தினுடைய, तरङ्गनिरङ्कुशैः-அலைகள்போலே தடை இல்லாமல் இருக்கிற, गुणसङ्क्रमैः- நல்ல குணங்களைச் சேர்க்கும்படியான, शिक्षाक्रमैः-சிக்ஷை பண்ணுகிற வழிகளாலே, शिष्यान्-சிஷியர்களை, नियमयति-நியமநம் பண்ணுகிருனே, असौ- அந்த ஆசாரியன், अचरमगुरो:-முதல் குருவான எம்பெருமானு டைய, आज्ञापारंपरीपरवान्-பரம்பரையாய் உபதேசிக்கப்பட்டு வருகிற ஆஜ்ஞைக்கு உட்பட்டவனுய், तान् परं-அவர்களை மாத்திரமன்று, इह- சிக்ஷைபண்ணும் போது, तल्लक्षेण-அந்த வழியாய், स्वमपि-தன்னையும் கூட, अभिरक्षति-இரக்ஷித்துக் கொள்ளுகிருன்.

(கருத்து) ஆசாரியன் தன்னுடைய சிஷியர்களுக்கு நல்ல குணங்கள் வருவதற்காக அவர்களைச் சிக்ஷிக்கவேண்டியது. இதுவும் தயையினுடைய வேலை. அப்படிச் செய்வதினுலே சிஷியர்களை மாத்திரம் இரக்ஷிக் கிருனில்லை. தன்னையும் அந்த வேலையினுலேயே இரக்ஷித்துக் கொள்ளுகிருன்.

குறிப்பு:- ஆசாரியன் ஸம்பிரதாயமாகிற விளக்கைத் தகுந்த ஒரு சிஷியனிடம் கொடுக்காமல் திருநாட்டுக்குப் போகக்கூடாது என்று எம்பெருமான் உத்திரவு செய்திருக்கிருன். ஆகையால் அதற்கு உட்பட்டு எவனுவதொரு சிஷியனைக் கண்டு பிடித்து, அவனுக்கு நல்ல குணங் களைப் புகவிட்டு அவனிடம் ஸம்பிரதாயத்தைக் கொடுக்க வேண்டியது. இப்படிச் செய்வதினுலே தன்னையும் எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறினுன் என்கிற குற்றம் இல்லாமல் இருக்கும்படி இரக்ஷித்துக் கொள்ளுகிருன். (70)

---

## 31-வது சிஷிய கிருத்தியாதிகாரம்

அவ:- உபதேசத்தைப் பெறத் தகுந்த சிஷியனுக்கு இருக்கவேண்டிய குணங்களை முதல் சுலோகத்தாலே அருளிச் செய்கிருர்-

अशिथिलगुरुभक्तिस्तत्प्रशम्सादिशील:
प्रचुरबहुमतिस्तद्वस्तुवास्त्वादिकेऽपि ।
गुणवति विनियोक्तुं गोपयन् सम्प्रदायं
कृतविदनघवृत्ति: किं न विन्देन्निधानम् ।। ७१ ।।

(பதவுரை) अशिथिलगुरुभक्ति:- ஆசாரியனிடத்தில் குறைந்து போகாத பக்தியை உடையவனுயும், तत्प्रशम्सादिशील:-அவரைக் கொண்டாடு வதையே ஸ்வபாவமாக உடையவனுயும், तद्वस्तु-அவருடைய ஸொத் துக்கள், वास्त्वादिकेऽपि-வீடு முதலானவைகளிலும், प्रचुरबहुमति: गुणवति- மிகுந்த கௌரவ முள்ளவனுயும், गुणवति-நல்ல குணங்களை உடைய சிஷியனிடத்தில், सम्प्रदायं-ஸம்பிரதாயத்தை, विनियोक्तुं-கொடுப்பதற்காக, गोपयन्-இரக்ஷித்துக் கொண்டிருக்கிறவனுயும், कृतवित्-ஆசாரியன் செய்த உபகாரத்தை நினைத்துக் கொண்டிருக்கிறவனுயும், अनघवृत्ति:-குற்ற மில்லாமல் எம்பெருமானுடைய ஆஜ்ஞைகளையும், அநுஜ்ஞைகளையும் செய்து கொண்டிருக்கிறவன், निधानं-எம்பெருமானுகிய நிதியை, न विन्देत् किं-அடையமாட்டானு?

(கருத்து) நல்ல சிஷியன் தன்னுடைய ஆசாரியன் செய்த உப காரத்தை எப்போதும் நினைத்துக்கொண்டு அவனிடத்தில் இருக்கும் பக்தி

குறையாமல் அவனைக் கொண்டாடிக்கொண்டு அவனைச் சேர்ந்தவை களில் பிரீதி உள்ளவனுக இருக்கவேண்டியது. தனக்குக் கிடைத்த ஸம்பிரதாயத்தை ஒரு நல்ல சிஷியனிடத்தில் கொடுக்கி றவரையில் அதை இரக்ஷித்துக் கொண்டு வரவேண்டியது. எம்பெருமானுடைய ஆஜ்ஞா கைங்கரியங்களையும் அநுஜ்ஞா கைங்கரியங்களில் தன்ஞல் செய்யக் கூடியவைகளையும் செய்து கொண்டிருக்க வேண்டியது. இப்படி இருந்தால் அவன் எம்பெருமானிடம் நிச்சயமாய் போய்ச் சேருவன்.

குறிப்பு:- प्रशम्सादि என்பதில் ''आदि'' என்கிற சொல்லாலே ஆசாரியனுக்கு வேலை செய்ய வேண்டியது காட்டப் படுகிறது. (71)

---

अध्यासीनतुरङ्गवक्त्रविलसज्जिह्वाग्रसिंहासनात्
आचार्यादिह देवतां समधिकामन्यां न मन्यामहे ।
यस्यासौ भजते कदाचिदजहद्भूमा स्वयं भूमिकां
मग्नानां भविनां भवार्णवसमुत्ताराय नारायणः ॥ ७२ ॥

(பதவுரை) अध्यासीनतुरङ्गवक्त्र-ஹயக்கிரீவன் எழுந்தருளியிருக்கிற, विलसत्-விளங்குகிற, जिह्वाग्रसिंहासनात् -நுனி நாக்காகிற ஸிம்ஹா ஸநத்தை உடைய, आचार्यात् -ஆசாரியனைக் காட்டிலும், इह-இந்த லோகத்தில், अन्यां देवतां-வேறு தேவதையை, समधिकां-உயர்ந்ததாக, नमन्यामहे- நாம் எண்ணவில்லை, मग्नानां भविनां-ஸம்ஸாரத்தில் முழுகி யிருக் கிறவர்களுடைய, भवार्णव समुत्ताराय-ஸம்ஸாரமாகிய ஸமுத் திரத்தைத் தாண்டுவிக்கிற வேலைக்காக, असौनारायणः-அந்த எம்பெரு மான், अजहद्भूमा-தன்னுடைய பெருமையைக் கொஞ்சங்கூட விடாத வஞய்க் கொண்டு, कदाचित्-ஒருகாலத்தில், यस्य भूमिकां-எந்த ஆசாரிய னுடைய வேஷத்தை, स्वयं -தானே, भजते -அடைகிருஞே.

(கருத்து) ஆசாரியனே எல்லா தேவதைகளைக் காட்டிலும் உயர்ந் தவன். எல்லாரையும் ரக்ஷிக்கிற எம்பெருமானும் ஸம்ஸார ஸமுத்திரத்தில் மூழ்கிக் கிடக்கிறவர்களைக் கரையேற்றுவதற்காக ஆசாரியனுக வருகிருன். அப்படி வராமல் ஒருவனுக்கு மோக்ஷத்தைக் கொடுக்க அவனுலும் முடியாது. ஆசாரியன் செய்யும் உபதேசங்களெல்லாம் அவர் நுனி நாக்கில் எழுந்தருளி இருக்கும் ஹயக்ரீவன் உபதேசங்களே.

குறிப்பு:-(1) எம்பெருமானிடத்தில் போல ஆசாரியனிடத்திலேயும் அளவில்லாத பக்தியைப் பண்ணவேண்டும் என்று காட்டப் படுகிறது.

குறிப்பு:-(2) "अन्याम्" என்பதால் லக்ஷ்மீபதியான எம்பெருமானையும் ஆசாரியனைக் காட்டிலும் உயர்ந்த தேவதையாக எண்ணமாட்டோம் என்று கருத்து.

(3) "कदाचित्" என்பதற்கு யாத்ருச்சிகம் முதலான ஸுகிருதம் உண்டாகும் காலத்தில் என்று கருத்து.

(4) ஸம்ஸாரிகளைக் கரையேற்றுவதற்காக எம்பெருமானே ஆசாரிய ரூபமாக வருகிறபடியினுல் அவருடைய ரூபத்தைக் காட்டிலும் ஆசாரிய ரூபம் உயர்ந்தது என்று ஏற்படுகிறது. அது உயர்ந்ததாக இல்லாவிட்டால், அந்த ரூபத்தை எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. (72)

---

## 32-வது நிகமநாதிகாரம்

முதல் சுலோகம்

करबदरितविश्वः कश्चिदाचार्यदृष्टया
मुषितनिखिलमोहो मूलमन्त्रादिभोगः ।
सगुणविषयसिद्धौ सम्प्रदायं प्रयच्छन्
सुचरितसिलहारी सूरिबृन्दाभिनन्द्यः ।। ७३ ।।

(பதவுரை) कश्चित्-ஒருவன், आचार्यदृष्टया-ஆசாரியனுடைய கடாக்ஷத்தாலே, करबदरितविश्वः-உள்ளங்கையில் வைத்த இலந்தைப் பழம்போல் காட்டப்பட்ட தத்துவத்தையும், உபாயத்தையும், புருஷார்த்தத்தையும் உடையவனுய், मुषितनिखिलमोहः-எல்லா மயக்கங்களும் போனவனுய், मूलमन्त्रादिभोगः-மூலமந்திரம் முதலான மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தத்தைத் தெரிந்து அநுபவித்துக் கொண்டு, सगुणविषयसिद्धौ-நல்ல குணமுள்ள சிஷியன் அகப்பட்ட போது, सम्प्रदायं-ஸம்பிரதாயத்தை, प्रयच्छन्-அவனிடத்தில் கொடுப்பதற்காக, सुचरितसिलहारी-நெல்லைப் பொருக்கி, அதனுல் ஜீவிக்கிறவர்கள்போல், நல்ல சரித்திரம் எங்கெங்கே அகப்படுமோ அங்கங்கே அதை எடுத்துக் கொண்டு இருந்து, (வைகுந்தம்

போய்) **सूरिबृन्दाभिनन्द्यः**-நித்தியஸூரிகளால் கொண்டாடத் தகுந்தவனாக ஆகிறான்.

குறிப்பு:- இது நிகமநாதிகாரத்தில் முதல் சுலோகமான படியால் முன் அதிகாரங்களின் அர்த்தங்கள் சுருக்கமாக இதில் காட்டப்படுகின்றன. "**आचार्यदृष्टचा**" என்பதால் குருபரம்பரா ஸாரத்தின் அர்த்தமும்; "**विश्वः**" என்பதால் தத்துவங்களைக் காட்டுகிற முதல் ஆறு அதிகாரங்களின் அர்த்தமும், உபாயத்தைக் காட்டுகிற மேல் ஆறு அதிகாரங்களின் அர்த்தமும், புருஷார்த்தத்தைக் காட்டுகிற மேல் பத்து அதிகாரங்களின் அர்த்தமும்; "**मुषितनिखिलमोहः**" என்பதால் அதிவாதங்களால் உண்டாகும் கலக்கங்களைத் தெளிவிக்கிற இரண்டாவது பாகத்தில் அர்த்தமும்; "**मूलमन्त्रादिभोगः**" என்பதாலே மூன்றாவது பாகத்தின் அர்த்தமும்; மூன்றாவது பாகத்தாலே ஆசாரிய கிருத்தியாதிகாரம், சிஷ்ய கிருத்தியாதிகாரம் இவைகளின் அர்த்தமும் காட்டப்படுகின்றன. (73)

---

கடைசி சுலோகங்கள்.

इति यतिराजमहानसपरिमलपरिवाहवासितां पिबत ।
विबुधपरिषन्निषेव्यां वेदान्तोदयनसम्प्रदायसुधाम् ।। ७४ ।।

(பதவுரை) **इति**-இப்படி, **यतिराज**-ஸ்ரீபாஷியகாரருடைய, **महानस**-மடைப்பள்ளியினுடைய, **परिमलपरिवाह**-வாஸனையின் பெருக்காலே, **वासितां**-வாஸனையூட்டப்பட்ட, **विबुधपरिषन्निषेव्यां**-நல்ல அறிவுள்ளவர்களின் கூட்டத்தாலே அநுபவிக்கக் கூடிய, **वेदान्तोदयन**-தர்க்கசாஸ்திரத்தில் உதயநரைப் போல, வேதாந்தத்தில் பிரஸித்தி அடைந்திருந்த கிடாம்பி ஆச்சானுடைய, **सम्प्रदायसुधाम्**-ஸம்பிரதாயமாகிய அமிருதத்தை, **पिबत**-பாநம் பண்ணுங்கோள்.

(கருத்து) அமிருதத்தை எப்படி தேவர்கள் பாநம் பண்ணி சாவில்லாமையே அடைந்தார்களோ, அப்படியே கிடாம்பி ஆச்சானுடைய ஸம்பிரதாயத்தை ஸேவித்து அறிவுள்ளவர்கள் மோக்ஷத்தை அடையலாம்.

குறிப்பு:- (1) ஆச்சான் ஸ்ரீபாஷியகாரருக்கு மடைப்பள்ளி கைங்கரியம் செய்துவந்தார். ஆகையினால் அவருடைய ஸம்பிரதாயத்திற்கு

மடைப்பள்ளி வாஸனை இருக்கிறது என்று காட்டப்பட்டது.

(2) தானே இனிமையாயிருக்கும் ஒரு போஜநவஸ்துவுக்குத் திருமணப்பாறினுல் போக்கியத்தை அதிகப்படுவது போல், ஆச்சான் ஸம்பிரதாயத்திற்கு ஸ்ரீபாஷியகாரருடைய பக்ஷபாதமும், கரைபுரண்ட கிருபையும், அதன் விஷயமாக வந்த உபதேசமும் சேர்ந்திருப்பதால் அது மற்ற ஸம்பிரதாயங்களைக் காட்டிலும் உயர்ந்தது என்று காட்டப் படுகிறது.

(3) ''परिषत्'' என்பதற்கு இந்த அமிருதத்தை நாலு பேருடன் கூட இருந்து அநுபவிக்க வேண்டியது என்று கருத்து. (74)

---

அவ:- இந்த கிரந்தத்தை ரஸம் தெரியாதவர்கள் ஆதரியாவிட்டால் ஒரு குறைவும் இல்லை என்று அருளிச் செய்கிருர்:-

कलकण्ठगणास्वाद्ये कामस्यास्त्रे निजाङ्कुरे ।
निम्बवृत्तिभिरुद्गीर्णे न चूतः परितप्यते ।। ७५ ।।

(பதவுரை) कलकण्ठगण-இனிமையான குரலை உடைய குயில் கூட்டங் களாலே, आस्वाद्ये-ருசியோடு சாப்பிடத் தகுந்த, कामस्यास्त्र-மன்மதனுக்குப் பாணமாயிருக்கிற, निजाङ्कुरे- தன்னுடைய தளிரானது,/ निम्बवृत्तिभिः - வேப்பிலையைக் கொண்டு பிழைக்குமவைகளால், उद्गीर्णे- தள்ளப்பட்ட போதிலும், चूतः-மாமரமானது, न परितप्यते-வருத்தப்படுகிறதில்லை.

(கருத்து) மாமரத்தின் தளிரைக் கோகிலம் ஸந்தோஷமாய் சாப்பிடு கிறது. அதை வேப்பிலையையே சாப்பிடுகிறவைகள் அவைகளை வேண்டாமென்று தள்ளிவிட்டால் மாமரத்திற்கு வருத்தமில்லை. அப்படியெ இந்த கிரந்தத்தை ரஸம் தெரிந்த வித்வான்கள் அநுபவிப் பார்கள். ரஸம் தெரியாதவர்கள் ஆதரிக்காவிட்டால் நான் வருத்தப்பட மாட்டேன் என்று ஸ்ரீதேசிகன் கருத்து.

---

அவ:- இந்த கிரந்தத்தை எழுதினது ஒரு பிரயோஜநத்தை உத்தேசித்து அன்று என்றும், இப்படி தன் சிஷியர்களுமிருக்கவேண்டும் என்றும் ஒரு சுலோகத்தாலே அருளிச்செய்கிருர்:-

निर्विष्टं यतिसार्वमौमवचसामावृत्तिभिर्यौवनं
निर्धूतेतरपारतन्त्र्यनिरया नीताः सुखं वासराः ।
अङ्गीकृत्य सतां प्रसत्तिमसतां गर्वोऽपि निर्वापितः
शेषायुष्यपि शेषिदम्पतिदयादीक्षामुदीक्षामहे ।। ७६ ।।

(பதவுரை) यतिसार्वमौमवचसाम्-யதிஶ்ரேஷ்டரான ஸ்ரீபாஷியகாரர் ஸூக்திகளுடைய, आवृत्तिभिः- அடிக்கடி படிப்பதாலே, यौवनं- யௌவந மானது, निर्विष्टं-அநுபவிக்கப்பட்டது, निर्धूतेतरपारतन्त्र्य निरयाः-மற்றவர் களுக்கு உட்பட்டிருப்பதாகிய நரகம் இல்லாதவைகளான, वासराः- நாட்கள், सुखं नीताः-ஸுகமாகப் போக்கப் பட்டன, सतां-பெரியோர் களுடைய, प्रसत्तिम्-அநுக்கிரஹத்தை, अङ्गीकृत्य-ஒப்புக்கொண்டு, असतां- அஸத்துக்களுடைய, गर्वः अपि-கர்வமும், निर्वापितः-அடக்கப் பட்டது, शेषायुषि अपि- பாக்கி இருக்கும் ஆயுஸ்ஸிலும், शेषिदम्पति- சேஷிகளான தம்பதிகளுடைய, दया दीक्षामुदीक्षाम्- தயையினுல் செய்யப் பட்டிருக்கிற ''மரண காலத்தில் மோக்ஷத்தைக் கொடுக்கிறேன்'' என்கிற ஸங்கல்பத்தை, उदीक्षामहे-எதிர்பார்த்துக் கொண்டிருக்கிரேும்.

குறிப்பு:-(1) உலகத்தில் வெகுஜநங்கள் யௌவந காலத்தை ஸ்திரீகளை அநுபவித்துக் கொண்டு போக்குகிருர்கள். ஸ்ரீதேசிகன் ஸ்ரீபாஷியகாரரின் ஸ்ரீஸூக்திகளைப் பலகாலும் ஸேவித்துக் கொண்டு தன் யௌவநத்தைப் போக்கினுர். ஆவிருத்தி என்கிற சொல்லானது வட மொழியில் பெண்பாலைச் சொல்லுவதாலே, இவ்விதமான் ஸ்திரீகளுடன் யௌவந காலம் கழிந்தது என்று காட்டப்படுகிறது.

(2) ஸ்ரீதேசிகன் ஒருவருக்கும் உட்படாமலிருந்து காலத்தைச் செல வழித்தார். ஆகையினுல் அவர் ஸ்ரீபாஷியம் முதலான கிரந்தங்களை ஸேவித்துக் கொண்டிருந்த ஸுகத்துக்குத் துக்கக் கலப்பில்லை.

(3) கிரந்தம் எழுதிச் சிலருடைய அதிவாதங்களைக் கண்டித்தது பெரியோர்களுடைய ஸந்தோஷத்திற்காக; தனக்கு ஒரு பெருமை வர வேண்டும் என்று எழுதப்பட்டது அன்று. (76)

அவ:- வரவர நாஸ்திகத்தனம் அதிகமாவதால், இந்தக் கிரந்தத்தை ஸேவிப்பார் இல்லாமல் போகுமோ என்கிற ஸந்தேஹத்தைத் தீர்ப்பதற்காக ஒரு சுலோகம் அருளிச் செய்கிறார்:-

आस्तिक्यवान् निशितबुद्धिरनभ्यसूयुः
सत्सम्प्रदायपरिशुद्धमनाः सदर्थी।
सङ्केतभीतिरहितः सतृणेष्वसक्तः
सद्वर्तनीमनुविधास्यति शाश्वतीं नः ॥ ७७ ॥

(பதவுரை) आस्तिक्यवान्-வேதம் சொல்லுகிற விஷயங்கள் எல்லாம் உண்மை என்று தீர்மானம் உள்ளவனும், निशितबुद्धिः-கூர்மையான புத்தியை உடையவனும், अनभ्यसूयुः-குணங்களைவிட்டு தோஷத்தைப் பார்க்கும் ஸ்வபாவம் இல்லா தவனும், सत्सम्प्रदाय परिशुद्धमनाः- நல்லஸம் பிரதாயத்தைப் பெற்று அதனால் ஒரு குற்றமுமில்லாத மனதை உடை யவனும், सदर्थी-நல்ல விஷயங்களைத் தேடுகிறவனும், सङ्केतभीतिरहितः-கட்டுப்பாட்டுக்குப் பயப்பட்டு அதற்கு உட்பட்டில்லா தவனும், सतृणेषु-புல்லைப் போல் அல்பங்களான பெயர், லாபம், பூஜை முதலானவைகளில், असक्तः-பிடிப்பில்லாதவனும் இருக்கிற ஒருவன் பின் காலத்தில் உண்டாய், नः-நம்முடைய, शाश्वतीं-எப்போதுமிருக்கிற, सद्वर्तनीम्-நல்ல மார்க்கத்தை, अनुविधास्यति-அநுஸரித்து நடப்பான்.

(கருத்து) சுலோகத்தில் சொன்ன நல்ல குணங்களை உடைய ஒருவன் வருங்காலத்திலும் பிறந்து இந்தக் கிரந்தத்தினால் வெளி யிட்டிருக்கிற பழைமையான நல்ல மார்க்கத்தை அநுஸரிப்பன். அந்த குணங்களாவன-

1) முதலில் வேதம் சொல்லுவது எல்லாம் உண்மையே என்கிற விசுவாஸம்; (2) இதை எடுத்துக் கொள்ள வேண்டியது; இதைத் தள்ளவேண்டியது என்று பகுத்து அறியும்படியான கூர்மையான புத்தி; (3) இந்த புத்தியைக் கொண்டு தோஷங்களைத்தள்ளி குணங்களையே பார்க்கும் தன்மை; (4) நல்ல ஸம்பிரதாயமுடைய ஆசாரியனிடம் போய் விஷயங்களை நன்றாய்த் தெரிந்து சுத்தமான மனது உள்ளவனாய் இருப்பது; (5) நல்ல ஸங்கதிகளையே தேடுவது; (6) இவ்வளவு இருந்தும் மற்றவர்களின் கட்டுப்பாட்டுக்குப் பயந்து அதற்கு உட்படாமை;

(7) தெரிந்த ஜ்ஞாநத்தைக் கொண்டு நல்ல பெயர் முதலானவைகளைத் தேடாமை. (78)

---

அவ:- இந்தக் கிரந்தமானது எம்பெருமானை அறிந்த பெரியோர் களுக்கு ஸம்மதமாயிருக்கும் என்று கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிருர்:-

रहस्यत्रयसारोऽयं वेङ्कटेशविपश्चिता ।
शरण्यदम्पतिविदां सम्मतः समगृह्यत ।। ७८ ।।

(பதவுரை) **अयं रहस्यत्रयसार:**- இந்த மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தமானது, **शरण्यदम्पतिविदां**- சரண்யர்களாகிய தம்பதிகளை அறிந்த பெரியோர்களுடைய, **सम्मत:**-ஒப்புக் கொள்ளுதலை ஏற்கும்படி, **वेङ्कटेशविपश्चिता**- வேங்கடேசன் என்கிற நல்ல அறிவுள்ளவராலே, **समगृह्यत**- சேர்த்து எழுதப்பட்டது.

குறிப்பு:- (1) ''வேங்கடேச'' என்கிற சொல்லுக்குத் திருவேங்கட முடையான் என்றும் பொருளாகையால், அவன் ஸ்ரீதேசிகனைக் கொண்டு இந்தக் கிரந்தத்தை எழுதிஞன்; அவர் அப்படி எழுதுவதற்கு எழுத்தாணி போல் இருந்தார் என்று காட்டப் படுகிறது.

(2) ''**शरण्य दम्पतिविदां**'' என்பதாலே, விஷ்ணுபுராணம் எழுதின பராசரரும், வேதத்தைத் தமிழில் எழுதின நம்மாழ்வாரும் காட்டப் படுகிருர்கள். (78)

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ।।

---

॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ।

श्रीमद्वेदान्तदेशिक विरचित

# ॥ अधिकारसङ्ग्रहः ॥

## सव्याख्यानः ॥

---

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्य्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

---

**प्रपदनमये विद्याभेदे प्रतिष्ठितचेतसः**
**प्रतिपदमिह प्रज्ञादायं दिशन्तु दयाधनाः ।**
**शठरिपुशुकव्यासप्राचेतसादिनिबन्धन**
**श्रमपरिणतश्रद्धाशुद्धाशया मम देशिकाः ॥ १ ॥**

प्रपदनमये विद्याभेदे प्रतिष्ठितचेतसो दयाधनाः शठरिपुशुकव्यासप्राचेतसादिनिबन्धन-श्रमपरिणतश्रद्धाशुद्धाशया देशिका इह मम प्रतिपदं प्रज्ञादायं दिशन्त्वित्यन्वयः ॥

इह खलु भगवान् कवितार्किकसिंहः सर्वतन्त्रस्वतन्त्रः श्रीमान् वेङ्कटनाथार्य्यो वेदान्ताचार्यवर्यो रहस्यत्रयसारार्थाधिकारार्थसङ्ग्रहेण शिष्यबुद्धिसमाधानं कुर्वन्नाचार्यप्रणामरूपमङ्गलव्याजेन स्वरूपयाथात्म्यज्ञानं प्रार्थयते - प्रपदनेति ॥ विद्याभेदे प्रपदनमये पृथगुपायत्वेन प्रमाणप्रसिद्धे प्रपदन इत्यर्थः । स्वार्थे मयट् । तत्र प्रतिष्ठितचेतसः स्थिरचित्ताः । अनेन महाविश्वासः सूचितः । दयाधनाः - कृपामात्रप्रसन्नाः शिष्यानुवृत्तिनिरपेक्षा इत्यर्थः । शठरिपुशुकव्या-सप्राचेतसादीनां निबन्धनेषु ग्रन्थेषु सन्तताभ्यासेन परिणतया । कर्मज्ञानयोरङ्गत्वात् , भक्तेश्शक्ताधिकारत्वाच्च, अनुपायतया प्रपत्तिरेवानुरूपोपाय इत्येवंविधबुद्ध्या परिपक्वया श्रद्धया शुद्धः निस्संशय आशयो येषां ते तथोक्ताः । देशिकाः मम ज्ञानादि गुणरहितस्य । प्रज्ञादायम् - प्रकृष्टज्ञानम् प्रज्ञा तदीयशेषत्वज्ञानं पदे पदे प्रतिपदं सन्ततमित्यर्थः । दिशन्तु यद्वा पद्यते प्राप्यत इति पदं प्राप्यं तं प्रति प्रज्ञादायं त्वरारूपं ज्ञानम् ,

நன்மாலை-அயல்நின்ற வல்வினையை யஞ்சினேனஞ்சி
உயநின் திருவடியே சேர்வான் - நயநின்ற
நன்மாலை கொண்டு நமோ நாரணாவென்னும்
சொன்மாலை கற்றேன்தொழுது. - முதல் திருவந்தாதி

நன்மைதீ-மைகளொன்றுமறியேன்நாரணாவென்னுமித்தனையல்லால்
புன்மையாலுன்னைப் புள்ளுவம்பேசிப் புகழ்வானன்று கண்டாய்
திருமாலே, உன்னுமாறுன்னையொன்றுமறியேன் ஓவாதேநமோ
நாரணாவென்பன் வன்மையாவதுன்கோயிலில்வாழும் வைட்
டணவனென்னும்வன்மைகண்டாயே. -பெரியாழ் திரு 5-1-3

நாக்குநின்-வாக்குத் தூய்மையிலாமையினாலே மாதவாவுன்னை
வாய்க்கொள்ளமாட்டேன், நாக்கு நின்னையல்லாலறியாது நான
தஞ்சுவனென்வசமன்று, மூர்க்குப்பேசுகின்றானிவனென்று
முனிவாயேலுமென் நாவினுக்காற்றேன், காக்கை வாயிலும்
கட்டுரை கொள்வர் காரணாகருளக்கொடியானே.
-பெரியாழ் திரு. 5-1-1

நாடாதமலர்நாடி நாடோறும்நாரணன்றன்
வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று
வீடாடிவீற்றிருத்தல் வினையற்றதென்செய்வதோ
ஊடாடுபனிவாடா யுரைத்தீராயெனதுடலே. -திருவாய் 1-4-9

நாடுநகர-ஏடுநிலத்திவிடுவதன்முன்னம்வந்தெங்கள் குழாம்புகுந்து
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைகூடுமினோ
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணாயவென்று
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டு கூறுமினே.
-பெரியாழ்வார் திருமொழி 1-1-4.

நாமஞ்சொல் - கிடந்தநம்பிகுடந்தைமேவிக் கேழலாயுலகை யிடந்த
நம்பி, எங்கள்நம்பி யெறிஞரரணழியக், கடந்தநம்பிகடியாரி
லங்கை உலகையீரடியால், நடந்தநம்பிநாமம்சொல்லில் நமோ
நாராயணமே. -பெரிய திருமொழி 6.10.1

நாயினேன்-வைதுநின்னைவல்லவா பழித்தவர்க்கும்மாறில்போர்
செய்துநின்னசெற்றத்தீயில் வெந்தவர்க்கும்வந்துன்னை, எய்த
லாகுமென்பரா, தலாலெம்மாயநாயினேன், செய்தகுற்றம்நற்ற
மாகவேகொள் ஞாலநாதனே. - திருச்சந்தவிருத்தம் 111

நாரணன் தம் - காசும் கறையுடைக்கூறைக்குமங்கோர்கற்றைக்கு
மாசையினால், அங்கவத்தப்பேரிடுமா தர்காள்
கேசவன் பேரிட்டு நீங்கள்தேனித்திருமினோ
நாயகன்நாரணன் தம்மன்னைநரகம்புகாள். -பெரியாழ்.திரு.4.6.1

நாரணன்-முழுவேழுலகுக்கும் நாதன்வேதமயன்
காரணம்கிரிசைகருமமிவை முதல்வனெந்தை
சீரணங்கமரர்பிறர்பலரும் தொழுதேத்தநின்று
வாரணத்தைமருப்பொசித்தபிரானென்மாதவனே.
-திருவாய்மொழி 2-7-2.

நாவாயி-லுண்டே நமோ நாரணாவென்று
ஓவாதுரைக்குமுரையுண்டே-மூவாத
மாக்கதிக்கட்செல்லும் வகையுண்டே, என்னொருவர்
தீக்கதிக்கட் செல்லும் திறம். -முதல் திருவந்தாதி 95

நானுன்னை-இன்றாகநாளையே யாகஇனிச்சிறிது
நின்றாகநின்னருளென் பாலதே-நன்றாக
நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே
நீயென்னையன்றியிலை. -நான்முகன் திருவ-7

நான்முகனை-நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்-யான்முகமாய்
அந்தாதி மேலிட் டறிவித்தே னாழ்பொருளைச்
சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து. -நான்முகன் திருவ-1

நிகரில் புக- 'அகலகில்லேன்' என்ற தலைப்பில் பார்க்க.

நிரந்தரம்- இரந்துரைப்பதுண்டு வாழி ஏமநீர்நிறத்தமா
வரந்தரம் திருக்குறிப்பில் வைத்ததாகில்மன்னுசீர்
பரந்தசிந்தையொன்றிநின்று நின்னபாதபங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்கவேண்டுமே. -திருச்சந்த-101

நிற்கின்ற- தேவராய்நிற்குமத்தேவும், அத்தேவரில்
மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பும் - யாவராய்
நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்றோராதார்
கற்கின்றதெல்லாம் கடை. -நான்முகன் திருவந்தாதி 54

நின் திருவ-பண்டைநாளாலேநின் திருவருளும் பங்கயத்தாள் திரு
வருளும் கொண்டு நின்கோயில் சீய்த்துப்பல்படிகால் குடிகுடி
வழிவந்தாட்செய்யும் தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய் தெண்டிரைப் பொருநல்தண்
பனைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே. -திருவாய்9-2-1

நின்றிருவெட்-மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோ
டுற்றிலேன்,உற்றதுமுன்னடியார்க்கடிமை
மற்றெல்லாம்பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்று நான்கண்ணபுரத்துறையம்மானே. -பெரிய திருமொ 8-10-3

நின்னருளே-சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய்,உலகு
தன்னைவாழ நின்றநம்பீ தாமோதராசதிரா,என்னையுமென்னு
டைமையையுமுன் சக்கரப்பொறியொற்றிக்கொண்டு,நின்னருளே
புரிந்திருந்தேனினியென் திருக்குறிப்பே. -பெரியாழ்- திரு. 5-4-1

நின்னையே-தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையேதான் வேண்டும் செல்வம்போல் மாயத்தால்
மின்னையேசேர் திகிரி வித்துவக்கோட்டம்மா
நின்னையேதான் வேண்டி நிற்பனடியேனே. -பெருமாள் திரு 5-9

நினைக்கமாட்- 'துப்புடையா' என்ற தலைப்பில் பார்க்க.

நீணாகம் சுற்றி நெடுவரைநட்டு ஆழ்கடலைப்
பேணான்கடைந் தமுதம் கொண்டுகந்தபெம்மானைப்
பூணாரமார்வனைப் புள்ளூரும்பொன்மலையைக்
காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல கண்டாமே.
-பெ. திருமொ 11-7-1

நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்
பாயும் பனிமறுத்த பண்பாளா-வாசல்
கடைகழியா வுள்புகாக் காமர் பூங்கோவல்
இடைகழியே பற்றியினி. -முதல் திருவ-86

நெடுமாற்கடிமைசெய்வேன் போலவனைக்கருதவஞ்சித்துத்
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும் தவிர்ந்தசதிர்நினைந்தால்

கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால்
விடுமாறென்பதென்னந்தோ வியன்மூவுலகு பெறினுமே.
-திருவாய் 8-10-1

நோற்ற-நோன்பிலேன் நுண்ணறிவிலேனாகிலுமினியுன்னை
விட்டொன்றும் ஆற்றகிற்கின்றிலே னரவினணையம்மானே
சேற்றுத்தாமரை செந்நெலூடுமலர் சிரீவரமங்கலநகர்
வீற்றிருந்தவெந்தா யுனக்குமிகையல்லேனங்கே. -திருவாய் 5-7-1

பண்டைக்-அண்டக்குலத்துக்கதிபதியாகி அசுரரிராக்கதரை
இண்டைக்குலத்தை எடுத்துக்களைந்த இருடீகேசன்றனக்குத்
தொண்டக்குலத்திலுள்ளீர் வந்தடிதொழுது ஆயிரநாமம் சொல்லிப்
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே.
-பெரியாழ்வார் திரு.1.1.5

பாம்போடொ-தூங்கார் பிறவிக்களின்னம்புகப்பெய்து
வாங்காயென்று சிந்தித்து நானதற்கஞ்சிப்
பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல்
தாங்காதுள்ளம் தள்ளுமென்தாமரைக்கண்ணா. -பெரிய திரு. 11-8-3

பண்டை நா-நின் திருவ' என்ற தலைப்பில் பார்க்க.

பயிலும்-சுடரொளி மூர்த்தியைப் பங்கயக்கண்ணனைப்
பயிலவினிய நம்பாற்கடல் சேர்ந்தபரமனைப்
பயிலும் திருவுடையார் யவரேலுமவர்கண்டீர்
பயிலும் பிறப்பிடைதோ றெம்மையாளும்பரமரே. -திருவாய் 3-7-1

பள்ளிகொள்- தெள்ளியார் பலர் கைதொழும் தேவனார்
வள்ளல்மாலிருஞ் சோலைமணாளனார்
பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிடக்
கொள்ளுமாகில் நீ கூடிடுகூடலே. -நாச்சியார் திரு 4-1

பற்றேலொ-ன்றுமிலேன் பாவமேசெய்து பாவியானேன்
மற்றேலொன்றறியேன் மாயனேயெங்கள் மாதவனே
கல்தேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா
அற்றேன் வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே.
-பெரிய திரு.-1-9-9

பாருருவி-நீரெரிகால் விசும்புமாகிப்பல்வேறு சமயமுமாய்ப்பரந்து
நின்ற ஏருருவில் மூவருயென்னநின்ற இமையவர் தந்திருவுருவே
றெண்ணும்போது ஒருருவம்பொன்னுருவமொன்று செந்தீ
ஒன்றுமாகடலுருவமொத்துநின்ற மூவுருவும் கண்ட
போதொன்றாம்சோதி முகிலுருவமெம்மடிகளுருவந்தானே.
-திருநெடுந்-2

பாவீதழு-வம்புலாங்கூந்தல் மனைவியைத்துறந்து பிறர்பொருள்
தாரமென்றிவற்றை, நம்பினாரிறந்தால் நமன்றமர்பற்றியெற்றி
வைத்து, எரியெழுகின்ற செம்பினாலியன்ற பாவையைப் பாவீதழு
வெனமொழிவதற்கஞ்சி, நம்பனே வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். -பெரிய திருமொழி 1-6-4

பீதகவாடை-ஏதங்களாயினவெல்லா மிறங்கலிடுவித்து என்னுள்ளே
பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து
போதில்கமலவன்னெஞ்சம்புகுந்து மென்சென்னித்திடரில்
பாதவிலச்சினை வைத்தார் பண்டன்றுபட்டினங்காப்பே.
-பெரியாழ் திரு. 5-2-8

புகலொன்றி- 'அகலகில்லேன்' என்ற தலைப்பில் பார்க்க.

பூசித்தும்-தரித்திருந்தேனாகவே தாராகணப்போர்
விரித்துரைத்தவெந்நாகத்துன்னைத் - தெரித்தெழுதி
வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது. -நான்முகன் திரு-63

பூவில்வாழ்-மூவுலகங்களுமாயல்லனாயுகப்பாய் முனிவாய்ப்
பூவில்வாழ்மகளாய்த் தவ்வையாய்ப்புகழாய்ப்பழியாய்த்
தேவர்மேவித்தொழும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
பாவியேன் மனத்தே உரைகின்ற பரஞ்சுடரே. -திருவாய் 6-3-6

பொய்ந்நின்ற-ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்
இந்நின்ற நீர்மையினியாமுறாமை உயிரளிப்பான்
எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா
மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே.
- திருவிருத்-1

**பேச நின்ற**-சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்
நாயகனவனே கபாலநன் மோக்கத்துக்கண்டு கொள்மின்
தேசமாமதிள் சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள்
ஈசன்பாலோரவம்பறைத லென்னாவதிலிங்கியர்க்கே.

*-திருவாய் 4-10-4*

**பேசுவாரடி**-காசின்வாய்க்கரம் விற்கிலும் கரவாதுமாற்றிலி
சோறிட்டுத்தேசவார்த்தை படைக்கும் வண்கையினார்கள்வாழ்
திருக்கோட்டியூர் கேசவா புருடோத்தமா கிளர்சோதியாய்குறளா
வென்றுபேசுவாரடியார்களெந்தம்மை விற்கவும் பெறுவார்களே.

*-பெரியாழ்-4-4-10*

**பொங்கேழ்**-'இங்கேதிரி' என்ற தலைப்பில் பார்க்க.

**போனகம்**-வானுளாரறியலாகா வானவா என்பராகில்
தேனுலாந்துளவமாலைச் சென்னியாயென்பராகில்
ஊனமாயினகள் செய்யுமூனகாரகர்களேலும்
போனகம் செய்தசேடம் தருவரேல்புனிதமன்றே? *-திருமாலை 41*

**போயபிழை**-மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூயபெருநீர் யமுனைத்துறைவனை
ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கைத்
தாயைக்குடல்விளக்கஞ் செய்ததாமோதரனைத்
தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோரெம்பாவாய். *-திருப்பாவை-5*

**போயினால்**- சீயினால் செறிந்தேறியபுண்மேல் செற்றலேறிக்குழம்
பிருந்துஎங்கும்-ஈயினாலரிப்புண்டு மயங்கியெல்லைவாய்ச் சென்று
சேர்வதன் முன்னம் வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்தி
டைக்கைகளைக்கூப்பிப் போயினால்பின்னை இத்திசைக்கென்றும்
பிணைகொடுக்கிலும் போகவொட்டாரே. *-பெரியாழ்.திரு.4-5-2*

மரணமானால்-சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்
அரணமைந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் தனதன்பர்க்கன்பாகுமே. -திருவாய் 9-10-5

மற்றிங்-பேயிருக்குநெடுவெள்ளம் பெருவிசும்பின் மீதோடிப் பெருகு
காலம், தாயிருக்கும்வண்ணமே யும்மைத்தன்வயிற்றிருத்தியுய்
யக்கொண்டான்,போயிருக்கமற்றிங்கோர் புதுத்தெய்வம்
கொண்டாடும் தொண்டீர், பெற்றதாயிருக்கமணைவெந்நீராட்டு
திரோ மாட்டாததகவற்றீரே. -பெரியதிருமொழி 11-6-6

மற்றுமோர் - 'நின் திருவெட்' என்ற தலைப்பில் பார்க்க.

மறந்திகழு மனமொழித்து வஞ்சமாற்றி ஐம்புலன்களடக்கியிடர்ப்
பாரத்துன்பம் துறந்து, இருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத்
தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான, அறந்திகழுமனத்
தவர்தம் கதியைப் பொன்னி யணியரங்கத்தரவணையில் பள்ளி
கொள்ளும், நிறம் திகழும் மாயோனைக் கண்டென் கண்கள் நீர்
மல்கவென்று கொலோநிற்கும் நாளே.
- திருமாள் திரு.1-7

மன்னுங்கடு-இன்னதோர் காலத் தினையாரிதுபெற்றார்
என்னவும் கேட்டறிவதில்லை-உளதென்னில்
மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்
அன்னதோரில்லியினூடுபோய்-வீடென்னும்
தொன்னெறிக்கட்சென்றாரைச் சொல்லுமின்கள்,சொல்லாதே
அன்னதேபேசு மறிவில்சிறுமனத்து ஆங்
கன்னவரைக்கற்பிப்போம் யாமே. -பெரிய திருமடல்

மன்னுறில்-அற்றதுபற்றெனில்,உற்றதுவீடுயிர்,
செற்றதுமன்னுறில், அற்றிறைபற்றே. -திருவாய்மொழி 1-2-5

மாயஞ்செய் - 'உன் திருமார்' என்ற தலைப்பில் பார்க்க.

மாளுமோர்- நாளுநின்றடுநம பழமையங்கொடுவினையுடனே
மாளும் ஓர் குறைவில்லைமனன கமலமறக்கழுவி
நாளுநந்திருவுடையடிகள் தம்நலங் கழல்வணங்கி
மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே. -திருவாய் 1-3.8

முகில்-வண்ணனடியையடைந்தருள் சூடியுய்ந்தவன் மொய்புனல்
பொருநல், கில் வண்ணத்தூநீர்ச் சேர்ப்பன் வண்பொழில்சூழ்
வண்குருகூர்ச்சடகோபன் முகில்வண்ணனடிமேல் சொன்ன சொல்
மாலையாயிரத்திப்பத்தும் வல்லார், முகில்வண்ணவானத்திமைய
வர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே. -திருவாய்மொழி 7-2-11

முடியானே-மூவுலகும் தொழுதேத்தும் சீர்
அடியானே ஆழ்கடலைக்கடைந்தாய் புள்ளூர்
கொடியானே கொண்டல்வண்ணா அண்டத்தும்பரில்
நெடியானே என்று கிடக்குமென் நெஞ்சமே. -திருவாய் 3-8-1

முனியே-நான்முகனே முக்கண்ணப்பா என்பொல்லாக்
கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமே யென்கள்வா
தனியேனாருயிரே யென் தலைமிசையாய்வந்திட்டு
இனிநான்போகலொட்டேனொன்றும்மாயம் செய்யேலென்னையே.
-திருவாய் 10-10-1

மூலமாகிய-மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினையுள்ளெழ
வாங்கிக் காலும்கையும் விதிர்த்தேறிக் கண்ணுறக்க
மதாவதன் முன்னம் மூலமாகிய ஒற்றையெழுத்தை மூன்றுமாத்
திரையுள் ளெழவாங்கி வேலைவண்ணனைமேவுதிராகில் விண்ண
கத்தினில் மேவலுமாமே. -பெரியாழ் திரு. 4-5-4

மேவித்தொழும் - 'ஆவிக்கோர்' என்ற தலைப்பில் பார்க்க.

மொய்த்த- 'இத்தனையடி' என்ற தலைப்பில் பார்க்க.

**வடிவினை**-கொடிவினைப்படைகள் வல்லையாயமரர்க்கிடர்கெடவ
*சுரர் கட்கிடர் செய் , கடுவினைநஞ்சேயென்னுடையமுதே*
*கலிவயல் திருப்புளிங்குடியாய் வடிவிணையில்லாமலர்மகள்*
*மற்றை நிலமகள் பிடிக்கும்மெல் லடியைக் கொடுவினை*
*யேனும் பிடிக்க நீ யொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே.*
*-திருவாய் 1-2-10*

**வண்புகழ்** -எண்பெருக்கந் நலத்து ஒண்பொருளீறில
*வண்புகழ் நாரணன் திண்கழல்சேரே.* *-திருவாய் 1-2-10*

**வருதேவர்**- பெருநீரும் விண்ணும் மலையுமுலகேழும்
*ஒருதாராநின்னுளொடுக்கிய நின்னையல்லால்*
*வருதேவர் மற்றுளரென்றென் மனத்திறையும்*
*கருதேன் நான் கண்ணபுரத்துறையம்மானே.*
*-பெரியதிருமொழி 8-10-2*

**வல்வினை**-மணந்தபேராயாமாயத்தால் முழுதும்
*வல்வினையேனையீர்கின்ற,குணங்களையுடையா யசுரர்வன்கையர்*
*கூற்றமேகொடிய புள்ளுயர்த்தாய், பணங்களாயிரமுமுடைய*
*பைந்நார்கப்பள்ளி யாய்ப் பாற்கடல் சேர்ப்பா, வணங்குமாறறியேன்*
*மனமும்வாசகமும் செய்கையும் யானுநீதானே.* *-திருவாய்8-1-8*

**வன்மையா** – 'நன்மை தீமை' என்ற தலைப்பில் பார்க்க.

**வாசித்தும்** - தரித்திருந்தேனாகவே தாராகணப்போர்
*விரித்துரைத்தவெந்நாகத் துன்னைத் - தெரித்தெழுதி*
*வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்*
*பூசித்தும் போக்கினேன் போது.* *-நான்முகன் திரு -63*

**வழுவிலா** – 'ஒழிவில்' என்ற தலைப்பில் பார்க்க.

**வாயவனையல்லது வாழ்த்தாது** , கையுலகம்
*தாயவனையல்லது தாம்தொழா- பேய்முலைநஞ்*

சூணாகவுண்டானுருவொடு பேரல்லால்
காணாகண்கேளா செவி. -முதல் திருவந்தாதி 11

வாடினேன் வாடிவருந்தினேன் மனத்தால் பெருந்துயரிடும் பையில்
பிறந்து, கூடினேள்கூடியிளையவர்தம்மோடவர்தரும்கலவியேகருதி
ஓடினேனோடியுய்வதோர் பொருளாலுணர்வெனும்பெரும் பதந்
தெரிந்து, நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன் நாராயணா
வென்னும் நாமம். -பெரிய திருமொ-1-1-1

வாயினால்-சீயினால் செறிந்தேறியபுண்மேல்செற்றலேறிக்குழம்
பிருந்து எங்கும்-ஈயினாலரிப்புண்டு மயங்கி யெல்லைவாய்ச்சென்று
சேர்வதன் முன்னம் வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்தி
டைக்கைகளைக்கூப்பிப் போயினால்பின்னை இத்திசைக்கென்றும்
பிணைகொடுக்கிலும் போகவொட்டாரே. -பெரியாழ்.திரு.4-5-2

வாயினால் -'போயினால்' என்ற தலைப்பில் பார்க்க.

வானவர்- வைம்மின் நும்மனத்தென்று யானுரைக்கின்றமாயவன்
சீர்மையை எம்மனோர்களுரைப்பதென் அதுநிற்கநாடொறும்
வானவர் தம்மையாளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ண
லும் செம்மையாலவன் பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவரே.
-திருவாய்-3-6-4

விண்ணுலகம்-நண்ணினம் நாராயணனை நாமங்கள் பலசொல்லி
மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாற்றான் வந்தின்று
விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே
எண்ணினவாறாகவிக் கருமங்களென்னெஞ்சே. -திருவாய் 10-6-3

வில்லிபுதுவை- நல்ல என்தோழி நாகணைமிசைநம்பரர்
செல்வர் பெரியர் சிறுமானிடவர்நாம்செய்வதென்
வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள்தேவரை
வல்லபரிசுவருவிப்பரேலது காண்டுமே. -நாச்சியார்10-10

வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்
*வைகுந்தன்தமரெமரெமதிடம் புகுதென்று,*
*வைகுந்தத்தமரும் முனிவரும் வியந்தனர்*
*வைகுந்தம்புகுவது மண்ணவர் விதியே. -திருவாய் 10-9-9*

விதிவகை புகுந்தன ரென்றுநல்வேதியர்
*பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்*
*நிதியுநற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும்*
*மதிமுகமடந்தைய ரேந்தினர்வந்தே. -திருவாய் 10-9-10*

வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து
*அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை*
*கொந்தலர் பொழில் குருகூர்ச்சடகோபன், சொல்*
*சந்தங்களாயிரத் திவைவல்லார் முனிவரே. -திருவாய் 10-9-11*

வேரிமாறாத-மாரிமாறாத தண்ணம்மலை வேங்கடத்தண்ணலை
*வாரிமாறாதபைம்பொழில் சூழ் குருகூர்நகர்*
*காரிமாறன் சடகோபன் சொல்லாயிரத்திப்பத்தால்*
*வேரிமாறாதபூமேலிருப்பாள் வினை தீர்க்குமே.*
*-திருவாய்மொழி -4-5-11*

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ।।

---

।। श्रीः ।।

श्रीमते वेदान्तरामानुजमहादेशिकाय नमः ।।

श्रीमते गोपालार्यमहादेशिकाय नमः ।।

ज्ञानवैराग्यानुष्ठानशेवधये श्रीमते वेदान्तरामानुजमहादेशिकाय नमः ।।

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ।।

# பிரமாணத் திரட்டு

## குரு பரம்பரா ஸாரம்

### ஸம்ஸ்கிருத வசநங்கள்

1. पापिष्ठः क्षत्रबन्धुश्च पुण्डरीकश्च पुण्यकृत् ।
आचार्यवत्तया मुक्तौ तस्मादाचार्यवान् भवेत् ।।

மிகுந்த பாபத்தையுடைய க்ஷத்திரபந்துவும், புண்ணிய முடைய புண்டரீகனும், ஆசாரியர்களையுடையவர்களாய் இருந்த படியாலே மோக்ஷமடைந்தார்கள். ஆகையால் ஒருவன் ஆசாரியனையுடையவனாக இருக்கவேண்டியது. இங்கே பாபிஷ்ட: என்பதற்கு எதிர்த்தட்டாக 'पुण्यकृत्' என்று சொல்லியிருப்பதால் மிகுந்த புண்ணியம் பண்ணிவன் என்று அதற்குப் பொருள்.

2. तमिमं सर्वसम्पन्नमाचार्यं पितरं गुरुम् ।
अर्घ्य(र्च्य)मर्चित(तु)मर्चामः सर्वे संमन्तुमर्हथ ।।

(பாரதம் - ஸபா.41 - 21)

முதல் பூஜையைப்பெற்றுக்கொள்ள தகுதியைக்காட்டும் எல்லா குணங்கள் நிறைந்தவனாயும், ஆசாரியனாயும் தகப்பனாயும், குருவாயும், பூஜிக்கத்தகுந்தவனாயுமிருக்கிற அந்த இவரை (கிருஷ்ணனை) நாங்கள் பூஜை செய்வதற்கு எல்லாரும் உத்திரவு கொடுக்க வேண்டியது. இங்கு ஆசாரியன் என்கிற சொல்லுக்கு பிரும்ம வித்யோபதேசம் பண்ணிவன் என்றும், குரு என்பதற்கு வேதத்தைச் சொல்லிக்கொடுத்தவன் என்றும் பொருள். (இது ராஜஸூயயாகம் செய்து முடிக்கும்போது கிருஷ்ணனுக்கு அக்ரபூஜை செய்யும்போது ஸஹதேவன் ஸபையோர்களைப் பார்த்துச் சொன்ன வார்த்தை.)

3. ममाप्यखिल–अग्निः सुवर्णस्य गुरुर्गवां सूर्यः परो गुरुः ।
ममाप्यखिललोकानां गुरुर्नारायणोऽगुरुः ।। (விஷ்ணு.பு. 5-1-14.)

எல்லா உலகங்களுக்கும் குருவான நாராயணன் எனக்கும் குரு. இது பூமியின் வசனம். இங்கே " नारायणो गुरुः" என்றவிடத்தில் " अगुरुः" என்று பதத்தைப்பிரித்து-தனக்கு ஒரு குருவில்லாத நாராயணன் எல்லா லோகங்களுக்கும் எனக்கும் குரு - என்று ஸ்ரீ விஷ்ணு சித்தர் வியாக்கியானம் செய்திருக்கிறார்.

4. त्वमेव बन्धुः –
त्वमेव माता च पिता त्वमेव त्वमेव बन्धुश्च गुरुस्त्वमेव ।
त्वमेव विद्या द्रविणं त्वमेव त्वमेव सर्वं मम देवदेव! ।।
(காந்தாரி வாக்கியம்.)

தேவசிரேஷ்டனே ! தேவரீரே எனக்குத் தாய், தேவரீரே தகப்பன், தேவரீரே பந்து, தேவரீரே குரு, தேவரீரே வித்யை, தேவரீரே தநம், ஆகையாலே தேவரீரே எனக்கு எல்லாம்.

5. गुरुरसि –
पिता त्वं माता त्वं दयिततनयस्त्वं प्रियसुहृत्
त्वमेव त्वं मित्रं गुरुरसि गतिश्चासि जगताम् ।
त्वदीयस्त्वद्भृत्यस्तव परिजनस्त्वद्गतिरहं
प्रपन्नश्चैवं सत्यहमपि तवैवास्मि हि भरः ।। (ஆளவந். ஸ்தோ.-60)

தேவரீர் உலகத்துக்குத் தகப்பன், தேவரீர் தாய், தேவரீர் பிரியமான பிள்ளை, தேவரீர் பிரியமான ஸ்நேஹிதன், தேவரீர் மித்திரன், தேவரீரே குருவாக இருக்கிறீர். தேவரீரே அடைய வேண்டிய வஸ்துவும், அதற்கு உபாயமும். அடியேன் தேவரீருடையவன், தேவரீராலே போஷிக்கத் தகுந்தவன், தேவரீருக்கு வேலை செய்யத் தகுந்தவன், தேவரீரையே உயர்ந்த பிரயோஜநமாக எண்ணுகிறவன். தேவரீரிடத்தில் பிரபத்திசெய்தவன். இப்படியிருக்க அடியேனும் தேவரீருக்கு பரம் (ரக்ஷிக்கவேண்டிய பொறுப்பு). இங்கே 'जगताम्' என்கிற சொல்லை முன் பாதியில் எல்லாச் சொற்களுடன் சேர்க்கவேண்டியது, மித்திரன்-ஸமான வயதான ஸ்நேஹிதன். ஸுஹ்ருத்-ஸமாநவயதில்லாமல் க்ஷேமத்தை வேண்டுகிறவன்.

6. स्वयमागत–

सप्तैते मानसाः प्रोक्ता ऋषयो ब्रह्मणः सुताः ।
स्वयमागतविज्ञाना निवृत्तिं धर्ममास्थिताः ।। (பாரதம்-சாந்தி.349-71)

தானே வந்த ஜ்ஞானத்தையுடையவர்கள், நிவிருத்தி தர்மத்தைச் செய்கிறவர்கள்.

7. कृष्णद्वैपायनं –

कृष्णद्वैपायनं व्यासं विद्धि नारायणं प्रभुम् ।
को ह्यन्यो भुवि मैत्रेय महारतकृद् भवेत् ।। (விஷ்ணுபுராணம். 3-4.5)

கிருஷ்ணத்வைபாயநர் என்ற பெயருடைய வியாஸரைப் பிரபுவான நாராயணனாக அறி. மைத்ரேயனே ! இந்த பூமியில் அவரைத் தவிர வேறு எவன் மஹாபாரதத்தைச் செய்யக்கூடியவன்.

8. महर्षेः कीर्त–

इत्युक्तमात्रे भीष्मस्तु मूर्ध्न्यञ्जलिमथावहत् ।
महर्षेः कीर्तनात्तस्य भीष्मः प्राञ्जलिरब्रवीत् ।।

(பாரதம் - ஆதிபர்வம் 114-40)

அந்த மஹர்ஷியினு (வியாஸரு) டைய பெயரைச் சொல்லும் போது, அஞ்ஜலிசெய்துகொண்டு பீஷ்மர் பேசினார்.

9. पञ्चरात्रस्य कृत्स्नस्य वक्ता नारायणः स्वयम् ।
सर्वेषु च नृपश्रेष्ठ! ज्ञानेष्वेतेषु दृश्यते ।। (பாரதம்-சாந்திபர்வம் 359-68)

எல்லா பாஞ்சராத்திரங்களையும் நாராயணன் தானே சொன்னவன்.

10. ब्राह्मणैः–

ब्राह्मणैःक्षत्रियैर्वैश्यैःशूद्रैश्च कृतलक्षणैः ।
अर्चनीयश्च सेव्यश्च नित्ययुक्तैःस्वकर्मसु ।।

सात्त्वतं विधिमास्थाय गीतःसंकर्षणेन यः ।
द्वापरस्य युगस्यान्ते आदौ कलियुगस्य च ।।

(பாரதம்-பீஷ்மபர்வம் 66-39-40)

ஐந்து ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டு, தங்களுடைய தர்மங்களை எப்போதும் செய்துகொண்டிருக்கிற, பிராம்மணர்களாலும், க்ஷத்திரியர் களாலும், வைசியர்களாலும், சூத்திரர்களாலும், த்வாபரயுகத்தின் கடைசியிலும், கலியுகத்தின் ஆதியிலும் ஸங்கர்ஷணனாலே சொல்லப்பட்ட பாஞ்சராத்திர விதியினாலே (எம்பெருமான்) அர்ச்சனை செய்யத்தகுந்தவன். கைங்கரியம் செய்யத்தகுந்தவன்.

11. पूर्वोत्पन्नेषु भूतेषु तेषु तेषु कलौ प्रभुः ।
अनुप्रविश्य कुरुते यत् समीहितमच्युतः ।। (விஷ்ணுதர்மம். 108-50)

கலியுகத்தில் முன்னாலுண்டான அந்தந்த ஜீவன்களுக்குள்ளே புகுந்து, பிரபுவான அச்யுதன் தனக்கு இஷ்டமானதைச் செய்கிறான்.

12. साक्षात् नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुम् ।
मग्नान् उद्धरते लोकान् कारुण्यात् शास्त्रपाणिना ।। (ஜயாக்யஸம்ஹிதை)

நாராயணன் என்கிற தேவன் மனித உருவமான உடம்பை எடுத்துக்கொண்டு, ஸம்ஸாரத்தில் மூழ்கியிருக்கிற ஜீவன்களை சாஸ்திரமாகிற கையினாலே கருணையினால் தானே வெளியில் தூக்குகிறான்.

13. कलौ खलु –

कृतादिषु प्रजा राजन्! कलाविच्छन्ति सम्भवम् ।
कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः ।।

क्वचित् क्वचिन्महाभागाः द्रमिडेषु च भूरिशः ।
ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी ।
कावेरी च महाभागा प्रतीची च महानदी ।। (பாகவ.11-5-38,39)

கலியுகத்தில் நாராயணனையே அடையவேண்டிய வஸ்துக்ககளில் மிகவுமுயர்ந்ததாக எண்ணுகிற மஹாபாகர்கள் அங்குமிங்கும் பிறப்பார்கள்; தமிழ் தேசத்திலோ, தாம்ரபர்ணி, கிருதமாலை, பாலாறு, மிகுந்த பெருமையையுடைய காவேரி, மேற்கு ஸமுத்திரத்தில் விழுகிற நதி, இவைகளின் கரையில் அதிமாகப் பிறப்பார்கள்.

14. संभाष्य – न म्लेच्छाशुच्यधार्मिकैः सह सम्भाषेत ।

सम्भाष्य पुण्यकृतो मनसा ध्यायेत् ।। (கௌதம தர்மஸூத்திரம்-9-18)

பேசத்தகாதவர்களுடன் பேசும்படி நேர்ந்தால், புண்ணியம் செய்த வர்களை அதாவது ஆசாரியர்களை மனதால் தியானம் பண்ணவேண்டியது.

---

### தமிழ் வசனங்கள்

1. *பீதகவாடை -*

*ஏதங்களாயினவெல்லா மிறங்கலிடுவித்து என்னுள்ளே*
*பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து*
*போதில்கமலவன்னெஞ்சம்புகுந்து மென்சென்னித்திடரில்*
*பாதவிலச்சினை வைத்தார் பண்டன்றுபட்டினங்காப்பே.*

(பெரியாழ்வார்திருமொழி—5-2-8)

பீதாம்பரத்தையுடையவனாய் உபகாரம் செய்கிறவனான எம்பெருமான் ஜ்ஞாநத்தை உபதேசம் பண்ணுகிற குருவாக அவதாரஞ் செய்து. இங்கே 'பிரம' என்ற சொல்லுக்கு வேதமென்று பொருள். இங்கு அதினுடைய ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது.

---

### அரும்பதவுரை

இதைக் கணிசித்து—இதை எண்ணி.
சேமிக்க—ரக்ஷிக்க.

---

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

## உபோத்காதாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

15. वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः ।

आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैस्सह ।। (லைங்கபுராணம்)

வைகுந்தமென்கிற உயர்ந்த உலகத்தில் லக்ஷ்மியோடு கூட உலகங்களுக்கு யஜமாநனான எம்பெருமான் இருக்கிறான்.

16. याऽयोध्येति -

आज्ञानुग्रहभीमकोमलपुरीपाला फलं भेजुषां
याऽयोध्येत्यपराजितेति विदिता नाकं परेण स्थिता ।
भावैरद्भुतभोगभूमगहनैः सान्द्रा सुधास्यन्दिभिः
श्रीरङ्गेश्वरगेहलक्ष्मि ! युवयोस्तां राजधानीं विदुः ।।

(ஸ்ரீ குணரத்ன கோசம்-23)

வைகுந்தமென்னும் உலகத்தின்மேல் அயோத்தியென்றும், ஒருவராலும் ஜயிக்க முடியாததென்றும் சொல்லப்பட்ட யாதொரு பட்டணமிருக்கிறதோ.

17. निवासशय्यासनपादुकांशुकोपधानवर्षातपवारणादिभिः ।
शरीरभेदैस्तव शेषतां गतैर्यथोचितं शेष इतीरिते जनैः ।।

(ஆளவந்தார் ஸ்.- 40)

அந்தந்த அவஸரங்களுக்குத் தகுந்தபடி தேவரீருக்குச் சேஷமாயிருக்கும்-இருப்பிடம், படுக்கை, ஸிம்ஹாஸநம், பாதுகை, பீதாம்பரம், தலையணை, குடை, இவை முதலிய வெவ்வேறு சரீரங்களாலே கைங்கரியம் செய்வதினால், ஜநங்களால் சேஷன் என்று சொல்லப்பட்ட (திருவனந்தாழ்வான்).

18. अनेकजन्मसाहस्रीं संसारपदवीं व्रजन् ।
मोहश्रमं प्रयातोऽसौ वासनारेणुकुण्ठितः ।। (விஷ்ணுபுராணம். 6-7-19)

அநேக ஆயிரம் ஜந்மங்கள் ஸம்ஸாரமாகிய மார்க்கத்தில் போய்க் கொண்டு மோஹத்தையும் சிரமத்தையும் அடைந்து, வாஸனையாகிய தூளிகளால் சக்தி குறைந்தவனாய் இந்த ஜீவனிருக்கிறான். ஸம்ஸாரம் மார்க்கம்போல் அதில் நடக்கிறவனுக்கு மயக்கம் வந்து போகவேண்டிய இடத்திற்குப் போக முடியாதிருப்பது போல, தான் அடையவேண்டிய புருஷார்த்தத்தை அடையாதவனாய், அவன் போகவேண்டிய இடம் போகாமல் அலைந்து கொண்டிருப்பது போல், ஸம்ஸாரத்தின் கஷ்டம் நீங்கி ஸுகமாயிருப்பது இல்லாமல், அவனுக்குக் காலில் தூளி படிந்திருப்பது போல், இவனுக்கு துர்வாஸனைகள் உண்டாய், அவனுக்கு நடக்கும் சக்தி குறைவதுபோல், இவனுக்கு ஜ்ஞாநத்திற்கு ஸங்கோசம் உண்டாயிருக்கிறதென்று கருத்து.

19. मातापयेका –

எனக்கும் அந்தப் பக்ஷிக்கும் தாயார் ஒருத்தி; தகப்பன் ஒருத்தன்; நான் ருஷிகளாலே கொண்டுவரப்பட்டேன்; அது மாடு தின்பவர்களின் வார்த்தையைக் கேட்கிறது. எங்களிருவருக்குமுள்ள வாசியானது உம்மாலும் நேராகப் பார்க்கப்பட்டது. தோஷங்களும் குணங்களும் சேர்க்கையினால் உண்டாகின்றன. (இது ஒரு கிளி ஒரு ருஷியின் பிள்ளையினிடம் சொன்ன வார்த்தை).

20. पुमान्न – (விஷ்ணுபுராணம். 2-13-98)

ஓ அரசனே! ஜீவன் தேவனன்று, மனிதனன்று, மிருகமன்று, மரமன்று. இந்த உடம்புகளின் அமைப்புக்களினால் ஏற்பட்ட இந்த வேறுபாடுகள் கர்மத்தினால் உண்டானவைகள்.

21. ईश्वरस्य –

ஈசுவரன் ஜீவன்களை நன்றாயிருக்கவேண்டுமென்று எண்ணுவது, யாதிருச்சிகமாக ஏற்படும் புண்ணியம், எம்பெருமானுடைய கடாக்ஷம், அவனிடத்தில் இருந்த த்வேஷம் போவது, அவன் விஷயத்தில் முகங்கொடுப்பது, அதாவது அவன் விஷயமாகச் சொல்வதைக் கேட்க விரும்புவது, ஸத்துவகுணம் மேலிட்டவர்களுடன் பேசுவது. ஆகிய இந்த ஆறும் ஒருவன் ஆசாரியர்களை அடைவதற்குக் காரணங்கள்.

22. नायं देवः –

இந்த ஜீவன் தேவனன்று, மனிதனன்று, மிருகமன்று, மரமன்று. ஜ்ஞாநத்தையும் ஆனந்தத்தையும் குணங்களாகவுடையவன் ஆத்மா. எல்லாருக்கும் ஆத்மாவான எம்பெருமானுக்குச் சேஷன்.

23. दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः ।
अतोऽहमपि ते दास इति मत्वा नमाम्यहम् ।। (மந்திரராஜபத ஸ்.)

எல்லா ஆத்மாக்களும் ஸ்வபாவத்தினால் பரமாத்மாவான எம்பெருமானுக்கு வேலைக்காரர்கள். ஆகையாலே நானுமுனக்கு வேலைக்காரன். இப்படி நினைத்துக்கொண்டு நான் வணங்குகிறேன்.

24. तत्त्वेन यश्चिदचिदीश्वरतत्स्वभावभोगापवर्गतदुपायगतीरुदारः ।
सन्दर्शयन् निरमिमीत पुराणरत्नं तस्मै नमो मुनिवराय पराशराय ।।
(ஆளவந்தார் ஸ்தோத்ரம்-4)

எந்த உதாரகுணமுள்ளவர், அறிவுள்ள ஜீவன்கள், அறிவில்லாத வைகள், இவைகளையாளுகின்ற எம்பெருமான் அவர்களின் ஸ்வபாவங்கள், விஷயங்களினாலுண்டாகும் போகம், மோக்ஷ ஆனந்தம், இவைகளுக்கு உபாயங்கள், அவைகளை அடைவதற்குப்போகும் வழிகள் ஆகிய இவை களை உள்ளபடி நன்றாகக்காட்டி, மிகுந்த உயர்ந்த ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைச் செய்தாரோ, அந்த முனிகளுக்குள் சிரேஷ்டரான பராசரருக்கு நமஸ்காரம்.

---

## தமிழ் வசனங்கள்

2. *ஒண்டொடியாள் - கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி*
*கண்டவின்பம் தெரியவரிய வளவில்லாச் சிற்றின்பம்*
*ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்பக்*
*கண்டசதிர்கண்டொழிந்தே னடைந்தேனுன் திருவடியே.*

(திருவாய்மொழி - 4-9-10.)

அழகான கைவளையையுடைய பிராட்டியும், தேவரீரும் நின்று கொண்டிருக்க, அதாவது—உங்களைத்தவிர வேறு ஈசுவரனில்லை யென்று சொல்லும்படி நீங்களிருவரும் நிற்க, கண்டசதிர்கண்டு- நித்திய ஸூரிகளுடன் மற்ற எல்லா ஆத்மாக்களும் தேவரீரையநுபவித்துக் கைங்கரியம் செய்யும்படியான தேவரீரால் ஏற்படுத்தப்பட்ட புருஷார்த் தத்தை நான் பார்த்து.

3. *சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்*
*நின்றால் மரவடியாம் நீள்கடலுள் - என்றும்*
*புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்*
*அணையாம் திருமாற்கு அரவு.* (முதல் திருவந்தாதி—53.)

எம்பெருமான் எங்கேயாவது போனால், ஆதிசேஷன் குடையாக இருப்பன்; உட்கார்ந்தால் ஸிம்மாஸநமாக இருப்பன்.

4. *பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்*
*அங்காதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான்*
*செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்*
*எங்கோல்வளையால் இடர்தீர்வராகாதே?* (நாச்சியார் திருமொழி— 11-3)

பொங்குகிற ஸமுத்திரத்தினாலே சூழப்பட்ட பூமியையும் வைகுந்த மென்கிற உலகத்தையும், அவைகளுள் ஒன்றும் விட்டுப் போகாமல் ஆளுகிற ஆளுகையையுடைய.

## அரும்பதவுரை

வகுந்த — ஸ்வபாவமாயிருக்கிற,

தெளிவிசும்பு — (திருவாய்மொழி 7-10-9) - நிர்மலமான ஆகாசம், அதாவது — ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ள திரவியம் நிறைந்திருக்கிற வைகுந்தம்.

வான் இள அரசு — (பெரியாழ்வார் திருமொழி 3-6-7) — வானத்தில் — வைகுந்தத்தில் எப்போதும் யுவாவான ராஜா.

அடி — நிமித்த காரணம். மூலகாரணம்-அதற்கேயுள்ள காரணம்.

இட்டுப் பிறந்துவைத்து — ஸம்பந்தத்தாலே தகப்பன் ஸொத்துக்கு பாத்தியமுள்ள பிள்ளைபோல, எம்பெருமானுடைய ஸம்பந்தத்தாலேயே கைங்கரியம் செய்ய பாத்தியமுள்ளவனாய்.

பாழ் — ஒன்றும் விளைய யோக்கியதையில்லாத.

தட்டி — கிடைக்கவேண்டியது கிடைக்காமல்.

தாவு — இளைப்பாறுகிற இடம்.

குறிச்சி — சிறிய ஊர்.

புதியது உண்ணாதே — முதல்முதல் அநுபவமுமில்லாமல்.

விரகு — உபாயம்,

தன்னுருக்கொடுத்து — தன்னுடைய ஸ்வரூபத்தைக் கொடுத்து, இழந்து அதாவது அறியாமல்.

வந்து ஏறி — நடுவில் வந்து தன்னிடம் சேர்ந்திருப்பது.

அளவு உடைமை — அறிவுள்ளவனாயிருப்பது.

நொடித்து — சொல்லி, அதாவது பேசும்படி இடம் கிடைத்து.

உருவியந்த (திருவாய்மொழி 1-3-6) — உடம்பைக் காட்டிலும் வேறான.

வெளிச்சிறப்பு — அறிவினுடைய மேன்மை.

அடியுடைமை — (நன்மைக்கு) காரணத்தையுடையவனாயிருப்பது.

குடல் துவக்கு — பிறப்பாலே அதாவது ஸ்வபாவத்தாலே உண்டான ஸம்பந்தம்.

---

## 2. ஸார நிஷ்கர்ஷாதிகாரம்
### ஸம்ஸ்கிருத வசனங்கள்

25. सर्वमष्टाक्षरा-

त्रयो वेदा: षडङ्गानि छन्दांसि विविधा: स्वरा: ।
सर्वमष्टाक्षरान्त:स्थं यच्चान्यदपि वाङ्मयम् ।। (நாரதீயகல்பம் 1-9)

ஒருவன் அறியவேண்டியவைகளெல்லாம் மூலமந்திரத்திற்குள் இருக்கின்றன. அவைகளாவன நாலு வேதங்களும் அவைகளைக் காட்டிலும் வேறான சப்தராசிகளும்.

26. शास्त्राद्वेद्मि-

मायां न सेवे भद्रं ते न वृथा धर्ममाचरे ।
शुद्धभावं गतो भक्त्या शास्त्राद्वेद्मि जनार्दनम् ।।

(பாரதம்-உத்தியோக.68-5)

பிரகிருதியிலிருந்து உண்டான விஷயங்களை நான் அநுபவிக்கிற தில்லை. உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். வீணாக தர்மங்களை நான் செய்வதில்லை. எம்பெருமானிடத்திலும் ஆசாரியர்களிடத்திலும் பக்தி யாலே சுத்தமான ஸ்வபாவத்தையடைந்து சாஸ்திரத்தினால் ஜநார்த்தநன் என்கிற எம்பெருமானை அறிகிறேன்.

27. तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ।। (ஸ்ரீ கீதை 16-24)

ஆகையால் இன்னது செய்யவேண்டியது இன்னது செய்யத்தகாதது என்கிற ஏற்பாட்டை அறிவதற்கு உனக்கு சாஸ்திரமே பிரமாணம். ஆகையால் இங்கிருக்கும்போது சாஸ்திரத்தினால் சொல்லப்பட்ட கர்மத்தை இருக்கிறபடி அறிந்துகொள்.

28. शब्दब्रह्मणि-

द्वे ब्रह्मणी वेदितव्ये शब्दब्रह्म परं च यत् ।
शब्दब्रह्मणि निष्णात: परं ब्रह्माधिगच्छति ।। (பார.-சாந்தி, 276-2)

சப்தரூபமான பிரும்மத்தை அதாவது வேதத்தை அறிந்தவன், பரப்பிரும்மத்தினுடைய உபாஸநத்தை அடைகிறான்.

29. अनन्तपारम् – (உத்தர கீதை 3-10)

அறியவேண்டிய விஷயங்கள் பஹுக்களாயும் அவைகள் இவ்வளவு தான் என்று நிச்சயிக்க முடியாதவைகளாயுமிருக்கின்றன. காலமோ கொஞ்ச மாயிருக்கிறது. விக்கினங்களோ அநேகங்கள். ஆகையால் ஹம்ஸமானது ஜலத்துடன் சேர்ந்திருக்கும் பாலை ஜலத்திலிருந்து பிரித்து எடுப்பதுபோல் ஸாரமில்லாதவைகளுடன் சேர்ந்திருக்கிற மிகவும் ஸாரமானதையே ஒருவன் எடுத்துக் கொள்ளவேண்டியது.

30. बहुभ्य: – (பாரதம்-சாந்திபர்வம் - 176-66.)

அநேகங்களாயும், ஒவ்வொன்றும் பெரியவைகளாயுமிருக்கிற சாஸ்திரங்களுக்குள்ளே ஸாரமானவைகள் வேதாந்தங்கள். புத்தியுள்ள மனிதன், அவைகளிலிருந்து மிகவும் ஸாரமானதை எடுத்துக் கொள்ள வேண்டியது, புஷ்பங்களிலிருந்து வண்டுகள் தேனை யெடுத்துக் கொள்ளுவதுபோல.

---

## 3. பிரதாநபிரதிதந்திராதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

31. इच्छात एव तव विश्वपदार्थसत्ता
नित्यं प्रियास्तव तु केचन ते हि नित्या:।
नित्यं त्वदेकपरतन्त्रनिजस्वरूपा:
भावत्कमङ्गलगुणा हि निदर्शनं न: ।। (ஸ்ரீ வைகுண்டஸ்தவம் - 36.)

தேவரீருடைய ஸங்கல்பத்தினாலேயே எல்லா வஸ்துக்களுக்கும் இருப்பு உண்டாயிருக்கிறது. அவைகளில் சில தேவரீருக்கு எப்போதும் பிரியமாயிருக்கின்றன. ஆகையால் அவைகள் நித்தியங்கள். எப்போதும் தேவரீருக்கு உட்பட்டிருக்கிற ஸ்வபாவத்தையுடைய தேவரீருடைய நல்ல குணங்கள் இந்த விஷயத்தில் எங்களுக்கு உதாஹரணங்களாக இருக்கின்றன.

32. द्यौस्सचन्द्रार्क – (பாரதம்-ஆநுசாஸநிகபர்வம்-254-136)

ஸுவர்க்கம், சந்திரன் ஸூர்யன் நக்ஷத்திரங்கள் இவைகளுடன் கூடிய ஆகாசம், திக்குகள், பூமி, பெரிய ஸமுத்திரங்கள் இவைகள் மஹாத் மாவான வாஸுதேவனுடைய வீரியத்தினால் தாங்கப்படுகின்றன.

33. उपादत्ते सत्तास्थितिनियमनाद्यैश्चिदचितौ
स्वमुद्दिश्य श्रीमानिति वदति वागौपनिषदी ।
उपायोपेयत्वे तदिह तव तत्त्वं न तु गुणौ
अतस्त्वां श्रीरङ्गेशय ! शरणमव्याजमभजम् ।।

(ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தரசதகம்--87)

ஒருவஸ்துவை வஸ்துவாகஉண்டுபண்ணுவது, உண்டானதுமேலே நீடித்து இருக்கும்படி செய்வது, நியமநம் செய்வது ஆகிய இந்த வியாபாரம் முதலியவைகளினால் பிராட்டியோடு கூடிய எம்பெருமான் சேதநர் களையும் அசேதநங்களையும் தன் பிரயோஜநத்தை நினைத்து எடுத்துக் கொள்ளுகிறான் என்று உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. ஆகையால் தேவரீர் ஜீவனுக்கு உபாயமாகயும், அடைய வேண்டியவராகவுமிருப்பது தேவரீருடைய ஸ்வரூபத்தால் ஏற்பட்டது. புதிதாக உண்டானதன்று. ஸ்ரீரங்கநாதனே! ஆகையால் தேவரீரையே என்னுடைய பிரயோஜநத்தை நினைக்காமல் உபாயமாக அடைந்தேன்.

34. अग्रत: प्रययौ राम: सीता मध्ये सुमध्यमा ।
पृष्ठतश्च धनुष्पाणि: लक्ष्मणोऽनुजगाम ह ।।

(ராமாயணம் - ஆரண்யகாண்டம் - 11 -1)

ராமன் முதலில் போனார். நல்ல இடுப்பையுடைய ஸீதை நடுவில் போனாள்; அவர்களுக்குப் பின்னால் லக்ஷ்மணன் கையில் வில்லை வைத்துக்கொண்டு அவர்களை அநுஸரித்துப்போனான்.

---

### தமிழ் வசனங்கள்

5. *நானுன்னை-இன்றாகநாளையே யாகஇனிச்சிறிது*
*நின்றாகநின்னருளென் பாலதே-நன்றாக*
*நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே*
*நீயென்னையன்றியிலை.* (நான்முகன் திருவந்தாதி - 7)

நாராயணனே! நான் ஆதாரமான உன்னை விட்டு இருக்கவில்லை. உனக்கு நிரூபகமாக இருக்கிற என்னை விட்டு நீ இருக்கவில்லை. நாமிருவரும் ஒருவரைவிட்டு ஒருவர் இருக்கமுடியாததை நீ தெரிந்து

கொள். நிரூபகமென்றால் ஒன்றைக் காட்டுவதற்கு உபயோகப்படுகிற வஸ்து.

---

*அரும்பதவுரை*

பேரணி — ராஜாவின் மூலபலம்.

---

## 4. அர்த்தபஞ்சகாதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

35. **प्राप्यस्य** – (ஹாரீதஸம்ஹிதை)

ஒருவன் அடையவேண்டிய பிரும்மத்தினுடைய ஸ்வரூபம், அவனை அடைகிற ஜீவனுடைய ஸ்வரூபம், அடைவதற்கு உபாயம், அதின்பலன், அப்படியே அடைவதற்கு விரோதியாயிருப்பது— ஆகிய இவைகளை இதிஹாஸங்கள் புராணங்கள் இவைகளோடு கூடிய எல்லா வேதங்களும் சொல்லுகின்றன. (4-பக்கம், 15-வது நம்பரைப் பார்க்க)

36. **एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः ।**
**नागपर्यङ्कमुत्सृज्य ह्यागतो मधुरां पुरिम् ।।** (ஹரிவம்சம் 2-55-53)

திருப்பாற்கடலை இருப்பிடமாகவுடைய லக்ஷ்மீபதியான இந்த நாராயணன், ஆதிசேஷனாகிய படுக்கையை விட்டு இம் மதுரா பட்டணத்திற்கு வந்திருக்கிறார்.

37. **भवान् नारायणो देवः श्रीमांश्चक्रायुधो विभुः ।**
**एकशृङ्गो वराहस्त्वं भूतभव्यसपत्नजित् ।।** (ராமா. யுத்த. -120-13)

தேவரீர் லக்ஷ்மீபதியாயும், சக்கிராயுதத்தைத் தரிக்கிறவராயும், உலகங்களுக்கு யஜமாநனாயுமிருக்கிற நாராயணனென்ற பெயரையுடைய தேவன். (பிரமனின் துதி).

38. **श्रीवत्सवक्षाः नित्यश्रीः अजय्यः शाश्वतो ध्रुवः।**
**तमसः परमो धाता शङ्खचक्रगदाधरः ।।** (ராமா. யுத்த. -114-15)

ஸ்ரீவத்ஸம் என்கிற மருவைத் திருமார்பிலுடையவராயும், எப்போதும் லக்ஷ்மியுடன் கூடினவராயுமிருக்கிறவர்.

39. नित्यैवैषा जगन्माता विष्णोः श्रीरनपायिनी ।
यथा सर्वगतो विष्णुस्तथैवेयं द्विजोत्तम! ।। (விஷ்ணு புரா. -1-8-17)

இந்த லக்ஷ்மியானவள் எப்போதுமிருக்கிறாள். உலகங்களுக்குத் தாயார். ஒருபோதும் எம்பெருமானை விட்டு விலகுகிறதில்லை. ஓ பிராமணசிரேஷ்டனே! எப்படி எம்பெருமான் எல்லாவற்றிலுமிருக்கிறானோ, அப்படியே இவளும்.

40. सीतासमक्षं - एवमुक्तस्तु रामेण लक्ष्मणः संयताञ्जलिः।
सीतासमक्षं काकुत्स्थं इदं वचनम् अब्रवीत् ।।

(ராமாயணம் ஆரண்யகாண்டம் - 15-6)

அந்த ரகுவம்சத்தில் பிறந்த லக்ஷமணன் தமையனுடைய இரண்டு திருவடிகளையும் நன்றாகப் பிடித்துக்கொண்டு ஸீதையின் முன்னால் இந்தச் சொல்லை ராமனிடத்தில் சொன்னான்.

41. स भ्रातुश्चरणौ गाढं निपीड्य रघुनन्दनः ।
सीतामुवाचातियशा राघवं च महाव्रतम् ।। (ராமாய. அயோத்.கா. 31-2)

மிகுந்த யசஸ்ஸையுடைய லக்ஷமணன் ஸீதையையும், உயர்ந்த ஸங்கல்பத்தையுடைய ராமனையும் பார்த்துச்சொன்னான்.

42. अलमेषा परित्रातुं राघवाद्राक्षसीगणम् ।
अभियाचाम वैदेहीमेतद्धि मम रोचते ।। (ராமாய. ஸுந்தர. - 58-87)

இவள் ராக்ஷஸிக்கூட்டத்தை ராமனிடத்திலிருந்து காப்பாற்று வதற்குச் சக்தியையுடையவள்.

43. भवेयं शर-ततः सा ह्रीमती बाला भर्तुर्विजयहर्षिता ।
अवोचद् यदि तत् तथ्यं भवेयं शरणं हि वः ।।

(ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 58-90)

உங்களுக்குச் சரணமாக ஆவேன். (இது ஸீதையின் வசநம்)

44. भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते ।
अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ।।

(ராமாயணம் அயோத்தியா காண்டம் 31-27)

தேவரீர் ஸீதையுடன்கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடப் போகிறீர். தேவரீர் விழித்துக்கொண்டிருந்தாலும் தூங்கினாலும் தேவரீருடைய எல்லா வேலைகளையும் நான் (லக்ஷ்மணன்) செய்யப் போகிறேன்.

45. तया सहासीनमनन्तभोगिनि प्रकृष्टविज्ञानबलैकधामनि ।
फणामणिव्रातमयूखमण्डलप्रकाशमानोदरदिव्यधामनि ।।

(ஆளவந்தார். ஸ் - 39)

ஆதிசேஷன்மேல் பிராட்டியுடன்கூட உட்கார்ந்திருக்கிற எம்பெருமானை.

46. कान्तस्ते पुरुषोत्तमः फणिपतिः शय्याऽऽसनं वाहनं
वेदात्मा विहगेश्वरो यवनिका माया जगन्मोहिनी ।
ब्रह्मेशादिसुरव्रजः सदयितः त्वद्दासदासीगणः
श्रीरित्येव च नाम ते भगवति! ब्रूमः कथं त्वां वयम् ।।

(சது:ச்லோகீ - 1)

உம்முடைய பிரியமான கணவன் புருஷோத்தமன் என்று பெயருள்ள எம்பெருமான்.

47. प्रकृतिपुरुषकालाव्यक्तमुक्ता यदिच्छाम्
अनुविदधति नित्यं नित्यसिद्धैरनेकैः ।
स्वपरिचरणभोगैः श्रीमति प्रीयमाणे
भवतु मम परस्मिन् पूरुषे भक्तिभूमा ।। (ஆத்மஸித்தி மங்கள சுலோகம்)

தன்னுடைய (எம்பெருமானுடைய) கைங்கரியங்களை போகமாக எண்ணுகிற நித்தியஸூரிகளால் லக்ஷ்மியோடுகூட ஸந்தோஷப் படுத்தப்பட்ட எம்பெருமானிடத்தில்.

48. समस्तचिदचिद्वस्तुशरीरायाखिलात्मने ।
श्रीमते निर्मलानन्दोदन्वते विष्णवे नमः ।। (வேதாந்தஸாரம் துடக்கத்தில்)

லக்ஷ்மியோடு கூடினவனாயும், கெட்டகுணமில்லாமலும் ஆநந்தத் திற்கு ஸமுத்திரமாயுமிருக்கிற விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.

49. श्रिय: कान्तोऽनन्तो वरगुणगणैकास्पदवपु:
हताशेषावद्य: परमखपदो वाङ्मनसयो: ।
अभूमिर्भूमिर्यो नतजनदृशामादिपुरुषो
मनस्तत्पादाब्जे परिचरणसक्तं भवतु मे ।। (வேதாந்ததீபம் மங்களம்)

லக்ஷ்மிக்குப் பிரியனான கணவனாயும், தேச - கால - வஸ்துக்களால் அளவில்லாதவனாயும், மேன்மையான குணங்களுடைய கூட்டங்களுக்கு ஒரே இடமான திருமேனியையுடையவனாயுமிருக்கிற எம்பெருமான்.

50. अखिलभुवनजन्मस्थेमभङ्गादिलीले
विनतविविधभूतव्रातरक्षैकदीक्षे ।
श्रुतिशिरसि विदीप्ते ब्रह्मणि श्रीनिवासे
भवतु मम परस्मिन् शेमुषी भक्तिरूपा ।। (ஸ்ரீபாஷ்யமங்களம்)

லக்ஷ்மிக்கு இருப்பிடமான பரபிரம்மத்தினிடத்தில்.

51. श्रिय:पति: – (கீதாபாஷியம் தொடக்கத்து வாக்யம்)

லக்ஷ்மீபதியாயும், எல்லா கெட்டகுணங்களுக்கு விரோதியாயும் எல்லா நல்ல குணங்களுக்கும் ஒரே இடமாயும், இடத்தினாலும் காலத்தி னாலும் வஸ்துவினாலும் அளவில்லாமல் ஜ்ஞாநமும் ஆநந்தமுமான ஸ்வரூபத்தை உடையவனாயு மிருக்கிற எம்பெருமான்.

52. एवंप्रकाशममलं नित्यं व्यापकमक्षयम् ।
समस्तहेयरहितं विष्णवाख्यं परमं पदम् ।। (விஷ்ணு பு. - 1-22-53)

விஷ்ணுவென்று பெயரையுடைய மிகவும் உயர்ந்த எம்பெருமா னுடைய ஸ்வரூபமானது ஒருவிதமான கெடுதலில்லாதது.

53. तेजोबलैश्वर्यमहावबोधसुवीर्यशक्त्यादिगुणैकराशि:।
पर: पराणां, सकला न यत्र क्लेशादय: सन्ति परावरेशे ।।

(விஷ்ணுபுராணம் - 6-5-85)

உயர்ந்தவர்களையும் தாழ்ந்தவர்களையும் நியமநம் செய்கிற எந்த எம்பெருமானிடத்தில் க்லேசம் முதலானவைகள் ஒன்றுமில்லையோ, அவன் உயர்ந்தவர்களுக்கெல்லாம் உயர்ந்தவன். க்லேசமென்பது

அவித்யை, அஸ்மிதா (நான் ஒருவனுக்குமுட்படாதவன் என்கிற எண்ணம்) ஆசை, த்வேஷம், ஒன்றில் பிடிமானம் - ஆக ஐந்து.

54. बहवो दुर्लभाश्चैव ये त्वया परिकीर्तिताः ।
मुने! वक्ष्याम्यहं बुद्ध्वा तैर्युक्तः श्रूयतां नरः ।।

(ராமாயணம் பாலகாண்டம் - 1-7)

அந்த குணங்களோடு சேர்ந்த மனிதனைச் சொல்லுகிறேன் கேளும்.

55. तमेवं गुणसम्पन्नं रामं सत्यपराक्रमम् ।
लोकपालोपमं नाथमकामयत मेदिनी ।। (ராமாயணம் அயோத்தியா - 2-48)

இப்படி குணங்கள் நிறைந்த அந்த ராமனை.

56. ज्येष्ठं श्रेष्ठगुणैर्युक्तं प्रियं दशरथः सुतम् ।
प्रकृतीनां हिते युक्तं प्रकृतिप्रियकाम्यया ।। (ராமாயணம் பால. 1-20)

மிகவுமுயர்ந்த குணங்களோடு சேர்ந்த மூத்த பிள்ளையானராமனை.

57. एवं श्रेष्ठगुणैर्युक्तः प्रजानां पार्थिवात्मजः ।
सम्मतस्त्रिषु लोकेषु वसुधायाः क्षमागुणैः ।।

(ராமாயணம் அயோத்தியா காண்டம் - 1-31)

இப்படி மிகவும் உயர்ந்த குணங்களோடு சேர்ந்தவனை.

58. तमेवं गुणसम्पन्नमप्रधृष्यपराक्रमम् ।
लोकपालोपमं नाथमकामयत मेदिनी ।।

(ராமாயணம் அயோத்தியா காண்டம் - 2-47)

குணங்களாலே ராமன் விளங்கினார்.

59. ते तमूचुर्महात्मानं पौरजानपदैः सह ।
बहवो नृप! कल्याणगुणाः पुत्त्रस्य सन्ति ते ।।

(ராமாயணம் அயோத்தியா காண்டம் - 2-26)

ஒ ராஜாவே ! உம்முடைய பிள்ளைக்கு அநேக நல்ல குணங்கள் இருக்கின்றன.

60. आनृशंस्यं परो धर्मस्त्वत्त एव मया श्रुतः ।
जानामि त्वां महावीर्यं महोत्साहं महाबलम् ।।

(ராமாயணம் அயோத்தியா காண்டம் - 33-12)

அடைந்தவர்களை ரக்ஷிக்கும் தன்மை, கருணை, வேதத்தின் அர்த்தத்தை அறிந்திருக்கை, தாழ்ந்தவர்களுடன் இடைவிடாமல் சேர்ந்திருக்கும் தன்மை, மனதை அடக்குவது, இந்திரியங்களை அடக்குவது ஆகிய இந்த ஆறு குணங்கள் புருஷச்ரேஷ்டனாகிய ராமனை அலங்கரிக்கின்றன.

61. विदितः स हि धर्मज्ञः शरणागतवत्सलः ।
तेन मैत्री भवतु ते यदि जीवितुमिच्छसि ।।

(ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 21-20)

தர்மம் தெரிந்த அந்த ராமன் சரணாகதி பண்ணினவர்களிடத்தில் ஆசையுள்ளவனென்று அறியப்பட்டவன் அன்றோ.

62. इन्द्रकर्मा महेन्द्रस्त्वं पद्मनाभो रणान्तकृत् ।
शरण्यं शरणं च त्वामाहुर्दिव्या महर्षयः ।।

(ராமாயணம் யுத்தகாண்டம் - 120-18)

உயர்ந்தவர்களான பெரிய ருஷிகள், தேவரீரை, ரக்ஷணத்துக்காக அடையத்தக்கவராயும் அடைந்தவர்களை ரக்ஷிக்கிறவராயும் சொல்லு கிறார்கள்.

63. निवासवृक्षः साधूनामापन्नानां परा गतिः ।
आर्तानां संश्रयश्चैव यशसश्चैकभाजनम् ।।

(ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் - 15-19)

ஸாதுக்களுக்கு இருப்பிடம். ஆபத்தை அடைந்தவர்கள் அடைய வேண்டிய உயர்ந்த கதி.

64. तेजोबलैश्वर्यमहावबोधसुवीर्यशक्त्यादिगुणैकराशिः ।
परः पराणां, सकला न यत्र क्लेशादयः सन्ति परावरेशे ।।

(விஷ்ணுபுராணம் - 6-5.85)

மிகவுமுயர்ந்த தேஜஸ்ஸு, பலம், ஐசுவரியம், ஜ்ஞாநம், வீரியம் சக்தி முதலான குணங்கள் எல்லாம் சேர்ந்து இருக்கும்படியான இடம்.

65. सर्वभूतात्मभूतस्य विष्णोः को वेदितुं गुणान् ।
शक्तो महेश्वरादन्यः पार्वत्याश्चाथवा भवेत् ।। (பிராம்மபுராணம்)

எல்லாத்துக்கும் ஆத்மாவாயிருக்கிற விஷ்ணுவினுடைய குணங்களை ருத்திரனையும் பார்வதியையுங்காட்டிலும் வேறு எவர் அறிவர்.

66. यथा रत्नानि – (வாமநபுராணம் - 74-40)

பிள்ளையே ! எப்படி ஸமுத்திரத்தினுடைய ரத்நங்களைக் கணக்கிட முடியாதோ, அப்படியே சக்கிராயுதமுடைய தேவனுடைய குணங்களையும் எண்ணமுடியாது.

67. वर्षायुतैर्यस्य गुणा न शक्या वक्तुं समेतैरपि सर्वलोकैः ।
महात्मनः शङ्खचक्रासिपाणेर्विष्णोर्जिष्णोर्वसुदेवात्मजस्य ।।
(பாரதம் கர்ணபர்வம் - 83-15)

எல்லா தேவர்களும் சேர்ந்து சொன்னாலும் எவருடைய குணங்கள் அநேகம் பதினாயிரம் வர்ஷங்களிலும் சொல்லமுடியாதனவோ, பிரம்மாவின் ஆயுஸ்ஸும் கோடி வாய்களும், மிகவும் சுத்தமான மனதும் உள்ளவனாய் ஒருவன் எங்கேயாவது இருந்தால், அவன் உம்முடைய குணங்களுடைய பதினாயிரத்தில் ஒரு பாகத்தைச் சொல்லுவனோ, சொல்லமாட்டானோ; அந்த தேவச்ரேஷ்டனே! ஸ்ரீ விஷ்ணுவே தயை செய்யவேண்டும்.

68. तवानन्त – (ஷாட்குண்யவிவேகம்)

கணக்கில்லாத குணங்களை உடையவனாயிருந்தபோதிலும், உமக்கு ஆறே குணங்கள் முக்கியமானவைகள். தேவரீர் உலகத்தை வயிற்றில் வைத்துக்கொண்டிருப்பதுபோல், மற்ற குணங்களை அவைகள் தங்களுக்குள்ளே அடக்கிக்கொண்டிருக்கின்றன.

69. इषुक्षयात् –

பாணம் போடுகிறவர்கள் பாணங்கள் செலவாகி விட்டபடியாலே திரும்பிவருகிறார்கள். ஆகாசத்தில் இடமில்லாமையாலன்று. அப்படியே எம்பெருமானுடைய குணங்களைச் சொல்ல ஆரம்பித்தவர்கள், புத்திக்குறைவினால் நின்றுவிடுகிறார்கள். கோவிந்தனுடைய குணங்களைச் சொல்லிமுடிந்ததனால் அல்ல.

70. अविकाराय शुद्धाय नित्याय परमात्मने ।
सदैकरूपरूपाय विष्णवे सर्वजिष्णवे ।। (விஷ்ணு புராணம் -1-2-1)

எப்பொழுதும் ஒரேவிதமான திருமேனியையுடையவனுக்கு.

71. नित्यसिद्धे - (பௌஷ்கரஸம்ஹிதை)

ஓ பௌஷ்கர ! எப்போதுமிருக்கிற எம்பெருமானுடைய திருமேனி விஷயத்திலும், அவன் எல்லாருக்கும் மேற்பட்டவன் என்கிற விஷயத் திலும் எவனுடைய மனதில் இவைகள் இப்படியே இருக்கின்றன என்கிற எண்ணமிருக்கிறதோ, அந்த எம்பெருமான் அவன்கிட்டே வருவன்.

72. समस्ता: – (விஷ்ணு புராணம் -6-7-70)

ராஜாவே ! இந்த எல்லா சக்திகளும் எந்த திருமேனியில் நிலையா யிருக்கின்றனவோ, அந்த ஹரியினுடைய திருமேனியானது உலகமாகிய உடம்பைக் காட்டிலும் வேறு. பிரகிருதியினால் செய்யப்பட்டதன்று. அது ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் மிகவும் பெரிது.

73. समस्तकल्याणगुणात्मकोऽसौ स्वशक्तिलेशाद्धृतभूतवर्ग: ।
इच्छागृहीताभिमतोरुदेह: संसाधिताशेषजगद्धितो य: ।।

(விஷ்ணு புராணம் -6-5-84)

ஸ்வபாவத்தில் எல்லா நல்ல குணங்களையுடையவனாயும், தன்னுடைய சக்தியின் லேசத்தினால் உலகத்தை ஸ்ருஷ்டிக்கிறவனாயும், தன் ஸங்கல்பத்தினால் எடுத்துக்கொள்ளப்பட்ட தன்னையடைந் தவர்களுக்குப் பிடித்த பெரிய திருமேனியையுடையவனாயும் உலகம் முழுவதுக்கும் ஹிதம் செய்கிறவனாயும் எம்பெருமான் இருக்கிறான்.

74. तदेव कृष्णो दाशार्ह: श्रीमान् श्रीवत्सलक्षण: ।
न भूतसङ्घ(सृष्टि)संस्थानो(नं) देहोऽस्य परमात्मन: ।।

(பாரதம் சாந்திபர்வம் -206-60)

அந்த பரமாத்மாவினுடைய திருமேனியானது ஐந்து பூதங்களுடைய சேர்க்கையாலுண்டானதன்று.

75. न तस्य प्राकृता मूर्तिर्मांसमेदोऽस्थिसम्भवा ।
योगित्वाच्चेश्वरत्वाच्च सर्वरूपधरो विभु: ।। (வராஹபு. - 34-40)

மாம்ஸம், மேதஸ், எலும்பு இவைகளாலுண்டான பிரகிருதி கார்யமான உடம்பானது எம்பெருமானுக்கில்லை.

76. भुजैश्चतुर्भिस्समुपेतमेतद्रूपं विशिष्टं दिवि संस्थितं च ।
भूमौ गतं पूजयताऽप्रमेयं सदा हि तस्मिन् निवसामि देवाः ! ॥

(பாரதம் மௌஸலபர்வம் - 5-34)

அந்த திருமேனியானது நான்கு திருக்கைகளோடு கூடியது உயர்ந்தது, பரமபதத்தில் நிலையாயிருக்கிறது.

77. प्रशासितारं सर्वेषां अणीयांसम् अणीयसाम् ।
रुक्माभं स्वप्नधीगम्यं विद्यात् तु (तं) पुरुषं परम् ॥

(மநுஸ்மிருதி - 12-122)

பரமபுருஷனை எல்லாரையும் நியமநம் பண்ணுகிறவனாயும், ஸூக்ஷ்மமானவைகளைக் காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருப்பவனாயும், தங்கம்போல் பிரகாசிக்கிறவனாயும், ஸ்வப்நம் போன்ற யோகத்தினால் அடையத்தகுந்தவனாயும், ஒருவன் அறியவேண்டியது.

78. तत्रैकस्थं जगत् कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ (கீதை - 11-13)

அந்த திருமேனியில் ஒரு மூலையில் இருந்த உலகமுழுவதையும்.

79. पश्यामि देवांस्तव देव! देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दीप्तान् ॥

(கீதை - 11-15)

ஓ தேவனே ! தேவரீருடைய திருமேனியில் தேவர்களைப் பார்க்கிறேன்.

80. अस्त्रभूषणसंस्थानस्वरूपं रूपवर्जितः ।
बिभर्ति मायारूपोऽसौ श्रेयसे प्राणिनां हरिः ॥

(விஷ்ணுபுராணம் - 1-22-76)

ஆயுதங்களுக்கும் நகைகளுக்கு மிருப்பிடமான திருமேனியை எம்பெருமான் தாங்கிக்கொண்டிருக்கிறான்.

81. भूषणास्त्रस्वरूपस्थं ययेदमखिलं जगत् ।
बिभर्त्ति भगवान् विष्णुः तन्ममाख्यातुमर्हति ।।

(விஷ்ணு புராணம் - 1-22-66)

ஜீவன்களும் பிரகிருதியும் கூடிய இந்த எல்லா உலகமும் திருமேனியில் ஆயுதரூபமாகயும், நகைரூபமாகயும் எப்படி இருக்கின்றதோ.

82. तमसः परमो धाता शङ्खचक्रगदाधरः ।
श्रीवत्सवक्षा नित्यश्रीरजय्यः शाश्वतो ध्रुवः।।

(ராமாயணம் யுத்தகாண்டம் - 114-15)

பிரகிருதியைக் காட்டிலும் மேலான இடத்திலிருக்கிறவனாயும், சங்கத்தையும், சக்கிரத்தையும் கதையையும் தரித்துக் கொண்டிருப்பவனாயும் போஷகனாயுமிருக்கிற எம்பெருமான்.

83. विष्णोरेता-विष्णुर्मन्वादयः कालः सर्वभूतानि च द्विज! ।
स्थितेर्निमित्तभूतस्य विष्णोरेता विभूतयः ।।

(விஷ்ணு புராணம் - 1-22-32)

மநு முதலானவர்கள், காலம், எல்லா ஜந்துக்கள் இவைகள் உலகத்தின் ஸ்திதிக்கு காரணமான விஷ்ணுவினுடைய விபூதிகள்.

84. सकलावरणातीत! निरालम्बनभावन! ।
महाविभूतिसंस्थान! नमस्ते पुरुषोत्तम! ।। (விஷ்ணு புராணம் -5-1-50)

பெரிய விபூதியான நித்தியவிபூதியிலிருப்பையுடைய எம்பெருமானே !

85. नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परन्तप! ।
एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ।। (கீதை - 10-40)

என்னுடைய உயர்ந்த விபூதிகளுக்கு முடிவில்லை.

86. यदण्डमण्डान्तरगोचरं च यद् दशोत्तराण्यावरणानि यानि च ।
गुणाः प्रधानं पुरुषः परं पदं परात्परं ब्रह्म च ते विभूतयः ।।

(ஆளவந்தார் ஸ்தோத்திரம் - 17)

பிரும்மாண்டம், அதற்குள் இருக்குமவைகள், அதற்கு வெளியி லிருக்கிற ஒன்றுக்கொன்று பத்துமடங்கு பெரிதான ஏழு ஆவரணங்கள், ஸத்துவம் முதலான மூன்று குணங்கள். அவைகளையுடைய பிரகிருதி, கர்மத்திற்குட்பட்டஜீவன்கள், நித்தியவிபூதி, முக்தர்கள், நித்தியர்கள், திவ்யமங்கள விக்கிரஹம் இவைகள் தேவரீருடைய விபூதிகள்.

87. अव्यक्तादिविशेषान्तं परिमाणार्थसंयुतम् ।

கண்ணால் பார்க்கப்படும் இந்த உலகத்தினுடைய பிறப்பு மதலானவைகள் எவனிடத்திலிருந்து உண்டாகின்றனவோ, அவன் பிரம்மம்.

जन्माद्यस्य यतः ।। (ப்ரம்ஹஸூத்ரம் 1-1-2)

இவ்வுலகின் படைப்பு முதலியன பரமாத்மாவிடமிருந்தே வரும்.

88. अव्यक्तादिविशेषान्तं परिमाणार्थसंयुतम् ।
क्रीडा हरेरिदं सर्वं क्षरमित्यवधार्यताम् ।। (பாரதம்-சாந்தி. - 206-58)

இவையெல்லாம் எம்பெருமானுக்கு விளையாட்டுக்குக் கருவிகள்.

89. व्यक्तं विष्णुस्तथाऽव्यक्तं पुरुषः काल एव च ।
क्रीडतो बालकस्येव चेष्टां तस्य निशामय ।। (விஷ்ணு பு. - 1-2-18)

விளையாடுகிற குழந்தையினுடைய சேஷ்டைகள் போலிருக்கிற எம்பெருமானுடைய சேஷ்டைகளைப் பார்.

90. अनियोज्योऽप्रमेयश्च यस्तु कामशरीरधृत् ।
मोदते भगवानत्र बालः क्रीडनकैरिव ।। (பாரதம்-ஸபாபர் - 40-78)

குழந்தை விளையாட்டுக் கருவிகளைக்கொண்டு விளையாடுவது போல்.

91. त्वं न्यश्चद्भिरुदश्चद्भिः कर्मसूत्रोपपादितैः ।
हरे! विहरसि क्रीडाकन्दुकैरिव जन्तुभिः ।। (விஷ்ணு தர்மம்)

கர்மமாகிய ஸூத்திரத்தினால் கட்டப்பட்டு மேலேபோயும் கீழே வந்து கொண்டு மிருக்கிற விளையாட்டுக்கு வேண்டினபந்து போலேயிருக் கிற ஜந்துக்களைக்கொண்டு, ஒ எம்பெருமானே ! நீ விளையாடுகிறாய்.

92. लोकवत्तु लीलाकैवल्यम् । (பிரம்ம ஸூத்திரம் - 2-1-33)

உலகத்திலேபோலே, எம்பெருமான் உலகத்தை உண்டு பண்ணுவது முதலானவைகளைச் செய்வது விளையாட்டுக்காக மாத்திரம்.

93. सवयस इव

ते साध्याः सन्ति देवा जननि! गुणवपुर्वेष वृत्त स्वरूपैः
भोगैर्वा निर्विशेषाः सवयस इव ये नित्य निर्दोषगन्धाः ।
हे श्रीः! श्रीरङ्गभर्त्तुस्तव च पदपरीचारवृत्त्यै सदाऽपि
प्रेम प्रद्राण भावाविलहृदय हठात्कार कैङ्कर्यभोगाः ।।

(ஸ்ரீகுணரத்னகோசம் - 27)

ஒரே வயதுள்ள தோழன்மாரைப்போலவும் கொஞ்சமும் தோஷ மில்லாமலும் எப்போதுமிப்படியிருக்கிற நித்தியஸூரிகள்.

94. मदीयानादिकर्मप्रवाहप्रवृत्तां भगवत्स्वरूपतिरोधानकरीं विपरीत - ज्ञानजननीं स्वविषयायाश्च भोग्यबुद्धेर्जननीं देहेन्द्रियत्वेन भोग्यत्वेन सूक्ष्मरूपेण चावस्थितां दैवीं गुणमयीं मायां "दासभूतः शरणागतोऽस्मि; तवास्मि दासः" इति वक्तारं मां तारय ।। (பெரியகத்தியம்)

எம்பெருமானுடைய ஸ்வரூபத்தைத் தெரியாதபடி பண்ணுகிறதும், ஒன்றை வேறொன்றாக எண்ணும்படி செய்கிறதும், தான் போகத்தைக் கொடுக்கக்கூடிய வஸ்து என்கிற எண்ணத்தை உண்டுபண்ணுவதுமான பிரகிருதி.

95. पापं प्रज्ञां नाशयति क्रियमाणं पुनः पुनः।
नष्टप्रज्ञः पापमेव पुनरारभते नरः ।। (பாரதம்-உத்யோகபர்வம் - 35-73)

அடிக்கடி செய்யப்பட்ட பாபமானது அறிவை நாசஞ் செய்கிறது; அறிவையிழந்த மனிதன் மறுபடியும் பாபத்தையே செய்ய ஆரம்பிக்கிறான்.

96. तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ।। (கீதை - 16-19)

பாபிகளை அஸுரஸ்வபாவ முள்ளவர்கள் வயிற்றில் பிறக்கும்படி எப்போதும் செய்கிறேன்.

97. यजन्ते सात्त्विका देवान् यक्षरक्षांसि राजसाः ।
प्रेतान् भूतगणाँश्चान्ये यजन्ते तामसा जनाः ।। (கீதை - 17-4)

ஸத்வகுணம் மேலோங்கியவர்கள் தேவர்களையும், ரஜோகுணம் மேலிட்டவர்கள் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் ஆராதிக்கிறார்கள். அவர்களைக் காட்டிலும் வேறான தமோகுணம் மேலிட்டவர்கள் பூதங் களையும் பிரேத கணங்களையும் ஆராதிக்கிறார்கள்.

98. नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ।। (கீதை - 2-40)

இந்தக் கர்மயோகத்தில் செய்த ஆரம்பமானது வீணாய்ப் போகிற தில்லை. அது முடியாததினால் தோஷமும் கிடையாது. இந்த தர்மத்தினு டைய கொஞ்சபாகமும் கூட பெரிதான ஸம்ஸாரபயத்திலிருந்து ஒருவனை ரக்ஷிக்கிறது.

99. तस्य च वशीकरणं तच्छरणागतिरेव । (ஸ்ரீபாஷ்யம் - 1-4-1)

நமக்கு அநுக்கிரஹம் பண்ணும்படி எம்பெருமானைச் செய்வதற்கு ஸாதநம் அவனிடத்தில் பண்ணும் சரணாகதி.

---

### *தமிழ் வசனங்கள்*

6. *நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்*
*பாயும் பனிமறைத்த பண்பாளா-வாசல்*
*கடைகழியா வுள்புகாக் காமர் பூங்கோவல்*
*இடைகழியே பற்றியினி.* (முதல் திருவந்தாதி - 86)

நீயும் பிராட்டியும் மற்றெல்லாரைக் காட்டிலும் வேறாக இருந்து கொண்டு இடையர்களைக் கொல்லுவதற்காகப் பெய்த மழையை மலையை யெடுத்துத்தடுத்தாய்.

*ஒண்டொடியாள் - கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி*
*கண்டவின்பம் தெரியவரிய வளவில்லாச் சிற்றின்பம்*
*ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்பக்*
*கண்டசதிர்கண்டொழிந்தே னடைந்தேனுன் திருவடியே.*
(திருவாய்மொழி - 4-9-10)

7. *கோலத்திரு - ஞாலத்தூடேநடந்தும்நின்றும்கிடந்திருந்தும்*
*சாலப்பலநாளுகந்தோ றுஉயிர்கள் காப்பானே*
*கோலத்திருமாமகளோடுன்னைக்கூடாதே*
*சாலப்பலநாளடியேனின்னம்தளர்வேனோ.* (திருவாய்மொழி - 6-9-3)

நீயும் ஈடுபடும்படியான அழகையுடைய லக்ஷ்மியோடு கூட உன்னை.

8. *பண்டைநாளாலேநின் திருவருளும் பங்கயத்தாள் திரு*
*வருளும் கொண்டு நின்கோயில் சீய்த்துப்பல்படிகால் குடிகுடி*
*வழிவந்தாட்செய்யும் தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்*
*தாமரைக் கண்களால் நோக்காய் தெண்டிரைப் பொருநல்தண்*
*பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே.* (திருவாய்மொழி -9-2-1)

தேவரீருடைய கருணையையும், தாமரையிலிருக்கும் பிராட்டியின் கருணையையும் கொண்டு தேவரீருடைய கோயிலைப்பெருக்கி, அதாவது-கைங்கரியம் செய்து.

9. *கிடந்தநாள்கிடந்தாயெத்தனை காலம் கிடத்தி யுன்திரு*
*வுடம்பசையத், தொடர்ந்துகுற்றேவல்செய்து தொல்லடிமைவழி*
*வரும்தொண்டரோர்க்கருளித், தடங்கொள் தாமரைக் கண்விழித்து*
*நீம்யந்துன்தாமரை மங்கையும்நீயும், இடங்கொள்மூவுலகும்*
*தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக்கிடந்தானே.*
(திருவாய்மொழி - 9-2-3)

தேவரீருடைய தாமரைப்பூவிலிருக்கிற பிராட்டியும் தேவரீரும் முன்று உலகங்களும் கைங்கரியம் செய்யும்படி இருந்தருளவேணும்.

10. *அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா*
*நிகரில்புகழாயுலகமூன் றுடையாய் என்னையாள்வானே*
*நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே*
*புகலொன் றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.*
(திருவாய்மொழி - 6-10-10)

ஒரு க்ஷணமுங்கூட தேவரீரை விட்டுப் பிரிய சக்தியில்லையென்று தாமரைப்பூவிலிருக்கிற பிராட்டி வஸிக்கிற திருமார்பை உடையவனே.

11. *மனனகமலமற மலர்மிசையெழுதரும்*
*மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்*
*இனனுணர்முழுநல மெதிர்நிகழ்கழிவினும்*
*இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே.* (திருவாய்மொழி - 1-1-2)

முழுவதும் ஜ்ஞாநமாயும் ஆநந்தமாயுமிருக்கும் ஸ்வரூபத்தை உடையவன்.

12. *நந்தாவிளக்கேயளத்தற்கரியாய் நரநாரணனே கருமாமுகில்போல்*
*எந்தாய் எமக்கேயருளாயெனநின்று இமையோர்பரவுமிடம்*
*எத்திசையும் கந்தாரமந்தேனிசைபாடமாடே களிவண்டுமிழற்ற*
*நிழல்துதைந்து மந்தாரநின்றுமணமல்குநாங்கூர் மணிமாடக்*
*கோயில்வணங்கென்மனனே.* (பெரிய திருமொழி-3-8-1)

நாசமில்லாததாயும், ஸ்வயம்பிரகாசமாயும், மூன்றுவித அளவில்லாத தாயுமிருக்கிற ஸ்வரூபத்தை உடையவனே.

13. *மணந்தபேராயாமாயத்தால் முழுதும்*
*வல்வினையேனையீர்கின்ற,குணங்களையுடையா யசுரர்வன்கையர்*
*கூற்றமேகொடிய புள்ளுயர்த்தாய், பணங்களாயிரமுமுடைய*
*பைந்நார்கப்பள்ளி யாய்ப் பாற்கடல் சேர்ப்பா,வணங்குமாறறியேன்*
*மனமும்வாசகமும் செய்கையும் யானுநீதானே.*
(திருவாய்மொழி - 8-1-8)

உன்னைவிட்டுப் பிரியும்படியான பலமான பாபங்களையுடைய என்னைப் பிளக்கிற குணங்களை உடையவனே.

14. *உயர்வறவுயர்நல முடையவன்யவனவன்*
*மயர்வறமதிநல மருளினன்யவனவன்*
*அயர்வறுமமரர்க ளதிபதியவனவ்ன்*
*துயரறுசுடரடி தொழுதெழென்மனனே.* (திருவாய்மொழி - 1-1-1)

உயர்த்தி இவ்வளவென்று சொல்லமுடியாதபடி உயர்ந்த ஆனந்தம் முதலிய குணங்களையுடையவன்.

15. *கண்ணபிரானைவிண்ணோர்கருமாணிக்கத்தையமுதை*
*நண்ணியும்நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டுத்*
*திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினைவன்கயிற்றால்*
*புண்ணைமறையவரிந் தென்னைப்போரவைத்தாய்புறமே.*
(திருவாய்மொழி - 5-1-5)

அனேகமான-செய்யப்பட்ட கர்மங்களாகிய பலமான் கயிற்றால் திடமாயும் அழுந்தும்படியாயும் என்னை உடம்புடன் பிரிக்கமுடியாதபடி கட்டி என்றும் சொல்லப்படுகிறது.

16. *முந்நீர்ஞாலம்படைத்த எம்முகில்வண்ணனே*
*அந்நாள் நீதந்த ஆக்கையின்வழியுழல்வேன்*
*வெந்நாள்நோய்வீய வினைகளைவேரறப்பாய்ந்து*
*எந்நாள்யானுன்னை இனிவந்துகூடுவனே.* (திருவாய்மொழி - 3-2-1)

ஸிருஷ்டி பண்ணின அந்த காலத்தில் நீ எனக்குக்கொடுத்த உடம்பு எப்படியிழுக்கிறதோ, அப்படி சுழல்வேன்.

17. *ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும்சிற்றின்பம்*
*பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ*
*தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே*
*கூவிக்கொள்ளும்கால மின்னம்குறுகாதோ.* (திருவாய்மொழி -6-9-9)

என்னுடைய ஆத்மா பிரமிக்கும்படி ஐந்து இந்திரியங்கள் என்னை இழுத்து பாதிக்கும்படியான அல்பமான ஸுகங்கள் அனேங்களைக்காட்டி பாபியான என்னை நீ வருத்தப்படுத்தலாமோ?

---

### *அரும்பதவுரை*

தளம் — அஸ்திவாரம்.

பரக்க — விஸ்தாரமாக.

துவக்கி — சேர்த்து.

இழியாத — இறங்காத.

ஒக்க — ஸமமாக.

ஒழுகுசங்கிலி — விலங்கிடுவதற்காகப் பலரைக் கட்டும்படியான ஒரே சங்கிலி.

தலைசாய்ப்பித்து — பலனை அடைந்ததாய்ச் செய்து.

எடுத்துக் கைநீட்டின — தன் இளப்பத்தை நினைத்துக் கிட்டப்போகாமல் நின்றுவேலை செய்கிற,

கண்ணோட்டம் — பார்வை, அதாவது போகத்தைக் கொடுக்கும் வஸ்துவாகப் பார்ப்பது.

கால்தாழ — சீக்கிரம் விட்டுப்போகாதபடி.

துரவு தத்துவார் — கிணறு தாண்டுவார்.

---

## 5. தத்துவத்ரய சிந்தநாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

101. अचेतना (பரமஸம்ஹிதா. 2)

(பிரகிருதி) அறிவில்லாதது, அயலாருக்காகவேயிருப்பது, ஸ்வரூபத்தில் நாசமில்லாதது, ஆனால் எப்போதும் வேறுபட்டுக் கொண்டிருப்பது,ஸத்துவம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற மூன்று குணங்களையுடையது. கர்மங்களைச் செய்தவர்கள் அதன் பலனை அநுபவிப்பதற்கு இருப்பிடமான உடம்பாயிருக்கிறது. இப்படி பிரகிருதியின் ஸ்வபாவம் சொல்லப்படுகிறது.

102. अनादिर्भगवान् कालो नान्तोऽस्य द्विज! विद्यते ।
अव्युच्छिन्नास्ततस्त्वेते सर्गस्थित्यन्तसंयमा: ।। (விஷ்ணு பு. 1-2-26)

ஓ பிராமணனே! காலத்துக்கு ஆரம்பம் கிடையாது, முடிவும் கிடையாது. 'பகவான்' என்கிற சொல்லாலே காலத்தைச் சரீரமாகவுடைய பகவான் என்று சொல்லப்படுகிறது. காலத்தைச் உடம்பாகவுடைய எம்பெருமானுக்கு ஆதியும் முடிவும் இல்லை என்று சொன்னபோதிலும், இந்த சுலோகம் காலத்தைப் பற்றித் தான் சொல்லுகிறது.

103. कलामुहूर्तादिमयश्च कालो न यद्विभूते: परिणामहेतु: ।
अजन्मनाशस्य सदैकमूर्तेरनामरूपस्य सनातनस्य ।।
(விஷ்ணு புராணம் - 4-1-84)

விநாடி, முகூர்த்தம் முதலானவைகளாக இருக்கும் காலமானது எந்த எம்பெருமானுடைய நித்தியவிபூதியில் வேறுபாடுகளை உண்டு பண்ணுகிறதில்லையோ.

104. ज्ञानानन्दमया:लोका: (பாஞ்சராத்ரம்)

முழுவதும் ஸ்வயம்பிரகாசமாயும், ஆநந்தமாயுமிருக்கிற உலகங்கள்.

105. कालं स पचते तत्र न कालस्तत्र वै प्रभु: ।
सकलस्य प्रभू राजन्! सर्वस्यापि तथेश्वर: ।।(பாரதம் சாந்தி ப. 196 -9)

அந்த நித்தியவிபூதியில் எம்பெருமான் காலத்திற்கு விநாடி நாழிகை முதலான வேறுபாடுகளை உண்டுபண்ணுகிறான். ஆனால்

இவ்விடத்தில் போல் காலமானது அவ்விடத்தில் வேறுபாடுகளை உண்டு பண்ணுவதில்லை.

पुमान्न देवः

नायं देवः

106. द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ।। (கீதை 15-16)

க்ஷரமென்பது கர்மத்துக்கு உட்பட்டிருக்கிற எல்லா பிராணிகளும், அக்ஷரமென்பது கர்மஸம்பந்தம் போய் முன்போல் வேறுபாடில்லாமலிருக்கிற முக்தன்.

107. एकान्तिनः सदा ब्रह्म ध्यायिनो योगिनो हि ये ।
तेषां तत्परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः ।। (விஷ்ணு.பு -1-6-39)

ஏகாந்திகளாய் எப்போதும் பிரும்மத்தைச் தியாநம் பண்ணுகிற யோகிகள் எவர்களோ, அவர்கள் போகும் இடமானது நித்யஸூரிகள் பார்த்துக்கொண்டிருக்கிற மிகவும் உயர்ந்த இடம்.

108. व्यक्ताव्यक्तस्वरूपस्त्वं समष्टिव्यष्टिरूपवान् ।
सर्वज्ञः सर्वदृक्सर्वशक्तिज्ञानबलर्द्धिमान् ।। (விஷ்ணு.பு - 5-1-47)

எம்பெருமான் எல்லாவஸ்துக்களாகவும், ஜ்ஞாநமென்கிற குண முள்ளவனாகவும், எல்லாவற்றையும் பார்க்கிறவனாகவும், எல்லாவிதமான சக்தி, ஜ்ஞாநம், பலம், ஐசுவர்யம் இவைகளை உடையவனாகவும், சிரமம் சோம்பல் பயம், கோபம், காமம் முதலானவைகள் ஒருபோதுமில்லாதவனாகவுமிருக்கிறான்.

109. यो वेत्ति (நியாயதத்துவம்)

எந்த எம்பெருமான் ஒரேகாலத்தில் எல்லாவற்றையும் பிரத்யக்ஷத் தாலே எப்போதும் தன் ஸ்வபாவத்தாலேயறிகிறானோ, அந்த எம்பெருமானை நமஸ்காரம் செய்து நியாயதத்துவம் என்கிற சாஸ்திரத்தைச் சொல்லுகிறேன்.

110. सर्वेष्वपि भवान्तस्स्थं तत्राधारात्मना विभोः ।
स्वसत्ताभासकं सत्त्वं गुणसत्त्वाद् विलक्षणम् ॥

(பௌஷ்கரஸம்ஹிதை 25-43)

தான் இருப்பதாலேயே தோன்றுகிற, அதாவது ஸ்வயம்பிரகாசமான ஸத்துவமானது ரஜஸ்ஸுடனும் தமஸ்ஸுடனும் சேர்ந்த ஸத்துவத்தைக் காட்டிலும் வேறு. இங்கே ஸத்துவமென்பது அதையுடைய திரவியம்.

तमसः

111. अप्राकृतं सुरैर्वन्द्यमयुतार्कसमप्रभम् ।
प्रकृष्टसत्त्वराशिं तं कदा द्रक्ष्यामि चक्षुषा?॥ (ஜிதந்தா . ஸ் 2-21)

பிரகிருதியைக்காட்டிலும் வேறாயும் நித்தியஸூரிகளால் கொண்டாடப்பட்ட தாயுமிருக்கிறது நித்தியவிபூதி.

112. महान्तं च समावृत्य प्रधानं समुपस्थितम् ।
अनन्तस्य न तस्यान्तः सङ्ख्यानं वाऽपि विद्यते ॥

(விஷ்ணுபுராணம் - 2-7-25,26)

எந்த காரணத்தால் அநந்தமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பிரகிருதி தத்துவத்திற்குக் காலத்தினால் முடிவில்லை. இவ்வளவு யோஜனையுள்ளதென்று சொல்லக்கூடிய அளவுமில்லை. ஆகையால் அதை அநந்தம்-முடிவில்லாதது என்றும், கணக்கிடமுடியாத அளவுள்ள தென்றும் சாஸ்திரம் சொல்லுகிறது.

113. गुणैःषड्भिस्त्वेतैः प्रथमतरमूर्तिस्तव बभौ
ततस्तिस्रस्तेषां त्रियुग! युगलैर्हि त्रिभिरभुः ।
व्यवस्था या चैषा ननु वरद! साऽविष्कृतिवशात्
भवान् सर्वत्रैव त्वगणितमहामङ्गलगुणः ॥ (வரதராஜஸ்தவம் - 16)

தேவரீருடைய முதலாவதான பரரூபமானது இந்த ஆறு குணங் களாலே பிரகாசித்தது. இரண்டிரண்டு குணங்களான மூன்றையுடை யவனே ! அவைகளில் மூன்று இரட்டைகளாலே பின்னுண்டான மூன்று வியூஹங்களும் விளங்கின.

114. षाड्गुण्यात् (ரங்கராஜஸ்தவம் உத்தரசதகம்-39)

ஓ ரங்கநாதனே ! ஆறு குணங்களையுடையவனாய், பரன் என்று சொல்லப்படுகிற தேவரீர் முக்தர்களால் அநுபவிக்கப்படுகிறீர். அப்படியே மூன்றாகப் பிரிந்து, பலமென்கிற குணத்தோடு கூடிய ஜ்ஞாநத்தை யுடையவனான ஸங்கர்ஷணனாயிருந்து கொண்டு ஸம்ஹாரத்தைச் செய்கிறீர். சாஸ்திரத்தைப் பிரவசநம் செய்கிறீர். ஐசுவர்யம் விர்யமென்கிற குணங்களையுடைய ப்ரத்யும்நனாயிருந்து உலகத்தையுண்டுபண்ணி தர்மத்தை நடத்துகிறீர். சக்தி தேஜஸ்ஸு என்கிற குணங்களையுடைய அநிருத்தனாயிருந்துகொண்டு ரக்ஷிக்கிறீர். தத்துவங்களை உபதேசம் செய்கிறீர்.

115. जाग्रत् (ரங்கராஜதஸ்தவம் உத்தரசதகம்-40)

ஓ ஸ்வாமியே ! உம்மைத் தியானம் பண்ணுகிறவர்களில் சிலர் விழித்துக் கொண்டிருக்கிறவர்கள் போலவும், சிலர் ஸ்வப்நம் காண் கிறவர்கள் போலவும், வேறு சிலர் ஸ்வப்நமில்லாமல் தூங்குகிறவர்கள் போலவும், மற்றவர்கள் மூர்ச்சையடைந்தவர்கள் போலவும் இருக்கிறார்கள். அதாவது - முதல் வகுப்பில் இந்திரியங்கள் வேலை செய்கின்றன. இரண்டா வது வகுப்பில் அவைகள் வேலை செய்யாமல் மனதுமாத்திரம் வேலை செய் கிறது. மூன்றாவது வகுப்பில் அதுவும் வேலை செய்கிறதில்லை. கடைசி வகுப்பில் உயிரோடு இருப்பதற்கும் அடையாளமில்லை. அவர்களைப் போல் தேவரீர் நாலு ரூபமாயிருந்து கொண்டு ஒவ்வொரு ரூபத்திலும் வாஸுதேவர் முதலாக நாலாகப்பிரிந்து அந்தந்த ரூபங்களுக்குத் தகுந்த குணங்களையும் ஆயுதங்களையு முடையவராய் உபாஸிக்கப்படுகிறீர்.

116. कृष्णरूपाणि (பாஞ்சராத்ரம்)

கிருஷ்ணனாக அவதாரம் செய்த எம்பெருமானுடைய ரூபங் களுக்குக் கணக்கில்லை.

117. देवो वैकुण्ठनाथस्तु अनन्तासनसंस्थितः ।
सेव्यः श्रीभूमिनीलाभिः प्रादुर्भावैस्तथाऽखिलैः ॥
बिम्बाकृत्यात्मना बिम्बे समागत्यावतिष्ठते ।
करोत्यमूर्तामखिलां भोगशक्तिं तु चात्मसात् ॥

(ஸாத்வதஸம்ஹிதை 6-22)

ஆச்ரிதனால் செய்யப்பட்ட பிம்பத்துக்கு என்ன ஆகாரம் இருக்கிறதோ, அதே ஆகாரமுள்ள திருமேனியுடன் அந்த பிம்பத்தில் வந்து, இது பிம்பம் இது திருமேனி என்று பிரிக்கமுடியாதபடி சேர்ந்திருக்கிறார்.

118. अष्टाङ्गयोग (ஸ்ரீ ஸாத்வதஸம்ஹிதை 2-7-8)

அஷ்டாங்கயோகத்தைச் செய்து ஸித்தியடைந்து ஹ்ருதயத்தில் எம்பெருமானை ஆராதநம் பண்ண ஆசையுள்ள யோகிகளுக்கு ஹ்ருதயத்தில் ஒரே மூர்த்தியாயிருக்கிற எம்பெருமான் தியானத்திற்கு விஷயம். ஒரே மூர்த்தி என்பதற்கு நான்கு வியூஹங்களாகப் பிரியாமலிருக்கிற ரூபம் என்று பொருள்.

119. सुरूपाम् (விஷ்ணுதர்மம் 103-16)

தங்கம் வெள்ளி முதலானவைகளாலே நல்ல ரூபத்தையுடையதாயும், தெளிவான முகத்தையும் கண்களையுமுடையதாயும் தனக்குப் ப்ரீதியையுண்டு பண்ணக்கூடியதாயும் உள்ள எம்பெருமானுடைய ஒரு பிம்பத்தைச் செய்து, அதை அர்ச்சித்து, வணங்கி, ஆராதநம் செய்து தியாநம் செய்யவேண்டும். இதனால் தோஷங்கள் போய் அவனுடைய பரரூபத்தில் போய்ச் சேருகிறான். ''तामेव'' என்பதற்கு பிம்பத்தில் வந்திருக்கிற ரூபமும் பரரூபமும் ஒன்று என்று கருத்து.

नित्यैवैषा ற

120. युवत्वादौ तुल्येऽप्यपरवशताशत्रुशमन -
स्थिरत्वादीन् कृत्वा भगवति गुणान् पुंस्त्वसुलभान् ।
त्वयि स्त्रीत्वैकान्तान् म्रदिमपतिपारार्थ्यकरुणा-
क्षमादीन् वा भोक्तुं भवति युवयोरात्मनि भिदा ।।

(ஸ்ரீ குணரத்னகோசம் - 34)

யௌவநம் முதலிய குணங்கள் தேவரீருக்கும் எம்பெருமானுக்கும் ஸமமாயிருந்தாலும், ஒரு புருஷனிடத்திலிருக்கவேண்டிய ஒருவனுக்கு முட்படாமை, சத்துருக்களையடக்குவது, உறுதியாயிருக்கும் தன்மை முதலானவைகளை எம்பெருமானிடத்திலும், ஸ்திரீயினிடத்திலேயே யிருக்கக் கூடியமிருதுவாயிருப்பது, புருஷனுக்காகவே இருப்பது, கருணை, பொறுமை - முதலான குணங்களைத் தேவரீரிடத்திலும் வைத்துக்கொண்டு

போகத்தை அநுபவிப்பதற்காக உங்களிருவருக்கும் பிரிவைச் செய்து கொண்டிருக்கிறீர்கள்.

121. कृशानर्थांस्ततः केचिदकृशांस्तत्र कुर्वते ।
अकृशांश्च कृशांश्चक्रुर्हेतुभिः शास्त्रनिश्चयैः ।। (பாரதம் - ஸபா- 39-2)

அந்த இடத்தில் சிலர் சின்ன விஷயங்களைப் பெரிய விஷயங்-களாகத் தங்களது பாண்டித்தியத்தாலே ஸாதிக்கிறார்கள்.

122. शास्त्रज्ञानम् சாஸ்திர ஜ்ஞாநத்தை ஸம்பாதிப்பதில் மிகவும் கஷ்ட மிருக்கிறது. அதனால் புத்திக்குக் கலக்கமுண்டாகும். ஆகையால் ஆசாரியனுடைய உபதேசத்தாலே எம்பெருமானைத் தெரிந்துகொண்டு சாஸ்திர ஜ்ஞாநத்தை ஸம்பாதிப்பதற்கு வேண்டிய எல்லா வேலை களிலுமிருந்து ஒழியவேண்டியது.

---

### *தமிழ் வசனங்கள்*

*நந்தாவிளக்கேயளத்தற்கரியாய் நரநாரணனே கருமாமுகில்போல்*
*எந்தாய் எமக்கேயருளாயெனநின்று இமையோர்பரவுமிடம்*
*எத்திசையும் கந்தாரமந்தேனிசைபாடமாடே களிவண்டுமிழற்ற*
*நிழல்துதைந்து மந்தாரநின்றுமணமல்குநாங்கூர் மணிமாடக்*
*கோயில்வணங்கென்மனனே.* -பெரிய திருமொ. 3-8-1

*உணர்முழு மனனகமலமற மலர்மிசையெழுதரும்*
*மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்*
*இனனுணர்முழுநல மெதிர்நிகழ்கழிவினும்*
*இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே.* - திருவாய். 1-2-1

18: *சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில் பெரும்பாழேயோ*
*சூழ்ந்ததனில்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ,*
*சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞானவின்பமேயோ,*
*சூழ்ந்ததனில்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே.*

- (திருவாய்மொழி - 10-10-10)

எங்கும் நிறைந்து குணத்தாலே பெரிதான முக்தனைக்காட்டிலும், தன்னுடைய ஜ்ஞாநம் என்கிற குணத்தாலும், ஸ்வயம்பிரகாசமான ஸ்வரூபத்தாலும் பெரிதாயும் ஆனந்தமாயுமிருக்கும் எம்பெருமான்.

19. *அமலனாதிபிரானடியார்க்கென்னையாட்படுத்த*
*விமலன், விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன்*
*நிமலன்நின்மலன்நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான், திருக்*
*கமலபாதம்வந்தென் கண்ணினுள்ளனவொக்கின்றதே.*

- (அமலனாதிபிரான் - 1)

தோஷமில்லாதவன்.

20. *உணர்ந்துணர்ந்திழிந்தகன்றுயர்ந்துருவியந்தவிந்*
*நிலைமை, உணர்ந்துணர்ந்துணரிலுமிறைநிலையுணர்வரிதுயர்காள்*
*உணர்ந்துணர்ந்துரைத்துரைத்தரியயனரனென்னுமிவரை,*
*உணர்ந்துணர்ந்துரைத்துரைத்திறைஞ்சுமின்மனப்பட்டதொன்றே.*

-(திருவாய்மொழி - 1-3-6)

ஈசுவரனாயிருக்கும் தத்துவத்தின் இருப்பை உள்ளபடி அறிவது முடியாதது.

---

## அரும்பதவுரை

மிறுக்கு—ஆயாஸம்—வருத்தம். பேரணி—மூலபலம்.
கூறு—பாகம். உவர்—மத்தியஸ்தர்.

---

## 6. பரதேவதா பாரமார்த்தியாதிகாரம்
## ஸம்ஸ்கிருத வசனங்கள்

123. आभूतसम्प्लवे (பாரதம் சாந்திபர்வம் - 210-24)

பஞ்சபூதங்கள் உள்பட பிரளயமுண்டாகி மஹத்தத்துவம் பிரகிருதியில் லயத்தையடையும்போது எல்லாருக்கும் ஆத்மாவான ஒருவனிருக்கிறான். அவனுக்கு உடம்பான மற்றவைகள் நாசமடைந்த போதிலும், ஆத்மாவான அவனுக்கு நாசமில்லை. அவன் பிரபுவான நாராயணன்.

124. आद्यो नारायणो देवस्तस्माद् ब्रह्मा ततो भवः ।
अतः स्वयंभुवश्चान्ये मरीच्याद्यार्कसम्भवाः ॥

(வராஹபுராணம் - 25-6)

நாராயணன் என்கிற தேவன் முதலிலிருந்தவன்,அவனிடத்திலிருந்து பிரம்மாவும் அவனிடத்திலிருந்து ருத்திரனுமுண்டானார்கள்.

125. परो नारायणो देवस्तस्माज्जातश्चतुर्मुखः ।
तस्माद्रुद्रोऽभवद्देवि! स च सर्वज्ञतां गतः ।। (வராஹபுராணம் - 90-3)

நாராயணன் எல்லாருக்கும் மேலான தேவன்; அவனிடமிருந்து நான்கு முகமுள்ள பிரம்மா உண்டானான்; ஒ பூதேவி ! அவனிடமிருந்து ருத்திரன் உண்டானான்.

126. ततस्त्वमपि (ராமாயணம் உத்தரகாண்டம் - 101-26)

ஒருவராலும் ஜயிக்கமுடியாத தேவரீரும் அந்த எப்போது மிருக்கிற ரூபத்திலிருந்து எல்லாப் பிராணிகளை இரக்ஷிப்பதற்காக த்ரிமூர்த்திகளின் நடுவிலிருக்கிற விஷ்ணு என்கிற ரூபத்தை எடுத்துக்கொண்டீர். இங்கே முன் சுலோகங்களில் சொன்னபடி பிறந்தான் என்று சொல்லாமையால் பிரம்மாவையும் ருத்திரனையும்போல் பிறக்கவில்லையென்றும்,தானாகவே அவதாரம் செய்தானென்றும், 'ரக்ஷார்த்தம்' என்பதாலே கர்மபலனை அநுபவிப்பதற்காக அவதாரம் செய்யவில்லையென்றும் காட்டப்படுகிறது. (இது பிரம்மாவின் வசநம்)

127. नित्त्यं हि नास्ति (பாரதம் சாந்திபர்வம் - 347-32)

எப்போதுமிருக்கிற புருஷனான அந்த வாஸுதேவனொருவனைத் தவிர, ஸ்தாவரமோ, ஜங்கமமோ உலகத்தில் நித்தியமான வஸ்து கிடையாது.

128. यत्तत्कारणमव्यक्तं नित्यं सदसदात्मकम् ।
तद्विसृष्टः स पुरुषो लोके ब्रह्मेति कीर्त्यते ।। (மநுஸ்மிருதி - 1-11)

அந்த நாராயணனாலே உண்டுபண்ணப்பட்ட அந்தப் புருஷன் உலகத்தில் பிரம்மாவென்று சொல்லப்படுகிறான்.

129. संक्षिप्य (ராமாயணம் உத்தரகாண்டம் - 104-14)

முன்னாலே நீரே உம்முடைய ஸங்கல்பத்தாலே உலகங்களை அழித்து பிரளயஸமுத்திரத்தில் படுத்துக்கொண்டிருந்து முதலில் என்னை உண்டுபண்ணினீர். (இது பிரம்மா எம்பெருமானைக் குறித்துச் சொன்னது.)

130. क इति (ஹரிவம்சம் - 131-48)

'க' ன்று பிரம்மாவின் பெயர், நான் எல்லா பிராணிகளுக்குமீசன்; அதாவது அவர்களை நியமநம் பண்ணுகிறவன்; நாங்களிருவரும் தேவரீருடைய திருமேனியிலுண்டானவர்கள். ஆகையால் தேவரீர் கேசவன் என்கிற பெயரையுடையவர். (இது ருத்திரன் வசநம்.)

131. अहं प्रसादजः (பாரதம் சாந்திபர்வம் - 352-62)

ஒரு காரணமுண்டானபோது எம்பெருமான் ஸந்தோஷப்பட அந்த ஸந்தோஷத்திலிருந்து நான் உண்டானேன். அப்படியே அவன் ஒரு காரணத்தினால் கோபிக்க, நீ முன் ஸிருஷ்டியில் அந்த கோபத்தினால் உண்டானாய். (இது ருத்திரனைப் பார்த்து பிரம்மாவின் வசநம்.)

132. सर्वे देवाः எல்லா தேவர்களும் வாஸுதேவனை ஆராதிக்கிறார்கள்; எல்லா தேவர்களும் வாஸுதேவனை வணங்குகிறார்கள்.

133. सब्रह्मकाः (பாரதம் சாந்திபர்வம் - 350-30)

பிரும்மாவுடனும் ருத்திரனுடனும் இந்திரனுடனும் கூடின தேவர்களும் பெரியருஷிகளும் தேவசிரேஷ்டனாய் ஹரியென்றும் நாராயணனென்றும் சொல்லப்பட்ட எம்பெருமானை அர்ச்சனை செய்கிறார்கள்.

134. चिन्तयन्तः (பாரதம் சாந்திபர்வம் - 210-33)

பிரும்மா ருத்திரன் முதலானவர்கள் எந்த பிரபுவான நாராயணனை எப்போதும் நினைத்துக்கொண்டிருந்தும் அவனிப்படி இருக்கிறானென்று நிச்சயத்தை அடையவில்லையோ, அந்த எம்பெருமானை நான் உபாயமாகப் பற்றினேன்.

135. पद्मे दिव्ये (ராமாயணம் உத்தரகாண்டம் - 104-7,8)

தேவரீருடைய நாபியில் உண்டான ஸூரியன்போல் பிரகாசிக்கிற மேன்மையான தாமரைப்பூவில் என்னையுமுண்டுபண்ணி, பிரஜாபதி என்கிற அதிகாரி செய்யவேண்டிய எல்லா வேலைகளும் தேவரீரால் என்னிடம் வைக்கப்பட்டது. இப்படி உம்மால் வைக்கப்பட்ட பாரத்தை உடையவனான நான் உலகத்துக்கு யஜமாநனான தேவரீரை தியானம் செய்கிறேன். (இது பிரும்மாவின் வசநம்).

136. युगकोटि (பாரதம் குண்டதாரோபாக்கியாநம்)

சதுர்யுகத்தின் கோடியாயிரங்கள் எம்பெருமானை ஆராதித்து பிரம்மா மறுபடியும் மூன்று உலகங்களை ஸிருஷ்டிக்கிற அதிகாரத்தை அடைந்தா னென்று கேட்டிருக்கிறோம்.

137. विश्वरूप: (பாரதம் சாந்திபர்வம் - 8-37)

விச்வரூபன் மஹாதேவன் என்று சொல்லப்படுகிற ருத்திரன் ஸர்வ மேதம் என்று சொல்லப்பட்ட ஒரு பெரிய யஜ்ஞத்தில் எல்லா பூதங்களை யும் தன்னையும் மனதாலே தானே ஹோமம் பண்ணினான்.

138. महादेव: (பாரதம் சாந்திபர்வம் - 20-12)

மஹாத்மாவான மஹாதேவன் என்று சொல்லப்பட்ட ருத்திரன் ஸர்வமேதம் என்கிற யஜ்ஞத்தில் தன்னை ஹோமம்செய்து தேவர்களுக்குள் சிரேஷ்டனாக ஆனான். எல்லா லோகங்களையும் தன்னுடைய ஜ்ஞாநத் தாலே வியாபித்து எட்டு விதமான ரூபத்தைத் தரித்து காந்தியையுடையவ னாய் யானைத்தோலை வஸ்திரமாகவுடையவனாய் கீர்த்தியினால் விளங்குகிறான்.

139. यो मे यथा (பாரதம் சாந்திபர்வம் - 349-61)

இந்தப் பெரிய யஜ்ஞத்தில் எவன் எனக்கு பாகத்தை, கொடுக்க வேண்டிய விதிப்படி கொடுத்தானோ, அவன் யஜ்ஞபாகத்தைப் பெறுவ தற்குத் தகுந்தவனென்று வேதத்திலும் ஆபஸ்தம்பர் முதலானவர்கள் செய்த ஸூத்திரத்திலும் நான் ஏற்பாடு செய்திருக்கிறேன்.

140. ब्रह्माद्या: (விஷ்ணு புராணம் - 5-30-17)

பிரம்மா முதலான எல்லா தேவர்களும் மனிதர்களும் மிருகங்களும் எம்பெருமானுடைய மாயையாகிய பெரிய சுழலிலிருக்கிற மோஹமாகிய அந்தகாரத்தினால் சூழப்பட்டிருக்கிறார்கள். இங்கு மாயையென்பது பிரகிருதி.

141. ब्रह्मा विश्वसृज: (மநுஸ்மிருதி - 12-50)

முன் ஜந்மத்தில் ஸத்துவகுணம் மேலிட்டு உயர்ந்த புண்ணியங் களைச் செய்தவர்களால், பிரம்மா, ஒன்பது பிரஜாபதிகள், தர்மம், மஹத், பிரகிருதி (இவைகளுடைய அபிமானிதேவதைகள்) - இவ்விதமான பிறப்புக்கள் அடையப்படுகின்றன.

142. एतौ द्वौ (பாரதம் சாந்திபர்வம் - 350-19)

எம்பெருமானுடைய பிரஸாதத்தாலும், கோபத்தினாலும் உண்டான தேவசிரேஷ்டர்களான பிரம்மா ருத்திரன் என்கிற இவ்விருவர்களும் அவனாலே காட்டப்பட்ட வழியாக, அதாவது அதற்கு வேண்டிய அவனால் கொடுக்கப்பட்ட அறிவைக்கொண்டு ஸிருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

143. हिरण्यगर्भो भगवान् वासुदेवः प्रजापतिः ।

... ... .... .... ...

अन्ये तु पुरुषव्याघ्र! चेतसो ये व्यपाश्रयाः ।।

अशुद्धास्ते समस्तास्तु देवाद्याः कर्मयोनयः ।। (விஷ்ணு பு. - 6-7-56,77)

பகவானாகிய பிரம்மா, இந்திரன், பிரஜாபதிகள்.............. தேவர்கள் முதலான இவர்களெல்லாரும் கர்மத்தினாலுண்டானவர்கள். ஆகையாலே அவர்கள் அசுத்தர்கள்.

144. आब्रह्मस्तम्ब (விஷ்ணு தர்மம் - 104-23)

பிரம்மா முதலாக சின்ன புழுக்கள் வரையிலுள்ள உலகத்திலிருக்கிற எல்லா பிராணிகளும் கர்மத்தினாலுண்டான ஸம்ஸாரத்திற்கு உட்பட்டவர்கள்.

145. कर्मणाम् (ஸ்ரீ பாகவதம் - 11-19-18)

கர்மபலன்களை அநுபவிப்பதற்காகப் பிறந்தவர்களாகிய பிரம்மா முதலானவர்கள் அமங்களமென்று எண்ணி, அவர்கள் அடையத் தகுந்தவர்கள் என்கிற ஆசை போயிருக்கிறவனுக்கு வாஸுதேவன் மிகவும் உயர்ந்ததான அடையவேண்டிய வஸ்து. அமங்களமென்பதற்கு அவர்களை தியாநம் பண்ணுகிறவனுடைய பாபத்தைப் போக்கச் சக்தியில்லாதவர்களென்று கருத்து.

146. अनाश्रित्योच्छ्रयो नास्ति मुख्यमाश्रयमाश्रयेत् ।

रुद्रं समाश्रिता देवा रुद्रो ब्रह्माणमाश्रितः ।।

(பாரதம் ஆச்வமேதிகபர்வம் - 118-37,38)

தேவர்கள் ருத்திரனை அடைந்திருக்கிறார்கள்; ருத்திரன் பிரம்மாவை அடைந்திருக்கிறான்; பிரம்மா என்னை யடைந்திருக்கிறான். ஒ ராஜாவே !

நான் ஒருவனையும் அடையவில்லை. என்னால் அடையவேண்டியவன் ஒருவனுமில்லை. எல்லாருக்கும் நான் அடையவேண்டிய இடம்.

147. ब्रह्मा दक्षादयः कालस्तथैवाखिलजन्तवः ।
विभूतयो हरेरेता जगतः सृष्टिहेतवः ।। (விஷ்ணு புராணம் - 1-22-39)

பிரம்மாவும், தக்ஷன்முதலான ஒன்பதுபிரஜாபதிகளும், காலமும், அப்படியே எல்லா ஜந்துக்களும், எம்பெருமானுடைய விபூதிகளாய்க் கொண்டு உலகத்தையுண்டு பண்ணுவதற்குக் காரணமாயிருக்கிறார்கள்.

148. रुद्रः कालान्तकाद्याश्च समस्ताश्चैव जन्तवः ।
चतुर्धा प्रलयायैता जनार्दनविभूतयः ।। (விஷ்ணுபுராணம் - 1-22-33)

ருத்திரனும் , காலன், யமன் முதலானவர்களும் , எல்லா ஜந்துக்களும் நான்கு விதமான பிரளயத்துக்குக் காரணங்களாயும் எம்பெருமானுடைய விபூதிகளாயுமிருக்கிறார்கள்.

149. तवान्तरात्मा (பாரதம் - சாந்திபர்வம் - 361-4)

உனக்கும் எனக்கும் தேஹி என்கிற பெயரையுடைய மற்ற எல்லாருக்கும் ஆத்மாவான இந்த பகவான் எல்லாரும் செய்வதைப் பார்த்துக்கொண்டிருக்கிறான்; ஒருவனாலும் ஒரு காலத்திலும் அவன் பார்க்கப்படுகிறதில்லை. தேஹீ என்கிற சொல்லுக்கு உடம்பையுடைய பிராணியென்று பொருள். (இது பிரம்மா ருத்திரனைப் பார்த்துச் சொன்னது).

दासभूताः

150. वासुदेवो महद्भूतं सर्वदैवतदैवतम् ।
न परं पुण्डरीकाक्षाद् दृश्यते पुरुषर्षभ! ।। (பாரதம் பீஷ்ம - 67-2)

ஓ புருஷச்ரேஷ்டனே! புண்டரீகாக்ஷனை அதாவது எம்பெருமானைக் காட்டிலும் உயர்ந்தவன் ஒருவனுமில்லை.

151. एष धाता विधाता च सर्वेषां प्राणिनां प्रभुः ।
परं हि पुण्डरीकाक्षात् न भूतं न भविष्यति ।। (பாரதம் பீஷ்ம -7-17)

புண்டரீகாக்ஷனைக் காட்டிலும் உயர்ந்தது முன்னாலே இருந்த தில்லை. பின்னாலே உண்டாகப்போகிறதில்லை.

152. न विष्णोः परमो देवो विद्यते नृपसत्तम ! ।
विष्णुरेव सदाऽऽराध्यः सर्वदेवैरपि प्रभो ! ।।

ஒ ராஜச்ரேஷ்டனே! விஷ்ணுவைக் காட்டிலும் உயர்ந்த தேவனில்லை.

153. न वासुदेवात्

வாஸுதேவனைக்காட்டிலும் உயர்ந்த மங்களமானது இல்லை. வாஸுதேவனைக்காட்டிலும் உயர்ந்த சுத்தி பண்ணுவது அதாவது பாபத்தைப் போக்கடிப்பது இல்லை. வாஸுதேவனைக்காட்டிலும் உயர்ந்த தேவதை இல்லை. வாஸுதேவனையடைந்து ஒருவனும் வருத்தப்படு-கிறதில்லை. மங்களம் - நன்மையைக்கொடுப்பது.

154. त्रैलोक्ये

மூன்று உலகங்களிலும் அவனுக்கு (எம்பெருமானுக்கு) ஸமாந மானவன் உண்டானதில்லை, உண்டாகப்போகிறதில்லை.

155. न दैवम् (நாரதீயபுராணம் - 18-33)

கேசவனைக் காட்டிலும் உயர்ந்த தைவமில்லை.

156. राजाधिराजः (பாரதம் - ஆச்வமேதிகபர்வம் - 43-13)

எம்பெருமான், எல்லோருக்கும் ராஜாக்களான பிரம்மா முதலானவர் களுக்கும் மேற்பட்ட ராஜா. அவன் விஷ்ணு; அவன் பிரம்மம்; அவன் உயர்ந்தவன், ஆதலால் அவனை நாம் ஈசுவரனென்று அறிகிறோம். அவன் தான் தகப்பன், அவன் தான் பிரஜாபதி.

157. जायमानम् (பாரதம் சாந்திபர்வம் - 358-73-77)

எந்த ஜீவனை பிறக்கிறகாலத்தில் மதுஸூதநன் என்று சொல்லப் பட்ட எம்பெருமான் பார்க்கிறானோ; அவன் ஸத்துவகுணம் மேலிட்டவன் என்று அறியத்தகுந்தவன். அவன் மோக்ஷமாகிய பிரயோஜநம் கிடைப்ப தற்கு வேண்டியதை எண்ணுவன். எவனைப் பிறக்கிற ஸமயத்தில் பிரம்மா, ருத்திரன் இவர்கள் பார்க்கிறார்களோ, அவனுடைய மனது ரஜோ குணத்திலும், தமோகுணத்திலும் மூழ்கியிருக்கும்.

158. संसारार्णव (விஷ்ணுதர்மம் - 1-59)

ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தில் மூழ்கி விஷயங்களால் சூழப்பட்ட மனதையுடையவர்களுக்கு, ஓடமாகிய விஷ்ணு தவிர, மிகவுமுயர்ந்த அடையவேண்டிய வஸ்து வேறொன்றுமில்லை.

159. ब्रह्माणम् (பாரதம் சாந்திபர்வம் - 350-36)

பிரம்மாவையும், ருத்திரனையும், வேறு எந்த தேவர்கள் சொல்லப் படுகிறார்களோ அவர்களையும் நல்ல அறிவையுடையவர்கள் ஸேவிக்கிற தில்லை. ஏனென்றால் - அவர்கள் கொடுக்கும் பலன் அளவுள்ளது.

160. एवमेव विजानीत नात्र कार्या विचारणा ।
हरिरेकः सदा ध्येयो भवद्भिः सत्त्वसंस्थितैः ।।
नान्यो जगति देवोऽस्ति विष्णोर्नारायणात्परः ।।

(ஹரிவம்சம் - 132-8,14)

ஸத்துவகுணம் மேலிட்ட உங்களாலே ஹரி (எம்பெருமான்) ஒருவனே எப்போதும் தியானம் பண்ணத் தகுந்தவன். ஓ பிராமணர்களே ! அவன் எப்போதும் உபாஸிக்கத் தகுந்தவன். அவனை நினைப்பதற்கு நான் காரணம்.

ध्यात्वा मां सर्वयत्नेन ततो जानीत केशवम् ।
उपास्योऽयं सदा विप्रा उपायोऽस्मि हरेःस्मृतौ ।। (ஹரிவம்சம் - 133-2,44)

எல்லா முயற்சியும் கொண்டு கேசவனை அறிய முற்படுங்கள். முதலில் என்னை த்யானியுங்கள். ஹரியை த்யானிக்க நான் எப்போதும் உபாயமாய் உள்ளேன். (இது சிவனின் பேச்சு).

161. सूर्यस्यैव तु

ஸூரியனிடத்தில் எந்த மனிதன் ஏழு ஜன்மங்கள் பக்திபண்ணு கிறானோ, அவனுடைய பிரஸாதத்தால் அவனுக்கு ருத்திரனிடத்தில் பக்தியுண்டாகிறது. எவன் ருத்திரனிடத்தில் ஏழுஜன்மங்கள் பக்தி பண்ணுகிறானோ, அவனுடைய அநுக்கிரஹத்தால் அவனுக்கு வாஸுதேவ னிடத்தில் பக்தியுண்டாகிறது. எவன் வாஸுதேவனிடத்தில் ஏழு ஜன் மங்கள் பக்தி பண்ணுகிறானோ, அவன் வாஸுதேவனுடைய அநுக்ரஹத் தாலே அவனிடம் போய்ச் சேருகிறான்.

162. ये तु सामान्यभावेन

எவர்கள் புருஷோத்தமனான எம்பெருமானை மற்றவர்களுடன் ஸமமாக எண்ணுகிறார்களோ, அவர்களைப் பாஷண்டிகள் என்று அறிய வேண்டியது. அவர்கள் எல்லாக் கர்மங்களிலிருந்து விலக்கப்பட்டவர்.

163. त्वं हि रुद्र (வராஹபுராணம் - 10-36)

பெரிய கைகளையுடைய ருத்திரனே ! நீ ஜனங்களுக்கு மோஹ முண்டாகும்படியான சாஸ்திரங்களைச் செய், கொஞ்சம் வருத்தத்தைக் காண்பித்து, அதனால் பலம் சீக்கிரம் கிடைக்குமென்று காட்டு.

164. ब्रह्मा स्वयंभूः (ராமாயணம்-ஸுந்தரகாண்டம் - 51-45)

ராமனாலே சண்டையில் கொல்ல உத்தேசிக்கப்பட்டவனை, தானேயுண்டானவனாயும், நாலு முகத்தையுடையவனாயுமிருக்கிற பிரம்மாவாலும் இரக்ஷிக்கமுடியாது; மூன்று கண்களையுடையவனாயும், மூன்று பட்டணங்களை நாசம் பண்ணினவனாயுமிருக்கிற ருத்திரனாலும் முடியாது; மஹேந்திரனென்று பெயருள்ளவனாயும் தேவர்களுக்கு யஜமானனாயுமுள்ள இந்திரனாலும் முடியாது.

165. सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ।
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद् व्रतं मम ।।

(ராமாயணம் யுத்தகாண்டம் - 18-33)

ஒரே தடவை பிரபத்தி பண்ணி, நான் உனக்காக இருக்கிறேனென்று யாசிக்கிறவனுக்கு எல்லா பூதங்களிலிருந்தும் பயமில்லாமையைக் கொடுக்கிறேன். இது என்னுடைய விரதம்.

166. काङ्क्षन्तः (ஸ்ரீ கீதை - 4-12)

கர்மங்களின் பலன்கள் கிடைக்கவேண்டுமென்று ஆசைப் படுகிறவர்கள் இங்கே தேவதைகளாக எவர்கள் தோன்றுகிறார்களோ அவர்களையே ஆராதிக்கிறார்கள். ஏனென்றால் - கர்மத்தினுடைய பலனானது மனுஷ்யலோகத்தில் சீக்கிரம் உண்டாகிறது.

167. स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान् मयैव विहितान् हि तान् ।। (ஸ்ரீ கீதை - 7-22)

வேறு தேவதையின் ஆராதநத்தாலே பலன்களை அடைகிறான். அவைகளும் என்னாலேயே கொடுக்கப்பட்டவைகள்.

168. एष माता (பாரதம் சாந்திபர்வம் - 349-76-77)

இந்த பிரம்மா உங்களுக்கு தாயாகவும், தகப்பனாகவும், பிதாமஹனாகவுமிருக்கிறான். என்னால் உத்திரவு பண்ணப்பட்டவனாய் எல்லாருக்கும் வேண்டிய வரங்களைக் கொடுக்கிறவனாக ஆவான். அவனுடைய முகத்திலிருந்து அவனுக்குப் பின்னாலே உண்டான ருத்திரன் அவனால் உத்திரவுபண்ணப்பட்டவனாய் எல்லாருக்கும் வேண்டிய வரங்களைக் கொடுக்கிறவனாக ஆவான். (இது தேவர்களைக் குறித்து எம்பெருமான் சொன்னது.)

यस्मात्

169. सात्विकेषु (மாத்ஸ்யபுராணம் - 290-16)

ஸத்துவகுணம் அதிகமாயிருக்கிற கல்பங்களில் எம்பெருமானுடைய பெருமை அதிகமென்று சொல்லப்படுகிறது. இங்கே கல்பமென்பது பிரம்மாவின் ஒரு பகல். எந்தக் கல்பத்தில் அவனுக்கு ஸத்துவகுணம் மேலிடுகிறதோ, அதில் அவன் செய்த புராணங்களுக்கு தோஷமில்லாமையால் அவைகளில் சொல்லும் எம்பெருமானுடைய பெருமை உண்மையானதென்று ஏற்படுகிறது. அவைகளிலேயே யோகஞ் செய்து முடித்தவர்கள் மிகவுமுயர்ந்த கதியை அடையப்போகிறார்கள்.

युगकोटि

170. बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ।। (கீதை - 7-19.)

அனேக புண்ணிய ஜந்மங்களின் கடைசியில் ஒருவன் ஜ்ஞாநியாகி என்னைப் பஜிக்கிறான். இங்கே ஜ்ஞாநீ என்பவன் எம்பெருமானுடன் கூட எப்போதும் இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டு அவனையே அடைய வேண்டியவனாக எண்ணி அவனிடத்திலேயே பக்தியுள்ளவன்.

171. सेतिहासपुराणैस्तु वेदैर्वेदान्तसंयुतैः ।
ये जन्मकोटिभिः सिद्धास्तेषामन्तेऽत्र संस्थितिः ।।

(பௌஷ்கர ஸம்ஹிதை)

எவர்கள் அனேக கோடி ஜந்மங்களில் எம்பெருமானிடத்தில் ஐசுவரியம்முதலானதை அடைந்தார்களோ, அவர்கள் கடைசியில் அவனை அடைவதற்கு ஸாதநமான பக்தியையோ, பிரபத்தியையோ செய்வார்கள்.

172. जन्मान्तर (பாஞ்சராத்திரம்)

அனேகமாயிரம் ஜந்மங்களில் தபஸ்ஸினாலும், தியானத்தாலும் ஸமாதியாலும் எவர்களுக்குப் பாபங்கள் போய்விடுகின்றனவோ, அவர்களுக்கு கிருஷ்ணனிடத்தில் பக்தியுண்டாகிறது. இங்கே பக்தியென்பது 170 -வது நம்பரில் ஜ்ஞாநிக்குச் சொன்ன பக்தி.

173. तेषामहं समुद्धर्ता (கீதை - 12-7)

ஒ அர்ஜுநனே ! என்னிடத்திலேயே மனதை வைத்தவர்களுக்கு யமன்போலிருக்கிற ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்திலிருந்து சீக்கிரம் தூக்குகிறவனாக ஆவேன்.

174. रूपप्रकारपरिणामकृतव्यवस्थं
विश्वं विपर्यसितुमन्यदसच्च कर्तुम् ।
क्षाम्यन् स्वभावनियमं किमुदीक्षसे त्वं
स्वातन्त्र्यमैश्वरमपर्यनुयोज्यमाहुः ।। (வைகுண்டஸ்தவம் - 55)

எம்பெருமான் ஈசுவரனாயிருப்பதாலே அவன் ஸ்வாதந்திரியமானது '' ஏன் இதைச் செய்தாய், ஏன் இதைச் செய்யவில்லை '' என்று ஒருவனாலும் கேட்கத் தகுந்ததன்று என்று சொல்லுகிறார்கள்.

175. प्रतिबुद्धवर्जम् (தேவதா காண்டத்தின் கடைசீ ஸூத்ரம் )

நல்ல அறிவுள்ளவர்கள் தவிர மற்றவர்களாலே வேறு தேவதைகள் ஸேவிக்கத் தகுந்தவர்கள்.

176. येऽप्यन्यदेवता (கீதை - 9-23)

ஒ குந்தியின் பிள்ளையே ! எவர்கள் வேறு தேவதைகளிடத்தில் பக்தியுள்ளவர்களாய் சிரத்தையுடன் அவர்களையாராதிக்கிறார்களோ, அவர்களும் என்னையே ஆராதிக்கிறார்கள். ஆனால் சாஸ்திரம் சொன்ன விதிப்படி அவர்கள் ஆராதநம் செய்யவில்லை. சாஸ்திரமானது அந்த தேவதைகள் எம்பெருமானுக்கு உடம்புகளென்றும் அவன் அவர்களுக்கு

ஆத்மாவென்றும், இதையறிந்து ஆராதனம் செய்ய வேண்டுமென்றும் சொல்லுகிறது.

177. चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ।। (கீதை - 7-16)

ஸுகிருதம்பண்ணின நாலுவிதமான ஜநங்கள் என்னைப் பஜிக்கிறார்கள். அவர்கள் - ஐசுவரியத்தையிழந்து அது மறுபடியும் கிடைக்க வேண்டுமென்று வருத்தப்படுகிறவன், ஆத்மஸ்வரூபத்தைப் பார்த்து அநுபவிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறவன், புதிதாய் ஐசுவரியத்தை வேண்டுகிறவன், ஜ்ஞாநீ - என்று. இங்கு ஜ்ஞாநீ என்பதற்கு 170-வதில் சொன்னது பொருள்.

178. शरीरारोग्यम् (விஷ்ணுதர்மம் - 74-43)

எம்பெருமான் மோக்ஷத்தைக் கொடுக்கிறவனாயுமிருந்தாலும், தன்னைத் தியானம் பண்ணுகிறவர்களுக்கு, உடம்பில் ரோகம் இல்லாமையையும், பணத்தையும், போகங்களையும் ஆநுஷங்கிகமாக எப்போதும் கொடுக்கிறான். ஆநுஷங்கிகம் - என்பது ஒருவனால் கேட்காமலே முக்கியமான பலனுடன்சேர்த்துக்கொடுக்கப்பட்ட பலன்.

179. अभिलषित (ஈசாண்டான் )

எந்த காமபோகங்கள் முன்னாலே ஆசைப்பட்டும் அடைய முடியாமலிருந்தனவோ, அவைகள். ஜலப்ரவாஹங்கள் ஸமுத்திரத்தில் தானாகப்போய் விழுவதுபோல தானாகவே (நம்முடைய ப்ரயத்நமில்லாமலே) இப்போது அவைகளை வேண்டாத நம்மிடம் வருகின்றன.

180. पुराणसंहिताकर्ता भवान् वत्स! भविष्यति ।
देवतापारमार्थ्यं च यथावद्वेत्स्यते भवान् ।। (விஷ்ணு பு. - 1-1-26)

நீ பரதேவதையினிருப்பை உள்ளபடி அறிவாய்.

181. ततश्च प्राह भगवान् वसिष्ठो मे पितामहः ।
पुलस्त्येन यदुक्तं ते सर्वमेतद्भविष्यति ।। (விஷ்ணுபுராணம் - 1-1-28)

உனக்குப் புலஸ்தியராலே எது சொல்லப்பட்டதோ, அது கட்டாயம் வரும்.

तस्मै नमः

182. देवतिर्यङ् (விஷ்ணு புராணம் - 1-8-35)

ஒ மைத்திரேயனே ! தேவர்கள் மிருகங்கள் மனிதர்கள், ஆகிய இவர்களில் ஆண்பிள்ளைகள் பகவான். பெண் பிள்ளைகள் லக்ஷ்மீ. இவ்விருவரைக் காட்டிலும் வேறான ஒன்றுமில்லை. ஆண்களை எம்பெருமானாகவும், பெண்களை லக்ஷ்மியாகவும்சொன்னதின் கருத்து - அவர்கள் எம்பெருமானுக்கும் லக்ஷ்மீக்கும் பிரகாரம் - என்று.

---

### தமிழ் வசனங்கள்

21. *உன்னித்துமற்றொருதெய்வம் தொழாளவனையல்லால்*
*நும்மிச்சைசொல்லி நும்தோள்குலைக்கப்படுமன்னைமீர்*
*மன்னப்படும்மறைவாணனை வண்டுவராபதி*
*மன்னனை ஏத்துமினேத்துதலும் தொழுதாடுமே.*

(திருவாய்மொழி - 4-6-10)

நினைத்தும் எம்பெருமானைத் தவிர வேறு ஒரு தெய்வத்தை ஸேவிக்கமாட்டாள். இதனால் எப்படி வேறு தெய்வத்தை ஸேவிக்க-மாட்டாளோ, அப்படியே அவனை ஸ்வப்நத்திலும் நினைக்கவும் மாட்டாளென்று கருத்து.

22. *நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்*
*தன்னையேதான் வேண்டும் செல்வம்போல் மாயத்தால்*
*மின்னையேசேர் திகிரி வித்துவக்கோட்டம்மா*
*நின்னையேதான் வேண்டி நிற்பனடியேனே.* (பெருமாள் திரு. - 5-9)

தேவரீரே வேண்டுமென்று ஆசைப்பட்டு நீண்ட செல்வத்தை வேண்டாதவர்களுக்கு தானாகவே அவர்களிடம் வரவேண்டுமென்று ஆசைப்பட்டு வருகிற செல்வம்போல். இங்கே நீண்ட செல்வமாவது - பிரம்மா முதலானவர்களுடைய ஐசுவரியம். கடைசியில் ''செல்வம்'' என்பதற்கு இந்த உலகத்தில் ஐசுவரியமென்று பொருள்.

23. *நில்லாதபெருவெள்ளம் நெடுவிசும்பின்மீதோடி*
*நிமிர்ந்தகாலம், மல்லாண்டதடக்கையால் பகிரண்டமகப்படுத்த*
*காலத்து, அன்று-எல்லாருமறியாரோ எம்பெருமானுண்டுமிழ்ந்த*
*வெச்சில்தேவர் அல்லாதார்தாமுளரேயவனருளேயுலகாவதறியீர்களே.*

(பெரிய திருமொழி - 11-6-2)

எம்பெருமானாலே பிரளயகாலத்தில் சாப்பிடப்பட்டு, வயிற்றில் வைத்துக்கொண்டிருந்து, பிறகு ஸிருஷ்டிகாலத்தில் அவனாலுமிழப்பட்ட அதாவது வேளிப்படுத்தப்பட்ட எச்சில் தேவர்களில்லாதவர்கள் எவராவது உண்டோ? இங்கு எச்சில் என்பதாலே அந்த தேவதைகள் உபாஸிக்கத் தகுந்தவர்கள் அன்று என்றும், பிரம்மாவும் ருத்திரனும் இப்படிப் பட்டவர்களேயென்றும் வேறு அல்லவென்றும் சொல்லப்படுகிறது.

24. *நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்*
*தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்-யான்முகமாய்*
*அந்தாதி மேலிட் டறிவித்தே னாழ்பொருளைச்*
*சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து.* (நான்முகன் திருவந்தாதி - 1)

நாராயணன் நான்குமுகமுள்ள பிரம்மாவை உண்டு பண்ணினார். அந்த பிரம்மாவும் ருத்திரனை எம்பெருமான் ஸிருஷ்டிப்பதற்கு த்வாரமாய்க்கொண்டு அவனைத்தானே உண்டுபண்ணினான்.

25. *கூவிக்கொள்ளாய்வந்தந்தோ என்பொல்லாக்கரு*
*மாணிக்கமே, ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றி*
*லேன்யான், மேவித்தொழும்பிரமன்சிவனிந்திரனுதிக்கெல்லாம்,*
*நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பரந்ததுவே.* (திருவாய்மொழி - 10-10-3)

எல்லாரும் சேர்ந்து (எம்பெருமானை) ஸேவிக்கிற பிரம்மா ருத்திரன், இந்திரன் முதலானவர்கள் உண்டாவதற்குக் காரணமான நாபீகமலத்துக்கும் கிழங்குபோல் காரணமான எம்பெருமானே !

26. *தீர்த்தனுலகளந்த சேவடிமேல்பூந்தாமம்*
*சேர்த்தியவையே சிவன்முடிமேல்தான்கண்டு*
*பார்த்தன்தெளிந்தொழிந்த பைந்துழாயான்பெருமை*
*பேர்த்துமொருவரால் பேசக்கிடந்ததே.* (திருவாய்மொழி - 2-8-6)

பரிசுத்தியைச் செய்கிற எம்பெருமானுடைய உலகத்தை மூன்றடி யால் அளந்த அழகான திருவடியின் மேலே பூமாலையைச் சேர்த்து, பிறகு அதைச் சிவன் தலையின் மேலே பார்த்து அர்ஜுனன் எம்பெருமானைப் பரதேவதை என்று ஸந்தேஹமில்லாமல் நிச்சயித்தான். அந்தப் பசுமையான துளஸியையுடைய எம்பெருமானுடைய பெருமை.........

27. *வைம்மின் நும்மனத்தென்று யானுரைக்கின்றமாயவன்*
*சீர்மையை எம்மனோர்களுரைப்பதென் அதுநிற்கநாடொறும்*

*வானவர் தம்மையாளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ண லும் செம்மையாலவன் பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவரே.*

(திருவாய்மொழி - 3-6-4)

தேவர்களை ஆளுகிற இந்திரனும், நான்குமுகமுடைய பிரம்மாவும், தலையில் ஜடையை உடையவனாயும், தன்னை ஈசுவரனென்கிற அபிமானமுடையவனாயுமுள்ள ருத்திரனும் எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளை நன்றாய் நினைத்து, அவனை ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டு திரிவார்கள்.

28. *பேச நின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்*
*நாயகனவனே கபாலநன் மோக்கத்துக்கண்டு கொள்மின்*
*தேசமாமதிள் சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள்*
*ஈசன்பாலோரவம்பறைத லென்னாவதிலிங்கியர்க்கே.*

(திருவாய்மொழி - 4-10-4)

ஸர்வேசுவரன் என்று சில ஜனங்கள் சொல்லும்படி அதிக சக்தியுள்ள சிவனுக்கும் பிரம்மாவுக்கும் மற்றவர்களுக்கும் எம்பெருமானே யஜமானன்.

29. *ஒற்றைவிடையனும்நான்முகனு முன்னையறியாப்பெருமையோனே*
*முற்றவுலகெல்லாம்நீயேயாகி மூன்றெழுத்தாய் முதல்வனேயோ*
*அற்றதுவாணாளிவற்கென்றெண்ணி யஞ்ச நமன் றமர்ப்பற்றலுற்ற*
*அற்றைக்கு நீயென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்*
*பள்ளியானே.* (பெரியாழ்வார் திருமொழி - 4-10-4)

விலக்ஷணனான காளைமாட்டை வாஹனமாகவுடைய ருத்திரனும் பிரம்மாவும் உன்னை அறியமுடியாதபடியான பெருமையை உடையவனே! (இது எம்பெருமானைப் பற்றிச் சொன்னது).

30. *எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் மற்றும் ஒருத்தரு*
*மிப்பிறவியென்னும் நோய்க்குமருந்தறிவாருமில்லை மருத்துவனாய்*
*நின்ற மாமணிவண்ணா மறுபிறவிதவிரத் திருத்தி, உன்கோயில்*
*கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலையெந்தாய்.*

(பெரியாழ்வார் திருமொழி - 5-3-6)

காளைமாட்டை த்வஜமாக உடைய ருத்திரன், பிரம்மா, இந்திரன், வேறு தேவதைகள் ஆகிய இவர்களில் எவரும் இந்த ஸம்ஸாரம் என்கிற வியாதியைத் தீர்க்கும் மருந்தை அறிகிறவர்களில்லை.

31. *திண்ணன்வீடு முதல்முழுதுமாய்*
*எண்ணின்மீதிய னெம்பெருமான்*
*மண்ணும்விண்ணுமெல்லா முடனுண்ட நங்*
*கண்ணன் கண்ணல்ல தில்லையோர் கண்ணே.* (திருவாய்மொழி -2-2-1)

கண்ணனாகிய ரக்ஷகனல்லாமல் வேறு ஒரு ரக்ஷகனில்லை.

32. *களைவாய்துன்பம்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்*
*வளைவாய் நேமிப்படையாய் குடந்தைக்கிடந்தமாமாயா*
*தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது*
*இளையா துனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே.*
(திருவாய்மொழி - 5-8-8)

துன்பத்தைத் தேவரீர் போக்கவேண்டும்; அப்படிச் செய்யா-விட்டால், என்னை ரக்ஷிக்கிறவர் ஒருவரு மில்லை.

33. *கூவிக்கொள்ளாய்வந்தந்தோ என்பொல்லாக்கரு*
*மாணிக்கமே, ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றி*
*லேன்யான், மேவித்தொழும்பிரமன்சிவனிந்திரனுதிக்கெல்லாம்,*
*நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பரந்ததுவே.* (திருவாய்மொழி - 10-10-3)

தேவரீரைத் தவிர ஆத்மாவான எனக்கு ரக்ஷகனாக பிடித்து கொள்ளத் தகுந்தவன் ஒருவனு மிருப்பதாக அறியவில்லை.

34. *தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை*
*விரைகுழவும் மலர்பொழில் சூழ் வித்துவக்கோட்டம்மானே !*
*அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள் தன்*
*அருள் நினைந்தே அழும் குழவியதுவே போன்றிருந்தேனே .*
(பெருமாள் திருமொழி - 5-1)

தேவரீர் கருமத்துக்குப்பலனாகக் கொடுக்கும் துன்பத்தைத் தடுக்கா விட்டால்.

35. *பண்டைநாளாலேநின் திருவருளும் பங்கயத்தாள் திரு*
*வருளும் கொண்டு நின்கோயில் சீய்த்துப்பல்படிகால் குடிகுடி*
*வழிவந்தாட்செய்யும் தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்*
*தாமரைக் கண்களால் நோக்காய் தெண்டிரைப் பொருநல்தண்*
*பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே.* (திருவாய்மொழி - 8-10-3)

தேவரீரைத் தவிர வேறு உபாஸிக்கத் தகுந்த தைவமிருக்கிறது என்று எண்ணுகிறவர்களுடன் நான் சேரமாட்டேன். நான் ஆசைப்பட்டு ஒப்புக்கொண்டதும் தேவரீருடைய பக்தர்களுக்கு அடிமையாயிருப்பது.

36. முகிலுருவம்

**பாருருவில் நீர் எரிகால் விசும்புமாகிப் பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற**
**ஏருருவில் மூவருமே யென்ன நின்ற இமையவர் தம் திருவுருவேறெண்ணும்**
**போது**
**ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ ஒன்று மாகடலுருவம் ஒத்து நின்ற**
**மூவுருவம் கண்டபோது ஒன்றும் சோதி முகிலுருவம் எம் அடிகள்**
**உருவந்தானே.**

(திருநெடுந்தாண்டகம் - 2)

மேகத்துக்குள்ள நீலரூபமே என் ஸ்வாமியினுடைய ரூபம்.

37. **மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினையுள்**
**ளெழ வாங்கிக் காலும்கையும் விதிர் விதிர்த்தேறிக் கண்ணுறக்க**
**மதாவதன் முன்னம் மூலமாகிய ஒற்றையெழுத்தை மூன்றுமாத்**
**திரையுள் ளெழவாங்கி வேலைவண்ணனைமேவுதிராகில் விண்ண**
**கத்தினில் மேவலுமாமே.** (பெரியாழ்வார் திருமொழி - 4-5-4)

வேதத்துக்கு மூலமான பிரணவம் என்கிற ஒரு எழுத்தை மூன்று மாத்திரையோடு தனக்குள்ளே அதாவது - வேறொருவரும் கேட்க முடியாதபடி சொல்லி, ஸமுத்திரம்போன்ற வர்ணத்தையுடைய எம்பெரு மானை ஆசையுடன் தியானம் செய்தால்.

38. **கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி**
**கண்டவின்பம் தெரியவரிய வளவில்லாச் சிற்றின்பம்**
**ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்பக்**
**கண்டசதிர்கண்டொழிந்தே னடைந்தேனுன் திருவடியே.**

---

## அரும்பதவுரை

விடுதீட்டு—ஒருவன் தனக்குள்ள பாத்தியத்தை விடுகிற தஸ்தாவேஜி.

ஏவல் தேவை—யஜமாநனால் ஏவப்பட்டு அவன் வேண்டுகிற வேலைக்காரனால் செய்யப்பட்ட வேலைகள்.

கருவிலே—கர்ப்பமாயிருக்கும்போது.

திரு—பாக்கியம்.

கடுக—சீக்கிரம்.

குறி—எல்லை.
பற்றாசு—பிடிப்பு.
உண்டறுக்க—சாப்பிட்டு ஜரிக்க.
ஒக்கப்பரிமாறுகிற—லக்ஷ்மியோடு கூடவிருந்து ரக்ஷிக்கிற.

---

## 7. முமுக்ஷுத்வாதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

183. तस्मिन् प्रसन्ने किमिहास्त्यलभ्यं धर्मार्थकामैरलमल्पकास्ते ।
समाश्रिताद् ब्रह्मतरोरनन्तान्निस्संशयो मुक्तिफलप्रपातः ।।

(விஷ்ணு புராணம் - 1-17-91)

அந்த எம்பெருமான் பிரஸந்நன் ஆனால், இங்கு அடைய முடியாதது எது? தர்மம், அர்த்தம், காமம் இவைகளால் ஆகவேண்டியதில்லை. அவைகள் மிகவும் அல்பங்கள்.

184. अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान् देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ।। (கீதை - 7-23)

சின்ன புத்தியுடைய அவர்கள் அடையும் அந்த பலன் முடிவை யுடையது.

185. किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ।। (கீதை - 9-33)

நச்வரமாயும் ஸுகமில்லாமலுமிருக்கிற இந்த உலகத்தை அடைந் திருக்கிற நீ, என்னைப் பஜி.

186. महाबलान् (விஷ்ணுபுராணம் - 4-24-142,143)

மிகுந்த பலத்தையும் மிகுந்த வீர்யத்தையும், அளவில்லாத தனக் குவியலையும் உடையவர்களாயிருந்து நீண்ட காலத்தில் தங்களுடைய கதைகளை மாத்திரம் மீத்தி வைத்துப்போன ராஜாக்களைக் கேட்டு, நல்ல அறிவை ஸம்பாதித்தவன் பிள்ளை பெண்டாட்டி முதலானவைகளிலும் வீடு நிலம் முதலானவைகளிலும், பணம் முதலானவைகளிலும் என்னது என்கிற எண்ணத்தை வைத்துக் கொள்ளமாட்டான்.

187. गर्भे च सुखलेशोऽपि भवद्भिरनुमीयते ।
यदि तत् कथ्यतामेवं सर्वं दुःखमयं जगत् ॥ (விஷ்ணுபு - 1-17-69)

உலகம் முழுவதும் துக்கம் நிறைந்தது.

188. न केवलं द्विजश्रेष्ठ! नरके दुःखपद्धतिः ।
स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णोर्नास्ति निर्वृतिः ॥ (விஷ்ணுபு - 6-5-50)

ஸுவர்க்கத்திலிருக்கிறவனுக்கும் புண்ணியம் குறைந்து அதிலிருந்து கீழே விழுவோமென்கிற பயத்தாலே ஸுகம் கிடையாது.

189. राज्ये (விஷ்ணுபு - 6-7-7)

அறிவில்லாமல் என்னதென்கிற எண்ணத்தாலே பீடிக்கப் பட்ட மனதையுடையவர்களாய், உடம்பே ஆத்மா என்கிற எண்ணமாகிய மிகுந்த குடியினாலே மயங்கினவர்கள் ராஜ்ய விஷயத்தில் ஆசைப்படுகிறார்கள். என்னைப் போன்றவர்கள் அப்படி ஆசைப்படுகிறதில்லை.

(காண்டிக்யர் சொல்லியது)

190. आब्रह्मभवनात् (இதிஹாஸ ஸமுச்சயம் - 4-49)

ஓ ருஷியே ! பிரம்மாவின் உலகங்கள் உள்பட எல்லாவற்றிலும் இந்த அல்பமாயிருப்பது முதலான தோஷங்கள் இருக்கின்றன. ஆகையாலேயே புத்திமான்கள் ஸ்வர்க்கத்தையடைவதை ஆசைப்படுகிறதில்லை.

191. ब्रह्मण: (பாரதம் ஆரண்யபர்வம் - 262-37,38,39)

பிரம்மாவினுடைய இருப்பிடத்துக்கு மேலே விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதமிருக்கிறது. அது சுத்தமாயும், எப்போதுமிருப்பதாயும் ஸ்வயம்பிரகாசமாயும் இருக்கிறது. பரப்பிரம்மத்தை அடைவதற்கு இடமாயிருப்பதாலே அதுவும் பரப்பிரம்மம் என்று சொல்லப்படுகிறது. அறிவில்லாதவர்களாயும் விஷயங்களில் மனதைச் செலுத்துகிறவர்களாயும், டம்பம், லோபம், கொழுப்பு, கோபம், த்ரோஹம், மோஹம் இவைகளால் பீடிக்கப்பட்டவர்களாயுமிருக்கிற மனிதர்கள் அந்த இடத்திற்கு போவதில்லை. அஹங்காரமும், மமகாரமும் இல்லாமல் ஸுகதுக்கங்களைப் பொறுத்துக்கொண்டு இந்திரியங்களை அடக்கிக்கொண்டு எம்பெருமானு டைய தியானத்தைப் பிரீதியுடன் செய்துக் கொண்டிருக்கிற ஸாதுக்களே அவ்விடத்திற்குப் போகிறார்கள்.

192. रम्याणि (பாரதம் சாந்தி பர்வம் - 1 96-4)

ஒ ராஜாவே ! அழகாயும் இஷ்டப்படி போகக்கூடியதாயும் இருக்கிற விமானங்களும், அப்படியே ஸபைகளும் பலவிதமான உத்யானங்களும் தெளிந்த ஜலத்தையுடைய தாமரையோடைகளும் (பரமபதத்தில் இருக்கின்றன.)

193. रुद्रादित्यवसूनां च तथाऽन्येषां दिवौकसाम् ।
एते वै निरयास्तात!स्थानस्य परमात्मनः ।।

(பாரதம் சாந்திபர்வம் - 196-6)

ஒ குழந்தாய் ! பரமாத்மாவான எம்பெருமானுடைய இடத்தைப் பார்க்கும்போது இந்த ஸுவர்க்கம் முதலான ஸ்தாநங்கள் நரகங்கள்.

194. परमात्मनि यो रक्तो विरक्तोऽपरमात्मनि ।
सर्वेषणाविनिर्मुक्तः स भैक्षं भोक्तुमर्हति ।। (பார்ஹஸ்பத்யஸ்மிருதி)

எவன் பரமாத்மாவாகிய எம்பெருமானிடத்தில் ஆசையுள்ளவனாயும், அவனைத் தவிர வேறு விஷயங்களில் ஆசையில்லாதவனாயுமிருக்கிறானோ, அவன் எல்லா ஆசைகளால் விடப்பட்டவனாய், பிக்ஷையைச் சாப்பிட்டுக்கொண்டு இருக்கத் தகுந்தவன்.

195. प्रवृत्तिलक्षणं धर्मं प्रजापतिरथाब्रवीत् ।
प्रवृत्तिः पुनरावृत्तिर्निवृत्तिःपरमा गतिः ।।

(பாரதம் சாந்திபர்வம் - 219-4-2)

பிரவிருத்தி தர்மங்களைப் பிரம்மா சொன்னான். நிவிருத்தி தர்மங்களை நாராயணன் என்கிற ருஷி சொன்னார். ஒரு பலனை வேண்டிச் செய்யும் கர்மங்களுக்குப் பிரவிருத்தி தர்மங்களென்றும், மோக்ஷத்தை ஆசைப்பட்டுச் செய்யும் கர்மங்களுக்கு நிவிருத்தி தர்மங்களென்றும் பெயர்.

196. अग्निहोत्रफला वेदाः शीलवृत्तफलं श्रुतम् ।
रतिपुत्त्रफला दारा दत्तभुक्तफलं धनम् ।।

(பாரதம் ஸபாபர்வம் - 5-116)

சாஸ்திரத்தைக் கேட்பதினாலே உண்டான ஜ்ஞானத்துக்கு பலன் ஆத்ம குணங்களும் நல்லவொழுக்கமும்.

197. शमार्थं (இதிஹாஸ ஸமுச்சயம் 12-37)

புத்திமான்களால் மனதை அடக்குவதற்காக எல்லா சாஸ்திரங்களும் சொல்லப்பட்டன. ஆகையால் எவன் மனது அடங்கியிருக்கிறதோ அவன் எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவன்.

198. नाच्छादयति

நாயின் வாலானது மறைக்க வேண்டிய இடத்தை மறைக்கிற தில்லை. ஈயையும் கொசுக்களையும் ஒட்டுகிறதில்லை. அது போல தர்மம் செய்வதையுண்டு பண்ணாத நல்ல அறிவு பிரயோஜனம் இல்லாதது. இந்த சுலோகத்தில் 'தத்' என்கிற சொல்லை வருவித்துக் கொள்ள வேண்டியது.

199. वयस: (மனுஸ்மிருதி 4-1-8)

வயது, செய்யும் வேலை, அதின் பிரயோஜனம் சாஸ்திரஜ்ஞாநம், நல்ல பிறப்பு, இவைகளுக்கு ஒத்திருக்கிற வேஷம், பேச்சு, செயல் இவைகளையுடையவனாக ஒருவன் இங்கேயிருக்க வேண்டியது. வேஷம் முதலான மூன்றையும் வயது முதலான ஒவ்வொன்றிலும் சேர்க்க வேண்டியது.

200. असितं सितकर्माणं यथा दान्तं तपस्विनम् ।
चण्डालमपि वृत्तस्थं तं देवा ब्राह्मणं विदुः ।।

(சாந்தி பர்வ 18-11 ஸாரதீபிகையில் உதாஹரிக்கப்பட்டது)

எவன் ஸுகம் துக்கம் முதலான எல்லா இரட்டைகளையும் பொறுத்துக்கொண்டு, ஒன்றிலும் பற்றில்லாதவனாய், எல்லா பிராணி களுக்கும் ஹிதத்தையே செய்துகொண்டிருக்கிறானோ, அவனைப் பிராம்மணனென்று தேவர்கள் அறிகிறார்கள்.

201. द्रवन्ति दैत्याः प्रणमन्ति देवता नश्यन्ति रक्षांस्यपयान्ति चारयः।
यत्कीर्तनात् सोऽद्भुतरूपकेसरी ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः।।

(விஷ்ணுதர்மம் - 43-28)

எந்த எம்பெருமானுடைய திருநாமத்தைச்சொன்னபோது அஸுரர்கள் ஓடிப்போகிறார்களோ, தேவர்கள் வணங்குகிறார்களோ,

ராக்ஷஸர்கள் நாசத்தையடைகிறார்களோ, விரோதிகள் ஓடிப்போகிறார்களோ, அந்த எம்பெருமான் அடியேனுக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

---

### தமிழ் வசனங்கள்

38. *கிற்பன்கில்லேனென்றிலன் முனநாளால்*
*அற்பசாரங்களவைசுவைத்தகன்றொழிந்தேன்*
*பற்பல்லாயிரமுயிர்செய்தபரமா, நின்*
*நற்பொற்சோதித்தாள்நணுகுவதெஞ்ஞான்றே.* (திருவாய்மொழி -3-2-6)

கொஞ்சமான ஸாரத்தையுடைய விஷயங்களையநுபவித்து அவை களின் தோஷங்களைக் கண்ணாலே பார்த்து, காதாலே கேட்டு, த்வக்காலே தொட்டு, மூக்காலே மோந்து, நாக்காலே சாப்பிட்டு இப்படி உழலுகிற ஐந்து இந்திரியங்களால் வரும் ஸுகமும், இந்திரியங்களாலறிய முடியாததும், அவைகளாலுண்டாகும் ஸுகம்போல் அளவுள்ளதாய் இல்லாமலிருக்கிற ஆத்மாவின் அநுபவத்தினாலுண்டாகும் சின்ன ஸுகமும். உழலுகிற என்ப தற்கு மிகுந்த துன்பத்தை அநுபவிக்கும்போதும் விஷயங்களை விடாமல் அவைகளிலேயே சுற்றிக்கொண்டிருக்கிற என்பது பொருள். சின்ன ஸுகம் என்பதற்கு எம்பெருமானுடைய ஸுகத்தைக் காட்டிலும் சின்னது என்று பொருள்.

---

## 8. அதிகாரிவிபாகாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

201. அ. वारुणं दिव्यम् आग्नेयं वायव्यं पार्थिवं तथा ।
मान्त्रं मानसम् इत्येवं स्नानं सप्तविधम् स्मृतम् ।।

ஸ்னானம் ஏழுவிதம் என்று கூறப்பட்டது.

201. ஆ. वस मातरमेवाग्रे भिक्षेत – भवति भिक्षां देहि इति ब्राह्मणो भिक्षेत । भिक्षां भवति देहि इति राजन्यः । देहि भिक्षां भवति इति वैश्यः ।

202. येन केनापि (சரணாகதி கத்யம்)

எப்படியாவது த்வயமந்திரத்தைச்சொல்லுகிறவனான நீ. இங்கு ''எப்படி'' என்பதற்கு உடனே மோக்ஷம் வேண்டுமென்றாவது, அல்லது

இந்த தேஹம் முடிந்தவுடனாவது என்றும், வேண்டியவனாயிருந்தாவது, சத்துருவாயிருந்தாவதென்றும், மந்திரத்தின் அர்த்தத்தை நன்றாய்த் தெரிந்தாவது, பொதுவாய் அதின் அர்த்தத்தை அறிந்தாவதென்றும் பொருள்.

203. पापीयसोऽपि शरणागतिशब्दभाजो
नोपेक्षणं मम तवोचितमीश्वरस्य ।
त्वद्ज्ञानशक्तिकरुणासु सतीषु नैव
पापं पराक्रमितुमर्हति मामकीनम् ।। (அதிமாநுஷஸ்தவம் 61)

மிகுந்த பாபியாயிருந்தாலும் சரணாகதியைச் சொல்லுகிற சொல்லைச்சொல்லுகிற என்னை உபேக்ஷிப்பது ஈசுவரனாயிருக்கும் தேவரீருக்குத் தகுந்ததன்று. தேவரீருடைய ஜ்ஞானம் சக்தி கருணை இவைகளிருக்கும்போது என்னுடைய பாபமானது பலனைக் கொடுக்கத் தகுந்ததன்று.

204. शरणवरणवागियं योदिता न भवति बत साऽपि धीपूर्विका ।
इति यदि दयनीयता मय्यहो वरद! तव भवेत्ततः प्राणिमि ।।
(வரதராஜஸ்தவம் 84)

சரணாகதியைச் சொல்லுகிற எந்தச்சொல் என்னால் சொல்லப்-பட்டதோ, அது புத்தி பூர்வமாகச் சொல்லப்படவில்லை. இதைக்கொண்டே தயை செய்வதற்கு நான் விஷயமாவேனானால், அப்போது நான் பிழைத்திருப்பேன்.

205. यथाऽसि यावानसि योऽसि यद्गुणः
करीश! यादृग्विभवो यदिङ्गितः ।
तथाविधं त्वाऽहमभक्तदुर्ग्रहं
प्रपत्तिवाचैव निरीक्षितुं वृणे ।। (வரதராஜஸ்தவம் 92)

பக்தியினால் அடையமுடியாத அப்படிப்பட்ட உன்னைப் பிரபத்தியைச்சொல்லுகிற சொல்லாலேயே பார்ப்பதற்கு ஆசைப்-படுகிறேன்.

206. तव भरः (ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் 2-102)

தார்மிகர்களான ஆசாரியர்களாலே நான் தேவரீருடைய பரமாகச் செய்யப்பட்டேன், சரணம் என்கிற சொல்லையும் சொன்னேன். இந்த இரண்டையும் தேவரீர் ஸாக்ஷியாகவைத்துக் கொண்டு ஒ ரங்கநாதனே! என்னைத் தேவரீருடைய பரமாக செய்துகொள்ள வேண்டும்.

207. त्रिसन्ध्यं कारयेद्वालान् प्रणामं देवपादयोः ।
पुत्त्रः प्रेष्यस्तथा शिष्य इत्येवं च निवेदयेत् ।।

(சாண்டில்ய ஸ்மிருதி 3-75)

பிள்ளையென்றாவது, வேலைக்காரனென்றாவது, ஒருவனுடைய பரத்தை எம்பெருமானிடம் கொடுக்க வேண்டியது.

208. सिद्धिर्भवति (சாண்டில்ய ஸ்மிருதி 1-95)

எம்பெருமானை ஸேவிக்கிறவனிடத்தில் உண்டாகும் அவன் பிரஸாதமானது இவ்வளவென்று ஸம்சயமுண்டாகலாம். அவன் பக்தனுடைய வேலையில் ஆசையையுடையவர்கள் விஷயத்தில் அவனுடைய பிரஸாதத்திற்கு அளவுண்டோ இல்லையோவென்று ஸந்தேஹப்படவேண்டாம். அதாவது - அளவில்லையென்றும் பிரஸாதம் அதிகமாயிருக்குமென்றும் கருத்து.

209. अन्धोऽनन्ध (நியாஸதிலகம் 21)

ஒ ரங்கநாதனே! எப்படி பொட்டையன் கண்ணுள்ளவனைப் பிடித்துக்கொண்டு போகிறானோ, எப்படி நொண்டி ஓடத்திற்குள் வைக்கப்பட்டு ஓடக்காரனால் கொண்டுபோகப்படுகிறானோ, எப்படி ராஜாவின் வேலைக்காரனின் பிள்ளை முதலானவர்கள் ராஜாவை அறியாதபோதிலும் எல்லா போகங்களையும் அநுபவிக்கிறார்களோ, அப்படியே இரக்கமுள்ள என் ஆசாரியன் உன்னை அடைவதற்காக தகுந்த வேலையைச் செய்கிறான்.

210. पशुर्मनुष्यः (பாரத்வாஜ ஸ்மிருதியென்று முன்னோர்கள்)

மிருகமோ, மனிதனோ, பக்ஷியோ எவர்கள் ஒரு விஷ்ணுபக்தனை இவன் நம்முடையவன் என்று அவன் எண்ணும்படியடைகிறார்களோ, அப்படி அடைவதினாலேயே அவர்கள் அந்த விஷ்ணுவினுடைய மிகவுமுயர்ந்த ஸ்தானத்தை அடைவார்கள்.

211. ते वयं (ராமாயணம் ஆரண்யகாண்டம் 1 - 20)

ராஜாவே! உம்முடைய தேசத்திலிருக்கிற நாங்கள் உம்மாலே ரக்ஷிக்கத் தகுந்தவர்கள், பட்டிணத்திலோ, காட்டிலோ எங்கேயிருந்தாலும் நீர்தான் ராஜா.

212. स्नेहो मे (ராமாயணம் உத்தர காண்டம் 40 -15)

ஓ ராஜனே! மிகவும் அதிகமான என்னுடைய ஸ்நேஹமானது உம்மிடத்தில் எப்போதும் ஸ்திரமாயிருக்கிறது. ஏ வீரனே! அப்படியே என்னுடைய பக்தியும் உம்மிடத்தில் எப்போதுமிருக்கிறது. மனது வேறு ஓரிடத்தில் போகிறதில்லை. ஸ்நேஹமென்பது ஸமாநமானவர்களிடத்தில் பிரீதி; பக்தி என்பது மேல்பட்டவர்களிடம் பிரீதி. ''ராஜன்'' என்ற சொல்லாலே மனதை இழுக்கும்படியான வாத்ஸல்யம் முதலான குணங்களும், 'வீர' என்கிற சொல்லாலே அவன் பெருமையைக் காட்டுகிற குணங்களும் சொல்லப்பட்டன. 'த்வயி' என்பதாலே எம்பெருமானுடைய ராமனாய் அவதரித்த ரூபமும், ''अन्यत्र'' என்பதாலே வைகுந்தத்திலிருக்கும் பரரூபமும் சொல்லப்பட்டன. ராமனுடைய அழகாலும் குணங்களாலும் ஹனுமாருடைய மனதானது அவனை விட்டுப் பரரூபத்தையும் நினைக்கிறதில்லை என்று கருத்து.

213. वरं वरय (விஷ்ணு புராணம் 1-12-76)

ஆகையினால் உனக்குப் பிடித்த வரனை நீ கேள். நான் கண்ணில் பட்டபோது மனிதர்களுக்கு எல்லாம் உண்டாகும். (இது துருவனைப் பார்த்து எம்பெருமான் சொன்னது).

214. किं वा सर्वजगत्स्रष्टः! प्रसन्ने त्वयि दुर्लभम् ? ।
त्वत्प्रसादफलं भुङ्क्ते त्रैलोक्यं मघवानपि ।। (விஷ்ணு பு. 1-12-79)

எல்லாவுலகங்களையும் படைத்தவனே! தேவரீர் பிரஸந்நமான போது கிடைக்க முடியாது எது? (இது துருவன் சொன்ன வார்த்தை).

तस्मिन् प्रसन्ने

215. माङ्गल्यं परमपदं सदाऽर्थसिद्धिं
निर्विघ्नामधिकफलां श्रियं ददाति ।।
किं लोके तदिह परत्र चास्ति पुंसां
यद्विष्णुप्रवणधियां न दाल्भ्य! साध्यम् ।। (விஷ்ணுதர்மம் 43-46)

ஒ தால்பியனே! எம்பெருமானிடத்திலேயே படிந்திருக்கிற மனதையுடையவருக்கு இந்த லோகத்திலோ, மேல் லோகத்திலோ, அடையக் கூடாதது எது?

216. फलमत:उपपत्ते: (பிரம்மஸூத்திரம் 3-2-37)

பலனானது அவனிடத்திலிருந்தே (எம்பெருமானிடமிருந்தே) வருகிறது, அது யுக்திக்குப் பொருந்தியிருக்கிறது.

217. तावदार्तिस्तथा वाञ्छा तावन्मोहस्तथाऽसुखम् ।
यावन्न याति शरणं त्वामशेषाघनाशनम् ।। (விஷ்ணுபு 1-9-73)

எதுவரையில் எல்லாப் பாபங்களையும் போக்குகிற, உம்மிடத்தில் பிரபத்தி பண்ணுகிறதில்லையோ, அது வரையில்தான் ஐசுவரியத்தை இழந்து மறுபடியும் அது கிடைக்க வேணுமென்கிற வருத்தம்; அது வரையில் தான் ஐசுவரியம் கிடைக்கவேணுமென்கிற ஆசை; அது வரையில் தான் உடம்பைக் காட்டிலும் வேறான ஆத்மாவைப் பார்த்து அனுபவிக்காமலிருப்பது; அது வரையில் தான் ஸம்ஸாரத்தினுடைய துக்கம்.

218. सत्कर्मनिरता: (லக்ஷ்மீதந்திரம் 17-62)

நிவிருத்தி தர்மங்களான கர்மயோகத்தையே செய்துகொண்டு ஜ்ஞானயோகத்தையும் பக்தியோகத்தையும் செய்கிறவர்கள் பிரபந்நன் உடைய கோடியில் ஒரு பாகத்துக்குக்கூடத் தகுந்தவர்களன்று. ''शुद्धा:'' என்கிறசொல் மற்ற இரண்டு சொற்களோடும் சேர்க்க வேண்டியது. இங்கே சுத்தியாவது மோக்ஷம் தவிர வேறு பலனில் ஆசையில்லாமை.

219. पारतन्त्र्यं (விஷ்ணுதத்துவம்)

பரமபுருஷனான எம்பெருமானுக்கு உட்பட்டிருப்பதை அறிந்து நினைத்துக்கொண்டு, கர்மபந்தத்தைப் போக்கி, ஒப்பில்லாத ஸ்வாதந்திரி-யத்தை அடைந்து அந்த எம்பெருமானுடன் கூடவே ஆனந்தத்தை அநுபவிக்கிறான். இங்கே ஸ்வாதந்திரியம் என்பது கர்மத்துக்கு உட்படாதிருப்பது.

## தமிழ் வசனங்கள்

40. *கொள்ளும்பயனில்லை குப்பைகிளர்த்தன்ன*
*செல்வத்தை வள்ளல்புகழ்ந்து நும்வாய்மையிழக்கும்புலவீர்காள்*
*கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதிலென்*
*வள்ளல்மணிவண்ணன்றன்னைக் கவிசொல்லவம்மினோ.*

(திருவாய்மொழி -3-9-5)

எம்பெருமானிடத்தில் நாம் ஒன்றைப்பெற்றுக்கொண்டால் அதனால் அவன் பரிபூர்ணனாயிருப்பதற்குக் குறையில்லை. நாம் கேட்டதை யெல்லாம் கொடுப்பன்.

41. *கற்பாரிரராமபிரானையல்லால் மற்றும்கற்பரோ*
*புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே*
*நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும்*
*நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே.*

(திருவாய்மொழி 7-5-1)

நல்ல இடத்தையுடைய அயோத்தியில் வாழும் ஸ்தாவரத்தையும் ஜங்கமத்தையும் நல்ல ஸ்வபாவத்தையுடையனவாகச் செய்தான். நல்ல ஸ்வபாவமாவது - ராமனுடன் சேர்ந்திருந்தால் ஸந்தோஷமும், அவனை விட்டுப் பிரிந்தால் துக்கமும் உண்டாகும்படியான ஸ்வபாவம்.

42. *நன்மைதீமைகளொன்றுமறியேன்நாரணாவென்னுமித்தனையல்லால்*
*புன்மையாலுன்னைப் புள்ளுவம்பேசிப் புகழ்வானன்று கண்டாய்*
*திருமாலே, உன்னுமாறுன்னையொன்றுமறியேன் ஓவாதேநமோ*
*நாரணாவென்பன் வன்மையாவது உன்கோயிலில்வாழும் வைட்*
*டணவனென்னும்வன்மைகண்டாயே.*

(பெரியாழ்வார் திருமொழி - 5-1-3)

தேவரீருடைய கோயில் இருக்குமிடத்தில் வஸிக்கும் வைஷ்ண-வனாயிருக்கும் பலமே அவன் மோக்ஷமடைவதற்கு வேண்டிய பலம்.

43. *இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென்னிருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த*
*செங்கோலத்தபவளவாய்ச்செந்தாமரைக்கணென்னம்மான்*
*பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப்புலன்கொள்வடிவென்மனத்ததாய்*
*அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடவருளிலே.*

(திருவாய்மொழி - 8-10-4)

தேவரீருக்கு கைங்கரியம் பண்ணும்படி அநுக்கிரஹிக்கப்பட்டு இங்கே திரிகிற நமக்கு உண்டாகும் குற்றமென்ன?

44. *பச்சைமாமலைபோல்மேனி பவளவாய்கமலச்செங்கண்*
*அச்சுதா அமரரேறே ஆயர்தம்கொழுந்தேயென்னும்*
*இச்சுவைதவிரயான்போய் இந்திரலோகமாளும்*
*அச்சுவைபெறினும்வேண்டே னரங்கமாநகருளானே.* (திருமாலை - 2)

தேவரீரது திருநாமங்களைச் சொல்லுகிற ரஸத்தைத் தவிர பரமபதத்திற்குப் போய் அதையாளும்படியான ரஸம் கிடைத்தாலும் அதை வேண்டேன். இங்கே 'இந்திர' னென்கிற சொல்லுக்கு மிகுந்த ஐசுவரிய முடையவனென்று பொருளாய் அந்த ஐசுவரியம் எம்பெருமானிடத்தி லேயே பூர்ணமாயிருப்பதாலே இந்திரலோக மென்பதற்குப் பரமபதமென்று பொருள்.

45. *காரார்புரவியேழ் பூண்டதனியாழி*
*தேரார்நிறைகதிரோன் மண்டலத்தைக்கீண்டுபுக்கு*
*ஆராவமுதமங் கெய்தி - அதினின்றும்*
*வாராதொழிவதொன் றுண்டே அதுநிற்க*
*ஏரார்முயல்விட்டுக்காக்கைப்பின் போவதே.* (சிறிய திருமடல்)

போக்கியதை நிறைந்த முயல் மாம்ஸத்தை விட்டு குணம் இல்லாத காக்கையின் மாம்ஸத்தைத் தேடுவேனோ? இங்கே முயல் என்பது அர்ச்சாவதாரத்தையும், காக்கையென்பது எம்பெருமானுடைய பரரூபத்தையும் சொல்லுகின்றன. இதனாலே பரரூபத்தைக் காட்டிலும் அர்ச்சாவதாரமானது திருமங்கையாழ்வாருக்கு மிகவும் போக்கியமாய் இருந்தது என்று காட்டப்படுகிறது.

---

### *அரும்பதவுரை*

பற்றாசு - பிடிப்பு. உண்டறுக்க - சாப்பிட்டு ஜரிக்க.

---

## 9. உபாயவிபாகாதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

219. அ. दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ।। (கீதை 4 - 25)

சில யோகிகள் (கர்மயோகிகள்) தேவதாராதனத்தைச் செய்கிறார்கள்.

220. प्रत्ययार्थं च (ஸாத்வத ஸம்ஹிதை)

மோக்ஷத்திற்காக சாஸ்திரம் சொன்ன உபாயங்களைச் செய்தால் கட்டாயம் மோக்ஷம் கிடைக்கும் என்கிற நம்பிக்கை உண்டாவதற்காக சாஸ்திரம் எட்டு ஐசுவரியங்களுக்கு உபாயங்களைச் சொல்லுகின்றன.

चतुर्विधा–चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ।।

221. तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं, स च मम प्रियः ।। (கீதை 7-17)

அவர்களுக்குள் ஜ்ஞாநீ என்பவன் சிறந்தவன். ஏனென்றால் எப்போதும் எம்பெருமானுடன் கூடவிருக்க வேணுமென்று ஆசைப்பட்டு அவனொருவனிடத்திலேயேபக்தியுள்ளவனாயிருக்கிறான். மற்றவர்க-ளுக்குத் தங்களுக்கு வேண்டிய பலன்களிலும் அதைக் கொடுக்கும் எம்பெருமானிடத்திலும் பக்தியிருப்பதால் அவர்கள் 'एकभक्ति'கள் அன்று.

222. चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ।। (பாரதம் சாந்தி-350-33-35)

நாலுவகைப்பட்டவர்கள் என்னுடைய ஜனங்கள். அவர்கள் பக்தர்களென்றே சொல்லப்படுகிறார்கள். அவர்களுக்குள் ஏகாந்திகள் சிறந்தவர்கள். ஏனென்றால் - அவர்கள் வேறு தேவதைகளிடம் போகிறவர் களன்று. பலன்களில் ஆசையில்லாமல் கர்மங்களைச் செய்கிற அவர் களுக்கு நானே அடைய வேண்டியவன். பாக்கியிருக்கிற மூன்று விதமான பக்தர்கள் பலன்களில் ஆசையுள்ளவர்கள். அவர்களெல்லாருக்கும் கிடைக்கும் பலன் முடிவுள்ளது. நல்ல அறிவுள்ள ஏகாந்தியானவன் மோக்ஷத்தை அடைகிறான்.

शुद्धभावम् (8-வது பக்கம் 26-நெ. பார்க்க)

223. मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो! ।
योगेश्वर! ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ।। (கீதை 11-4)

ஆகையாலே ஜ்ஞானம் முதலான குணங்களுக்கு இருப்பிடமான எம்பெருமானே! ஒன்றும் விட்டுப்போகாமல் தேவரீரை எனக்குக் காட்டவேண்டும்.

224. नाना (பிரம்மஸூத்திரம் 3-3-56)

பிரும்மவித்தைகள் வெவ்வேறு. அவைகளின் பெயர் முதலான வைகள் வெவ்வேறாயிருப்பதால்.

225. विकल्पः (பிரம்மஸூத்திரம் 3-3-57)

பலனில் பேதமில்லாமையால் அவைகளில் வேண்டியதைச் செய்யலாம்.

---

## தமிழ் வசனங்கள்

46. தேவிமாராவார் திருமகள்பூமியேவ மற்றமரராட்செய்
வார்மேவியவுலகம்மூன்றவையாட்சி வேண்டுவேண்டுருவம்நின்
னுருவம், பாவியேன்றன்னையடுகின்ற கமலக்கண்ணதோர்பவள
வாய்மணியே ஆவியேயமுதேயலைகடல்கடைந்த வப்பனேகாணு
மாறருளாய். (திருவாய்மொழி - 8-1-1)

நான் தேவரீரைக் காணும்படி கிருபை செய்யவேணும்.
காணுமாறருளாய் (திருவாய்மொழி 7-2-3)

47. தளர்ந்தும்முறிந்தும்சகடவசுரருடல்வேறாப்
பிளந்துவீயத் திருக்காலாண்டபெருமானே
கிளர்ந்துபிரமன் சிவனிந்திரன்விண்ணவர்சூழ
விளங்கவொருநாள் காணவாராய் விண்மீதே. (திருவாய்மொழி - 6-9-4)

மாயக்கூத்தா ! வாமனா ! வினையேன் கண்ணா கண் கை கால்
தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய்முகிழ தா
சாயல் சாயத்திருமேனி தண்பாசடையா தாமரை நீள்
வாசத்தடம்போல் வருவானே ‘ ஒருநாள் காணவாராயே.
(திருவாய்மொழி 8-5-1)

ஒருநாள் நான் பார்க்கும்படி வரவேணும்.

---

## அரும்பதவுரை

நேரில் — செய்யவேண்டியதாக சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஒரு வேலையின் ஸ்தாநத்தில்
கிழிச்சீரை — ஒரு விலையுள்ள வஸ்துவை முடிந்துவைத்திருக்கிற துணி.
அறுதி — எல்லை
அவா — கடுமையான ஆசை.
அளவு — ஸாமர்த்தியத்தின் அளவு.

---

## 10. பிரபத்தியோக்கியாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

ब्रह्माणमद्ध

226. यथा वायो: (பாரதம் ஆரண்யபர்வம் 30-29)

ஓ பாரதனே! எப்படி காற்றின் வசத்தில் புல்லின் நுனிகள் இருக்கின்றனவோ, அப்படியே எல்லாப் பிராணிகளும் உலகத்தை உண்டு பண்ணுகிற ப்ரபலனான எம்பெருமானுடைய வசத்தில் இருக்கின்றன.

227. स पित्रा च (ராமாயணம் ஸுந்தரகாண்டம் 38-33)

அந்த காகாஸுரன் தகப்பனாலும், தேவர்களாலும், மஹருஷிகளாலும் விடப்பட்டு மூன்று உலகங்களிலும் ஓடித் திரிந்து அந்த ராமனையே சரணமடைந்தான்.

228. अहमस्म्यपराधानामालयोऽकिञ्चनोऽगति: ।
त्वमेवोपायभूतो मे भवेति प्रार्थनामति: ॥
शरणागतिरित्युक्ता सा देवेऽस्मिन् प्रयुज्यताम् ॥

(அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை 37-30)

நான் அபராதங்களுக்கு இருப்பிடமாகவும், என்னை ரக்ஷித்துக் கொள்ள உபாயமில்லாதவனாகவும், உன்னைத் தவிர வேறு அடைய வேண்டிய வஸ்து இல்லாதவனாகவும் இருக்கிறேன்.

229. न धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी न भक्तिमांस्त्वच्चरणारविन्दे ।
अकिञ्चनोऽनन्यगति: शरण्य! त्वत्पादमूलं शरणं प्रपद्ये ॥

(ஆளவந்தார் ஸ்தோத்திரம் 22)

சரண்யனே! உன்னைத் தவிர வேறு உபாயமும் வேறு அடைய வேண்டிய வஸ்துவுமில்லாத நான் தேவரீருடைய திருவடிகளை உபாயமாக அடைகிறேன்.

230. अनागतानन्तकालसमीक्षयाऽप्यदृष्टसंतारोपाय: निखिलजन्तुजात
शरण्य! श्रीमन् ! नारायण ! तव चरणारविन्दयुगलं शरणमहं प्रपद्ये ॥

(ஸ்ரீ ரங்க கத்யம்)

வரப்போகிற முடிவில்லாத காலத்தைப் பார்த்தும் ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு உபாயத்தைப் பார்க்காதவனாய்.

231. तत्प्राप्तये (ஸ்ரீ வைகுண்டகத்யம்)

அவனை அடைவதற்கு அவனுடைய இரண்டு திருவடித் தாமரை களில் பிரபத்தி செய்வதைத் தவிர வேறு உபாயம் எனக்குக் கல்பங்களின் ஆயிரம் கோடி சென்றாலும் இல்லையென்று எண்ணிக்கொண்டிருக்கிற நான்.

---

### தமிழ் வசனங்கள்

48. *அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா*
*நிகரில்புகழாயுலகமூன்றுடையாய் என்னையாள்வானே*
*நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே*
*புகலொன்றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.*

(திருவாய்மொழி - 6-10-10)

வேறு உபாயமும் வேறு ரக்ஷகனுமில்லாத நான்.

---

## 11. பரிகரவிபாகாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

232. षोढा हि वेदविदुषो वदन्त्यङ्गं महामुने ।
आनुकूल्यस्य सङ्कल्पः प्रातिकूल्यस्य वर्जनम् ।।

(அஹிர்புத்ந்யஸம்ஹிதை 37 - 28)

அநுகூலனாயிருக்கிறேனென்கிற எண்ணமும், பிரதி கூலமாய் இருப்பதை விடுவதும், ரக்ஷிப்பனென்கிற நம்பிக்கையும், ரக்ஷிக்க வேண்டுமென்று கேட்பதும், தன் ஸ்வரூபத்தைக் ஸமர்ப்பிப்பதும், கார் பண்ணியமும் என்று சரணாகதி ஆறு அங்கங்களை உடையது.

233. निक्षेपापर (லக்ஷ்மீதந்திரம் 17 -74)

ஐந்து அங்கங்களோடு கூடிய ஸமர்ப்பணம் என்று வேறு பெயரையுடைய நியாஸமே ஸந்நியாஸமென்றும், தியாகமென்றும், சரணாகதியென்றும் சொல்லப்படுகிறது.

234. शाश्वती (அஹிர்புத்ந்யஸம்ஹிதை 52 - 13)

பரமபுருஷனான எம்பெருமானை உத்தேசித்து நான் பண்ணுகிற பிரபத்தியானது எனக்கு ஸ்திரமான பலன்; இதைக் காட்டிலும் வேறான பலன் எனக்கு வேண்டியதில்லையென்பது சிறந்த அங்கமாகச் சொல்லப்பட்டது. பலத்திலாசையானது அந்த அங்கத்திற்கு விரோதி.

235. आनुकूल्येतराभ्यां तु विनिवृत्तिरपायत: ।
कार्पण्येनाप्युपायानां विनिवृत्तिरिहोदिता ।। (லக்ஷ்மீதந்திரம் 17 -76)

அநுகூலனாயிருப்பேன் என்கிற எண்ணத்தாலும் பிரதி கூலனாயி ருப்பதை விடுவதாலும் எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறாமலி ருப்பது கிடைக்கும்.

236. कार्पण्येन, रक्षिष्यतीति (லக்ஷ்மீதந்திரம் 17 - 77)

கார்பண்ணியத்தால் வேறு உபாயங்களைக் தேடாமை சொல்லப் பட்டது. ரக்ஷிப்பன் என்கிற நம்பிக்கையினால் தனக்கு வேண்டிய பலனுக்கு எம்பெருமானை உபாயமாக வரிப்பது பலிக்கும்.

237. अप्रार्थितो न गोपयेत् इति तत्प्रार्थना मति: ।
गोपायिता भवेत्येवं गोप्तृत्ववरणं स्मृतम् ।। (லக்ஷ்மீதந்திரம் 17 -72)

ரக்ஷிக்கவேண்டுமென்று கேட்காவிட்டால் ரக்ஷிக்கக்கூடாது.

238. गोप्तृत्ववरणं नाम स्वाभिप्रायनिवेदनम् । (லக்ஷ்மீதந்திரம் 17-78)

தன் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதுதான் கோப்த்ருத்வவரணம்.

239. तदलं क्रूरवाक्यैर्व: सान्त्वमेवाभिधीयताम् ।
अभियाचाम वैदेहीमेतद्धि मम रोचते ।।

(ராமாயணம் ஸுந்தரகாண்டம் 27 - 41)

உங்களுடைய பிரதிகூலவாக்கியங்களை நிறுத்திவிடுங்கள். ஸமாதாநவார்த்தைகளையே சொல்லுங்கள்.

240. भर्त्सितामपि याचध्वं राक्षस्य:! किं विवक्षया? ।
राघवाद्धि भयं घोरं राक्षसानामुपस्थितम् ।।

(ராமாயணம் ஸுந்தரகாண்டம் 27-43)

ராமனிடத்திலிருந்து ராக்ஷஸர்களுக்குக் கடுமையான பயம் கிட்ட வந்திருக்கிறது.

241. अलमेषा (ராமாயணம் ஸுந்தரகாண்டம் 27-44)

ஓ ராக்ஷஸிகளே! பெரிய பயத்திலிருந்து (ராகவனிடமிருந்து) நம்மைக் காப்பாற்ற இவள் ஸமர்த்தையானவள்.

242. अलमेषा परित्रातुं राघवाद्राक्षसीगणम् ।
अभियाचाम वैदेहीमेतद्धि मम रोचते ।।

(ராமாயணம் ஸுந்தரகாண்டம் 58 -91)

ராகவனிடமிருந்து ராக்ஷஸிகளின் கூட்டத்தை ரக்ஷிப்பதற்கு இவள் ஸமர்த்தையானவள்.

243. तदलं क्रूरवाक्यैर्वः सान्त्वमेवाभिधीयताम् ।
अभियाचाम वैदेहीमेतद्धि मम रोचते ।।

(ராமாயணம் ஸுந்தர 27-41, 43)

ஸீதையை நாம் பிரார்த்திப்போம்; இதுதான் எனக்குப் பிடித்திருக்கிறது; உங்களால் பயப்படுத்தப்பட்டவளாயிருந்தபோதிலும் அவளைப் பிரார்த்தியுங்கள். ஓ ராக்ஷஸிகளே! அவள் ரக்ஷிப்பளோ என்று நீங்கள் கேட்கவேண்டாம். அந்தப் பேச்சு வீண்பேச்சு.

244. प्रणिपात – (ராமாயணம் ஸுந்தரகாண்டம் 27-43)

ஜநகராஜன் திருமகளான ஸீதை நீங்கள் செய்த பிரபத்தியினாலே உங்களிடத்தில் பிரஸாதத்தைச் செய்கிறவளாயிருக்கிறாளன்றோ?

245. ततः सा ह्रीमती बाला भर्तुर्विजयहर्षिता ।
अवोचद् यदि तत् तथ्यं भवेयं शरणं हि वः ।।

(ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 58,89)

உங்களுக்கு நான் உபாயமாயிருப்பேன்.

246. मातर्मैथिलि! राक्षसीस्त्वयि तदैवार्द्रापराधास्त्वया
रक्षन्त्या पवनात्मजाल्लघुतरा रामस्य गोष्ठी कृता ।

काकं तं च विभीषणं शरणमित्युक्तिक्षमौ रक्षत:
सा न: सान्द्रमहागस: सुखयतु क्षान्तिस्तवाकस्मिकी ।।

(ஸ்ரீ குணரத்னகோசம் - 50)

அம்மா ஸீதையே! குற்றம் செய்துகொண்டேயிருக்கிற ராக்ஷஸிகளை ஹநுமானிடத்திலிருந்து ரக்ஷித்த உன்னால், ராமனுடைய கோஷ்டியானது மிகவும் சின்னதாகப் பண்ணப்பட்டது. ராமன் காகத்தையும் விபீஷணனையும் ரக்ஷியென்று கேட்டபிறகு ரக்ஷித்தான். நீயோ அவர்கள் கேட்காத போதிலும் அபராதம் செய்துகொண்டிருக்கையிலேயே ரக்ஷித்தாய்.

247. पुरा शरत्सूर्यमरीचिसन्निभान् नवान् सुपुङ्खान् सुदृढान् नृपात्मज:।
सृजत्यमोघान् विशिखान् वधाय ते प्रदीयतां दाशरथाय मैथिली ।।
त्यजस्व कोपं सुखधर्मनाशनं भजस्व धर्मं रतिकीर्त्तिवर्धनम् ।
प्रसीद जीवेम सपुत्त्रबान्धवा: प्रदीयतां दाशरथाय मैथिली ।।

(ராமாயணம் யுத்தகாண்டம் - 9-22,23)

ஸீதை ராகவனிடத்தில் கொடுக்கப்படட்டும்.

248. सीतां च रामाय - धनानि रत्नानि विभूषणानि
वासांसि दिव्यानि मणींश्च चित्रान् ।
सीतां च रामाय निवेद्य देवीं
वसेम राजन्निह वीतशोका: ।। (ராமாயணம் யுத்தகாண்டம் 15 -14)

ஓ ராஜாவே! ஸீதாதேவியை ராமனிடத்தில் கொடுத்துவிட்டு சோகமில்லாமல் இங்கே நாம் இருப்போம்.

249. त्वां तु (ராமாயணம் யுத்தகாண்டம் 16 - 15)

குலத்தைக் கெடுக்கிறவனே! உன்னை நிந்திக்க வேண்டும்.

250. सोऽहं परुषितस्तेन दासवच्चावमानित: ।
त्यक्त्वा पुत्रांश्च दारांश्च राघवं शरणं गता: ।।

(ராமாயணம் யுத்தகாண்டம் 17 -14)

பிள்ளைகளையும் பெண்டாட்டிகளையும் விட்டு ராகவனைச் சரணடைந்தேன்.

251. परित्यक्ता मया लङ्का मित्राणि च धनानि च ।
भवद्गतं मे राज्यं च जीवितं च सुखानि च ।।

(ராமாயணம் யுத்தகாண்டம் -19 - 5)

லங்கையும் ஸ்நேஹிதர்களும் தனங்களும் என்னாலே விடப்பட்டன.

252. अनुजः (ராமாயணம் யுத்தகாண்டம் -19 -4)

நான் ராவணன் தம்பி; அவனால் அவமானப்படுத்தப்பட்டேன்; எல்லாப்பிராணிகளுக்கும் சரண்யனான தேவரீரை உபாயமாக அடைந்தேன்.

253. सर्वलोकशरण्याय राघवाय महात्मने ।
निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम् ।। (ராமாயணம் யுத்த -17-5)

எல்லா உலகங்களுக்கும் சரண்யனாயும், மஹாத்மாவாயுமிருக்கிற ராகவனிடத்தில் கிட்டே வந்திருக்கிற விபீஷணனாகிய என்னைச் சீக்கிரம் ஸமர்ப்பியுங்கள். இப்படி அர்த்தம் பண்ணுவதற்கு காரணம் மூலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

254. राघवेणाभये दत्ते सन्नतो रावणानुजः ।
विभीषणो महाप्राज्ञो भूमिं समवलोकयन् ।।
खात् पपातावनिं हृष्टो भक्तैरनुचरैः सह ।। (ராமாயணம் யுத்த -19 1)
राघवं शरणं. விபீஷணன் பெரிய அறிவையுடையவன்.

निवेदयत

255. धिगशुचिमविनीतं निर्भ(र्द)यं मामलज्जं
परमपुरुष! योऽहं योगिवर्याग्रगण्यैः ।
विधिशिवसनकाद्यैर्ध्यातुमत्यन्तदूरं
तव परिजनभावं कामये कामवृत्तः ।। (ஆளவந்தார் ஸ்தோத்திரம் -47)

சுத்தியும், விநயமும், தயையும் லஜ்ஜையுமில்லாத என்னை நிந்திக்க வேணும், ஏனென்றால் பரமபுருஷனே! மனது போகிறபடி நடக்கிற நான் யோகிச்ரேஷ்டர்களான பிரம்மா ருத்திரன் ஸநகர் முதலானவர்களாலே தியானம் பண்ணுவதற்கு மிகவும் துூரத்திலிருக்கிற உன்னுடைய வேலைக்காரனாயிருப்பதை யாசைப்படுகிறேன்.

256. व्रतोपवासतुलितमशनं तस्य पावनम् ।
शुनामिव पुरोडाशो न नीचेषु तदिष्यते ।।

(பாத்மஸம்ஹிதை சர்யாபாதம் - 12 - 83)

எம்பெருமானுக்கு நிவேதனம் பண்ணினதைச் சாப்பிடுவது சுத்தி செய்வதாயும் விரதத்திற்கும் உபவாஸத்திற்கும் ஸமமாயுமிருக்கிறது. புரோடாசம் நாய்க்குத் தகாததாயிருப்பது போல் நிவேதனம் பண்ணப் பட்டது நீசர்களுக்குக் கொடுக்கத் தகாதது. புரோடாசமென்பது தேவதைக்குக் கொடுப்பதற்காக ஸித்தம் பண்ணப்பட்ட ஒரு ஹவிஸ்ஸு.

अहमस्मि

257. त्वमेव (அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை - 37 -31)

''தேவரீரே எனக்கு உபாயமாக இரும்'' என்று பிரார்த்திப்பதான எண்ணம் சரணாகதியென்று சொல்லப்படுகிறது. அது இந்த தேவனிடத்தில் (எம்பெருமானிடத்தில்) செய்யப்படட்டும்.

258. उपाये (அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை - 7-29)

இந்த சரணம் என்கிற சொல்லானது உபாயத்தையும் வீட்டையும் ரக்ஷகனையும் சொல்லும். இங்கே உபாயமென்கிற அர்த்தத்தையே சொல்லுகிறது.

अहमस्मि

259. सर्वज्ञः (லக்ஷ்மீதந்த்ரம் - 17-78)

எல்லாரையும் நியமநம் பண்ணுகிற எம்பெருமான் எல்லாம் தெரிந்தவனாயும் எப்போதும் கருணையுள்ளவனாயும் இருந்த போதிலும் ஸம்ஸாரத்தை நடத்துகிறவனாகையால் ரக்ஷிக்க வேண்டுமென்கிற பிரார்த்தனையை எதிர்பார்க்கிறான்.

---

*அரும்பதவுரை*

அணியிடாத - ஸந்தேகப்படாத,
பற்றாசு - வியாஜம்
கட்டளை - பிரகாசம், விதம்.
பொதிந்து - உள்ளே வைத்துக்கொண்டு
சீற்றம் - கோபம்.
கண்ணோட்டம் - அபிமாநம்.
தாழாதே - தாமதமில்லாமல்.
தண்ணியர் - தாழ்ந்தவர்.

## 12. ஸாங்கப்பிரபதநாதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

260. स्वात्मानम्

अनेनैव तु मन्त्रेण स्वात्मानं मयि निक्षिपेत् ।
मयि निक्षिप्तकर्तव्यः कृतकृत्यो भविष्यति ।। (ஸாத்யகிதந்திரம்)

இந்த மந்திரத்தினாலேயே ஒருவன் தன்னை என்னிடத்தில் ஸமர்ப்பிக்கவேண்டியது. செய்யவேண்டியதை என்னிடத்தில் செய்தவன் கிருதகிருத்யனாக ஆவான். கிருதகிருத்யனென்பதற்குச் செய்ய வேண்டியதைச் செய்தவன் என்று பொருள்.

261. आत्माऽपि चायं न मम सर्वाऽपि पृथिवी मम ।
यथा मम तथाऽन्येषामिति पश्यन् न मुह्यति ।।

(பாரதம் சாந்திபர்வம் - 25 - 19)

என்னுடைய ஆத்மாவும் எனக்குச்சொந்தமன்று. ஸொந்தமில்லாததை ஸொத்தாக எண்ணினால், பூமி முழுவதையும் என்னதென்று சொல்லலாம். எப்படி என் ஆத்மா எனக்கு ஸொந்தமன்றோ, அப்படியே மற்றவர்களுக்கும் ஸொந்தமன்று. இப்படித் தெரிந்த ஒருவன் தான் தனக்கு ஸொந்தமென்று மயங்குவதில்லை.

262. स्वयं मृत्पिण्डभूतस्य परतन्त्रस्य देहिनः ।
स्वरक्षणेऽप्यशक्तस्य को हेतुः पररक्षणे ? ।।

(பாரதம் சாந்திபர்வம் - 294 -19)

உடம்போடிருக்கிறவன் தான் மண்கட்டி போலவும் ஒருவனுக்கு உட்பட்டவனாயும் தன்னை ரக்ஷிக்கச் சக்தியில்லாதவனாயுமிருக்கிறான். அவன் மற்றவரை ரக்ஷிப்பதற்கு எப்படிக் காரணமாயிருக்கக்கூடும்?

263. आत्मा राज्यम् । (பாரதம் சாந்திபர்வம் - 343-24)

ஆத்மா, ராஜ்யம், தநம் - பெண்டாட்டி, வாஹநங்கள் இவைகள் எல்லாம் எம்பெருமானுக்காகவேயிருக்கின்றன - என்று அந்த உபரிசரவஸுவினால் எப்போதும் பார்க்கப்பட்டது.

264. आत्मात्मीयभरन्यासो ह्यात्मनिक्षेप उच्यते ।

(லக்ஷ்மீ தந்திரம் - 17 - 79)

ஆத்மாவினுடையவும், ஆத்மாவைச் சேர்ந்தவைகளுடையவும் ரக்ஷணபரத்தைக் கொடுப்பதை ஆத்மாவைக் கொடுப்பதென்று சொல்லப் படுகிறது.

265. न हि पालनसामर्थ्यमृते सर्वेश्वरं हरिम् ।
स्थितौ स्थितं महाप्राज्ञ! भवत्यन्यस्य कस्यचित् ।।

(விஷ்ணுபுராணம் - 1-22-21)

எல்லாரையும் நியமநம் பண்ணுகிற எம்பெருமானைத் தவிர வேறு ஒருவனுக்கும் ஒருவனை ரக்ஷிக்கும் ஸாமர்த்தியமில்லை.

266. तेन संरक्ष्य (லக்ஷ்மீ தந்திரம் - 17 -73)

அவனாலே ரக்ஷிக்கப்படுகிறவனுக்கு ரக்ஷணபலத்தில் ஸம்பந்த மில்லாமையும், அதை எம்பெருமானிடத்தில் கொடுப்பதையும் ஆத்ம நிக்ஷேபமென்று சொல்லுகிறது.

267. वपुरादिषु (ஆளவந்தார் ஸ்தோத்ரம் - 52)

உடம்பு முதலானவைகளில் நான் எப்படியோயிருக்கிறேன், என்னுடைய குணங்கள் விஷயத்திலும் எப்படியிருந்தாலுமிருக்கட்டும். இதனால் நான் செய்யப்போகிற வேலைக்கு விரோதமில்லாமையாலே தேவரீருக்குச் சேஷன் என்று அறிந்த நான் தேவரீருடைய இரண்டு திருவடித்தாமரைகளில் இப்போதே என்னால் கொடுக்கப்படுகிறேன்.

268. मम नाथ! यदस्ति योऽस्म्यहं सकलं तद्धि तवैव माधव! ।
नियतस्वमिति प्रबुद्धधीः अथवा किं नु समर्पयामि ते? ।।

(ஆளவந்தார் ஸ்- 53)

ஓ நாதனே! மாதவனே! எனக்கு எது இருக்கிறதோ, அதுவும் நானும் இவைகளெல்லாம் உம்முடைய எப்போதும் உள்ள ஸொத்து என்று நன்றாய் அறிந்த நான் தேவரீருக்கு எதை ஸமர்ப்பிப்பேன். என்னதாக ஒன்று மில்லாமையால் எனக்கு ஸமர்ப்பிக்க ஒன்றுமில்லை. தேவரீருடையதை தேவரீரிடம் கொடுக்கிறேன்.

अहमपि

अनेन

269. अपायेभ्यो निवृत्तोऽस्मि पातकेभ्यो भवोदधौ ।
तथाऽप्यत्र प्रवृत्तिर्या त्वत्स्मृतेः साऽपि नश्यतु ।।

(லக்ஷ்மீ தந்திரம்- 50 - 215)

ஸம்ஸாரஸமுத்திரத்தில் தள்ளும்படியான பாபங்களிலிருந்து விலகினேன், அப்படியிருந்தாலும் மறுபடியும் பாபத்தில் பிரவிருத்தி உண்டாகிறது. அதுவும் தேவரீரை நினைப்பதால் போகிறது.

---

*அரும்பதவுரை*

குழமணன் - தாம்பிரம் முதலானவைகளாலே செய்யப்பட்ட பொம்மை.
கிழிச்சீரை (உபாயவிபாகாதிகாரத்தில் 49-வது பக்கம் பார்க்க)

---

## 13. கிருதகிருத்தியாதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

270. देवर्षि (பாகவதம் - 11-5-41)

எவன் சரண்யனாயும் லோகங்களுக்குக் குருவாயுமிருக்கிற நாராயணனை ஸர்வப் பிரகாரத்தாலும் சரணமாக அடைகிறானோ, அவன் தேவர்களுக்கும் ருஷிகளுக்கும் பூதங்களான ஆத்மாக்களுக்கும், மனிதர் களுக்கும், பித்ருக்களுக்கும், வேலைக்காரனன்று; அவன் கடனாளியுமன்று.

271. ये यजन्ति (பாரதம் சாந்திபர் - 355-41) (தக்ஷஸ்மிருதி)

எவர்கள் பித்ருக்களையும் தேவர்களையும் பிராம்மணர்களையும் அக்னியையும் ஆராதிக்கிறார்களோ, அவர்கள் எல்லா பிராணிகளுக்கும் ஆத்மாவான எம்பெருமானையே ஆராதிக்கிறார்கள்.

272. साक्षादपि (பிரம்மஸூத்திரம் - 1-2-29)

அக்நி முதலான சொற்கள் நேராகவும் எம்பெருமானைச் சொல்லுகிற படியால் விரோதமில்லையென்று ஜைமிநியின் அபிப்பிராயம்.

273. अतस्त्वम् (சரணாகதிகத்யம்)

ஆகையாலே நீ என்னை உள்ளபடி அறிவதிலும் பார்ப்பதிலும் அடைவதிலும் ஸந்தேஹமில்லாமல் ஸுகமாயிரு.

## அரும்பதவுரை

கடை — வாஸனை.

காம்பு — ஒரு பூவின் கிட்டேயிருக்கும் காம்புபோலே முக்கியமான உபாயத்திற்கு உதவிசெய்கிற வேறு உபாயம்.

எழுதாமறை — எழுதப்படாத வேதம். ஒருவனால் செய்யப்பட்டதாயிருந்தால் எழுதப்பட்டிருக்கும்.

அடிமை தீட்டு — அடிமைச் சீட்டு.

பொலிசை — விருத்தி, அதாவது வட்டி.

தனிசுதீட்டு — கடன் சீட்டு.

நெகிழ்ச்சி — நம்பிக்கைக் குறைவு.

---

## 14. ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

274. शपता यत्कृतं पुण्यं शप्यमानमुपैति तत् ।
शप्यमानस्य यत्पापं शपन्तमधिगच्छति ।। (பாரதம்-ஆச்வ-110-64)

ஒருவன் ஒருவனை வைதால் வைகிறவன் புண்ணியம் வையப்பட்டவனையடைகிறது. வையப்பட்டவனுடைய பாபமானது வைகிறவனை யடைகிறது.

275. बद्धवैराणि (விஷ்ணுபுராணம் - 1-17-82)

பிராணிகள் விரோதமுள்ளவர்களாய் ஒருவனிடத்தில் துவேஷம் பண்ணினால், மிகுந்த மோஹத்தினால் இவர்கள் சூழப்பட்டிருக்கிறார்களேயென்று விவேகமுள்ளவன் அவர்களைப்பற்றி இரக்கப்பட வேண்டியது.

276. आत्मद्रुहम् (ஆயுர்வேதம்)

தனக்கே துரோஹம் பண்ணிக்கொண்டு சாஸ்திரமரியாதையை மீறி நல்ல மார்க்கத்தை விட்டிருக்கிற மூடனைப்பற்றி ஒருவன் மிகவும் இரக்கப்படவேண்டியது. ஏனென்றால் அவன் நரகமாகிய நெருப்பை வளர்க்கிற விரகு போலிருக்கிறான்.

277. क्वाहमत्यन्तदुर्बुद्धिः ? क्व चात्महितवीक्षणम् ? ।
यद्धितं मम देवेश! तदाज्ञापय माधव ! ।। (ஜிதந்தா - 1-18)

மிகவும் கெட்ட புத்தியையுடைய நான் எங்கே? எனக்கு ஹிதமானதைப் பார்ப்பது எங்கே? ஆகையினால் தேவர்களை நியமனம் பண்ணுகிறவனே ! எனக்கு எது ஹிதமோ அதைச் செய் என்று தேவரீரே உத்திரவு பண்ணு, மாதவனே !

278. प्रायेण (இதிஹாஸஸமுச்சயம் - 6-37)

ஜநங்கள் செய்யவேண்டியதைச் செய்யாததினாலே அனேகமாய் யமனைக்கண்டு பயப்படுகிறார்கள். செய்யவேண்டியதைச் செய்தவர்கள் பிரியமான விருந்தாளியைப்போல் யமன் வருவதை ஸந்தோஷமாய் எதிர்பார்க்கிறார்கள். இங்கே இரண்டாவது வாக்கியத்தில் யமன் என்பது மரணம்.

279. गजं वा (ராமாயணம் அயோத்யா காண்டம் - 60-20)

நல்ல முகத்தையுடைய ஸீதை, ராமனுடைய புஜத்தைப் பிடித்துக் கொண்டிருப்பதனாலே யானையையோ, ஸிம்மத்தையோ, புலியையோ கண்டு பயத்தையடைகிறதில்லை.

280. असन्देशात् (ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 22-20)

சாம்பலாகப்பண்ணத்தகுதியுள்ள பத்துத் தலையுடையவனே ! ராமனுடைய உத்திரவில்லாமையாலும் பதிவிரதையாயிருப்பதாகிய தபஸ்ஸை ரக்ஷிக்கவேண்டியதாலும் என்னுடைய தேஜஸ்ஸாலே உன்னைச் சாம்பலாகப் பண்ணவில்லை.

281. शरैः (ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 39-30)

சத்துருபலத்தை நாசம் பண்ணுகிற காகுத்ஸ்தன் லங்கையைப் பாணங்களாலே நிறைத்து என்னை அழைத்துக்கொண்டு போனால் அது அவனுக்குத் தகுந்ததாக ஆகும்.

282. उत्पत्तिस्थितिनाशानाम्

பிறப்பு, இருப்பு, சாவு இவைகளில் இருப்பைப்பற்றி உனக்கு ஏன் விசாரம் உண்டாகிறது. எப்படி பிறப்பும் சாவும் உண்டாகின்றனவோ, அப்படியே இருப்பும் நடக்கும்.

283. **अचेष्टमानम्** (பாரதம் சாந்திபர்வம் - 339-15)

ஒரு வேலையும் செய்யாமல் உட்கார்ந்துகொண்டிருக்கிற ஒருவ னிடம் லக்ஷ்மி தானாய் வருகிறாள். வேறொருவன் பிரயத்நம் செய்தும் சாப்பாட்டை அடைகிறதில்லை. இது அவனவன் முன் செய்த கருமத்துக் குத் தகுந்தபடி ஆகிறது.

284. **उत्पतन्**

ஆகாசத்தில் கிளம்பிப்போனாலும், ரஸாதலமென்கிற கீழ் உலகத்தில் பிரவேசித்தாலும், பூமி முழுவதும் ஒடித் திரிந்தாலும் முன்ஜன்மத்தில் ஒருவன் கொடுத்துவைக்காதது அவனிடம் வருகிறதில்லை.

285. **यत्किञ्चित्** (பாரதம் சாந்திபர்வம் - 359-56)

உலகத்தில் எந்த வேலை செய்யப்படுகிறதோ, அதெல்லாம் என்னுடைய வேலை. என்னைத் தவிர மற்றவன் ஒன்றையெண்ணுகிறான். நான் என்னிஷ்டத்தைச் செய்கிறேன்.

286. **अप्रयत्नागता:** (பாரதம் சாந்திபர்வம் - 301-35)

கிருஹஸ்தர்களாலே தங்கள் பிரயத்நமில்லாமல் வருகிற எல்லா நல்ல விஷயங்களையும் எப்போதும் பெற்றுக்கொள்ளவேண்டியது. தங்களுடைய தர்மங்களைப் பிரயத்திநம் செய்தாவது செய்யவேண்டியது என்று என் அபிப்பிராயம்.

287. **नाहारम्**

நல்ல அறிவுள்ளவன் தன் ஆஹாரத்தைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். தர்மத்தையே நினைக்கவேண்டியது. மனிதர்களுக்கு ஆஹாரமோ அவர்களுடைய பிறப்புடன்கூட உண்டாகிறது.

288. **न सन्निपतितम्** (பாரதம் சாந்திபர்வம் - 177-24)

என் பிரயத்நமில்லாமல் வருகிற தர்மத்துக்கும் பொருந்தின போகத்தை நான் தடுக்கிறதில்லை. வருத்தப்பட்டு கிடைக்க வேண்டிய போகத்தை நான் தேடுகிறதுமில்லை.

289. **तयोरेकतर:** (பாரதம் சாந்திபர்வம் - 175-5)

ஸுகதுக்கங்களாகிய இவைகளில் ஒன்று வரும்போது ஸுகத்தைக்

கண்டு ஸந்தோஷப்படக்கூடாது, துக்கத்தைக் கண்டு வருத்தப்படக் கூடாது.

290. अहमात्मा

நான் ஆத்மா, உடம்பன்று; எம்பெருமானுக்குச் சேஷன்; எனக்குச் சொந்தமானதொன்றும் கிடையாது; அவனுக்குக் கைங்கரியம் செய்ய வேண்டுமென்கிற ஆசையினாலே அவனையே சரணமாக அடைந்து இருக்கிறேன்.

291. नैषा (ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 16-25)

அசோகவநத்திலிருக்கிற இந்த ஸீதை ராக்ஷஸிகளைப் பார்க்கிற தில்லை. புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த இந்த மரங்களையும் பார்க்கிற தில்லை. ஒன்றிலேயே (ராமனிடத்திலேயே) மனதை வைத்தவளாய் நிச்சயமாக ராமனையே பார்த்துக்கொண்டிருக்கிறாள்.

---

*தமிழ் வசனங்கள்*

49. *உளதென்றிறுமாவா ருண்டில்லையென்று*
*தளர்தலதனருகும் சாரார்- அளவரிய*
*வேதத்தான்வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும்*
*பாதத்தான்பாதம் பயின்று.* (இரண்டாம் திருவந்தாதி - 45)

எம்பெருமான் திருவடிகளை நினைத்துக்கொண்டிருப்பவன் செல்வம் தனக்கிருக்கிறதென்று கர்வப்படான். இருந்தது போய் விட்டாலும் அவன் மனது கொஞ்சமும் தளராது.

---

*அரும்பதவுரை*

சிகை — குடுமி, இங்கே சிகையறுகையாவது - பிராரப்த கர்மத்தில் ஒரு பாகம் போவது.

தஞ்சம் — ரக்ஷகன்.

தனிசு — கடன்.

---

## 15. உத்தரகிருத்தியாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

292. पत्युः

பிரம்மாவினுடையவும், பசுபதியென்கிற ருத்திரனுடையவும் ஐசுவரியத்தை நான் ஆசைப்படமாட்டேன், யமுனைக்கரையில் கதம்பமரமாகவாவது குந்தமரமாகவாவது இருக்க ஆசைப்படுகிறேன். அந்த இடமானது கிருஷ்ணனாய் அவதாரம் பண்ணின எம்பெருமானுடைய திருவடிகளால் பரிசுத்தம் பண்ணப்பட்டது. அந்த இரண்டு மரங்களும் அந்த அவதாரத்தில் அவனுக்குப் பிடித்தவைகளாயிருந்தன.

293. कुरुष्व (ராமாயணம் அயோத்யா காண்டம் - 31-22)

அடியேனை வேலைக்காரனாகச் செய்யவேணும். அப்படி என்னைச்செய்வதில் தகுதிக்குறைவு ஒன்றுமில்லை. தேவரீருக்குச் சேஷனான எனக்குக் கிடைக்கவேண்டிய கைங்கரியமான பிரயோஜநம் கிடைக்கும். தேவரீரையடைந்தவனை ரக்ஷிப்பதாகிய பிரயோஜநமும் தேவரீருக்குக் கிடைக்கும்.

भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते ।
अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ।।

294. परवानस्मि - (ராமாயணம் ஆரண்யகாண்டம் - 15-7)

காகுத்ஸ்தனே ! தேவரீர் நூறு வருஷமிருந்தாலும் தேவரீருக்கு உட்பட்டவனாகவே இருப்பேன். தேவரீரே அழகான இடத்தில் பர்ணசாலையைச் செய் என்று எனக்கு உத்திரவு பண்ணவேணும்.

295. कामये (ஜிதந்தாஸ்தோத்திரம் - 1-13)

எல்லா ஜந்மங்களிலும் எம்பெருமானுக்கு வேலைக்காரனாய் இருப்பதையே நான் ஆசைப்படுகிறேன்.

296. वर्तमानः (வங்கிபுரத்து நம்பி காரிகை)

ஒவ்வொரு நாளையும் ஐந்து பாகங்களாகப் பிரித்து அவைகளில் செய்யவேண்டிய கைங்கரியங்களை எப்போதும் செய்து கொண்டு, என்

சக்திக்குத் தகுந்தபடி என்னாலேயே ஸம்பாதிக்கப்பட்ட நல்லவைகளான சந்தநம் புஷ்பம் முதலானவைகளாலே எம்பெருமானைப் பக்தியுடன் ஆராதநம் பண்ணிக்கொண்டு நாள்களைப் போக்குவேன்.

297. तत्पादभक्ति -

எம்பெருமானுடைய திருவடிகளில் பக்தியும் ஞானமும் தவிர, வேறு பலனை ஒருவேளையும் ஒருவன் அவனிடம் கேட்கக்கூடாது, கேட்பதால் நிச்சயமாய்க் கெட்டுப்போவான்.

298. तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ।। (கீதை - 4-34)

குருவை வணங்கி கேட்டு அவனுக்குத் தொண்டு செய்து அந்த ஆத்மஸ்வரூபத்தை அறிந்துகொள். ஜ்ஞாநிகளாகவும் தத்துவத்தைப் பார்க்கிறவர்களாகவுமுள்ள ஆசாரியர்கள் உனக்கு ஆத்மவிஷயமான ஜ்ஞாநத்தை உபதேசம் பண்ணுவார்கள். இங்கே 'परिप्रश्न' என்கிற சொல்லுக்கு கேட்கவேண்டியதை நேரே கேட்கக்கூடாதென்றும், அதைச் சேர்ந்ததொன்றைக் கேட்டும் அவர்களிடம் பக்தியுடன் நீண்டகாலம் பணிவைத் தெரிவித்தால் சிஷ்யனுக்கு வேண்டியதை ஆசாரியன் அறிந்து உபதேசிப்பன் என்றும் கருத்து.

299. मन्दोऽपि - (மாளவிகாக்நிமித்ர நாடகம் 2- 7)

ஒருவன் மந்தனாயிருந்தபோதிலும் அறிவுள்ளவனுடன் சேர்ந் திருப்பதாலே தன் குறைவு நீங்கி அறிவுள்ளவனாக ஆகிறான். கலக்கத்தைப் போக்குகிற தேத்தாங்கொட்டையைத் தேய்ப்பதாலே கலங்கின ஜலம் தெளிவையடைகிறது. அது போல.

300. यस्यानुभव (ஸ்ரீஸாத்வதஸம்ஹிதை)

எவனுக்கு தத்துவவிஷயமான புத்தியானது எம்பெருமானுடைய அநுபவம் வரையில் போகும்படி நிலைநிற்கிறதோ, அவனுடைய கடாக்ஷத்துக்கு விஷயமான எல்லாரும் எல்லா பாபங்களாலும் விடப்படுகிறார்கள்.

301. यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके ।
तावान् सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ।। (கீதை - 2-46)

எல்லாருக்காகவும் எல்லாப்பிரயோஜநங்களுக்காகவும் நிறைந்திருக்கிற ஒருகுளத்திலே ஒருவனுக்கு எவ்வளவு பிரயோஜநமோ அவ்வளவே அவன் எடுத்துக்கொள்ளவேண்டியது.

अहमस्मि

302. धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी न भक्तिमांस्त्वच्चरणारविन्दे ।
अकिञ्चनोऽनन्यगतिः शरण्य! त्वत्पादमूलं शरणं प्रपद्ये ॥

(ஆளவந்தார் ஸ்தோத்திரம் - 22)

தர்மத்தை இடைவிடாது செய்வதை, அதாவது கர்மயோகத்தை நான் செய்யவில்லை, ஆத்மஸ்வரூபத்தையும் நான் அறியவில்லை, அதாவது ஜ்ஞாநயோகத்தையும் செய்யவில்லை. தேவரீருடைய திருவடித் தாமரைகளில் பக்தியுள்ளவனுமன்று. அதாவது பக்தியோகத்தையும் செய்யவில்லை. (229 - வதையும் பார்க்க)

303. उत्तमे चेत् (போதாயநஸூத்திரம் - 1- 10 - 32)

ஒருவன் முன்னால் எப்படியிருந்தாலும், கடைசி வயதில் நல்ல ஒழுக்கமுள்ளவனாயிருந்தால் அதுவே அவனுக்கு நல்லதைக் கொடுக்கும். முன்செய்த கெட்டகர்மங்கள் கெடுதலைச்செய்யாது.

304. दुराचारः (ஸாத்வதஸம்ஹிதை - 16-23,24)

ஒருவன் முன்னாலே கெட்டவொழுக்கமுள்ளவனாயும், எதையும் சாப்பிடுகிறவனாயும், நன்றி கெட்டவனாயும், சாஸ்திரத்தில் நம்பிக்கையில்லாதவனாயும் இருந்தபோதிலும், உலகத்துக்குக் காரணமான தேவனாகிய எம்பெருமானைச் சிரத்தையுடன் சரணமாக அடைந்தால் அவன் மஹிமையினாலே அந்த மனிதனைத் தோஷமில்லாதவனாக அறி.

305. यद्ब्रह्म (ஸ்ரீ வைகுண்டஸ்தவம் - 61)

எந்த பாபமானது பிரம்மாவினுடைய வயதான பதினாயிரம் கல்பங்கள் = வருடங்கள் வரை அநுபவித்தாலும் மாளாதோ, அப்பேர்ப்பட்ட பாபத்தை ஒரு பிராணி அரை க்ஷணத்தில் செய்கிறான். இப்படி எல்லாப் பிறப்புகளிலும் எப்போதும் அபராதம் பண்ணிக்கொண்டிருக்கிறவனை பாபம் பண்ணுகிற எண்ணத்தை விடுவதினால்மாத்திரம் தேவரீர் பொறுத்துக்கொள்ளுகிறீர். இதென்ன ஆச்சரியம் !

306. गतमेव गतं जन्म का नु तत्र प्रतिक्रिया ?
प्रवहत्येव हि जले सेतुः कार्यो विजानता ।।

(வங்கீபுரத்து நம்பி காரிகை - 31)

சென்ற ஜந்மங்கள் சென்றதே. அதற்குப் பதில் என்ன செய்ய முடியும்? ஜலம் ஓடிக்கொண்டிருக்கையிலேயே புத்திமானாலே அதற்கு அணைபோடக் கோலவேண்டியது.

नित्यसिद्धे

307. यथा सामुद्रं (பௌஷ்கரஸம்ஹிதை)

எப்படி ஸமுத்திரஜலமானது மேகங்களாலே குடித்து உமிழப்படுகை யாலே எல்லாருக்கும் அநுபவிக்கத் தகுந்ததாகச் செய்யப் படுகிறதோ, அப்படியே பக்தர்களாலே பிரதிஷ்டை செய்யப்பட்ட எம்பெருமான் எல்லா மனிதர்களுக்கும் கைங்கரியங்கள் செய்து அநுபவிக்கத் தகுந்தவனாக ஆகிறான்.

308. सर्वातिशायि षाड्गुण्यं संस्थितं मन्त्रबिम्बयोः ।
मन्त्रे वाच्यात्मना नित्यं बिम्बे तु कृपया स्थितम् ।।

(விஷ்வக்ஸேநஸம்ஹிதை)

மந்திரங்களிலும், விக்ரஹங்களிலும் எல்லாருக்கும் மேற்பட்ட ஜ்ஞாநம் முதலான ஆறு குணங்கள் நிலையாயிருக்கின்றன. அதாவது - மந்திரங்களால் அவைகள் சொல்லப்படுகின்றன. விக்கிரஹங்களில் கிருபையினால் எழுந்தருளியிருப்பதால் அவனிடத்தில் அவைகள் இருக்கின்றன.

309. आपीठात् (சாண்டில்யஸ்மிருதி - 2-89)

அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானைப் புருஷோத்தம னென்று எண்ணி திருவடி பீடம்முதல் திருமுடிவரையில் ஸேவிக்கிறவ னுக்கு ஐந்து மஹாபாதகங்களும் சீக்கிரம் நசிக்கின்றன. உபபாதகங்கள் நசிக்கின்றன என்பது சொல்லவேண்டுமோ?

310. संदर्शनात् (பௌஷ்கரஸம்ஹிதை 1- 31, 32 )

புத்திமயக்கமுள்ள மனிதர்கள் தற்செயலாய் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானைப் ஸேவிக்கும்படி நேர்ந்தால்

அவர்களுடைய குவாஸனை முதலானவைகள் போய்விடும். அவைகளில் குவாஸனை - உடம்பே ஆத்மா என்கிற எண்ணத்தாலே உண்டான வாஸனை. குபுத்தியென்பது அதினாலேயுண்டான பிரத்யக்ஷப்பிரமம். குதர்க்கநிசயம் - ஸரியான யுக்திகளாயில்லாமல் நல்ல யுக்திகளைப்போலே தோன்றுகிறவைகளின் கூட்டம். குஹேது - இதினாலே உண்டான கெட்ட அநுமதி. குபாவம் சொற்களுக்கு எப்படிப் பொருள் கிடைக்குமோ அதை விட்டு வேறாகப் பொருள் கொள்வது. நாஸ்திகத்வம் - இதினாலுண்டான சாஸ்திரத்தில் சொல்லுமவைகளை இல்லை என்று சொல்வது.

311. ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ! सर्वशः ।। (கீதை - 4-11)

எவர்கள் என்னை எப்படிப் பார்க்கவேணுமென்று ஆசைப்பட்டு அடைகிறார்களோ, அப்படியே அவர்களுக்கு என்னைக் காட்டுகிறேன்.

312. सतीव प्रिय, स्वामित्वेन (சாண்டில்யஸ்மிருதி - 4-37-38)

ஒரு பதிவ்ரதை தனக்குப் பிரியமான புருஷனையும், தாயார் பால் குடிக்கும் குழந்தையையும், சிஷியன் ஆசாரியனையும், ஒரு ஸ்நேஹிதன் மற்றொரு ஸ்நேஹிதனையும் போல எம்பெருமானுக்குப் பிரீதியுடன் உபசாரம் செய்யவேண்டியது. லக்ஷ்மீபதியான எம்பெருமானை யஜமாநனாகவும், வேண்டியவனாகவும், ஆசாரியனாகவும், தகப்பனாகவும், தாயாகயும் எப்போதும் எண்ணவேண்டியது.

313. यथा युवानम् (சாண்டில்யஸ்மிருதி - 4-31)

சிறு பிள்ளையான ராஜாவையும், மதம் பிடித்தயானையையும். எப்படி ஒருவன் பயத்துடன் உபசரிக்கிறானோ, அப்படியே எம்பெருமானுக்கும் பயத்துடன் உபசாரம் செய்யவேண்டியது. வீட்டிற்கு வந்த பிரியமான விருந்தாளியை எப்படி ஆராதிப்பானோ, அப்படியே எம்பெருமானையும் அவனுடைய ஸௌலப்ய குணத்தை நினைத்து பக்தியுடன் ஆராதிக்கவேண்டியது.

314. यथा च पुत्रम्

எப்படி, ஒருவன் பிரியமான குழந்தையைக் கொண்டாடுவனோ, அப்படியே எம்பெருமானையும் கொண்டாடவேண்டியது.

315. तदा हि (ராமாயணம் அயோத்யா காண்டம் - 115-27)

பாதுகை ராஜ்யம் ஆளும் பொழுது, எந்த அரசாங்க வேலை செய்ய வேண்டியதாக ஏற்படுகிறதோ, மிகுந்த விலையுள்ள எந்த காணிக்கை வருகிறதோ, அவைகளைப் பாதுகைகளிடத்தில் முதலில் தெரியப்படுத்தி பிறகு பரதன் எப்படி செய்யவேண்டியதோ, அப்படிச் செய்தான்.

पापिष्ठः

316. विषस्य

விஷத்திற்கும் விஷயங்களுக்கும் வேறுபாடு மிகவும் அதிகம். எப்படியென்றால் - விஷம் சாப்பிட்டவனைக் கொல்லும். விஷயங்கள் நினைப்பதாலேயே கெடுதியைச் செய்யும்.

317. आध्यात्मिक–आधिभौतिक–आधिदैविक–दुःखविघ्नगन्ध–रहितस्त्वं द्वयमर्थानुसन्धानेन सह सदैवं वक्ता यावच्छरीरपातमत्रैव श्रीरङ्गे सुखमास्स्व॥

(சரணாகதிகத்யம் 19)

த்வய மந்திரத்தை அர்த்தத்தை நினைப்பதுடன் எப்போதும் சொல்லு கிறவனாய்.

---

*தமிழ் வசனங்கள்*

50. *தரித்திருந்தேனாகவே தாராகணப்போர்*
*விரித்துரைத்தவெந்நாகத் துன்னைத் - தெரித்தெழுதி*
*வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்*
*பூசித்தும் போக்கினேன் போது.* (நான்முகன் திருவந்தாதி - 63)

எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லுகிற புஸ்தகங்களை வாசித்தும், அவைகளை ஒருவன் படிப்பதைக்கேட்டும், வணங்கியும் அதையே எப்போதும் செய்துகொண்டும் அவனை ஆராதித்தும் என்னு டைய காலத்தை வீணாக்காமல் செய்தேன்.

51. *கார்கலந்தமேனியான் கைகலந்தவாழியான்*
*பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான் - சீர்கலந்த*
*சொல்நினைந்துபோக்காரேல் சூழ்வினையினாழ்துயரை*
*என்நினைந்துபோக்குவரிப்போது.* (பெரிய திருவந்தாதி - 86)

எம்பெருமானுடைய நல்ல குணங்களைக் காட்டுகிற ஸூக்திகளை நினைத்துக்கொண்டு ஆத்மாவைச் சூழ்ந்துகொண்டிருக்கிற கர்மங்களினா

லுண்டான ஸமுத்திரம்போல் ஆழமான துக்கத்தை ஜநங்கள் போக்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், இந்த ஸம்ஸாரத்திலிருக்கும்போது எதை நினைத்துக்கொண்டு அந்த துக்கத்தைப் போக்குவார்கள்?

52. *ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி*
*வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்*
*தெழிகுரலருவித் திருவேங்கடத்து*
*எழில்கொள்சோதி யெந்தைதந்தை தந்தைக்கே.*

(திருவாய்மொழி - 3-3-1)

இடைவிடாது காலமெல்லாம் எம்பெருமானுடன் எல்லாவிடங் களிலுமிருந்து எல்லா அவஸ்தைகளிலும் குற்றமில்லாத கைங்கரியத்தை நாம் செய்யவேண்டியது. இங்கு குற்றமாவது இதை நான் செய்கிறேன், எனக்காகச் செய்கிறேன் என்கிற எண்ணம்.

53. *இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென்னிருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த*
*செங்கோலத்தபவளவாய்ச்செந்தாமரைக்கணென்னம்மான்*
*பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப்புலன்கொள்வடிவென்மனத்ததாய்*
*அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடவருளிலே.*

(திருவாய்மொழி - 8-10-4)

வரவர விருத்தியாகும்படியான எம்பெருமானுடைய நல்ல குணங் களைச் சொல்லுகிற பாசுரங்கள் என் வாயிலும், கண் முதலான இந்திரியங் களையிழுக்கும் படியான அவனுடைய திருமேனியானது என் மனதிலும், அதற்குத் தகுந்த புஷ்பங்கள் என்கையிலும் இருந்து எப்போதும் என் காலத்தைப் போக்கும்படி அவன் கிருபை செய்தால், இங்கேயிருக்கிற நமக்கு என்ன குற்றமுண்டாகும்.

54. *நாடாதமலர்நாடி நாடோறும்நாரணன்றன்*
*வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று*
*வீடாடிவீற்றிருத்தல் வினையற்றதென்செய்வதோ*
*ஊடாடுபனிவாடா யுரைத்தீராயெனதுடலே.* (திருவாய்மொழி - 1-4-9)

வருத்தப்பட்டு ஸம்பாதிக்கவேண்டிய புஷ்பங்களை ஸம்பாதித்து எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பிப்பதற்காகப் பிறந்த நான்.

55. *வடிவிணை* (திருவாய்மொழி - 9-2-10)

*கொடுவினைப்படைகள் வல்லையாய் அமரர்க்கு இடர்கெட*
*அசுரர்க்கு இடர் செய்*
*கடுவினை நெஞ்சே ! என்னுடையமுதே ! கலிவயல் திருப்புளிங்குடியாய் !*

*வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியை*
*கொடுவினையேனும் பிடிக்க நீ ஒருநாள் கூவுதல் வருதல் செய்யாயே .*

அழகில் ஒப்பில்லாத பிராட்டியும் அவளைக் காட்டிலும் வேறான பூமியும் பிடிக்கும் மிருதுவான எம்பெருமானுடைய திருவடிகளைக் கொடுமையான பாபமுள்ள நானும் பிடிக்க.

56. *எனக்கேயாட்செய் யெக்காலத்துமென்று என்*
*மனக்கேவந்திடைவீடின்றிமன்னித்*
*தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே*
*எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே.* (திருவாய்மொழி - 2-9-4)

தன் ஸந்தோஷத்திற்காகவே எம்பெருமான் என்னை அடிமை கொள்வதாகிய இதுவே நான் வேண்டுகிற பிரயோஜநம்.

57. *சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்*
*பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய்*
*பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்துநீ*
*குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகாது*
*இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா*
*எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோ*
*டுற்றோமேயாவோ முனக்கேநாமாட்செய்வோம்*
*மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய்.* (திருப்பாவை - 29)

எம்பெருமானே ! தேவரீருக்கே நாங்கள் கைங்கரியங்கள் செய்வோம்.

58. *தெள்ளியார் பலர் கைதொழும் தேவனார்*
*வள்ளல் மாலிருஞ் சோலைமணாளனார்*
*பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிடக்*
*கொள்ளுமாகில் நீ கூடிடுகூடலே.* (நாச்சியார் திருமொழி - 1)

எம்பெருமான் திருக்கண் வளர்கிற இடத்தில் அவன் திருவடிகளைப் பிடிக்கும்படி கிருபை செய்தால்.

59. *வண்ணநன்மணியும் மரகதமுமழுத்தி நிழலெழும்*
*திண்ணைசூழ் திருக்கோட்டியூர் திருமாலவன் திருநாமங்கள்*
*எண்ணக்கண்டவிரல்களால் இறைப்பொழுதுமெண்ணகிலாது போய்*
*உண்ணக்கண்டதம்ஊத்தை வாய்க்குக்கவளமுந்துகின்றார்களே.*
(பெரியாழ்வார் திருமொழி - 4-4-3)

எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லும்போது அவைகளை யெண்ணுகிற விரல்கள்.

60. கண்ணாநான்முகனைப்படைத்தானே காரணா கரியாய்
அடியேன் நான், உண்ணாநாள்பசியாவதொன்றில்லை ஓவாதே
நமோநாரணாவென்று, எண்ணாநாளும் இருக்கெசுச்சாமவேத
நாண்மலர்கொண்டுனபாதம் - நண்ணாநாள் அவைதத்துறுமாகி
லன்றெனக்கவைபட்டினிநாளே. (பெரியாழ்வார் திருமொழி - 5-1-6)

நான் சாப்பிடாத நாள் பட்டினியாயிருக்கிற நாளன்று, நமோ நாராயணாவென்று இடைவிடாமல் நான் நினைக்காத நாளும், மூன்று வேதங்களாகிய அப்போதே மலர்ந்த புஷ்பங்களைக்கொண்டு தேவரீருடைய திருவடிகளைக் கிட்டாத நாளும் வருமாகில் அந்த நாள்கள் தான் எனக்குப் பட்டினிநாளாகும்.

61. வாக்குத் தூய்மையிலாமையினாலே மாதவாவுன்னை
வாய்க்கொள்ளமாட்டேன், நாக்கு நின்னையல்லாலறியாது நான
தஞ்சுவனென்வசமன்று, மூர்க்குப்பேசுகின்றானிவனென்று
முனிவாயேலுமென் நாவினுக்காற்றேன், காக்கை வாயிலும்
கட்டுரை கொள்வர் காரணா கருளக்கொடியானே.
(பெரியாழ்வார் திருமொழி - 5-1-1)

நாக்கு தேவரீரைத் தவிர வேறொருவரையும் ஸ்தோத்ரம் பண்ணாது. இதனாலே தேவரீருக்கு என்ன குறைவு வருமோ என்று பயப்படுகிறேன். ஆனால் ஸ்தோத்திரம் பண்ணுவதை நிறுத்திவிடலாமே- யென்றால் அந்த நாக்கு என் வசமாயில்லை.

62. வாயவனையல்லது வாழ்த்தாது , கையுலகம்
தாயவனையல்லது தாம்தொழா- பேய்முலைநஞ்
சூணாகவுண்டானுருவொடு பேரல்லால்
காணாகண்கேளா செவி. (முதல் திருவந்தாதி - 11)

வாய் எம்பெருமானைத் தவிர வேறொருவனையும் ஸ்தோத்திரம் பண்ணுகிறதில்லை.

63. தோளவனை யல்லால் தொழா என் செவியிரண்டும்
கேளவன தின்மொழியே கேட்டிருக்கும்-நா நாளும்
கோணாகணையான் குரை கழலே கூறுவதே
நாணாமை நள்ளேன் நயம். (முதல் திருவந்தாதி - 63)

தோளானது எம்பெருமானைத் தவிர வேறொருவரையும் வணங்காது.

64. நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு
உயவே னுயர்ந்தவரோ டல்லால்-வியவேன்

*திருமாலை யல்லது தெய்வமென் றேத்தேன்*
*வருமாறென் நம்மேல் வினை.* (முதல் திருவந்தாதி - 64)

எம்பெருமானுடைய பொருளான ஆத்மாவாகிய ஸொத்தை என்னுடையதென்று நான் எண்ணமாட்டேன். அப்படி எண்ணுகிற தாழ்ந்தவர்களோடு நான் சேரமாட்டேன்.

65. *நிரந்தரம்- இரந்துரைப்பதுண்டு வாழி ஏமநீர்நிறத்தமா*
*வரந்தரம் திருக்குறிப்பில் வைத்ததாகில்மன்னுசீர்*
*பரந்தசிந்தையொன்றிநின்று நின்னபாதபங்கயம்*
*நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே.*
(திருச்சந்தவிருத்தம் - 101)

நான் இடைவிடாமல் தேவரீரைத் தியானம் பண்ணும்படி தேவரீர் ஸங்கல்பிக்கவேண்டும்.

*ஏதங்களாயினவெல்லா மிறங்கவிடுவித்து என்னுள்ளே*
*பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து*
*போதில்கமல வன்னெஞ்சம்புகுந்து என் சென்னித்திடரில்*
*பாதவிலச்சினை வைத்தார் பண்டன்றுபட்டினங்காப்பே.*
(பெரியாழ்வார் , 5-2-8; 4-வது பக்கம் 1-வது நெம்பரைப் பார்க்க )

66. ***நன்மைதீமைகளொன்றுமறியேன்நாரணாவென்னுமித்தனையல்லால்***
***புன்மையாலுன்னைப் புள்ளுவம்பேசிப் புகழ்வானன்று கண்டாய்***
***திருமாலே, உன்னுமாறுன்னையொன்றுமறியேன் ஓவாதேநமோ***
***நாரணாவென்பன் வன்மையாவதுன்கோயிலில்வாழும் வைட்***
***டணவனென்னும்வன்மைகண்டாயே.*** (பெரியாழ்வார் திருமொழி-5-1-3)

இது நல்லது, இது கெட்டதென்று எனக்கு ஒன்றும் தெரியாது.

67. *அறிவனேலு - இவையன்றே நல்ல இவையன்றேதீய*
*இவையென்றிவையறிவனேலும், - இவையெல்லாம்*
*என்னுலடைப்புநீக்கொண்ணுதிறையவனே*
*என்னுல் செயற்பாலதென்.* (பெரிய திருவந்தாதி - 3)

நன்மை தீமைகளை அறிந்திருந்தாலும் நல்லதை ஸம்பாதிக்கவும், கெட்டதை விலக்கவும் என்னாலே முடியாது.

68. *நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேனாகிலுமினியுன்னை*
*விட்டொன்றும்*
*ஆற்றகிற்கின்றிலே னரவினணையம்மானே*

சேற்றுத்தாமரை செந்நெலூடுமலர் சிரீவரமங்கலநகர்
வீற்றிருந்தவெந்தா யுனக்குமிகையல்லேனங்கே.

(திருவாய்மொழி - 5-7-1)

நல்ல அநுஷ்டாநமில்லாதவன் ; ஸூக்ஷ்மமான அறிவுமில்லாதவன். அதாவது கர்மயோகமும், ஜ்ஞானயோகமுமில்லாதவன்.

69. என்னான்செய்கேன்யாரே களைகணென்னையென்செய்கின்றாய்
உன்னாலல்லால்யாவராலு மொன்றும்குறைவேண்டேன்
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தா யடியேனருவாணாள்
சென்னாளெந்நாளந்நாளுனதாள் பிடித்தேசெலக்காணே.

(திருவாய்மொழி - 5-8-3)

நான் எதைச் செய்வேன்.

களைவாய்துன்பம்களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்
வளைவாய் நேமிப்படையாய் குடந்தைக்கிடந்தமாமாயா
தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது
இளையா துனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே.

(38-வது பக்கம் 32-வது நெம்பரைப் பார்க்க)

அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகமூன் றுடையாய் என்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன் றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே.

(50-வது பக்கம் 48-வது நெம்பரைப் பார்க்க)

ஆவிக்கோர் - கூவிக்கொள்ளாய்வந்தந்தோ என்பொல்லாக்கரு
மாணிக்கமே, ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றி
லேன்யான், மேவித்தொழும்பிரமன்சிவனிந்திரனுதிக்கெல்லாம்,
நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பரந்ததுவே.

(38-வது பக்கம் 33-வது நெம்பரைப் பார்க்க)

70. கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந்துண்போம்,
அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து உன்றன்னைப்,
பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம்,
குறைவொன்றுமில்லாத கோவிந்தா, உன்றன்னோ
டுறவேல் நமக்கிங் கொழிக்கவொழியாது,
அறியாதபிள்ளைகளோ மன்பினால் உன்றன்னைச்,

*சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே,*
*இறைவா நீதாராய் பறையேலோரெம்பாவாய்.* (திருப்பாவை - 28)
பசுமாடுகள் பின்னால் போய்.

71. *குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தணமைதன்னை*
*ஒளித்திட்.டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன்*
*களிப்பதென்கொண்டுநம்பி கடல்வண்ணா கதறுகின்றேன்*
*அளித்தெனக்கருள் செய்கண்டா யரங்கமாநகருளானே.*

(திருமாலை 25)

ஸ்நாநம் செய்து மூன்று அக்கினிகளைப் பூஜை செய்யும் அடையாளத்தையுடைய பிராமணன் செய்யவேண்டிய வேலையை நான் விட்டுவிட்டேன்.

72. *குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன்*
*நலங்களாயநற்கலைகள் நாலிலும்நவின்றிலேன்*
*புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன் புனித நின்*
*இலங்குபாதமன்றிமற்றொர் பற்றிலேனெம்மீசனே* (திருச்சந்த.வி- 90)

தர்மத்தைச் செய்வதற்குத் தகுந்த நான்கு ஜாதியில் பிறந்தவனாக இல்லை.

73. *ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது இரங்கி*
*மற்றுமவர்க்கு இன்னருள் சுரந்து*
*மாழை மான் மடநோக்கி*
*உன் தோழி உம்பி எம்பி என்றொழிந்திலை உகந்து*
*தோழன் நீ எனக்கு இங்கொழி என்ற சொற்கள் வந்து*
*அடியேன் மனந்திருந்திட*
*ஆழிவண்ண! நின் அடியினையடைந்தேன்*
*அணிபொழில் திருவரங்கத்தம்மானே !*

(பெரிய திருமொழி 5-8-1)

அறிவற்றவன், தொடர்பு ஒன்றுமில்லாதவன் , கீழ்குலத்தில் பிறந்தவன் என்று கருதாது குஹன் மீது இரக்கம் கொண்டு.

**73.** *பற்றேல் ஒன்றுமிலேன் பாவமே செய்து பாவியானேன்*
*மற்றேல் ஒன்றறியேன் மாயனே ! எங்கள் மாதவனே !*
*கல்தேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா !*
*அற்றேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே !*

(பெரியதிருமொழி 1-9-9)

எத்தகைய ஆதாரமும் அற்றவன் அடியேன்.

73. *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்*
*இந்நின்ற நீர்மையினியாமுறாமை உயிரளிப்பான்*
*எந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா*
*மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே.*

(திருவிருத்தம் - 1)

நசுவரமான உடம்பில் இருக்கிற நான் என்கிற எண்ணமும், அதினாலுண்டான கெட்ட ஆசாரமும், அதினாலேயுண்டான அழுக்கை யுடைய உடம்பும் இப்படியிருக்கிற ஸம்ஸாரியின் ஸ்வபாவத்தை மறுபடியடையாதபடி ஆத்மாக்களை ரக்ஷிப்பதற்காக எந்தெந்த ஜாதியாய் நீ பிறந்தாய். நித்யஸூரிகளின் தலைவனே ! அடியேன் செய்யும் விண்ணப்பத்தைக் கேட்டருளவேணும்.

74. *மாளுமோர்- நாளுநின்றடுநம் பழமையங்கொடுவினையுடனே*
*மாளும் ஓர் குறைவில்லைமனனக மலமறக்கழுவி*
*நாளுநந்திருவுடையடிகள் தம்நலங் கழல்வணங்கி*
*மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே.*

(திருவாய் மொழி 1-3-8)

இறந்துபோகிற காலத்திலாகிலும் எம்பெருமானிடத்தில் பிரபத்தி செய்து இறப்பது நல்லது.

***74.*** *முடியானே ! மூவுலகும் தொழுதேத்தும் சீர்*
*அடியானே ! சூழ்கடலைக்கடைந்தாய் ! புள்ளூர்*
*கொடியானே ! கொண்டல் வண்ணா ! அண்டத்து உம்பரில்*
*நெடியானே ! என்று கிடக்கும் என் நெஞ்சமே.* (திருவாய். 3-8-1)

எம்பெருமானைத் தான் விரும்பியபடி காணாமையால் மனம் கலங்கி மிகவும் வருத்தத்தையடைந்து எல்லா இந்த்ரியங்களாலும் எல்லாவிதமாயும் அவனையநுபவிக்கவேண்டுமென்று ஆழ்வார் இத்திருவாய்மொழியில் எம்பெருமானைக் கூப்பிடுகிறார்.

***74.*** *தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே*
*தமருகந்தது எப்பேர் மற்றப்பேர் தமருகந்தது*
*எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே*
*அவ்வண்ணம் ஆழியானாம்.* (பொய்கையாழ்வார் 44 )

தன் அடியார்கள் எவ்வடிவத்தில் எம்பெருமானை ஸேவிக்க விரும்புகிறார்களா அவ்வடிவத்தை பகவான் கொள்கிறார்.

75. *கண்டகண் - கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணெ*
*யுண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை*
*அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக்*
*கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே.* (அமலனாதிபிரான் - 10)

எம்பெருமானைக் கண்டகண்கள் மற்றொன்றைக் காணாது.

76. *எம்மீசர் - வீசும்சிறகால்பறத்தீர் விண்ணாடுநுங்கட்கெளிது*
*பேசும்படியன்ன பேசியும்போவது நெய்தொடுவுண்*
*டேசும்படியன்ன செய்யுமெம்மீசர் விண்ணோர்பிரானார்*
*மாசின்மலரடிக்கீழ், எம்மைச்சேர்விக்கும்வண்டுகளே.*
(திருவிருத்தம் -54)

என்னுடைய யஜமாநனாயும் நித்யஸூரிகளுக்கு உபகாரம் செய்கிறவனாயுமிருக்கிற எம்பெருமானுடைய குற்றமில்லாத திருவடித் தாமரைகளின் கீழ் எம்மைச் சேர்ந்த ஆசாரியர்கள் நீங்கள்.

77. *வில்லிபுதுவை- நல்ல என்தோழி நாகணைமிசை நம்பரர்*
*செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம்செய்வதென்*
*வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள்தேவரை*
*வல்லபரிசு வருவிப்பரேலது காண்டுமே.* (நாய்ச்சியார் திருமொழி-10-10)

ஸ்ரீ வில்லிபுத்தூரில் அவதாரம் செய்த ஆத்மகுணம் நிறைந்த விஷ்ணுசித்தரென்கிற பெரியாழ்வார் தாம் ஆராதிக்கும் எம்பெருமானை தம்மாலே முடிந்த வழியாலே வருவித்தால் அதை நான் ஸேவிப்பேன்.

78. *இருளகற்றும் - கருளுடையபொழில்மருந்தும் கதக்களிறும்பிலம்பனை*
*யுங் கடிய மாவும், உருளுடைய சகடினையும் மல்லரையும் உடைய*
*விட்டோசை கேட்டான், இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்*
*தூடேற்றிவைத்தேணிவாங்கி, அருள்கொடுத்திட்டடியவரை*
*யாட்கொள்வானமருமூரணியரங்கமே.* (பெரியாழ்வார் திரு - 4-9-3)

இருட்டைப் போக்குகிற உஷ்ணமான கிரணங்களையுடைய ஸூரியனுடைய மண்டலத்தின் நடுவாலே வைகுந்தத்தில் ஏற்றி திரும்பி வராதபடி ஏறுவதற்குக் காரணமாயிருந்த ஏணியை எடுத்துவிட்டு.

79. *போயினால்- சீயினால் செறிந்தேறியபுண்மேல் செற்றலேறிக்குழம்*
*பிருந்துஎங்கும்-ஈயினாலரிப்புண்டு மயங்கியெல்லைவாய்ச் சென்று*
*சேர்வதன் முன்னம் வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்தி*

*டைக் கைகளைக்கூப்பிப் போயினால் பின்னை இத்திசைக்கென்றும் பிணைகொடுக்கிலும் போகவொட்டாரே.* (பெரியாழ். திரு. 4-5-2)

வாயாலே "நமோ நாராயணா" வென்று மூலமந்திரத்தைச் சொல்லித் தலைமேலே கைகளைக் கூப்பிக்கொண்டு அதாவது பிரபத்தி செய்து வைகுந்தம்போனால், பிறகு இந்த ஸம்ஸாரமண்டலத்துக்குப் போய் திரும்பி வருகிறேனென்று ஜாமீன் கொடுத்தாலும் ஒருபோதும் இங்கே திரும்பிவர விடமாட்டான்.

80. *எண்பெருக்கந் நலத்து ஒண்பொருளீறில*
*வண்புகழ் நாரணன் திண்கழல்சேரே.* (திருவாய் மொழி 1-2-10)

மேன்மையான புகழையுடைய நாராயணனுடைய திருடமான திருவடிகள். 'திண்' என்கிற சொல்லாலே அதை யடைந்தவர்களை ஒருபோதும் விட்டுவிடுகிறதில்லை யென்று காட்டப்படுகிறது.

81. *சன்மசன்மாந்தரங்காத்தடியார்களைக்கொண்டுபோய்த்*
*தன்மைபெறுத்தித் தன்தாளிணைக்கீழ் கொள்ளுமப்பனைத்*
*தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர்*
*நன்மைபெறுத்தெம்மை நாளுய்யக்கொள்கின்ற நம்பரே.*
(திருவாய்மொழி - 3-7-7)

எம்பெருமான் தன்னையடைந்தவர்களுக்கு மறுபிறப்பு வராதபடி பண்ணி, அவர்களை வைகுந்தத்திற்குக் கொண்டுபோய், அவர்களுக்கு ஸ்வபாவமாயுண்டான ஸ்வரூபத்தை வெளிப்படுத்தி, தன்னுடைய திருவடிகளின்கீழ் அவைகளிலுள்ள கோடுகள்போல் பிரியாதபடி வைத்துக்கொள்ளும் அப்பன்.

82. *தன்தாளின் - வார்த்தையறிபவர் மாயவற்காளன்றியாவரோ*
*போர்த்தபிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை*
*பேர்த்துப் பெருந்துன்பம்வேரறநீக்கித் தன் தாளின்கீழ்ச்*
*சேர்த்து அவன்செய்யும்சேமத்தையெண்ணித்தெளிவுற்றே.*
(திருவாய்மொழி - 7-5-10)

எம்பெருமான் தன்னுடைய திருவடிகளின் கீழே சேர்த்து இங்கே திரும்பி வாராதபடி அவன் செய்யும் க்ஷேமம்.

*நின் திருவ-பண்டைநாளாலேநின் திருவருளும் பங்கயத்தாள் திரு*
*வருளும் கொண்டு நின்கோயில் சீய்த்துப் பல்படிகால் குடிகுடி*
*வழிவந்தாட்செய்யும் தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்*

*தாமரைக் கண்களால் நோக்காய் தெண்டிரைப் பொருநல்தண்*
*பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக் கிடந்தானே.*

(19-வது பக்கம் 8-வது நெ. பார்க்க)

முன்காலத்தில் அதாவது ஸஹஜமாயிருக்கிற கிருபையினாலே.

*ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும்சிற்றின்பம்*
*பாவியேனைப் பலநீகாட்டிப் படுப்பாயோ*
*தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே*
*கூவிக்கொள்ளும்கால மின்னம் குறுகாதோ.*

(திருவாய் 10-8-10 ) (20-வது பக்கம் 17-வது நெ. பார்க்க)

83. *செய்யாதன - வையத்துவாழ்வீர்காள் நாமும்நம்பாவைக்குச்,*
*செய்யும்கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்,*
*பையத்துயின்ற பரமனடிபாடி,*
*நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி,*
*மையிட்டெழுதோம் மலரிட்டுநாம்முடியோம்,*
*செய்யாதனசெய்யோம் தீக்குறளைசென்றோதோம்,*
*ஐயமும்பிச்சையும் ஆந்தனையும்கைகாட்டி,*
*உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம்பாவாய்.* (திருப்பாவை - 2)

செய்யக்கூடாதவைகளைச் செய்யமாட்டோம்.

---

### *அரும்பதவுரை*

திருவிடையாட்டம் — எம்பெருமானுடைய ஆராதநத்திற்கு வேண்டிய தானியத்தை உண்டுபண்ணக்கூடிய எம்பெருமானுடைய வயல்.
கவடு — கிளை.
எதிர்சூழல்புக்கு — எதிரே வந்து வளைப்பதில் புகுந்து.
வெளிச்சிறப்பு - அறிவின் மேன்மை.
வரையிடுதல் - அளவுபடுகை, அதாவது குறைந்துபோதல்.

---

## 16. புருஷார்த்தகாஷ்டாதிகாரம்
### *ஸம்ஸ்கிருத வசநங்கள்*

318. परगतातिशय (வேதார்த்தஸங்கிரஹம்)

மற்றொருவனிடத்தில் உண்டாகும் ஒர் அதிசயத்தாலுண்டு பண்ணவேண்டுமென்கிற எண்ணத்தாலே அங்கீகரிக்கப்படுவது எவனுடைய ஸ்வரூபமோ அவன் சேஷன், மற்றொருவன் சேஷி.

319. मत्स्यो यथा स्रोत इवाभिपाती तथा कृतं पूर्वमुपैति कर्म ।
शुभे त्वसौ तुष्यति दुष्कृते तु न तुष्यते वै परमः शरीरी ।।

(பாரதம் சாந்திபர்வம் - 199-25)

எப்படி மீனானது பிரவாஹத்திலேயே போகிறதோ அப்படியே ஒருவன் முன்செய்த கர்மத்தையே செய்கிறான். எல்லாரையும் உடம்பாகவுடைய மிகவுமுயர்ந்த எம்பெருமான் அந்த கர்மம் நல்லதாயி ருந்தால் ஸந்தோஷப் படுகிறான். அது கெட்டதாயிருந்தால் ஸந்தோஷப் படுகிறதில்லை.

320. उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ।। (கீதை - 7-18)

அவர்களெல்லாரும் உதாரர்கள். ஆனால் அவர்களுள் ஜ்ஞாநீ என்பவன் என்னுடைய ஆத்மா. இது என்னுடைய அபிப்ராயம்.

321. भवन्तमेवानुचरन् निरन्तरं प्रशान्तनिश्शेषमनोरथान्तरः ।
कदाऽहमैकान्तिकनित्यकिङ्करः प्रहर्षयिष्यामि सनाथजीवितः? ।।

(ஆளவந்தார் ஸ்தோத்திரம் - 46)

எப்பொழுதும் தேவரீருக்கே வேலைக்காரனாயிருந்து, தேவரீரே எனக்கு யஜமாநன் என்று நினைத்துக்கொண்டு எப்போது அடியேன் தேவரீரை ஸந்தோஷப்படுத்தப்போகிறேன்.

322. आराधनानाम् (பாத்மோத்தரம் - 29-81)

எல்லா ஆராதநங்களிலும் விஷ்ணுவின் ஆராதநம் சிறந்தது. அதைக்காட்டிலும் விஷ்ணுபக்தனுடைய ஆராதநமானது எல்லா ஆராதநங்களிலும் மிகவும் சிறந்ததென்று சொல்லப்படுகிறது.

323. मम मद्भक्त (பாரதம் ஆச்வமேதிகபர்வம் - 116-23)

என் பக்தனிடத்தில் பக்தியுள்ளவர்களிடத்தில் எனக்கு அதிக ப்ரீதியிருக்கிறது. ஆகையால் அவர்களை விசேஷமாக ஒருவன் பூஜிக்கவேண்டியது.

324. मद्भक्तजन (காருடபுராணம் - 219-6-9)

என் பக்தர்களான ஜநங்களிடத்தில் அவர்களுடைய தோஷங்களைக் கவனிக்காதபடி செய்யும் பிரீதி, எனக்கு ஒருவன் பூஜை செய்வதைக் கண்டு

ஸந்தோஷப்படுவது, என் கதையைக் கேட்பதில் பிரீதி, அதைக் கேட்கும் போது குரலிலும் கண்களிலும் உடம்பிலும் வேறுபாடுண்டாவது; தானும் ஆராதநம் செய்யமுயற்சி செய்வது, என் விஷயங்களில் டம்பமில்லாமை, என்னை எப்போதும் நினைத்துக்கொண்டிருப்பது, என்னிடத்தில் ஒரு பலனையும் கேட்காதிருப்பது -- இப்படி எட்டு விதமான பக்தியானது எந்த மிலேச்சனிடத்திலும் இருக்கிறதோ, அவன் ஜ்ஞாந முடையவனாயும் பக்தி பண்ணுகிறவனாயுமிருக்கிற பிராம்மண சிரேஷ்டன், அவன் ஸந்ந்யாஸி, அவனே பண்டிதன், அவனுக்கு ஜ்ஞாநத்தையுபதேசம் பண்ணலாம். அவனிடமிருந்து ஜ்ஞாநத்தைப் பெறலாம். என்னைப்போல அவனும் பூஜிக்கத் தகுந்தவன்.

325. अनन्यदेवता – (பாரதம் ஆச்வமேதிகபர்வம் - 104-91)

வேறு தேவதைகளிடத்தில் பக்தியில்லாதவர்களாய், என்னிடத்தில் பக்தியுள்ள ஜநங்களிடத்தில் பிரீதியுள்ளவர்களாய், என்னையே உபாயமாகப் பற்றினவர்கள் என் பக்தர்களென்று சொல்லப்படுகிறார்கள்.

326. तस्य यज्ञवराहस्य – (பாரதம் சாந்தி பர்வம் - 46-130 )

அந்த அளவில்லாத தேஜஸ்ஸையுடைய யஜ்ஞவராஹரூபமான விஷ்ணுவுக்கு எவர்கள் நமஸ்காரம் செய்கிறார்களோ, அவர்களுக்கும் அநேக நமஸ்காரம் பண்ணுகிறேன்.

327. तदाश्रयस्य – (காருடபுராணம் ஸ்ரீரங்க மாஹாத்ம்யம் 8-91 )

உலகத்தில் எம்பெருமானை ஆச்ரயித்திருக்கிறவனை அடைவதாலும், அவனிடத்தில் பக்தியுள்ளவன் எவனோ, அவனிடத்தில் எவன் பக்தியுள்ளவனோ, அவனிடத்தில் எவன் பக்தியுள்ளவனோ, அவனுக்கு வேலை செய்வதாலும் மனிதர்கள் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள்.

ये यजन्ति – (57-வது பக்கம் 271-வது நெ. பார்க்க)

328. स च मम प्रियः (கீதை - 7-17)

ஜ்ஞாநிக்கு நான் வேண்டியவன், எவ்வளவு வேண்டியவன் என்பதை எல்லாம் தெரிந்த என்னாலும் சொல்ல முடியாது. அந்த ஜ்ஞானியும் அப்படியே எனக்கு வேண்டியவன். (இங்கே ஜ்ஞாநீ என்பதின் பொருளை 221 - வதில் பார்க்க.)

उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ।।
ज्ञानी त्वात्मा

329. नारदोऽहम् (இதிஹாஸ ஸமுச்சயம் - 31-54)

நாரதனாகிய நான் உன்னைப் பார்க்க வேணுமென்கிற ஆசையினால் இங்கே வந்திருக்கிறேன். ஒ பிராம்மணனே ! என்னைப் போன்றவர்களுக்கு எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவர்கள் எப்போதும் யஜமானர்கள்.

330. गुणैर्दास्य - अहमस्यावरो भ्राता गुणैर्दास्यमुपागतः ।
कृतज्ञस्य बहुज्ञस्य लक्ष्मणो नाम नामतः ।। (ராமா கிஷ்கிந்தா - 4-12)

நான் அவனுடைய (ராமனுடைய) தம்பி, அவனுடைய குணங்களாலே அவனுக்கு வேலைக்காரனாக ஆகியிருக்கிறேன்.

331. तदाश्रितत्वाद्देवानामन्येषां पूजनात्तु वै ।
न दोषो हि यथा लोके भर्तुर्भृत्यगणस्य च ।।
माननाद्धर्मपत्नीनां समक्षे वा परोक्षतः ।। (பௌஷ்கர. 38 49 , 50)

தர்மபத்நீகள் புருஷனுக்கும், அவனுடைய வேலைக்காரர்களுக்கும் புருஷன் முன்னிலையிலோ, இல்லாத சமயத்திலோ, கௌரவம் பண்ணுவது குற்றமன்று.

332. आप्तः ( பௌஷ்கரஸம்ஹிதை )

எம்பெருமானுடைய பரிகரமானது ஆப்தனென்றும், ஆப்தனல்லாதவனென்றும் இருவகைப்படும். அவர்களில் ஆப்தனென்பவர் நித்தியரும் முக்தரும் பாகவதர்களும். அவர்களுக்கு வந்தனம் செய்யலாம். ஆநாப்தன் கர்மத்துக்குட்பட்ட பிரம்மா முதலான தேவர்கள். அவர்களை முமுக்ஷுவானவன் வந்தநம் செய்யக்கூடாது.

333. कैङ्कर्यनित्यनिरतैर्भवदेकभोगैर्नित्यैरनुक्षणनवीनरसार्द्रभावैः ।
नित्याभिवाञ्छितपरस्परनीचभावैर्मद्दैवतैः परिजनैस्तव सङ्गसीय ।।

(ஶ்ரீவைகுண்டஸ்தவம் - 77 )

ஒருவருக்கொருவர் சேஷனாயிருப்பதை எப்போதும் ஆசைப்படுகிற நித்ய ஸூரிகளுடன் எப்போது நான் சேருவேன்.

---

## தமிழ் வசனங்கள்

84. *அடியார்க்கெ - அமலனாதிபிரானடியார்க்கென்னையாட்படுத்த விமலன், விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான், திருக் கமலபாதம்வந்தென் கண்ணினுள்ளனவொக்கின்றதே.*

(அமலனாதிபிரான் - 1)

தன்னுடைய தாஸர்களுக்கு என்னைத் தாஸனாகப்பண்ணின விமலன்.

*மற்றுமோர் தெய்வமுள தென்றிருப்பாரோ*
*டுற்றிலேன், உற்றதுமுன்னடியார்க்கடிமை*
*மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்*
*கற்று நான் கண்ணபுரத்துறையம்மானே.*

(38-வது பக்கம் 35-வது நெ. பார்க்க பெரிய திருமொழி 8-10-3)

85. *பேசுவாரடி-காசின்வாய்க்கரம் விற்கிலும் கரவாதுமாற்றிலி சோறிட்டுத்தேசவார்த்தை படைக்கும் வண்கையினார்கள்வாழ் திருக்கோட்டியூர் கேசவா புருடோத்தமா கிளர்சோதியாய்குறளா வென்றுபேசுவாரடியார்களெந்தம்மை விற்கவும் பெறுவார்களே.*

(பெரியாழ்வார் திருமொழி - 4-4-10)

எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லுகிற பாகவதர் களுக்குத் தாஸர்களாயிருக்கிறவர்கள் நம்மை விற்கும்படியான பாத்திய முடையவர்கள்.

---

## அரும்பதவுரை

குமர் இராத — வீணாகப் போகாதபடி (குமர் — கலியாணம் செய்யப்படாமலேயேயிருக்கிற ஒரு பெண்.)

தூறு — செடி.

---

## 17. சாஸ்திரீய நியமநாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

334. कुलटा (சாண்டில்யஸ்மிருதி - 3-18)

வ்யபிசாரீ, நபும்ஸகன், பதிதன், விரோதி - இவர்களிடமிருந்து இவர்கள் தானாகக் கொடுத்தாலும் ஆபத்தில்கூட ஸ்வல்பமான பொருளையும் ஒருபோதும் வாங்கக்கூடாது.

335. पररन्ध्रेषु (விஷ்ணுதர்மம் - 76-22)

அயலாருடைய தோஷத்தைப் பார்ப்பதில் பிறவிக்குருடர்களாகவும், அசலாருடைய பெண்டாட்டி விஷயத்தில் நபும்ஸகர்களாகவும், பிறரை வைகிற விஷயத்தில் ஊமைபோலவும் எவர்களிருக்கிறார்களோ அவர்கள் எனக்கு மிகவும் வேண்டியவர்கள்.

336. अनादृत (சாண்டில்யஸ்மிருதி - 4-86)

வீட்டுக்காரன் தன் பிள்ளையினிடம் எவன் ஆதரம் செய்கிறதில்லையோ, அவன் தன்னிடத்தில் ஆதரவுள்ளவனானாலும்அவனிடத்தில் பிரீதி பண்ணுகிறதில்லை, கோபமுமுண்டாகும். அப்படியே எம்பெருமான் தன்னுடைய நல்ல பக்தனை எவன் கௌரவப்படுத்துகிறதில்லையோ, அவன் தன்னை ஆராதிக்கிறவனாயினும், அந்த மனிதனிடத்தில் பிரீதி பண்ணுகிறதில்லை. கோபமுமுண்டாகிறது.

337. ये द्विषन्ति - (பாரதம் சாந்திபர்வம் - 336-36)

எவர்கள் மஹாத்மாவான கேசவனை நினைக்காதபடி பண்ணுகிற (அவனிடத்தில்) த்வேஷமுள்ளவர்களோ, அவர்களுக்கும் அவர்களுடன் சேர்ந்தவர்களுக்கும் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்வதால் ஒரு பலனும் கிடைக்காது. இங்கே அவர்களுடன் சேர்க்கையாவது அவர்களுடன் சேரும்படியான ஆதரம் செய்கிறது.

338. मूढै: (சாண்டில்யஸ்மிருதி - 1-121)

அறிவில்லாதவர்களாயும், பாபம் செய்வதில் பிரீதியுள்ளவர்களாயும், க்ரூரர்களாயும், எம்பெருமானுடைய சாஸ்திரங்களைத் தூஷிக்கிறவர்களாயுமிருக்கிறவர்களுடன் சேரக்கூடாது. அவர்களுடன் சேர்ந்தால் பக்தியானது நிச்சயமாய்ப் போய்விடும்.

339.

உலகத்திலிருக்கிறவர்களே ! இதுமுதல் உங்கள் கோஷ்டி வேறு. எங்கள் கோஷ்டி வேறு. நீங்கள் பணத்தையும் போகத்தையும் தேடுகிறீர்கள். நாங்களோ நாராயணனையே தேடுகிறோம். உங்களுக்கும் எங்களுக்கும் ஒருவரோடொருவர் சேர்க்கையில்லை. நாங்கள் எம்பெருமானுக்கு வேலைக்காரர்கள். நீங்கள் கண் முதலிய இந்திரியங்களுக்கு வேலைக்-காரர்கள்.

340. अशास्त्रमासुरं कृत्स्नं शास्त्रीयं गुणतः पृथक् ।
लक्षणं शास्त्रसिद्धस्य त्रिधा सप्तदशोदितम् ।। (கீதார்த்த.ஸ -21)

சாஸ்திரத்துக்குப் பொருந்தாது எல்லாம் அஸுரஸ்வபாவமுள்ளது.

341. आज्ञाच्छेदी (விஷ்ணுதர்மம் - 6-31)

வேதமும் ஸ்மிருதிகளும் என்னுடைய ஆஜ்ஞைகள், வேறு ஒருவனுடைய ஆஜ்ஞைகளல்ல; எவன் அதை மீறி நடக்கிறானோ, அப்படி மீறி நடக்கிறவன் எனக்குத் துரோஹம் செய்கிறான்; அவன் என் பக்தனாயிருந்தாலும் அவனை விஷ்ணுபக்தனென்று சொல்லக்கூடாது.

342. निजकर्मादि (கீதார்த்தஸங்கிரஹம் - 31)

தன்னுடைய வர்ணத்துக்கும் ஆசிரமத்துக்கும் பொருந்தின கர்மங்கள் முதல் பக்தியோகம் வரையிலுள்ள எல்லாவற்றையும் பிரீதியி னாலே ஏவப்பட்டவனாய் ஒருவன் செய்யவேண்டியது. அவைகளில் உபாயமென்கிற—எண்ணத்தை விட்டு உபாயமாயிருப்பதை எம்பெரு மானிடத்தில் பயமில்லாமல் வைக்கவேண்டும். அதாவது எம்பெருமானே உபாயமென்று எண்ணவேண்டியது.

343. अविप्लवाय - (லக்ஷ்மீதந்திரம் - 17-93-94)

தர்மங்களுக்குக் கெடுதியுண்டாகாமைக்காகவும், குலத்தை ரக்ஷிப்ப தற்காகவும், ஒரு நல்ல வழியில் தான் இருந்து நல்ல அறிவில்லாத உலகத் தாரை அதில் நிறுத்துவதற்காகவும் எம்பெருமானால் ஏற்படுத்தப்பட்ட சாஸ்த்ரமரியாதை நிலைநிற்பதற்காகவும், என்னுடைய பிரீதிக்காகவும், தேவர்களுக்கு எல்லாம் மேற்பட்டு சார்ங்கமென்னும் ஆயுதத்தையுடைய எம்பெருமானுடைய பிரீதிக்காகவும் புத்திமானான பிரபந்நன் வேதத்தினால் ஏற்பட்ட ஆசாரத்தை மனதாலும் மீறக்கூடாது. (இது லக்ஷ்மீயின் வசநம்.)

344. यथा हि (லக்ஷ்மீதந்திரம் - 17-95-96-97)

ராஜாவினால் ஏற்படுத்தப்பட்டு உலகத்திற்கு உபயோகமுள்ளதாயும் மனதுக்குப்பிடித்ததாயும் அநேகதான்யங்களை விருத்தி செய்வதாயும் இருக்கிற ஒரு ஆற்றை ராஜாவுக்கு வேண்டியவன் தனக்கு அது வேண்டிய தில்லையென்று தண்ணீர் ஓடிப்போகும் படி அதின் கரையை வெட்டிவிட் டால், அவனை ராஜா சூலத்தில் ஏற்றிவைப்பன். அதுபோல வேதத்தாலே ஏற்பட்ட மரியாதையை மீறி நடக்கிற மனிதன் எனக்கு வேண்டியவனா யிருந்தபோதிலும் என் உத்தரவை மீறி நடப்பதால் என்னால் தண்டிக்கத் தகுந்தவன்.

345. भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ।। (கீதை - 5-29)

எல்லா பிராணிகளுடைய க்ஷேமத்தை எண்ணுகிற என்னை.

प्रहर्षयिष्यामि–भवन्तमेवानुचरन् निरन्तरं
प्रशान्तनिश्शेषमनोरथान्तरः ।
कदाऽहमैकान्तिकनित्यकिङ्करः
प्रहर्षयिष्यामि सनाथजीवितः? ।।

---

**அரும்பதவுரை**

வெறுவி - பயந்து.

---

## 18. அபராதபரிஹாராதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

346. अपाय, प्रायश्चित्तिः (லக்ஷ்மீதந்திரம் - 17-91-92)

அபராதமுண்டானால் உடனே பிராயச்சித்தத்தைச் செய்ய வேண்டியது. செய்யவேண்டிய பிராயச்சித்தமும் மறுபடியும் பிரபத்தி பண்ணுவதுதான். மோக்ஷத்திற்காக பிரபத்தி பண்ணினபிறகு கர்மயோகம் முதலானவைகளை அதற்கு உபாயமாகச் செய்தால் அதுவும் அபராதம். அது போவதற்காக மறுபடியும் பிரபத்தி செய்யவேண்டியது.

347. अज्ञानात् (வங்கீபுரத்து நம்பி காரிகை 520)

ஒருவன் அபராதம் என்று தெரிந்து அதைச் செய்தாலும் அபராதம் என்று தெரியாமல் அதைச் செய்தாலும் ''அதைப் பொறுத்துக்கொள்ள வேணும்'' என்று பிரார்த்திப்பது ஒன்றே அதற்குச் செய்யவேண்டிய பிராயச்சித்தம்.

348. विदित: (ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 21-20,21)

(முதல் பாதிக்கு 13-வது பக்கம் 62-நெ. பார்க்க) பிழைத்திருப்பதற்கு உனக்கு ஆசையிருந்தால் ஸ்ரீராமனுடன் உனக்கு ஸ்நேஹமுண்டாகட்டும். பிரபத்தி பண்ணுகிறவர்களிடத்தில் பிரீதியுள்ள அந்த ராமனிடத்தில் பிரபத்தி பண்ணி அவன் அநுக்கிரஹத்தை உண்டுபண்ணி சுத்தமான மனதுடன் என்னை அவனிடத்தில் திரும்பிப் போகும்படி நீ செய்ய வேண்டியது.

(இது ராவணனைக் குறித்து ஸீதை சொன்ன வசநம்.)

349. स्वपुरुषम् (விஷ்ணுபுராணம் - 3-7-14)

யமன், கையில் கயிற்றை வைத்துக்கொண்டிருக்கிற தன் வேலைக் காரனைப் பார்த்து, அவன் காதின்கிட்டே சொல்லுகிறான். மதுஸூதநன் என்று சொல்லப்பட்ட எம்பெருமானிடத்தில் பிரபத்தி பண்ணினவர்களிடம் நீ போகாதே. மற்ற மனிதர்கள் விஷயத்தில் எனக்கு அதிகாரமுண்டு. விஷ்ணுபக்தர்களிடத்தில் அது இல்லை என்று. ''कर्णमूले '' என்பதற்கு இது ரஹஸ்யமான அர்த்தமென்றும், அதை வெளிப்படையாகச் சொன்னால் எல்லாரும் பிரபத்திசெய்து அதனால் தன் அதிகாரம் குறைந்து விடுமென்றும் கருத்து.

350. कमलनयन वासुदेव विष्णो धरणिधराच्युत शङ्खचक्रपाणे ।
भव शरणमितीरयन्ति ये वै त्यज भट ! दूरतरेण तानपापान् ।।

(விஷ்ணுபுராணம் - 3-7-33)

தாமரைக்கண்ணனே!வாஸுதேவ!விஷ்ணுவே! பூமியைத் தூக்கு கிறவனே!அச்யுதனே ! சங்கத்தையும் சக்கிரத்தையும் கையிலுடையவனே! எனக்குத் தேவரீர் உபாயமாக இருக்கவேண்டுமென்று எவர்கள் சொல்லு கிறார்களோ, அவர்கள் பாபமில்லாதவர்கள். அவர்கள் கிட்டே நீ போகாதே. தூரத்திலேயே இரு. (இது யமன் வசனம்)

351. देवम (வாமநபுராணம் - 94-43)

சார்ங்கத்தைத் தரிக்கிற தேவனான விஷ்ணுவை எவர்கள் மிகவும் உயர்ந்த புருஷார்த்தம் என்று நினைத்து பிரபத்தி பண்ணுகிறார்களோ அவர்கள் யமலோகத்திற்குப் போகிறதில்லை. அவர்களுக்கு நரகமிருப்பிடமன்று.

भवेयं शर – ततः सा ह्रीमती बाला भर्तुर्विजयहर्षिता
अवोचद् यदि तत् तथ्यं भवेयं शरणं हि वः ।।
भवेयम्

352. मर्षयामीह – प्राप्तव्यं तु दशायोगान्मयैतदिति निश्चितम् ।
दासीनां रावणस्याहं मर्षयामीह दुर्बला ।। (ராமா.யுத்த.- 116-40)

ராவணனுடைய வேலைக்காரிகளின் குற்றங்களை அவர்கள் கஷ்டத்தைப் பார்த்து ஸஹிக்க முடியாத நான் பொறுத்துக் கொள்கிறேன்.

353. पापानां वा शुभानां वा वधार्हाणां प्लवङ्गम ! ।
कार्यं करुणमार्येण न कश्चिन्नापराध्यति ।। (ராமா.யுத்த.- 116-44)

உன் அபிப்ராயத்தினாலே பாபம் பண்ணினவர்களென்றும், ஆகையினால் கொல்லத் தகுந்தவர்களென்றும், என் அபிப்பிராயத்தினாலே பாபம் பண்ணாதவர்களென்றும் எண்ணப்பட்டவர்கள் விஷயத்தில் பெரியவரான உம்மாலே கருணை செய்யவேண்டியது. குற்றம் பண்ணாதவன் ஒருவனுமில்லை.

354. यस्मिन्

எந்த குலத்தில் பிறந்து எங்கே வஸித்தாலும் எப்போதும் எம்பெருமானிடத்தில் ப்ரீதியுள்ளவர்கள் யமனுடைய லோகத்திற்குப் போகிறதில்லை.

355. कृते पापेऽनुतापो वै यस्य पुंसःप्रजायते ।
प्रायश्चित्तं तु तस्यैकं हरिसंस्मरणं परम् ।। (விஷ்ணு.பு.-2-5-40)

பெருமானை நினைப்பதே பிராயச்சித்தம்.

356. साध्यभक्तिस्तु–उपायभक्तिः प्रारब्धव्यतिरिक्ताघनाशिनी ।
साध्यभक्तिस्तु सा हन्त्री प्रारब्धस्यापि भूयसी ।। (ந்யாயதத்துவம்)

உபாயபக்தி அதாவது பக்தி, பிராரப்தபாபம் தவிர மற்ற பாபங்களைப் போக்கக்கூடியது. ஸாத்யபக்தி (பிரபத்தி) யானது பக்தியைக் காட்டிலும் சிறந்ததாயிருந்து பிராரப்தத்தையுங்கூட போக்கும்.

357. जन्मान्तरकृतम्

வேறு ஜந்மத்தில் செய்த பாபமானது வியாதியாக வந்து பாதிக்கிறது. மருந்து, தானம், ஜபம்,ஹோமம் எம்பெருமானுக்கு அர்ச்சனை பண்ணுவது ஆகிய இவைகளால் அது போய்விடும்.

358. दासः सखा वाहनमासनं ध्वजो यस्ते वितानं व्यजनं त्रयीमयः ।
उपस्थितं तेन पुरो गरुत्मता त्वदङ्घ्रिसम्मर्दकिणाङ्कशोभिना ।।

(ஆளவந்தார் ஸ்தோத்திரம் - 41)

எந்த கருடன் வேலைக்காரன், தோழன், வாஹநம், ஆஸநம், த்வஜம், மேல்கட்டு, விசிரி இப்படியிருக்கிறானோ.

359. एवं मुक्ति (பிரம்மஸூத்ரம் - 3-4-51)

எப்படி வேறு பலன்கள் உடனே வருமென்கிற ஏற்பாடில்லையோ, அப்படியே மோக்ஷமென்கிற பலனும் உபாஸனை பண்ணினவுடன் வருமென்று ஏற்பாடில்லை. பாகவதர் விஷயத்தில் அபசாரமுண்டானால் அது தீர்கிறவரையில் அந்த பலன் தடை பட்டிருக்கும்.

360. अनुज्ञा (பிரம்மஸூத்ரம் - 2-3-47)

ஒருவனைத் தொடலாமென்கிற உத்தரவும் ஒருவனை தொடக்கூடாதென்கிற நிஷேதமும் அவர்களுக்கு உடம்போடு உண்டான ஸம்பந்தத்தாலே வருகின்றன. அக்கினி முதலியவைகளுக்குப் போல. வேதம் படித்தவன் வீட்டின் நெருப்பை எடுத்துக் கொள்ளுகிறோம், சுடுகாட்டு நெருப்பை விலக்குகிறோம். அது போல, ஆத்மா சுத்தமா யிருந்தாலும் அசுத்தமான உடம்பிலிருந்தால் அவனைத் தொடக்கூடாது.

361. साधुरेव स- अपिचेत् सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ।। (கீதை - 9-30)

ஒருவன் மிகவும் கெட்ட ஆசாரமுள்ளவனாயிருந்தாலும் அவன் வேறு பிரயோஜநத்தை வேண்டாமல் என்னை பஜித்தால், அவன்

ஸாதுவாகவேயிருக்கிறான். அவன் பஹுமாநம் செய்யத் தகுந்தவன். ஏனென்றால் அவன் தீர்மானம் நல்லதாயிருக்கிறது.

362. स्मृत: सम्भाषितो वाऽपि पूजितो वा द्विजोत्तम ! ।
पुनाति भगवद्भक्तश्चण्डालोऽपि यदृच्छया ।। (இதிஹாஸ ஸ.31-55)

பிராம்மணனே ! எம்பெருமானிடத்தில் பக்தியுள்ள சண்டாளனைத் தற்செயலாய் நினைத்தாலும், அவனுடன் பேசினாலும் அவனைக் கௌரவப்படுத்தினாலும் இப்படிச் செய்கிறவனை அவன் சுத்தம் பண்ணுகிறான்.

363. यश्शूद्रम् (இதிஹாஸ ஸமுச்சயம் - 27-26)

எம்பெருமானிடத்தில் பக்தியுள்ள சூத்திரனையோ, வேடனையோ, நாய் மாம்ஸம் தின்கிறவனையோ, எவன் அந்தந்த ஜாதியாரோடு ஸமமாக எண்ணுகிறானோ, அவன் நரகத்துக்குப் போகிறான்.

364. तस्मात् (இதிஹாஸ ஸமுச்சயம் - 25 -2)

ஆதலால் எம்பெருமானுடைய அநுக்கிரஹமுண்டாவதற்காக விஷ்ணுபக்தர்களை ஸந்தோஷப்படுத்தவேண்டியது. இதனாலேயே எம்பெருமான் அநுக்கிரஹம் செய்ய ஸித்தனாக ஆகிறான். இதில் ஸம்சயமில்லை.

365. तस्येदमिति

இந்தவஸ்து (மனிதன்) எம்பெருமானுடையது என்கிற புத்தியை யுண்டாக்குவதாலே, அந்த எண்ணமே நமஸ்காரம் முதலானது உண்டாகாமல் போனபோதிலும் உபகாரம் செய்யும்.

366. सर्वं जिह्मं मृत्युपदमार्जवं ब्रह्मण: पदम् ।
एतावान् ज्ञानविषय: किं प्रलाप:करिष्यति ?।। (பாரதம் சா - 79-22)

கோணலான எல்லாம் ஸம்ஸாரத்துக்குக் காரணம், ருஜுவானது ஸம்ஸாரம் போய் எம்பெருமானையடைவதற்குக் காரணம். இங்கே கோண லென்பது உடம்பை ஆத்மாவென்றும், உடம்பைச் சேர்ந்தவைகளைத் தன்னுடையதென்றும் எண்ணுவது. ருஜுவானது என்பது உடம்பைக் காட்டிலும் ஆத்மா வேறு என்றும், அவன் எம்பெருமானுக்காகவே இருக்கிறவனென்றும், அவனுக்குட்பட்டவனென்றும் எண்ணுவது. இது

தான் ஒருவன் அறிய வேண்டிய விஷயம். வேறு வார்த்தைகள் எதைச் செய்யும்?

367. कृतापराधस्य (ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் - 32-17)

அபராதம் பண்ணின உனக்கு கைகளைக் கூப்பிக்கொண்டு லக்ஷ்மணனிடம் மன்னிப்புக் கேட்பதைக் காட்டிலும் வேறு பரிஹாரமான வேலையை நான் பார்க்கவில்லை.

368. यदि किञ्चित् (ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் - 36-11)

நம்பிக்கையினாலோ, பிரீதியினாலோ, ஏதாவது மீறிநடப்பது இருந்ததேயானாலும், வேலைக்காரனாகிய என்னுடைய குற்றமானது பொறுத்துக் கொள்ளத் தகுந்தது. குற்றம் பண்ணாதவன் ஒருவனுமில்லை.

369. यच्च शोका (ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் - 36-20)

துக்கத்தினால் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த ராமனுடைய சொல்லைக் கேட்டு நான் என்ன கடுமையான சொல்லைச் சொன்னேனோ, அதை நீ பொறுத்துக் கொள்ள வேண்டியது.

370. प्रसादयामास (பாரதம் சாந்திபர்வம் - 352-64)

ருத்திரன் யஜமானனாகிய தேவனான நாராயணனை கோபம் போய் அநுக்கிரஹம் பண்ணும்படி செய்தான். உலகத்தையுண்டு பண்ணினவனாயும் மிகவும் சிறந்தவனாயும் கேட்டதைக் கொடுப்பவனாயுமிருக்கிற எம்பெருமானிடத்தில் பிரபத்தியும் பண்ணினான்.

371. तथोऽथ वरद: (பாரதம் சாந்திபர்வம் - 352-65)

அப்போது கேட்டதைக் கொடுக்கிற எம்பெருமான் இந்திரியங்களை அடக்கிக் கொண்டிருக்கிறவனாகையாலே கோபத்தை ஜயித்து ருத்திரனுடன் சேர்ந்து ப்ரீதியுள்ளவனாய் ஆனான்.

372. रूक्षाक्षराणि (லைங்கபுராணம் உத்தரபாகம் 4-9 )

ஒரு பாகவதனாலே சொல்லப்பட்ட கடுமையான சொற்களைக் கேட்டு, எவன் அவனை நமஸ்காரம் செய்து குற்றத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறானோ, அவன் விஷ்ணுபக்தன்.

373. ये ब्राह्मणा: (விஷ்ணுதர்மம் - 52-20)

எவர்கள் பிரம்மவித்துக்களான பாகவதர்களோ, நான் அவர்கள் தான். இதில் ஸம்சயமில்லை, ராஜாவே ! அவர்களைப் பூஜிக்கும் போதும், நான் கிரமப்படி பூஜை செய்யப்படுகிறேன். அவர்களுக்கு ஸந்தோஷமுண் டாகும் பொழுது எனக்கும் ஸந்தோஷ முண்டாகிறது. எவன் அவர்களிடம் த்வேஷம் பண்ணுகிறானோ அவனிடத்தில் எனக்கும் த்வேஷம்.

374. घ्नन्तम् शपन्तम् (இதிஹாஸ ஸமுச்சயம் - 30-100)

எவன் ஒரு பிராம்மணன் தன்னையடித்தாலும், சபித்தாலும் கடுமையான சொல்லைச் சொன்னாலும், எப்படி நான் நமஸ்காரம் செய்தேனோ, அப்படி நமஸ்காரம் செய்யவில்லையோ, அவன் பாபம் செய் கிறவன். பிராம்மணனுடைய கோபமாகிய காட்டுத்தீயினால் கொளுத்தப் பட்டவன், கொல்லத் தகுந்தவன், தண்டிக்கத் தகுந்தவன், அவன் என்னுடையவனன்று. இது எம்பெருமான் வார்த்தை. எவர் பரதேவதை யென்று அறிவதற்காக பிருகு என்கிற ருஷி எம்பெருமானுடைய மார்பில் உதைத்தபொழுது அவன் உடனே எழுந்திருந்து அவருக்கு நமஸ்காரம் செய்து மன்னிப்பு கேட்டுக் கொண்டான். இந்த விஷயம் இங்கே 'यथाऽर्हं' என்பதால் சொல்லப்படுகிறது.

375. विष्णुं क्रान्तं-यूपं विष्णुं वासुदेवं विजानन्
सर्वान् विप्रान् बोधते तत्त्वदर्शी ।
विष्णुं क्रान्तं वासुदेवं विजानन्
विप्रो विप्रत्वं गच्छते तत्त्वदर्शी ।। (பாரதம் ஆநு.- 16-2)

உலகத்தையளந்த விஷ்ணுவென்றும் வாஸுதேவனென்றும் சொல்லப்பட்ட எம்பெருமானை நன்றாய் எவன் அறிகிறானோ அவன் உண்மையைத் தெரிந்தவனாய் பிராம்மணனாக ஆகிறான்.

---

## தமிழ் வசனங்கள்

86. *அளியனம் - தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துளோங்கும் ஒளியுளார்தாமேயன்றே தந்தையும்தாயுமாவார், எளியதோரரு ளுமன்றே என்திறத்தெம்பிரானுர், அளியன்நம்பையல் என்னுர் அம்மவோகொடியவாறே.* (திருமாலை - 37)

இவன் நம்முடைய ப்ரீதிக்கு விஷயனான சிறுபிள்ளையென்று என்னுடைய ஸ்வாமியான ரங்கநாதன் சொல்லவில்லை. ஐயோ நான் செய்த பாபங்களின் கடுமையான தன்மை.

---

### அரும்பதவுரை

காணன் - ஒரு கண்ணில்லாதவன்.

கஞ்சன் - ஒரு காலில்லாதவன்.

சிகையறுக்கும் - தூக்கிக்கொண்டிருக்கிற சுமையை எடுத்து விடும்.

அடையாளக்காரன் - குடை சாமரம் முதலானவைகளைப் பிடிக்கும் வேலைக்காரன்.

நலிய - வருத்தப்படுத்த.

ஈர்த்தவாய் - வெட்டுப்பட்டுப் பிரிந்திருக்கிற இடம்.

---

## 19. ஸ்தாநவிசேஷாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

376. **एकान्ती** (விஷ்வக்ஸேந ஸம்ஹிதை)

ஏகாந்தி (வேறு தேவர்களைப் பார்க்காதவன்) தன்னைச் சொல்லிக்கொள்ளும் போது விஷ்ணுவைச் சேர்ந்தவன் என்று சொல்லிக்கொள்ளவேண்டும். ஒருபோதும் தனது கிராமத்தினால், அல்லது குலத்தினால் தன்னைச் சொல்லிக்கொள்ளக்கூடாது. ஏனென்றால் அவனுக்கு எல்லாம் பகவானே.

377. **कलौ जगत्** (விஷ்ணுபுராணம் - 6-1-50)

ஒ மைத்திரேயனே ! கலியுகத்தில் வேதத்திற்கு விருத்தமானவைகளாலே கெட்டுப்போன மனதையுடைய ஜநங்கள் எல்லாத்தையுமுண்டு பண்ணி, உலகத்துக்கு யஜமாநனான எம்பெருமானை ஆராதிக்க மாட்டார்கள்.

**कलौ खलु–कृतादिषु प्रजा राजन्! कलाविच्छन्ति सम्भवम् ।**
**कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः ।।**

(3-வது பக்கம் 13-வது நெ. பார்க்க)

378. ये पिबन्ति (பாகவதம் - 11-5-40)

ஒ ராஜாவே ! எந்த மனிதர்கள் அந்த நதிகளின் ஜலத்தைக் குடிக்கிறார்களோ, அவர்கள் சுத்தமான மனதையுடையவர்களாய் வாஸுதேவன் என்று சொல்லப்பட்ட எம்பெருமானிடத்தில் பஹுவாய் பக்தியுள்ளவர்களாக ஆவார்கள்.

379. एकपाद (பாரதம் சாந்திபர்வம் - 349-85)

ஓ பகவானே ! தர்மமானது ஒரே காலுள்ளதாயிருந்து எங்கேயாவது போக யத்தனிக்கும்போது (கலியுகத்தில்) நாங்கள் எப்படியிருக்க வேண்டியது? இதை எங்களுக்குச் சொல்லவேண்டும்.

380. गुरवो यत्र (பாரதம் சாந்திபர்வம் - 349-86,87)

எந்த இடத்தில் நல்லொழுக்கமுள்ள சமம் முதலான குணங்களையுடைய குருக்கள் வஸிக்கிறார்களோ, எந்த இடத்தில் தர்மமானது குறையவில்லையோ, அந்த இடத்தில் நீங்கள் இருக்க வேண்டியது. எந்தவிடத்தில் வேதங்கள், யஜ்ஞங்கள், தபஸ்ஸு, ஸத்யம், இந்திரியங்களை யடக்குவது, தர்மத்துடன் ஹிம்ஸை செய்வது இவைகள் வழங்குகின்றனவோ, தேவசிரேஷ்டர்களே! அந்த இடமானது நீங்கள் ஸேவிக்கத் தகுந்த இடம். அதர்மமானது உங்களைக் காலாலே தொடாது. அதாவது அதர்மம் கால்வைக்கவுமிடமிருக்காது.

381. यावच्छरीर (சரணாகதிகத்யம்)

உடம்பு கீழே விழுகிறவரையில் ஸ்ரீரங்கமாகிய இவ்விடத்திலேயே ஸுகமாக இரு.

382. यत्र नारायणो देवः परमात्मा सनातनः ।
तत्र कृत्स्नं जगत् पार्थ ! तीर्थान्यायतनानि च ।।
तत्पुण्यं परमं ब्रह्म तत्तीर्थं तत्तपोवनम् ।। (பாரதம் ஆர. -73-27-28)

எங்கே எல்லாருக்கும் ஆத்மாவாய் எப்போதுமிருக்கும் தேவனான நாராயணன் இருக்கிறானோ, அந்த இடமானது புண்ணியமானது; அதுவே மிகவுமுயர்ந்தது; அதுவே புண்ணியதீர்த்தம்; அதுவே தபஸ்ஸு செய்யத் தகுந்த இடம்; அந்த இடத்திலேயே தேவருஷிகளும் ஸித்தர்களும் தபஸ்ஸு செய்கிற எல்லார்களுமிருக்கிறார்கள்.

383. गोमन्तः (பாரதம் பீஷ்ம - 12-8-9)

ராஜாவே ! எல்லா தாதுக்களையுமுடைய சிறந்த கோமந்த மென்கிற இந்த மலையிருக்கிறது. அதில் தாமரைக்கண்ணனாய் லக்ஷ்மீபதியாய் யஜமாநனாயிருக்கிற நாராயணன் மோக்ஷத்தையடைய வேண்டுமென்று ஆசையுள்ளவர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராய் எப்போதும் எழுந்தருளியிருக்கிறார்.

384. सुभगः (ராமாயணம் அயோத்யா-காண்டம் - 98-12)

பர்வதத்துக்கு ராஜாவான ஹிமவத்மலைக்கு ஸமமான சித்திரகூடம் என்கிற இந்த மலையானது மிகுந்த பெருமையையுடையது. ஏனென்றால் அதில் குபேரன் நந்தநவநத்திலிருப்பது போல ககுத்ஸ்தவம்சத்தில் அவதரித்த ஸ்ரீராமன் வஸிக்கிறாரே ?

385. दुष्टेन्द्रिय (ஸாத்வதஸம்ஹிதை - 7-120)

துஷ்டமான இந்திரியங்களுக்கு உட்பட்டிருப்பதாலே மனிதர் களுடைய எந்த மனதானது கல்மஷங்களினாலே சூழப் பட்டிருக்கிறதோ, அந்த மனதானது கடைசி காலத்தில் நாராயணன் எழுந்தருளியிருக்கிற விடத்தில் வஸிப்பதால் நல்ல சுத்தியையடைகிறது. இங்கே கல்மஷமாவது சாஸ்திரத்திற்கு விரோதமில்லாமல் விஷயங்களில் மனது படிந்திருப்பது. நல்ல சுத்தியாவது எம்பெருமானைப் பார்ப்பது.

386. यत्किञ्चिदपि

ஒருவன் தேவாலயமிருக்கும் ஊரில் தன்னால் முடிந்த ஏதாவது ஒரு கைங்கரியத்தைச் செய்து கொண்டு வஸிக்கவேண்டியது. இது முடியாவிட்டால் செய்யக்கூடாதென்று சொன்னவைகளைச் செய்யா மலாவது வஸிக்கவேண்டும்.

387. निगृहीतेन्द्रिय (இதிஹாஸஸமுச்சயம் - 27-18)

எந்த இடத்தில் ஒரு மனிதன் இந்திரியவர்க்கத்தையடக்கிக் கொண்டு வஸிக்கிறானோ அந்த இடத்தில் குருக்ஷேத்திரம் நைமிசம் புஷ்கரம் ஆகிய புண்ணியஸ்தலங்களிருக்கின்றன.

388. ज्ञानसम (வராஹபுராணம்)

எப்போது ஜ்ஞாநமுண்டாகிறதோ, அதேகாலத்தில் இந்த மந்திரத்தைச் சொல்லி ப்ரபத்தி பண்ணினவன் புண்ணியதீர்த்தத்திலேயோ,

நாய் மாம்ஸம் சாப்பிடுகிறவன் வீட்டிலேயோ நினைவுபோய், மரண மடைந்தாலும் மோக்ஷத்தையடைகிறான்.

---

### தமிழ் வசனங்கள்

87. *கருந்தட - குருந்தமொன்றொசித்தானொடுஞ்சென்று கூடியாடி விழாச்செய்து திருந்துநான்மறையோரிராப்பகலேத்தி வாழ் திருக்கோட்டியூர் , கருந்தடமுகில் வண்ணனைக்கொண்டுகை தொழும்பத்தர்கள் இருந்தவூரிலிருக்கும்மானிட ரெத்தவங்கள் செய்தார்கொலோ.* (பெரியாழ்வார் திருமொழி 4-4-7)

மிகவும் கருப்பான மேகம்போல் வர்ணமுடைய எம்பெருமானை ரக்ஷகனாக எண்ணி கையைக்கூப்பி வணங்குகிற பக்தர் இருந்த ஊரில் இருக்கும் மனிதர், அந்த ஊரிலிருப்பதற்கு என்ன தபஸ்ஸு செய்தார்களோ.

---

## 20. நிர்யாணாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

389. लोकविक्रान्त–सर्वधर्मांश्च सन्त्यक्त्वा सर्वकामांश्च साक्षरान् ।
लोकविक्रान्तचरणौ शरणं तेऽव्रजं विभो! ।। (ஜிதந்தாஸ்தோத்ரம்)

எல்லா உபாயங்களையும், ஆத்மாவையநுபவிப்பதுள்பட எல்லா ஆசைகளையும் நன்றாக விட்டுவிட்டு ஒ பிரபுவே ! உலகத்தையளந்த தேவரீருடைய திருவடிகளை உபாயமாக அடைந்தேன்.

390. हस्तावलम्बन: (விஷ்ணுதர்மம் - 3-24)

பக்தியினாலே விலைக்கு வாங்கப்பட்ட ஜநார்த்தநன் என்கிற எம்பெருமானுடைய கையே பிரபந்நனுக்கு அவலம்பநம் (பிடிப்பு) ஆக இருக்கிறது.

राजाधिराज:

391. अपायाविरत: (லக்ஷ்மீதந்திரம் - 17-102)

என்னைச் சரணமாகப் பற்றினபிற்பாடு அடிக்கடி பாபங்களைப் பண்ணி, அவைகளுக்குப் பிராயச்சித்தம் பண்ணாதவன், அநுபவத்தினால்

அந்த பாபங்களை யெல்லாம் போக்கி தாமதித்து என்னை வந்து அடைகிறான்.

392. याचितोऽपि सदा भक्तैर्नाहितं कारयेद्धरिः ।
बालमग्नौ पतन्तं तु माता किं न निवारयेत् ? ।। (விஷ்ணுதர்மம்)

பக்தர்களாலே வேண்டிக் கொள்ளப்பட்டாலும் எம்பெருமான் அவர்களுக்கு ஹிதமில்லாததைப் பண்ணும்படி ஒரு போதும் செய்கிறதில்லை. நெருப்பில் விழப்போகிற குழந்தையைத் தாயார் விலக்குகிறதில்லையோ?

393. यस्यानुग्रहमिच्छामि धनं तस्य हराम्यहम् ।
बान्धवैश्च वियोगेन भृशं भवति दुःखितः ।। (பாகவதம்)

எவனுக்கு அநுக்கிரஹம் பண்ணவேண்டுமென்று நான் எண்ணுகிறேனோ அவனுடைய தநத்தை நான் அபஹரித்துவிடுகிறேன். அப்போது பந்துக்கள் அவனை விட்டுவிடுகிறார்கள். அதனால் அவன் எப்போதும் துக்கமுள்ளவனாக ஆகிறான். அந்த துக்கத்தினால் மிகவும் வருத்தப்பட்டும் என்னை அவன் விடாவிட்டால், எந்த அநுக்கிரஹமானது தேவர்களாலும் அடையமுடியாதோ, அந்த அநுக்கிரஹத்தை அவன் விஷயத்தில் நான் செய்கிறேன்.

394. अथोपाय (லக்ஷ்மீதந்திரம் - 17-103)

வேறு பிரயோஜநத்தை அடைவதற்கு ஸாதநமான காமிய கர்மங்களில் ஆசையுள்ளவன் துக்கக்கலப்பில்லாத போகங்களை அநுபவித்து கடைசியில் வைராக்கியத்தையடைந்து எம்பெருமானுடைய ஸ்தாநத்தையடைகிறான்.

395. तदधिगमे (பிரம்மஸூத்திரம் - 4-1-13)

பக்தியோகம் உண்டானபோது அதைச் செய்கிறவனுடைய முன்பாபங்களுக்கு நாசமும், பின் செய்யும் பாபங்கள் ஒட்டாமையும் உண்டாகிறது. அப்படியே வேதத்தில் சொல்லியிருப்பதால்.

396. प्रियेषु (மநுஸ்மிருதி - 6-79)

முக்தியையடையப் போகிறவன் தன்னுடைய புண்ணியங்களைத் தனக்கு வேண்டியவர்களிடத்திலும், பாபங்களை வேண்டாதவர்களிடத்திலும் விட்டுவிட்டு, பக்தியோகத்தினாலே எப்போது மிருக்கிற

பிரும்மத்தையடைகிறான். 'अप्येति' என்பதற்கு லயத்தையடைகிறா னென்று பொருளாய் எம்பெருமானுக்கு ஸமமான போகத்தையடைகிறா னென்று கருத்து.

397. दिवा च शुक्लपक्षश्च उत्तरायणमेव च ।
मुमूर्षतां प्रशस्तानि विपरीतं तु गर्हितम् ।। (பாரதம் ஆநு. - 220-31)

பகலும் சுக்கிலபக்ஷமும் உத்தராயணமும் இறந்துபோகிறவர்களுக்கு நல்ல காலங்கள்.

398. निशि नेति चेन्न सम्बन्धस्य यावद्देहभावित्वाद्दर्शयति च ।
(பிரம்மஸூத்திரம் - 4-2-18)

ராத்திரியில் மரணமடைந்தவனுக்கு மோக்ஷம் கிடையாது என்று சொல்லுகிற பக்ஷங்கூடாது. ஏனென்றால் கர்மத்தினுடைய ஸம்பந்தம் உடம்பு இருக்கிறவரையில்தான் இருக்க வேண்டியதாகையால்.

399. अतश्चायनेऽपि (பிரம்மஸூத்திரம் - 4-2-19)

இதே காரணத்தாலே தக்ஷிணாயநத்தில் மரணம் அடைந்தவனுக்கு மோக்ஷமில்லை யென்கிற பக்ஷமும் கூடாது.

400. अनन्ता: (யாஜ்ஞவல்க்யஸ்மிருதி - 3-66+69)

எந்த ஜீவன் விளக்குப்போலே ஹிருதயத்திலிருக்கிறானோ, அவனுக்கு நாடிகள் கணக்கில்லாமலிருக்கின்றன. அந்த நாடிகள், வெளுப்பாயும் கறுப்பாயும் ஊதாநிறமாயும் நீலமாயும் பொன்வர்ணமாயும் மஞ்சள் நிறமாயும் சிவப்பாயும் இப்படி பலவர்ணங்களாயிருக்கும். அவைகளின் நடுவில் ஒரு நாடி மேலே போகிறது. அதன் வழியாகப் போகிற ஜீவன் ஸூர்யமண்டலத்தைப் பிளந்துகொண்டு பிரம்மாவின் உலகத்தைத் தாண்டி உயர்ந்த கதியை யடைகிறான். வேறு நூறு நாடிகள் மேலும் கீழும் போகின்றன. அவைகளின் வழியாக வெளிக்கிளம்புகிறவன் தேவ சரீரங்களையும் தேவ உலகங்களையும் அடைகிறான். கீழே சில நாடிகள் போகின்றன. அவைகள் குறைந்த பிரகாசமுடையவைகள், அவைகளின் வழியாய் வெளிக்கிளம்புகிறவன் இந்த உலகத்தில் கர்மத்தின் பலன்களை அநுபவிப்பதற்காகத் தன் வசமில்லாமல் ஸம்ஸாரியாகப் பிறக்கிறான். விளக்கு போல் ஹிருதயத்திலிருக்கிற ஜீவனுக்கு நாடிகள் கிரணங்கள் போல் இருப்பதால் அவைகளை ரச்மிகள் என்று சொல்லியிருக்கிறது.

नष्टस्मृतिरपि -

401. स्थिते मनसि सुस्वस्थे शरीरे सति यो नरः ।
धातुसाम्ये स्थिते स्मर्ता विश्वरूपं च मामजम् ।।
ततस्तं म्रियमाणं तु काष्ठपाषाणसन्निभम् ।
अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिम् ।। (வராஹசரமச்லோகம்)

மனது நல்ல நிலையிலும், உடம்பு சிதிலமாகாமலும், தாதுக்கள் ஸமமாயும் இருக்கும்போது எந்த மனிதன் உலகங்களையே உடம்பாக உடையவனாய் கர்மத்தினால் பிறப்பில்லாதவனாயுமிருக்கிற என்னை நினைக்கிறானோ, அவன் இறந்து போகிறபோது கட்டைப் போலவும் கல்லைப் போலவுமிருந்தாலும் என் பக்தனை நான் நினைத்து அவனை உயர்ந்த கதியையடையும்படி செய்கிறேன்.

402. शरीरपातसमये तु (சரணாகதிகத்யம்)

உடம்பு கீழே விழுகிற ஸமயத்தில் என்னுடைய தயையினாலேயே மிகவும் நல்ல அறிவையுடையவனாய் என்னையே பார்த்துக்கொண்டு, முன் உண்டாயிருந்த ஸம்ஸ்காரங்களும் ஆசைகளும் தன்னை விட்டுப் போகாமல்.

403. यं यं वाऽपि स्मरन् भावं त्यजत्यन्ते कलेबरम् ।
तं तमेवैति कौन्तेय! सदा तद्भावभावितः ।। (கீதை 8-6)

ஒருவன் எந்தந்த விஷயத்தை நினைத்துக்கொண்டு கடைசியில் உடம்பை விட்டுவிடுகிறானோ அந்தந்தவிஷயத்தையே அவன் அடைகிறான்.

404. यं योगिनः प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति ।
स तं पुरस्ताद्धरिमीक्षमाणः प्राणान् जहौ प्राप्तफलो हि भीष्मः ।।

(பாரதம் சாந்தி 46-139)

யோகம் செய்கிறவர்கள் பிராணன் உடம்பை விட்டுப் போகும் காலத்தில் பிரயத்தினப்பட்டு எந்த பகவானை மனதில் இருக்கும்படி செய்கிறார்களோ, அந்த பகவானையே முன்னால் பார்த்துக் கொண்டு பீஷ்மர் பிராணனை விட்டார். உபாஸனையின் பலனை யவர் அடைந்தவரன்றோ.

405. मत्तः स्मृति-सर्वस्य चाहं हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदान्तकृद्वेदविदेव चाहम् ।। (கீதை 15 -15 )

எல்லாருடைய ஹ்ருதயத்திலும் நானிருக்கிறேன். என்னிடத்தி லிருந்துதான் அறிவும், போன ஸங்கதியை நினைப்பதும், மறப்பது முண்டாகின்றன.

---

### தமிழ் வசனங்கள்

88. *கடைத்தலை-மேம்பொருள்போகவிட்டுமெய்ம்மையைமிகவுணர்ந்து*
*ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கிக்*
*காம்பறத்தலை சிரைத்துன் கடைத்தலையிருந்து வாழும்*
*சோம்பரைஉகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே.* (திருமாலை - 38)

கடைவாசலில் அதாவது தூரத்திலிருந்து வாழும் சோம்பேறிகளைக் கண்டு நீ ஸந்தோஷப்படுகிறாய். இங்கே தூரத்திலிருப்பதாவது கர்ம யோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் ஆகிய இவைகளில் ஒன்றையும் செய்யா திருப்பது. சோம்பேறி என்பது அகிஞ்சநனான பிரபந்நன்.

89. *விண்ணுலகம்-நண்ணினம் நாராயணனை நாமங்கள் பலசொல்லி*
*மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாற்றான் வந்தின்று*
*விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே*
*எண்ணினவாறாகவிக் மங்களென்னெஞ்சே.* (திருவாய்மொழி-10-6-3)

முக்தியடையப்போகிறவனுக்கு பரமபதத்தைக் கொடுக்கிறவனாய் தான் அவஸரப்படுகிறவனாய்.

90. *இருள்தரு-அருள்பெறுவாரடியார்தம்மடியனேற்கு ஆழியான்*
*அருள்தருவானமைகின்றான் அது நமதுவிதிவகையே*
*இருள்தருமாஞாலத்து ளினிப்பிறவி யான்வேண்டேன்*
*மருளொழிநீமடநெஞ்சே வாட்டாற்றானடிவணங்கே.*

(திருவாய்மொழி - 10-6-1)

இனிமேல் அஜ்ஞாநத்தைக் கொடுக்கிற இந்த உலகத்தில் பிறப்பதை நான் வேண்டுவதில்லை. 'இனிமேல்' என்பதற்கு எம்பெருமானு டைய கடாக்ஷத்தாலே தத்வஜ்ஞாநம் பிறந்தபின்பு என்று பொருள்.

91. *உன்திருமார் - மாயம்செய்யேலென்னை உன்திருமார்வத்துமாலை நங்கை, வாசம்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணை கண்டாய், நேசம்செய்துன்னோடென்னை யுயிர்வேறன்றியொன்றாகவே, கூசம் செய்யாதுகொண்டாய் என்னைக் கூவிக் கொள்ளாய்வந்தந்தோ.*

(திருவாய்மொழி - 10-10-2)

முன்போல் வஞ்சனை செய்யவேண்டாம். தேவரீருடைய மார்பில் மாலை போல் அலங்காரமாக இருக்கிற நல்ல குணங்கள் நிறைந்த வாஸனையை வீசும் அழகான மயிர்முடியையுடைய பிராட்டியின் பேரில் ஆணை. தேவரீர் பேரில் ஆணை.

92. *சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்
அரணமைந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் தனதன்பர்க்கன்பாகுமே.* (திருவாய்மொழி - 9-10-5)

தன்னிடத்தில் பிரபத்திபண்ணினவர்களுக்கு மரணம் வந்தபோது வைகுந்தத்தைக் கொடுக்கும் உபகாரகனான எம்பெருமான்.

93. *போயபிழை-மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூயபெருநீர் யமுனைத்துறைவனை
ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கைத்
தாயைக்குடல்விளக்கஞ் செய்ததாமோதரனைத்
தூயோமாய் வந்து நாம் தூமலர்த்தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோரெம்பாவாய்.* (திருப்பாவை - 5)

முன் செய்த பாபங்களும் பிரபத்திக்கு மேலுண்டாகும் பாபங்களும் நெருப்பில் போட்ட பஞ்சு போல் இருந்தவிடம் தெரியாமல் போய்விடும்.

94. *நம்மன்போ-எம்மனாஎன்குலதெய்வமே யென்னுடை நாயகனே
நின்னுளேனாய்ப்பெற்றநன்மை இவ்வுலகினிலார்பெறுவார்
நம்மன்போலேவீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம்
சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே.*

(பெரியாழ்வார் திரு- 5-4-3 )

யமன் போலே ஸம்ஸாரத்தில் விழும்படி பண்ணி அமுக்குகிற உலகத்தில் பிரஸித்தமான பாபங்களெல்லாம் சப்தம் செய்யாமல் அதாவது மூச்சுவிடாமல் முக்தியடைகிறவனை விட்டுப் போய் செடிகளில் போய் சேர்ந்தன. இங்கே செடிகள் என்பது அநேக பாபங்கள் நிறைந்திருக் கிறபடியால் செடிகள் போலிருக்கிற சத்துருக்கள்.

95. ***துப்புடையாரையடைவதெல்லாம் சோர்விடத்துத் துணையாவ ரென்றே ஒப்பிலேனாகிலுநின்னடைந்தேன் ஆனைக்குநீ யருள் செய்தமையால் எய்ப்பென்னைவந்துநலியும்போதங்கேதும் நானுன்னைநினைக்கமாட்டேன் அப்போதைக்கிப்போதேசொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே.***

(பெரியாழ்வார் திரு. 4-10-1)

இந்திரியங்களுக்கு சக்தி குறைந்துபோகும் ஆபத்துக் காலத்திலே துணையாக இருக்க வேணும் என்று எண்ணி, ஸாமர்த்தியமுடைய தேவரீரை அடைவது, தேவரீர் திருவுள்ளப்படிக்குள்ள அதிகாரிகளுக்கு நான் ஒப்பில்லாதவனாயிலும் தேவரீர் கஜேந்திராழ்வானை கிருபைசெய்து ரக்ஷித்தபடியாலே தேவரீரைச் சரணமடைந்தேன். எய்ப்பு - அதாவது மரணகாலம் வந்து என்னை வருத்தப்படுத்தும்போது தேவரீரை நான் நினைக்கமுடியாது. ஆகையால் அப்போது ஆகவேண்டிய வேலைக்கு இப்போதே விண்ணப்பஞ் செய்துகொண்டேன். ஸ்ரீரங்கத்தில் ஆதிசேஷன் மேல் பள்ளிகொண்டிருக்கும் எம்பெருமானே.

---

### *அரும்பதவுரை*

உண்பதுருக்காட்டாதே — சாப்பிட்டது அடையாளம் தெரியாதே. போக்கினது இன்னதென்று வெளிப்படுத்தாமல்.
வயிறுதாரியாய் — வயிற்றை நிரப்புகிறவன்
அசல் பிளந்து ஏறிடுகிற — முன்னிடத்திலிருந்து ஒன்றைப் பிளந்து வேறிடத்தில் வைப்பது.

---

## 21. கதிவிசேஷாதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

अहं स्मरामि

406. लोकं वैकुण्ठ (ஜித்ந்தா ஸ்தோத்ரம் - 2-18-20)

வைகுண்டமென்கிற பெயரையுடைய உலகத்தைக் கண்ணாலே எப்போது பார்க்கப்போகிறேன். அது எப்படியிருக்கிறதென்றால் - அது நன்றாய் பிரகாசிக்கிறது; ஜ்ஞாநம் முதலான ஆறு குணங்களையுடைய எம்பெருமானுடன் சேர்ந்திருக்கிறது; அவனிடத்தில் பக்தியில்லாதவர்களால்

அடையமுடியாதது; ஸத்துவம் முதலான மூன்றுகுணங்கள் இல்லாத இடம். நித்தியஸூரிகளாலும் முன்னால் ஒவ்வொருநாளையும் ஐந்துபாகம் பண்ணி அததற்குத் தகுந்த கைங்கரியங்களைப் பண்ணிக்கொண்டிருந்து பிறகு அவர்களைப் போலான முக்தர்களாலும் நிறைந்திருக்கிறது; ஆஸ்தான மண்டபங்களோடும், உப்பரிகைகளோடும் சேர்ந்தது, காடுகளாலும் உத்யானங்களாலும் அழகாய், நடவாபிகள், கிணறுகள், குளங்கள், மரக் கூட்டங்கள் இவைகளினால் அலங்கரிக்கப்பட்டதாயிருக்கிறது; பிருகிருதி யின் காரியமான துக்கம் முதலானது இல்லாதது; நித்தியஸூரிகளால் ஸேவிக்கத் தகுந்தது; பதினாயிரம் ஸூரியன்கள் சேர்ந்ததுபோல் பிரகாசிக் கிறது. ரஜஸ்ஸூடனும் தமஸ்ஸூடனும் கலக்காத ஸத்துவகுணமுள்ளது.

407. अनयाऽहं (பாரதம் சாந்திபர்வம் 312-30, 38, 39)

இந்த பிரகிருதியினால் அதற்கு உட்பட்டவனாய் செய்யப்பட்டு வீணாய்போன இந்த காலத்தை அது எவ்வளவு என்று நான் அறியவில்லை. உயர்ந்த தேவசரீரத்தையும், நடுத்தரமான மனித சரீரத்தையும், தாழ்ந்த நரகானுபவத்துக்கு வேண்டிய சரீரத்தையும் உடைய இந்த பிரகிருதியில் நான் இனி எப்படியிருப்பேன். இதை விட்டு தூரம் போய் ஒருவிதக் குறைவுமில்லாத எம்பெருமானை அடைவேன். அவனுடன் ஒற்றுமையை-யடையப் போகிறேன். அறிவில்லாத இந்த பிரகிருதியுடன் ஒற்றுமை எனக்கு வேண்டாம். இதனுடன் ஒன்றாயிருப்பது தகுந்ததன்று. பிரகிருதி யுடன் ஒன்றாயிருப்பதாவது உடம்பையே ஆத்மாவாக எண்ணுவது.

408. क्रीडन्तम् (ஜிதந்தா ஸ்தோத்ரம் 2 - 21 1/2 )

விளையாடும் உத்யாநங்களில் பிராட்டியுடன் விளையாடிக் கொண்டும் மேகம்போல் நீலவர்ணமாயும் விசாலமான கண்ணை-யுடையனுமான கேசவனை கண்ணாலே எப்போது பார்ப்பேன்.

409. मेघश्यामम् (ராமாயணம் அயோத்தியா 83-8-9)

மேகம்போல நீலவர்ணமாயும், நீண்ட கைகளையுடையவனாயும், நிலையான ஸத்துவகுணமுள்ளவனாயும் தன்னை அடைந்தவர்களை ரக்ஷிப்பதில் உறுதியான ஸங்கல்பமுள்ளவனாயும் உலகத்திலுள்ள துக்கத்தைப் போக்குகிறவனாயும் உள்ள ராமனை எப்போது பார்ப்போம். உதயமாகிற ஸூரியன் எல்லா உலகத்தினுடைய இருட்டைப் போக்குவது போல், நம்மால் பார்க்கப்பட்டவுடனே நம்முடைய துக்கத்தை ராகவன் போக்குவன்.

सवयस इव

410. सत्त्वं वहति (பாரதம் சாந்திபர்வம் 307-77)

சுத்தஸ்வரூபமான ஸத்வகுணமானது அநிருத்த ரூபனான நாராயணனை அடையும்படி செய்கிறது. அந்த சுத்தஸ்வரூபனாய் அநிருத்தரூபனான பிரபு பரமாத்மாவான பரவாஸுதேவனிடம் தானே கொண்டுபோகிறான்.

411. ये तु दग्धेन्धना: (பாரதம் சாந்திபர்வம் 354,13-20)

ஓ பிராம்மண சிரேஷ்டனே ! எவர்கள் இந்த உலகத்தில் புண்ணிய பாபங்களால் விடப்பட்டு, ஸம்ஸாரமாகிய அக்னிக்கு விறகுபோலிருக்கும் கர்மங்களில்லாதவர்களாய், தங்களுக்கு நல்லதான விஷ்ணுலோகத்துக்குப் போகிறவழியில் போகிறவர்களாயிருக்கிறார்களோ, அவர்களுக்கு எல்லா உலகத்துக்கும் இருட்டைப் போக்கும் ஸூரியன் த்வாரமாகச் சொல்லப் படுகிறான். அவன் அநேக கிரணங்களையும் மிகுந்த தேஜஸ்ஸையு முடையவன். அவனால் இந்த உலகமானது தரிக்கப்படுகிறது. ஸூரியனாலே கொளுத்தப்பட்ட பிராகிருதசரீரம்முழுவதும் போனவர்களாய் சரீரமில்லாமையால் ஒருவனாலும் ஒருபோதும் பார்க்கப் படாதவர்களாய் பரமாணு அளவுள்ள ஆத்மஸ்வரூபமுள்ளவர்களாய் அந்த அநிருத்தன் என்கிற தேவனிடம் போகிறார்கள். அந்த அநிருத்தனுடைய உடம்பி லிருந்து அதிலிருந்து விடுபட்டு மனது மாத்திரம் மீதியுள்ளவர்களாய் பிரத்யும்நனிடம் போகிறார்கள். பிரத்யும்நனிடமிருந்து விடப்பட்டு ஜீவன்களுக்கு அபிமானியான ஸங்கர்ஷணனை யடைகிறார்கள். அவர்களோடு கூட ஆத்மகுணங்கள் நிறைந்தவர்களாய் ஜ்ஞாநயோகம் கர்மயோகம் செய்கிறவர்களும் ஸங்கர்ஷணனிடம் போகிறார்கள். பிறகு மூன்று குணங்களாலே விடப்பட்டவர்களாய் அந்தர்யாமியாயும் ஸ்வரூபத் தில் இளப்பமான குணங்களில்லாத- வனாயுமிருக்கிற பரமாத்மாவை சீக்கிரம் அடைகிறார்கள். அவன் எல்லாருக்கும் இருப்பிடமாயும் அந்தர் யாமியாயு மிருக்கிற வாஸுதேவன். நியமங்களோடு சேர்ந்தவர்களாயும் வேறு விஷயங்களிலிருந்து திரும்பின இந்திரியங்களையுடையவர்களாயும், ஒரேவிடத்தில் வைக்கப்பட்ட மனதையுடையவர்களாயும் அவனையே பிரயோஜநமாக எண்ணுகிறவர்களாயுமிருக்கிற அவர்கள் வாஸுதேவ னிடம் போகிறார்கள். இந்த விஷயத்தை உண்மையென்று அறி.

412. श्वेतद्वीपम् (ஜயத்ஸம்ஹிதை)

இங்கிருந்து ச்வேதத்வீபத்திற்குப்போய் உலகத்தை ரூபமாகத் தரித்திருக்கிற எம்பெருமானையடைந்து, அங்கிருந்து திருப்பாற் கடலி லிருக்கும் அநிருத்தனையடைந்து அங்கிருந்து எல்லாருக்கு மீசுவரர்களான பிரம்மா முதலானவர்களுக்கு மீசுவரனான பிரத்யும்நனை யடைந்து, அங்கிருந்து எப்போதுமிருக்கும் மேன்மையான பகவானான ஸங்கர் ஷணனை யடைகிறார்கள். எப்போதும் பிரம்மானந்தத்தை ஆசைப்பட்டு பரமைகாந்திகளாய் ஐந்து காலங்களில் எம்பெருமானுக்குப் பூஜை செய்யும் மனிதர்களாய் ஸித்தியடைகிறவர்களுக்கு இது வேறொரு மார்க்கம்.

413. विभवार्चनात् (ஸ்ரீபாஷ்யம் - 2-2-41)

எம்பெருமானுடைய விபவரூபத்தைவிட்டு வியூஹ ரூபத்தை யடைந்து, அதைவிட்டு பரப்ரம்மத்தையடைகிறார்கள் என்று சொல்லு கின்றன.

414. समीपम् (ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 19-7)

தன்னையடைந்தவர்களை ரக்ஷிக்கும் ஸ்வபாவமான தன்னுடைய ஸ்வரூபத்தையறிந்த ராஜச்ரேஷ்டனான ராமனுடைய ஸமீபத்தை இப்போதே அவன் ஸமீபம் போகவேண்டுமென்கிற எண்ணமாகிற குதிரைகள் கட்டின மனோரதங்களாகிற ரதங்களாலே போகிறவள் போலிருக்கிறாள் பிராட்டி.

---

## *தமிழ் வசனங்கள்*

96. *மன்னுங்கடு-இன்னதோர் காலத் திளையாரிதுபெற்றார்*
*என்னவும் கேட்டறிவதில்லை-உளதென்னில்*
*மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்*
*அன்னதோரில்லியினூடுபோய்-வீடென்னும்*
*தொன்னெறிக்கட்சென்றாரைச் சொல்லுமின்கள், சொல்லாதே*
*அன்னதேபேசு மறிவில்சிறுமனத்து ஆங்*
*கன்னவரைக்கற்பிப்போம் யாமே.* (பெரிய திருமடல் 8, 9)

ஸ்திரமாயிருக்கும் உஷ்ணமான கிரணங்களையுடைய ஸூரியனு டைய மண்டலத்தில் நல்ல நடுவில் சிறந்த துவாரத்தின் வழியாய் போய்.

97. *தேரார்* (சிறிய திருமடல்)

தேரில் இருக்கிற நிறைந்த கிரணங்களையுடைய ஸூரியனுடைய மண்டலத்தில் ஒட்டையையுண்டு பண்ணி அதில் புகுந்து.

98. *சண்டமண்டலத்தினூடு சென்று வீடு பெற்று மேல்*
*கண்டுநீடிலாதகாத லின்பம்நாளுமெய்துவீர்*
*புண்டரீகபாதபுண்ய கீர்த்திநுஞ் செவிமடுத்து*
*உண்டு நும்முறுவினைத் துயருள் நீங்கியுய்ம்மினோ*

(திருச்சந்தவிரு.- 67)

க்ரூரனான ஸூரியனுடைய மண்டலத்தின் நடுவில் போய்.

*இருளகற்று - கருளுடையபொழில்மருந்தும் கதக்களிறும்பிலம்பனை*
*யுங் கடியமாவும், உருளுடையசகடினையும் மல்லரையும் உடைய*
*விட்டோசை கேட்டான், இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்*
*தூடேற்றிவைத்தேணிவாங்கி, அருள்கொடுத்திட்டடியவரை*
*யாட்கொள்வானமருமூரணியரங்கமே.*

(68-வது பக்கம். 789-வது நெ. பார்க்க)

99. *அமரரோடு-அமரர்கள்தொழுதெழ அலைகடல்கடைந்தவன் றன்னை*
*அமர்பொழில்வளங்குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்*
*அமர்சுவையாயிரத்தவற்றினுளி வைபத்தும்வல்லார்*
*அமரரோடுயர்விற்சென்று அறுவர் தம்பிறவியஞ்சிறையே.*

(திருவாய் மொழி - 1-3-11)

ஆதிவாஹிகர்களான அமரர்களுடன் உயர்ந்த இடமான வைகுந்தத்தைச்சேர்ந்து நம்முடைய ஸம்ஸாரமாகிற அழகான அதாவது மிகவும் க்ரூரமான ஜயிலைப் போக்குவர்.

100. *குடியடியாரிவர் கோவிந்தன் தனக்கென்று*
*முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ளக்*
*கொடியணிநெடுமதிள் கோபுரம்குறுகினர்*
*வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே.* (திருவாய் மொழி - 10-9-8)

கோவிந்தனுக்கு அதாவது எம்பெருமானுக்கு இவர் தலைமுறை தலைமுறையாக வேலைக்காரர்கள் என்று கிரீடங்களையுடைய நித்யஸூரிகள் வரிசைவரிசையாக எதிர்கொண்டுவர, த்வஜத்தை அலங்காரமாகவுடைய உயரமான மதில்களையுடைய கோபுரத்தின் கிட்டப் போகும்படி செய்து.

---

## அரும்பதவுரை

ஓலக்கம் — ஸபை. புரை — பேதம்.

பரிமாறி — கூடி ஸம்ச்லேஷம் பண்ணி.

## 22. பரிபூர்ண பிரம்மாநுபவாதிகாரம்
### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

415. निरस्तातिशय (விஷ்ணுபுராணம் - 6-5-59)

எம்பெருமானையடைவதானது ஸம்ஸாரமாகிய வியாதிக்கு மருந்து. அது எப்படியிருக்கிற தென்றால் ஸுகமாகவேயிருக்கிறது; வேறு ஸுகத்தை அநுபவிக்கத் தகாதவனாய்ப் பண்ணுகிறது. இதற்கு மேற்பட்ட வேறு ஸுகமில்லாதபடி உயர்ந்திருக்கிறது. அதில் துக்கக் கலப்பில்லை. அதற்கு முடிவுமில்லை.

416. यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना ।
इति जानन् परां प्रीतिं गच्छ राम! मया सह ।। (ராமா. அ.- 30-18)

தேவரீருடன் சேர்ந்திருப்பதே எனக்கு மோக்ஷம் ; தேவரீரை விட்டிருப்பது எனக்கு நரகம் என்று தேவரீரிடத்தில் எனக்கு இருக்கிற மிகுந்த பிரீதியையறிந்து ஒ ராமனே ! என்னோடு காட்டுக்குப் போ.

417. नहि मे (ராமாயணம் ஸுந்தர காண்டம் - 26-5)

மஹாரதனான ராமனில்லாமல் ராக்ஷஸிகளின் நடுவில் வஸிக்கிற எனக்குப் பிழைத்திருப்பதால் என்ன பிரயோஜநம்? பணம் காசுகளாலே என்ன பிரயோஜநம்? நகைகளால் தான் என்னபிரயோஜநம்? (எந்த வீரன் தன்னையும் தன் ரதத்தையும் குதிரைகளையும் ஸாரதியையும் ரக்ஷித்துக் கொள்ள ஸமர்த்தனோ, அவன் மஹாரதன்.)

418. प्राप्यते परमं धाम-यद्येन कामकामेन न साध्यं साधनान्तरैः ।
मुमुक्षुणा यत् साङ्ख्येन योगेन न च भक्तितः ।।
प्राप्यते परमं धाम यतो नावर्तते यतिः ।
तेन तेनाप्यते तत्तन्न्यासेनैव महामुने ! ।।
परमात्मा च तेनैव साध्यते पुरुषोत्तमः ।।

(அஹிர்புத்ந்யஸம் 37- 25,26)

எந்தவிடத்திலிருந்து எம்பெருமானை உபாஸனம் பண்ணினவன் திரும்பி வருகிறதில்லையோ, அந்த உயர்ந்த இடமானது அவனால் அடையப்படுகிறது.

419. मामुपेत्य (கீதை - 8-15,16)

மஹாத்மாக்கள் மிகவுமுயர்ந்த ஸித்தியை யடைந்தவர்களாய் என்னிடம் வந்து, துக்கத்துக்கு இருப்பிடமாயும் நிலையில்லாத தாயுமிருக் கிற மறுஜந்மத்தை அடைகிறதில்லை. அர்ஜுநனே ! பிரம்மாவினுடைய இடம் உள்பட எல்லா உலகங்களும் போய் திரும்பிவரத் தகுந்தவைகள். குந்தியின் பிள்ளையே ! என்னை அடைந்தோ மறுபிறப்பை அடைகிற தில்லை.

420. यदा स केवली (பாரதம் சாந்திபர்வம் - 323-81)

எப்போது எந்த முமுக்ஷுவானவன் பிரக்ருதிஸம்பந்தம் போய் இருபத்தாறாவதான தத்துவமான எம்பெருமானைப் பார்க்கிறானோ, அப்போது எல்லாவிதமான ஸித்தியையடைந்த படியால் அவன் மறுபடியும் பிறக்கிறதில்லை.

421. गत्वा गत्वा (விஷ்ணுபுராணம் - 1-8-40)

சந்திரனாகவும் ஸூரியனாகவும் மற்ற கிரஹங்களாகவுமிருக்கிற ஜீவன்கள் தங்கள் அதிகாரம் முடிந்தவுடன் பிரளயகாலத்தில் நாசத்தை யடைந்து மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருகிறார்கள். பன்னிரண் டெழுத்துள்ள மந்திரத்தினால் எம்பெருமானைத் தியானம் பண்ணி வைகுந்தத்திற்குப் போனவர்கள் இது வரையில் திரும்பிவரவில்லை. (சந்திரன் முதலானவர்களைச் சொன்னது பிரும்மா முதலான அதிகாரிகளும் இப்படியே திரும்பிவர வேண்டிய தென்பதைக் காட்டுகிறது.)

422. धर्मव्याधादय: (விஷ்ணுதர்மம் - 102-29)

தர்மவியாதர் முதலான மற்றவர்கள் அருவருக்கக்கூடிய தாழ்ந்த ஜாதியில் இருந்த போதிலும் முன்ஜந்மத்தில் பக்தியோகம் செய்த பழக்கத்தால் மறுபடியும் அதை ஆரம்பித்து இந்த ஜந்மத்தில் அதை முடித்து ஸித்தியையடைந்தார்கள் ச்ரமணியைப் போல.

423. लोकेषु (ஸ்ரீ பாகவதம் என்று முன்னோர்கள்)

சிலர் விஷ்ணுவின் உலகங்களில் வஸிக்கிறார்கள். இது ஸாலோக் கியம். சிலர் அவன் ஸமீபத்தையடைகிறார்கள், இது ஸாமீப்யம், வேறு சிலர் அவனுடைய ரூபத்துக்கு ஸமமான ரூபத்தையடைகிறார்கள், இது ஸாரூப்யம். இன்னும் சிலர் ஸாயுஜ்யத்தையடைகிறார்கள். அது தான்

மோக்ஷமென்று சொல்லப்படுகிறது. ஸாயுஜ்யமென்பது எம்பெருமான் உடைய போகத்துக்கு ஸமமான போகத்தையநுபவிப்பது.

424. मोक्षं सालोक्यम् (2-வது ஜிதந்தா -36)

நீண்ட திருக்கைகளையுடையவனே! ஸாலோக்கியம் ஸாரூப்யம் என்கிற மோக்ஷத்தை ஒருபோதும் வேண்டேன். நான் வேண்டுவது தேவரீருடைய ஸாயுஜ்யத்தை, ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதாகிய நல்ல ஸங்கல்பத்தையுடையவனே!

425. जगद्व्यापारवर्जं प्रकरणादसन्निहितत्वाच्च ।(பிரம்மஸூத்திரம் - 4-4-17)

முக்தன் எம்பெருமானுக்கு மிகவும் உயர்ந்த ஒற்றுமையை அடைகிறான் என்பது உலகத்தையுண்டுபண்ணி ரக்ஷிப்பது முதலான வியாபாரங்களைத் தவிர மற்ற விஷயங்களில்.

426. भोगमात्र (பிரம்மஸூத்திரம் - 4-4-21)

பரிபூர்ணமான பிரம்மாநுபவத்தில் மாத்திரம் ஒற்றுமையைக் காட்டுகிற அடையாளங்களாலே, உலகவியாபாரம் முக்தனுக்கில்லை.

427. सामरस्यम् (சாகடாயநன்)

ஸாயுஜ்யமென்பது எம்பெருமானுடைய ஆநந்தாநுபவத்துக்கு ஸமமான ஆநந்நாநுபவத்தை அடைவதென்று பிரம்மவாதிகள் சொல்லு கிறார்கள்.

428. मम साधर्म्य–इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ।। (கீதை - 14-2)

இந்த உபாஸநமான ஜ்ஞானத்தையடைந்து என்னுடன் ஒற்று மையைப் பெற்றவர்கள் ஸிருஷ்டிகாலத்தில் பிறக்கிறதில்லை. பிரளய காலத்தில் வருத்தப்படுகிறதுமில்லை.

429. परेण (பாரதம் சாந்திபர்வம் - 313-26-31)

முக்தன், பரனுடன் அதாவது மிகவுமுயர்ந்தவனான எம்பெருமா னுடன் சேர்ந்து, அவனுடைய தர்மங்கள்போன்ற தர்மங்களை உடையவ னாக ஆகிறான். எப்படியென்றால் அவித்யை முதலான குற்றங்களில்லாத எம்பெருமானுடன் சேர்ந்து தானும் அந்த குற்றங்களுமில்லாதவனாய்,

எல்லாம் தெரிந்த அவனுடன் சேர்ந்து தானும் ஸர்வஜ்ஞனாய், கர்மபந்த மில்லாத அவனுடன் சேர்ந்து தானும் அதுபோன்றவனாய், பரதசி ரேஷ்டனே ! துக்கத்தின் சேர்க்கையில்லாத அவனுடன் சேர்ந்து தானும் துக்கம் நீங்கினவனாய், ஆநந்தத்தையுடைய அவனுடன் சேர்ந்து தானும் ஆநந்தமுடையவனாய், கர்மத்தினால் ஏவப்படாமல் தன் ஸங்கல்பத் தாலேயே கர்மங்களைச் செய்கிற அவனுடன் சேர்ந்து தானுமப்படியே ஸங்கல்பத்தினாலே வேலை செய்கிறவனாய், அளவில்லாத காந்தியை யுடையவனாய், ஸத்துவம் முதலான குணங்களில்லாத அவனுடன் சேர்ந்து தானும் அந்த குணங்கள் போனவனாய், பிரகிருதியிலிருந்து உண்டான உடம்பும் இந்திரியங்களுமில்லாத அவனுடன் சேர்ந்து தானும் அவைகளால் விடப்பட்டவனாய், கர்மத்துக்கு உட்படாமல் ஸ்வதந்திரன் என்று சொல்லப்பட்ட அவனுடன் சேர்ந்து தானும் அவ்விதமான ஸ்வதந்திரனாயும் ஆகிறான். மஹாராஜனே ! இப்படி தத்துவமானது எப்படியிருக்கிறதோ, அதை உள்ளபடி உனக்கு நான் சொன்னேன். இந்த அர்த்தத்தை அஸூயை யில்லாமல் நீ ஏற்றுக் கொண்டு, எப்போதும் இருக்கிற உலகத்துக்குக் காரணமான ஒருவிதமான தோஷமில்லாத பிரும்மத்தை உபாஸி.

430. रामसुग्रीवयोरैक्यं देव्येवं समजायत ।
हनूमन्तं च मां विद्धि तयोर्दूतमिहागतम् ॥ (ராமா.ஸுந்தர- 35-51)

ஒ தேவியே ! ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஐக்கியமிப் படி யுண்டாயிற்று.

431. यदा तु मन्यते (பாரதம் சாந்திபர்வம் - 323-77-80)

எப்போது எந்த பிராமணன் நான் எம்பெருமானைக் காட்டிலும் வேறு, அவன் என்னைக் காட்டிலும் வேறு என்று பார்க்கிறானே, அவன் பந்தம் போய் இருபத்தாறாவதான தத்துவமான எம்பெருமானைப் பார்த்துக் கொண்டேயிருப்பன். ஒ ராஜாவே ! அந்த எம்பெருமான் வேறு; இருபத் தைந்தாவது தத்துவமான ஜீவன் வேறு. அவனிடத்தில் எம்பெருமானி ருப்பதாலே அவர்கள் இருவரும் ஒன்றென்று ஸாதுக்கள் சொல்லுகிறார்கள். ஒ ராஜாவே ! அந்த எம்பெருமான் ஜீவர்களைக் காட்டிலும் வேறு, பஞ்சவிம் சகனான ஜீவன் மற்ற இருபத்து நான்கு தத்துவங்களைக் காட்டிலும் வேறுபட்டவன். ஆகையால் பஞ்சவிம்சகனை அந்த எம்பெருமானுடன் ஒன்றாக அவர்கள் எண்ணுகிறதில்லை. காச்யபனே ! பிறப்பு மரணம் ஜரை முதலானவைகளிடத்தில் பயந்து கர்ம யோகஞ் செய்து, அதனால் சுத்தமான

மனதைப்பெற்று, ஜ்ஞாநயோகம் செய்து, எம்பெருமானைப் பரமப்ராப்யமாக எண்ணி அவனை உபாஸிக்கிறார்கள்.

432. उत्तमः (கீதை - 15-17)

புருஷோத்தமன் பத்தனையும் முக்தனையும் காட்டிலும் வேறு. அவன் பரமாத்மா என்று சொல்லப்படுகிறான். எந்தக் காரணத்தாலே அவன் மூன்று லோகங்களுக்குள்ளே ஆத்மாவாக நுழைந்து அவைகளைத் தாங்கிக்கொண்டு நியமநம் செய்து தான் ஒருவிதக் குறைவில்லாமலிருக் கிறானோ, அந்தக் காரணத்தாலே. இங்கே லோகங்களென்பது அறிவில்லாத வஸ்துக்களும், அவைகளுடன் சேர்ந்திருக்கிற ஜீவன்களும், அவைகளின்று விடுபட்ட ஜீவன்களும்.

433. तत्र यःपरमात्मा (பாரதம் சாந்திபர்வம் - 361-14-15)

ஜீவனிடத்தில் அந்தர்யாமியாக எந்த பரமாத்மா இருக்கிறானோ, அவன் எப்போதுமிருக்கிறவன். ஸத்துவம் முதலான மூன்று குணமில்லா தவன். அவனே நாராயணனென்று அறிய வேண்டியது. அவன் எல்லா ருக்கும் ஆத்மா. அவனையே புருஷனென்று வேதம் சொல்லுகிறது. அவனிடத்தில் கர்மங்களின் பலன்கள் தாமரையின் இலையில் ஜலம்போல ஒட்டுகிறதில்லை. எம்பெருமானைக் காட்டிலும் எந்த ஜீவன் தாழ்ந்தவனோ, அவன் கர்மத்தைச் செய்கிறவனாய் அதனால் பந்தத்தையும், எம்பெரு மானைச் தியாநம் பண்ணுவதால் மோக்ஷத்தையும் அடைகிறான்.

434. अयःपिण्डे (ஜயாக்யஸம்ஹிதை 4-83)

எப்படி இரும்பு உருண்டையில் நெருப்பு வேறாயிருந்த போதிலும். அதைக் காட்டிலும் வேறென்று தெரியாதபடி ஒன்றாயிருக்கிறதோ, அப்படியே தேவனான எம்பெருமான் இந்த உலகத்தை வியாபித்துக் கொண்டு அதை விட்டுப் பிரிக்கமுடியாதபடி இருக்கிறான்.

435. न सम्पदाम् (பரமஸம்ஹிதை 3-34)

ஸம்பத்துக்களை ஒருவனிடம் சேர்ப்பதற்கும், விபத்துக்களை அவனிடமிருந்து பிரிப்பதற்கும் தகுந்தவன் புருஷோத்தமனைக் காட்டிலும் வேறு ஒருவனுமில்லை.

436. सायुज्यम् (பரமஸம்ஹிதை 30-94)

மிகுந்த ஆவலுடன் பக்தியோகம் செய்கிறவர்களும், உயர்ந்த தபஸாகச் சொல்லப்பட்ட பிரபத்தியைச் செய்தவர்களும் ஸாயுஜ்யத்

தையடைந்து எப்போதும் எனக்கு கைங்கரியம் பண்ணிக் கொண்டிருப்பார்கள். ஸம்ஸாரத்துக்கு வருவதாகிய உபத்திரவம் அவர்களுக்குக் கிடையாது.

स च मम प्रिय:

437. अनावृत्ति: (பிரம்மஸூத்திரம் - 4-4-22)

மோக்ஷத்தையடைந்தவன் திரும்பி ஸம்ஸாரத்துக்கு வருகிறதில்லை. இப்படியே வேதம் சொல்லுகிறபடியாலே.

---

## தமிழ் வசனங்கள்

101. *அனைத்துலகு-நினைக்கிலேன் தெய்வங்காள் நெடுங்கணிளமானினிப் போய், அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத், தினைத்தனையும்விடாள் அவன்சேர்திருக்கோளூர்க்கே, மனைக்குவான்பழியும் நினையாள்செல்லவைத்தனளே.* (திருவாய்மொழி - 6-7-10)

எல்லா உலகத்துக்கும் ஸ்வாமியாய் தாமரைக் கண்ணனான எம்பெருமானைக் கொஞ்சங்கூட விடமாட்டாள்.

*உணர்முழு-மனனகமலமற மலர்மிசையெழுதரும்*
*மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்*
*இனனுணர்முழுநல மெதிர்நிகழ்கழிவினும்*
*இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே.*

*போயினால்- சீயினால் செறிந்தேறியபுண்மேல் செற்றலேறிக்குழம்பிருந்துஎங்கும்-ஈயினாலரிப்புண்டு மயங்கியெல்லைவாய்ச் சென்று சேர்வதன் முன்னம் வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்திடைக்கைகளைக்கூப்பிப் போயினால்பின்னை இத்திசைக்கென்றும் பிணைகொடுக்கிலும் போகவொட்டாரே.*

*ஏறாளுமிறையோனும் திசைமுகனும் திருமகளும்*
*கூறாளும் தனியுடம்பன் குலங்குலமாவசுரர்களை*
*நீறாகும்படியாக நிருமித்துப் படைதொட்ட*
*மாறாளன் கவராத மணிமாமைகுறைவிலமே.* (திருவாய்மொழி -4-8)

---

## அரும்பதவுரை

திடர் — மேடு.

---

## 23. ஸித்தோபாயசோதநாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

438. **सर्वेषामेव** (பாரதம் ஆரண்யபர்வம் - 161-56)

லக்ஷ்மீபதியான எம்பெருமான் எல்லா உலகங்களுக்கும் தகப்பனாக வும் தாயாகவும் இருக்கிறான். புருஷச்ரேஷ்டர்களே ! ரக்ஷகனான அந்தப் புருஷனை உபாயமாக எண்ணி சரணாகதி பண்ணுங்கள்.

439. **आर्षम्** (மநுஸ்மிருதி - 12-106)

வேதங்களாலும் ஸ்மிருதிகளாலும் சொல்லப்பட்ட தர்மத்தை வேதத்துக்கு விரோதமில்லாத தர்க்கத்தினாலே எவன் அறிகிறானே, அவனே தர்மம் தெரிந்தவன். அப்படிச் செய்யாதவன் தர்மம் தெரிந்த வனன்று.

440. **काणादशाक्यपाषण्डैस्त्रयीधर्मो विलोपितः ।**
**त्रिदण्डधारिणा पूर्वं विष्णुना रक्षिता त्रयी ।।** (அத்ரிஸ்மிருதி)

வைசேஷிகன் என்கிற தர்க்கமதஸ்தர்கள், பௌத்தர்கள், வேதத் துக்கு விருத்தமானதைச் சொல்லுமவர்கள் ஆகிய இவர்களால் வேதம் சொல்லுகிற தர்மங்கள் மறைந்து போகும்படி செய்யப்பட்டன.

441. **दत्तस्य हरणेन–**
**आश्रुतस्याप्रदानेन दत्तस्य हरणेन च ।**
**जन्मप्रभृति यद् दत्तं तत् सर्वं नश्यति ध्रुवम् ।।** (சாண்டில்யஸ்மிருதி)

கொடுப்பதாகச் சொன்னதைக் கொடாததாலும், கொடுத்ததை அபஹரிப்பதாலும் பிறந்ததுமுதல் செய்யப்பட்ட தாநங்களெல்லாம் நாசமடைகின்றன. இது உண்மையே.

442. **पाषण्डिनः** (வி.பு - 3-18-101) (மநுஸ்மிருதி - 4-30)

பாஷண்டிகள் (வேதத்துக்கு விருத்தமான விஷயத்தைச் சொல்லி விருத்தமானவைகளைச் செய்பவர்கள்) சாஸ்திரம் நிஷேதிக்கிற கர்மங் களைச் செய்பவர்கள், பூனைபோலிருப்பவர்கள் அதாவது வஞ்சகர்கள், நாஸ்திகர்கள், ஹைதுகர்கள் அதாவது பிரமாணத்தை ஒப்புக்கொள்ளாமல் யுக்தியைக்கொண்டே ஸாதிக்க விரும்புகிறவர்கள், கொக்கைப்

போலிருப்பவர்கள் அதாவது - கிட்ட இருப்பவர்களை ஹிம்ஸிப்பவர்கள், இவர்களை வாயாலே கூடக் கௌரவம் செய்யக்கூடாது.

443. डम्भिहैतुक – राजान्तेवासियाज्येभ्यः सीदन्निच्छेद्धनं क्षुधा ।
डम्भिहैतुकपाषण्डिबकवृत्तींश्च वर्जयेत् ।। (யாஜ்ஞவல்க்ய. ஸ்1-130)

பசியால்வருத்தப்படுகிறவன், ராஜாவினிடத்திலும், சிஷ்யன் இடத்திலும், தன்னால் யாகம் செய்விக்கப்பட்டவர்களிடத்திலும் தனத்தைப் பெற இச்சைப்படலாம். நான்கு பேர் கொண்டாடுவதற்காகத் தர்மத்தையநுஷ்டிப்பவர்கள், ஹைதுகர்கள், பாஷண்டிகள் கொக்கு போலிருப்பவர்கள். இவர்களிடமிருந்து வாங்கக்கூடாது.

444. नासद्भिः – सद्भिरेव सहासीत सद्भिः कुर्वीत सङ्गमम् ।
सद्भिर्विवादं मैत्रीं च नासद्भिः किञ्चिदाचरेत् ।।

ஸத்துக்களுடன் கூடவே ஒருவனிருக்கவேண்டியது, அவர்களுடன் சேர வேண்டியது. விவாதம் செய்தாலும் ஸ்நேஹம் செய்தாலும் அவர்களுடன் அவைகளைச்செய்யவேண்டியது. அஸத்துக்களுடன் இவைகளிலொன்றையும் செய்யக்கூடாது. இங்கே ஸத்து என்பவன் தைவத்தின் ஞானமுள்ளவன். அதில்லாதவன் அஸத்து.

445. त्यज दुर्जनसंसर्गं भज साधुसमागमम् ।
कुरु पुण्यमहोरात्रं स्मर नित्यमनित्यताम् ।। (பாரதம் ஆரண்யபர்வம்)

துர்ஜனனுடைய சேர்க்கையை விட்டுவிடு. ஸாதுக்களோடு சேர்ந்திருப்பதை அடை. புண்ணியத்தைப் பகலிலும் இரவிலும் செய். தானும் தன்னைச் சேர்ந்தவர்களும் நித்தியம் அன்று என்கிற விஷயத்தை எப்போதும் நினைத்துக்கொண்டிரு.

446. वरं हुतवह (காத்யாயன ஸ்ம்ருதி:)

அக்னி ஜ்வாலையாகிய கூட்டுக்குள்ளிருப்பது கொஞ்சம் நல்லது. எம்பெருமானுடைய நினைவிற்கு முகங்கொடாதவர்களுடன் கூட இருப்பதாகிய வதம் கொஞ்சமும் நல்லதன்று.

447. न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।
मायया ऽपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ।। (கீதை-7,15)

கெட்ட கர்மங்களைச் செய்பவர்கள் அவைகளின் தாரதம்மியத்துக்குத்

தகுந்தபடி என்னிடத்தில் ப்ரபத்தி பண்ணி என்னை பஜிக்கிறதில்லை. அவர்களாவன – மூடர்கள் – என்னுடைய ஜ்ஞானமில்லாதவர்கள், நராதமர்கள் – அதாவது என்னுடைய ஜ்ஞானமிருந்தும் என்னிடம் வருவதற்கு முயற்சி செய்யாதவர்கள், கெட்ட யுக்திகளாலே உண்டான ஜ்ஞானம் போனவர்கள், என்னிடத்தில் த்வேஷம் பண்ணுமவர்கள்.

आर्तो जिज्ञा-चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ।। (48வது பக்.222.நெ.பார்க்க)

448. एकं यदि (இதிஹாஸஸமுச்சயம் 33.105)

சாஸ்திரம் ஒன்றாயிருந்தால் ஸந்தேஹமில்லாமல் ஞானமுண்டாகும். இந்த உலகத்தில் சாஸ்திரங்கள் அனேகங்களாயிருப்பதால் உண்மையான ஜ்ஞானம் ஸம்பாதிப்பது மிகவும் வருத்தம்.

449. निस्संशयेषु (பாரதம் சாந்திபர்வம்-359.71)

ஸந்தேஹமில்லாத எல்லாரிடத்திலும் எம்பெருமான் எப்போதும் இருக்கிறான். யுக்திகளைக் கொண்டு ஸந்தேஹப்படுகிறவர்களிடத்தில் லக்ஷ்மீபதி இருக்கிறதில்லை.

450. न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभा मतिः ।
भवन्ति कृतपुण्यानां भक्तानां पुरुषोत्तमे ।। (பாரதம் ஆனு. 232-135)

புண்யம் செய்து புருஷோத்தமனிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கு கோபமும், த்வேஷமும், லோபமும், கெட்ட புத்தியும் வராது.

451. श्रूयते (விஷ்ணுதர்மம்–2-25)

கோவிந்தனிடத்தில் பக்தியைச் செய்கிற மனிதர்களுக்கு ஸம்ஸாரக் குறைவு உண்டாகுமோ என்று பயந்து,தேவர்கள் விரோதஞ்செய்கிறார்கள். இப்படி கேட்கப்படுகிறது.

452. सत्यं शतेन (விஷ்ணுதர்மம்-74-94)

மனிதர்களுடைய ஸத்யம் (உண்மை பேசுவது) நூறு விக்கினங் -களாலும், தபஸ் ஆயிரம் விக்கினங்களாலும், கோவிந்தனிடத்தில் பக்தி பதினாறாயிரம் விக்கினங்களாலும் தடுக்கப்படுகிறது.

453. व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः ।
उत्सवेषु च सर्वेषु पितेव परितुष्यति ।। (ராமா. அயோத்யா – 2-40)

மனிதர்களுடைய துக்கங்களில் ஸ்ரீ ராமன் மிகவும் துக்கமுள்ளவனாக ஆகிறான். அவர்களுக்கு ஸந்தோஷம் வரும் எல்லாக் காலங்களிலும் தகப்பன் போல் சந்தோஷப்படுகிறான்.

454. कालस्य हि (பாரதம் உத்யோகபர்வம் – 67-13-15)

காலத்தையும் ம்ருத்யுவையும் அசைவுள்ள ப்ராணிகளையும், ஸ்தாவரமான ப்ராணிகளையும்,எம்பெருமான் ஒருவனே நியமனம் பண்ணுகிறான்.உனக்கு இதை உண்மையாகச் சொல்லுகிறேன். ப்ரபுவாயும் ஆச்சரியமான ஜ்ஞானசக்தியுடையவனாயும் எல்லா உலகங்களையும் நியமனம் பண்ணுகிறவனாயிருந்தபோதிலும் துர்பலனான குடியானவன் போல் கர்மங்களைச் செய்ய ஆரம்பிக்கிறான்.இதனால் உலகங்களை வஞ்சனை செய்கிறான்.எவர்கள் அவனைச் சரணமாக அடைகிறார்களோ, அவர்கள் மோஹத்தை அடைகிறதில்லை.என்கெ கர்மங்களென்பது தூது போவது வண்டியோட்டுவது முதலானவைகள்.

455. कृत्वा (பாரதம் மௌஸலபர்வம் – 9-34)

நீண்ட கண்களுடைய ஸ்ரீ கிருஷ்ணன் பூமியின் பாரத்தை இறக்கி,உலகம் முழுவதும் மோஹத்தையடையும்படி செய்து, மிகவும் உயர்ந்த தன் இடத்துக்குப் போய்விட்டான்.

456. मनुष्य (விஷ்ணுபுராணம் - 5-22-18)

இவ்விதமாக மனித உடம்பையுடையவர்களுடைய செய்கைகளை அனுஸரிக்கிறான். உலகத்துக்கு யஜமாநனான அவனுடைய விளை யாட்டானது அவனுடைய ஸங்கல்பத்தாலேயே உண்டாகிறது.

457. कृष्णं धर्म – ये च वेदविदो विप्रा ये चाध्यात्मविदो जनाः ।
ते विदन्ति महात्मानं कृष्णं धर्मं सनातनम् ।। (பாரதம் ஆர.–71-123)

எந்த பிராமணர்கள் வேதத்தின் முன் பாகத்தை அறிகிறார்களோ, எந்த ஜனங்கள் பரமாத்மாவிஷயமான அதன் மேல் பாகத்தின் அர்த்தத்தை அறிந்திருக்கிறார்களோ, அவர்கள் மஹாத்மாவான கிருஷ்ணனை எப்போதுமிருக்கிற தர்மமாக (உபாயமாக)ச் சொல்லுகிறார்கள்.

458. यो मे गर्भ (விஷ்ணுதர்மமென்பர்)

எந்த ப்ரபு நான் தாயார் கர்பத்திலிருக்கும்போது கூட பிழைக்கும் உபாயத்தைச் செய்தானோ, பிறந்தபிறகு மேல் பிழைக்கும் உபாயத்தைச்

செய்யும் விஷயத்தில் அவன் தூங்குகிறானா, அல்லது இறந்துவிட்டானா?

स्वयं मृत्पिण्डभूतस्य परतन्त्रस्य देहिनः ।
स्वरक्षणेऽप्यशक्तस्य को हेतुः पररक्षणे ? ।।

(இதிஹாஸ ஸமுச்சயம் 17-63 கீழ் ஸாங்கப்ரபதனாதிகாரத்தில் வந்துள்ளது.)

459. अज्ञो जन्तुः (பாரதம் சாந்திபர்வம் 12-36)

இந்த ஜீவன் அறிவில்லாதவனாயும் தன் சுக துக்கங்களை விலக்கிக் கொள்ளும் விஷயத்தில் சக்தியில்லாதவனாயும் இருக்கிறான். எல்லாரையும் நியமனம் பண்ணுகிற எம்பெருமானால் ஏவப்பட்டவனாய் சுவர்க்கத் திற்கோ நரகத்திற்கோ போகிறான்.

460. अप्रमेयः (பாரதம் ஸபாபர்வம் - 40-78)

எம்பெருமான் பரிபூர்ணனாயிருக்கிறான். ஒருவனும் அவனை இதைச் செய் என்று ஏவமுடியாது. எங்கே போகவேண்டுமென்று எண்ணுகிறானோ, அங்கே போகச் சக்தியுள்ளவன். எல்லாரையும் தன் வசத்தில் வைத்துக் கொள்ளுகிறவன். குழந்தை விளையாட்டுச்சாமான்களைக் கொண்டு விளையாடுவதுபோல் பிராணிகளைக்கொண்டு விளையாடி லீலை என்கிற ரஸத்தையநுபவிக்கிறான்.

461. गर्भभूताः - न्यस्तदण्डा वयं राजन् ! जितक्रोधा जितेन्द्रियाः ।
रक्षितव्यास्त्वया शश्वद्गर्भभूतास्तपोधनाः ।। (ராமா.ஆர.–1–21)

தபஸ்ஸு செய்கிற நாங்கள் தண்டிப்பதை விட்டிருப்பவர்களாயும், கோபத்தை ஜயித்தவர்களாயும் இந்திரியங்களையடக்கினவர்களாயும் கர்ப்பம்போலிருப்பவர்களாயுமிருப்பதால் தேவரீரால் ரக்ஷிக்கத் தகுந்தவர்கள். (இது ஸ்ரீராமனைப் பார்த்து தண்டகாரண்யத்திலிருக்கும் ருஷிகள் சொன்னது).

462. ये नाथवन्तः (பாரதம் ஆர. பர்வம் - 161 -2)

உலகத்தில் எவர்களுக்கு நாதன் (ஸ்வாமி)) இருக்கிறானோ, அவர்கள் தங்கள் வேலையைத் தாங்கள் ஆரம்பிப்பதில்லை. ஓ பல ராமனே! அவர் களுடைய வேலைகளில் அவர்கள் ஸ்வாமியே முயற்சி செய்கிறான். எப்படி யயாதி விஷயத்தில் சிபி முதலானவர்கள் அவன் வேலையைத் தாங்கள் செய்தார்களோ, அதுபோல.

463. लक्ष्म्या सह (லக்ஷ்மீதந்திரம் – 28-14)

எம்பெருமான் கருணையே வடிவுகொண்டிருக்கிற லக்ஷ்மீ தேவியுடன் கூடவே இருந்து ரக்ஷிக்கிறானென்று எல்லா ஸித்தாந்தங்களிலும் வேதாந்தத்திலும் சொல்லியிருக்கிறது. இங்கே ஸித்தாந்தங்களென்பது நான்கு விதமான பாஞ்சராத்திரஸித்தாந்தங்கள்.

464. तदन्तर्भावात् – स्वरूपं स्वातन्त्र्यं भगवत इदं चन्द्रवदने !
त्वदाश्लेषोत्कर्षाद्भवति खलु निष्कर्षसमये ।
त्वमासीर्मातः ! श्रीः कमितुरिदमित्थंत्वविभवः
तदन्तर्भावात्त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि ।। (ஸ்ரீ குணரத்நகோசம்-28)

சந்திரனைப்போல ஸந்தோஷத்தையுண்டாக்கும் முகத்தையுடைய லக்ஷ்மியே! தேவரீரையும் எம்பெருமானையும் பிரித்துப் பார்க்கும் காலத்தில் எம்பெருமானுடைய ஸ்வரூபமும், ஸர்வேசுவரனாயிருப்பதும், தேவரீருடன் சேர்ந்திருந்து அதினாலுண்டாகும் ஒரு ஏற்றத்தாலே உண்டாயிருக்கின்றன. ஆகையினால் தேவரீருடைய நாயகன் இப்படியிருக்கிறான் என்று சொல்லு கிற அம்சமாய் தேவரீர் இருக்கிரீர். இப்படி தேவரீரும் எம்பெருமானும் சேர்ந் திருப்பதாலே வேதமும் தேவரீரைத் தனியாகச் சொல்லவில்லை. குறிப்பு – ஒரு வஸ்துவைப் பார்க்கும்போது இது இப்படி இருக்கிறதென்று அறி கிறோம்.இதில் இது என்கிற அம்சம் அந்த வஸ்துவின் ஸ்வரூபம். இப்படி யிருக்கிறது என்கிற அம்சம் அதன் ஸ்வரூபத்தை ஒருவன் அறிந்து பேசும் படி செய்கிறது. அதில்லாவிட்டால் ஸ்வரூபமே தோன்றாது. ரோஜாப் பூவைப் பார்க்கும்போது அது சிவப்பாயிருக்கிறது என்று அறிகிறோம். அந்த சிவப்பு வர்ணத்தை விட்டு அந்தப் பூவைப் பார்க்க முடியாது. இது என்கிற அம்சம் எம்பெருமான். இப்படி இருக்கிறா னென்று காட்டுகிற அம்சம் பிராட்டி, இந்த இரண்டு அம்சமும் சேர்ந்தேயிருக்கும்; ஒன்றை விட்டு ஒன்று இருக்காது.

465. सर्वकामप्रदां रम्यां संसारार्णवतारणीम् ।
क्षिप्रप्रसादिनीं देवीं शरण्याम् अनुचिन्तयेत् ।। (காச்யபஸ்ம்ருதி)

ஆசைப்பட்ட எல்லா பலன்களைக் கொடுக்கிறவளாயும் ஸம்ஸார மாகிய ஸமுத்திரத்திலிருந்து கரையேற்றுகிறவளாயும் சீக்கிரம் அனுக்ரஹத்தைச் செய்கிறவளாயும், ஸந்தோஷத்தையுண்டு பண்ணுகிற-வளாயும், ரக்ஷிக்கிறவளாயுமிருக்கிற தேவியான லக்ஷ்மியை நினைத்துக் கொண்டிருக்க வேண்டியது.

466. वाचः परं प्रार्थयिता प्रपद्येद् नियतः श्रियम् । (சௌனகஸம்ஹிதா)

சொற்களின் கருத்துக்கு விஷயமான எம்பெருமானை அடைய வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறவன் கட்டாயம் லக்ஷ்மீயினிடதிலும் ப்ரபத்தி செய்யவேண்டியது. எம்பெருமானிடத்தில் மாத்திரம் ப்ரபத்தி பண்ணினால் போதாது.

467. आत्मविद्या - यज्ञविद्या महाविद्या गुह्यविद्या च शोभने ! ।

आत्मविद्या च देवि ! त्वं विमुक्तिफलदायिनी।। (விஷ்ணு.பு–1-9-20)

ஓ தேவியே! நீர் ஆத்மஜ்ஞானத்தைக் கொடுக்கிறவளாயும், மோக்ஷ மாகிய பலத்தைக் கொடுப்பதை ஸ்வபாவமாயுடையவளா யுமிருக்கிறாய்.

468. यामालंब्य (ஸ்ரீ ஸாத்வத ஸம்ஹிதை – 12-84)

எம்பெருமானுடைய ரூபத்தை தியானம் பண்ணிக்கொண்டிருக்கிற வர்கள், எந்த லக்ஷ்மியைப் ஆச்ரயித்துக்கொண்டு அதாவது ப்ரபத்தி பண்ணி, கரையேற முடியாத இந்த முக்குணங்களால் ஏற்பட்ட ஸம்ஸார ஸமுத்திரத்தை ஸுகமாய் சீக்கிரத்தில் அதாவது வேறு உபாயம் செய்யாமல் தாண்டுகிறார்களோ.

469. जगत्समस्तं - चकर्थ यस्या भवनं भुजान्तरं

तव प्रियं धाम यदीयजन्मभूः।

जगत्समस्तं यदपाङ्गसंश्रयं

यदर्थमम्भोधिरमन्थ्यबन्धि च ।। (ஆளவந்தார்ஸ்.-37)

உலகம் முழுவதும் எந்த லக்ஷ்மீயினுடைய கடாக்ஷத்தை ஆதாரமாக வுடையதோ. இங்கே ஆதாரத்தைச் சொன்னதாலே அத்துடன் சேர்த்து வேதம் சொல்லுகிற ஜகத்காரணமாயிருப்பது முதலானவைகளும் சொல்லப் பட்டன.

470. श्रेयो न हि -

ईषत्त्वत्करुणानिरीक्षणसुधासंधुक्षणाद् रक्ष्यते

नष्टं प्राक् तदलाभतस्त्रिभुवनं संप्रत्यनन्तोदयम् ।

श्रेयो न ह्यरविन्दलोचनमनःकान्ताप्रसादादृते

संसृत्यक्षरवैष्णवाध्वसु नृणां संभाव्यते कर्हिचित् ।। (சது: ச்லோகீ-3)

தாமரைக்கண்ணனான எம்பெருமான் மனதுக்குப் பிடித்த பத்தினி யான லக்ஷ்மியினுடைய அநுக்கிரஹமில்லாமல், ஸம்ஸாரத்தில் ஒருவன் ஆசைப்படக்கூடிய உயர்ந்த அனுபவமும், ஆத்மாவினுடைய அனுபவமும், எம்பெருமானுடைய அனுபவமும், நமக்கு உண்டாகிறது இல்லை .

471. शेषशेषाशनादि (ஸ்ரீ வைகுண்டகத்யம்) சூர்ணிகை - 4

ஆதிசேஷன், விஷ்வக்ஸேநர் (பகவானுக்கு நிவேதனம் பண்ணி மிகுந்ததைச்சாப்பிடுகிறவன்) முதலான எல்லா பரிஜநங்களையும் எம்பெரு மானுக்கு அந்தந்த அவஸ்தைகளில் செய்ய வேண்டிய கைங்கரியங்களைச் செய்யும்படி நியமநம் செய்கிற லக்ஷ்மியோடு கூட இருக்கிற,

472. स्वस्ति श्रीः (ஸ்ரீஸ்தவம் - 1)

எல்லாவுலகங்களையுமுண்டுபண்ணுவது, நாசஞ்செய்வது, ரக்ஷிப்பது ஆகிய வேலைகளையும், ஸ்வர்க்கம்,நரகம், மோக்ஷம் ஆகிய பலன்களைக்கொடுப்பதும் ஆகிய இவைகளையெல்லாம் எந்த லக்ஷ்மி யுடைய முகத்தைப் பார்த்து, அவளுடைய ஸங்கல்பத்தை துணையாகக் கொண்டு எம்பெருமான் செய்கிறானோ, அந்த லக்ஷ்மீ நமக்கு க்ஷேமத்தைக் கொடுக்கவேணும். இரண்டுபேரும் ஒரே வேலையைச்செய்து ஒரே விதமான ஸந்தோஷத்தையடைகிறவர்களாகையாலே, இப்படி அவளு டைய ஸங்கல்பத்தைக் கவனிக்காமல் ஜகத்வியாபாரமான விளையாட்டை அவன் செய்தால் அது ரஸத்தைக் கொடுக்காது, இங்கே இங்கித என்கிற சொல்லானது அதற்குக் காரணமான ஸங்கல்பத்தைச் சொல்லுகிறது.

473. देवि ! त्वन्महिमावधिर्न हरिणा नापि त्वया ज्ञायते
यद्यप्येवमथापि नैव युवयोः सर्वज्ञता हीयते ।
यन्नास्त्येव तदज्ञतामनुगुणां सर्वज्ञताया विदु -
र्व्योमाम्भोजमिदंतया किल विदन् भ्रान्तोऽयमित्युच्यते ।।

( ஸ்ரீஸ்தவம் -8 )

ஒ தேவி ! உம்முடைய பெருமையின் எல்லையானது எம்பெருமா னானும் உம்மாலுங்கூட அறியப்படவில்லை. இப்படி யிருந்தபோதிலும் நீங்களிருவரும் எல்லாம் தெரிந்தவர்கள் என்பது போகவில்லை. எது இல்ல வேயில்லையோ, அதையறியாமையானது எல்லாம் அறிந்தவனா யிருப்பதற்கு ஒத்திருக்கிறதென்று பெரியோர்கள் அறிகிறார்கள்.

ஆகாசத்தாமரையென்று ஒன்றில்லாமலிருக்க அதிருப்பதாக எண்ணு கிறவன் பிராந்தன் என்று சொல்லப்படுகிறான்.

474. ऐश्वर्यम् ( ஸ்ரீகுணரத்நகோசம் - 58 )

அம்மா ! அஞ்ஜலியாகிய பாரத்தைத்தூக்குகிற ஒருவனுக்கு, ஐசுவரியத்தையும், ஆத்மானுபவத்தையும் பரமபதத்தையும் கொடுத்தும், இவனுக்குத் தகுந்ததொன்றையும் செய்யவில்லை என்று நீ லஜ்ஜைப் படுகிறாய். இதென்ன ஔதார்யம் ! சொல்லு.

475. स्वत:श्री: (ஸ்ரீகுணரத்நகோசம் - 31 )

ஏ லக்ஷ்மியே ! நீ உன்னிச்சையாலேயே எம்பெருமானுடைய ஸொத்தாக இருக்கிறாய். அவனுடைய ஏற்றம் உன்னாலே உண்டு பண்ணப்பட்டதாயிருந்த போதிலும், சொன்ன காரணத்தால் அவனுடைய பெருமையானது இன்னொருவனுடைய அதீநமாக இருக்கவில்லை. ஒரு ரத்நமானது தன்னுடைய காந்தியாலே உயர்ந்த விலையுள்ளதாக ஆகிறது. அப்படியிருந்தபோதிலும், அது குணமில்லாததாக ஆகிறதில்லை; அதற்கு ஸ்வபாவத்தினாலேற்பட்ட பெருமை குறைகிறதில்லை. அதற்குப் பெருமை வேறொன்றால் உண்டுபண்ணப்பட்டதல்ல.

476. अनन्या - शक्या लोभयितुं नाहमैश्वर्येण धनेन वा ।
अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा ।।

( ராமா. ஸுந்- 21-15 )

ஐசுவரியத்தாலும் பணத்தாலும் எனக்கு ஆசையுண்டுபண்ணுவது முடியாது. எப்படி ஸூரியனை விட்டு அவன் பிரபை பிரிந்திருக்க மாட்டாதோ, அப்படியே ராகவனை விட்டு நான் பிரிந்திருக்க முடியாது.

477. अनन्याधीनकल्याणमन्यमङ्गलकारणम् ।
जगन्निदानमद्वन्द्वं द्वन्द्वं वन्दामहे वयम् ।। (ஸ்ரீபட்டரின் லக்ஷ்மீகல்யாணம் )

ஒருவனாலும் கொடுக்கப்படாமல் தமக்கே ஸ்வபாவத்தினாலுள்ள கல்யாண குணங்களையுடையவர்களாயும், மற்றவர்களுக்கு நல்ல குணங் களுண்டாவதற்குக் காரணர்களாயும், உலகத்துக்குக் காரணமானவர் களாயும் தங்களுக்கு ஸமானமில்லாதவர்களாயும் இருக்கிற பிராட்டி, எம்பெருமானாகிய இருவர்களையும் நாங்கள் வந்தநஞ் செய்கிறோம்.

478. अप्रमेयं हि तत्तेजो यस्य सा जनकात्मजा ।
न त्वं समर्थस्तां हर्तुं रामचापाश्रयां वने ।। ( ராமா.ஆரண்ய- 37-18 )

ஜநகராஜன் திருமகளான அந்த ஸீதை எவனுடையவளோ, அந்த ராமனாகிய தேஜஸ்ஸானது அளவிடமுடியாதல்லவா ? காட்டில் ராமனுடைய வில்லினால் ரக்ஷிக்கப்பட்டிருக்கிற அவளை அபஹரிக்க நீ ஸமர்த்தனன்று.

479. तव श्रिया –स्ववैश्वरूप्येण सदाऽनुभूतयाऽप्यपूर्ववद्विस्मयमादधानया
गुणेन रूपेण विलासचेष्टितैः सदा तवैवोचितया तव श्रिया ।।

(ஆளவந்தார் ஸ்.- 38 )

உலகத்தைச் சரீரமாகக் கொண்ட தேவரீரால் எப்போதும் அநுபவிக்கப்பட்டிருந்தபோதிலும் ஒவ்வொரு நாளும் புதிதுபோல் ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறவளும், குணங்கள், ரூபங்கள், விளையாட்டு, தன்னையடைந்தவர்களை ரக்ஷிக்கிற வியாபாரங்கள் இவைகளால் தேவரீருக்குத் தகுந்தவளாயுமிருக்கிற தேவரீருடைய லக்ஷ்மியுடன்கூட.

480. श्रियः श्रीः ! श्रीरङ्गेशय ! तव च हृद्यां भगवतीं
श्रियं त्वत्तोऽप्युच्चैर्वयमिह फणामः शृणुतराम् ।
दृशौ ते भूयास्तां सुखतरलतारे श्रवणतः
पुनर्हर्षोत्कर्षात् स्फुटतु भुजयोः कञ्चुकशतम् ।।

( ஸ்ரீகுணரத்ந.கோ -9 )

லக்ஷ்மீக்கும் அழகு செய்கிற ரங்கநாதனே ! தேவரீர் மனதுக்குப் பிடித்த ஆறு குணங்கள் நிறைந்த லக்ஷ்மியை தேவரீரைக் காட்டிலும் உயர்ந்தவளாக நாங்கள் சொல்லுகிறோம்.

481. द्वौ च सदै – लक्ष्म्याः समस्तश्चिदचित्प्रपञ्चः
शेषस्तदीशस्य तु साऽपि सर्वम् ।
तथाऽपि साधारणमीशितृत्वं श्रीश्रीशयोः द्वौ च सदैकशेषी ।।

( ஸாத்வதம் )

அறிவுள்ளதும் அறிவில்லாததுமான எல்லா உலகமும் லக்ஷ்மீக்குச் சேஷம்; அவளும் அந்த உலகமும் அவளுக்குச் சேஷியான

எம்பெருமானுக்குச் சேஷம். இப்படியிருந்த போதிலும், இருவருக்கும் உலகத்தை நியமநம்பண்ணுகிற அதிகாரம் பொதுவாயிருக்கிறது. இரண்டு பேரும் சேர்ந்தே எப்போதும் உலகத்துக்கு ஒரே சேஷி.

482. उभयाधिष्ठानम् (ஷடர்த்த ஸங்க்ஷேபத்தில் ஸோமயாஜியாண்டான்)

சேஷியாயிருப்பது ஒன்று. அது எம்பெருமான் பிராட்டியாகிய இருவரிடத்திலிருக்கிறது.

युवत्वादौ तुल्येऽप्यपरवशताशत्रुशमन -
स्थिरत्वादीन् कृत्वा भगवति गुणान् पुंस्त्वसुलभान् ।
त्वयि स्त्रीत्वैकान्तान् म्रदिमपतिपारार्थ्यकरुणा-
क्षमादीन् वा भोक्तुं भवति युवयोरात्मनि भिदा ।।

ஸ்ரீ குணரத்ந. -34

तदन्तर्भावात् - स्वरूपं स्वातन्त्र्यं भगवत इदं चन्द्रवदने !
त्वदाश्लेषोत्कर्षाद्भवति खलु निष्कर्षसमये ।।
त्वमासीर्मातः ! श्रीः कमितुरिदमित्थंत्वविभवः
तदन्तर्भावात्त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि ।। ஸ்ரீ குணர. 28

तदन्तर्भावात्

483. दृढपूर्व (பாரதம் கர்ணபர்வம் - 72-54 )

முதலில் கேட்டதை உறுதியாய்ப் பிடித்துக்கொண்டிருப்பவனும், மூடனும், தர்மங்களை அறியாதவனும், ஜ்ஞாநவிருத்தர்களிடம் ஸந்தேஹங்களைக் கேட்காதவனும் ஆகிய மனிதன் - குருடன் பள்ளத்தில் விழுவதுபோல் கெடுதியையடைகிறான்.

484. अन्यथा (இதிஹாஸஸமுச்சயம் - 31-13)

மந்தபுத்தியையுடையவர்களாய் பெரியோர்களை நிந்திக்கிறவர்களாய் கெட்ட யுக்திகளாகிய பாம்பாலே கடிக்கப்பட்டவர்களாய் மயக்கமுள்ள இந்திரியங்களையுடையவர்களாயிருக்கிற வாதிகளுக்கு விஷயங்கள் உள்ளபடி தெரியாமல் வேறாகத் தோன்றும்.

नानयोर्वि - देवतिर्यङ्मनुष्येषु पुंनामा भगवान् हरिः ।
स्त्रीनाम्नी लक्ष्मीमैत्रेय ! नानयोर्विद्यते परम् ।।
'स्त्रीनाम्नी श्रीश्च विज्ञेया इति पाठान्तरम्' ।
यथा सर्व - नित्यैवैषा जगन्माता विष्णोः श्रीरनपायिनी ।
यथा सर्वगतो विष्णुस्तथैवेयं द्विजोत्तम ! ।।

485. अस्या देव्याः (ராமாயணம் ஸுந்தரகாண்டம் - 15-52 )

இந்த தேவியின் மனது அந்த ராமனிடத்திலும், அவன் மனது இவளிடத்திலும் நிலையாயிருக்கிறது. இந்தக் காரணத்தாலே இவளும் அந்த தர்மாத்மாவான ராமனும் ஒருமுஹூர்த்தமும் பிழைத்திருக்கிறார்கள். (முஹூர்த்தம் இரண்டு நாழிகை).

486. व्यापकौ - नारायणः परं ब्रह्म शक्तिर्नारायणी च सा ।
व्यापकावतिसंश्लेषादेकतत्त्वमिव स्थितौ ।। (அஹிர்புத்ந்யஸ.- 4-78 )

இரண்டு பேரும் உலகத்தை வியாபித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஒருபோதும் பிரிவில்லாமல் சேர்ந்திருப்பதால் ஒரே தத்துவம் போலிருப்பதாகச் சொல்லப்படுகிறார்கள்.

487. गाढोपगू -शान्तानन्तमहाविभूति परमं यद्ब्रह्मरूपं हरेः
मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतम् ।
यान्यन्यानि यथासुखं विहरतो रूपाणि सर्वाणि
तान्याहुः स्वैरनुरूपरूपविभवैर्गाढोपगूढानि ते ।।
( சது: ச்லோகீ - 4 )

தேவரீருடைய ஸ்வரூபத்தாலும் ரூபங்களாலும் எம்பெருமானுடைய ஸ்வரூபமும் ரூபங்களும் நெருக்கமாய் ஆலிங்கனம் பண்ணப் பட்டிருக்கின்றன. இங்கே ரூபங்களென்பது பரரூபமும், லீலைக்காக எடுத்துக் கொள்ளுகிற ரூபங்களும்.

---

## தமிழ் வசனங்கள்

**அளியனம் - தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துளோங்கும் ஒளியுளார்தாமேயன்றே தந்தையும்தாயுமாவார், எளியதோரரு ளுமன்றே என்திறத்தெம்பிரானுர், அளியன்நம்பையல்என்னுர் அம்மவோகொடியவாறே.** அளியனம்

102. **இன்றென்னைப்பொருளாக்கித் தன்னையென்னுள்வைத்தான்**
**அன்றென்னைப்புறம்போகப் புணர்த்ததென்செய்வான்**
**குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ் திருப்பேரான்**
**ஒன்றெனக்கருள்செய்ய உணர்த்தலுற்றேனே.**

(திருவாய்மொழி -10-8-9 )

இப்போது என்னையொரு வஸ்துவாகச் செய்து என் மனதில் வந்திருக்கிறான். முன் காலத்தில் தன்னை விட்டு நான் விஷயங்களில் அலையும்படி செய்தது எதற்காக ? வஸ்து என்பதற்கு எம்பெருமானுடைய ஜ்ஞாநமுள்ளவன் என்று அர்த்தம்.

103. **சூழ்விசும்பணி** (திருவாய்மொழி - 10-9-1 )

சூழ்ந்த ஆகாசத்தில் அழகான மேகம் வாத்யகோஷத்தை உண்டாக்கினது.

104. **நடுவேவந்து-விடுவேனோவென்விளக்கை யென்னாவியை**
**நடுவேந்துய்யக்கொள்கின்ற நாதனைத்**
**தொடுவேசெய்திளவாய்ச்சியர்கண்ணினுள்**
**விடவேசெய்து விழிக்கும்பிரானையே.** (திருவாய்மொழி - 1-7-5 )

ஒரு காரணமில்லாமல் வந்து பிழைப்பிக்கும்படி செய்கிற ஸ்வாமி.

105. **திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்ன**
**திருமால்வந்தென்னெஞ்சுநிறையப்புகுந்தான்**
**குருமாமணியுந்துபுனல் பொன்னித்தென்பால்**
**திருமால்சென்றுசேர்விடம் தென்திருப்பேரே.**

(திருவாய்மொழி - 10-8-1)

திருமாலிருஞ்சோலைமலையென்று சொன்னேன்; சொன்னவுடன் என் மனதில் லக்ஷ்மீபதி வந்து நிறையும்படி புகுந்தான்.

106. **வேரிமாறாத-மாரிமாறாத தண்ணம்மலை வேங்கடத்தண்ணலை**
**வாரிமாறாதபைம்பொழில் சூழ் குருகூர்நகர்**

காரிமாறன் சடகோபன் சொல்லாயிரத்திப்பத்தால்
வேரிமாறாதபூமேலிருப்பாள் வினை தீர்க்குமே.

(திருவாய்மொழி - 4-5-11)

வாஸனை ஒருபோதும் விட்டுப்போகாத தாமரைப்பூவிலிருக்கிற லக்ஷ்மீயானவள் ஜீவன்களுடைய கர்மங்களைத் தீர்ப்பள். இங்கே இன்ன வினையென்று சொல்லாத்தாலே உபாயத்துக்கு விரோதியான கர்மங்களையும், அந்த உபாயத்தாலே எம்பெருமானை அடைவதற்கு விரோதியான கர்மங்களையும் அந்த சொல் சொல்லுகிறது என்று கொள்ளவேணும்.

நின் திருவ-பண்டைநாளாலேநின் திருவருளும் பங்கயத்தாள் திரு
வருளும் கொண்டு நின்கோயில் சீய்த்துப்பல்படிகால் குடிகுடி
வழிவந்தாட்செய்யும் தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய் தெண்டிரைப் பொருநல்தண்
பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே.

-திருவாய் 9-2-1

107. உன்திரு- மாயம்செய்யேலென்னை உன்திருமார்வத்துமாலைநங்கை
வாசம்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணை கண்டாய்
நேசம்செய்துன்னோடென்னை யுயிர்வேறின்றியொன்றாகவே
கூசம்செய்யாதுகொண்டாயென்னைக்கூவிக்கொள்ளாய்
வந்தந்தோ. - திருவாய். 10-10-2 (பெரியாழ்வார் திருமொழி - 10-10-2)

தேவரீருடைய லக்ஷ்மீ.

108. திருவுக்கும் திருவாகியசெல்வா தெய்வத்துக்கரசேசெய்யகண்ணா
உருவச்செஞ்சுடராழிவல்லானே உலகுண்டவொருவா திருமார்பா
ஒருவற்காற்றியுய்யும்வகையின்றால் உடனின்றைவரென்னுள்
புகுந்து, ஒழியாதருவித்தின்றிட அஞ்சிநின்னடைந்தேன் அழுந்
தூர்மேல்திசைநின்றவம்மானே. - பெரிய திரு. 7-7-1

லக்ஷ்மீக்கும் அழகு செய்கிறவனாகிய ஸம்பத்தையுடையவனே !

109. தாமரையாள் (முதல் திருவந்தாதி - 67)

தாமரைப்பூவிலிருக்கும் லக்ஷ்மீயின் கணவனாகிய எம்பெருமான் ஒருவனையே பக்தி பிரபத்தியாகிய உபாயமும், பரிபூர்ண ப்ரம்மாநுபவமும் ஆகிய ஜ்ஞாநமானது விஷயமாகக் கொள்ளும்.

---

### அரும்பதவுரை

ஈடுமாறுகை - போவது, போர - மிகவும்.
உடல் - காரணம். தூர் - குற்றம்.
கொத்தை - சொத்தை, அதாவது குறைவு.

---

## 24. ஸாத்யோபாயசோதநாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

488. आरोग्यं

வியாதியில்லாமை இந்திரியங்களுக்கு வலிமையையும், ஐச்வரியம் சத்துருக்களையுண்டுபண்ணுவதையும், நீண்ட ஆயுஸ்ஸானது பந்துக்களின் பிரிவையும் உண்டுபண்ணுகின்றன. ஒருவன் இவைகளில் எதற்கு ஸந்தோஷப்படுகிறானோ அது எது ?

परमात्मनि यो रक्तो विरक्तोऽपरमात्मनि ।
सर्वेषणाविनिर्मुक्तः स भैक्षं भोक्तुमर्हति ।।

பார்ஹஸ்பத்ய ஸ்ம்ருதி (41-வது பக்கம் 194 -ம் நெ. பார்க்க)

489. महता (வராஹபுராணம்)

மிகுந்த புண்ணியமாகிய விலையைக்கொடுத்து இந்த உடம்பாகிய ஓடமானது வாங்கப்பட்டிருக்கிறது. துக்கஸமுத்திரத்தின் கரையை அடைவதற்காக அது உடைந்துபோவதற்குமுன் அவஸரப்படு.

सर्वलोकशरण्याय राघवाय महात्मने ।
निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम् ।। —ரா. யு. 17 - 17

सर्वं परवशं दुःखं सर्वमात्मवशं सुखम् ।
एतद्विद्यात् समासेन लक्षणं सुखदुःखयोः ।।

மநுஸ்ம்ருதி 4 -160 (53-வது பக்கம் 253 -ம் நெ. பார்க்க)

490. सर्वयोग्यम्

எல்லாருக்கும் தகுந்தவனாயும் சிரமத்தைக் கொடுக்காதவனாயும், தவறுதலுக்கு இடமில்லாதவனாயும் ஒப்பில்லாதவனாயும் பிரபந்நர்

களுடைய வருத்தத்தைப் போக்குகிறவனாயுமிருக்கிற எம்பெருமானை உபாயமாக நீ அடைய வேண்டியது. இங்கே முதல் நான்கு சொற்கள் விஷ்ணுவுக்கு விசேஷணமாயிருந்த போதிலும் பிரபத்தியினுடைய குணங்களைச் சொல்லுகின்றன.

491. त्रयाणां क्ष-

अष्टाङ्गयोगयुक्तानां ह्यागनिरतात्मनाम् ।
योगिनामधिकारः स्यादेकस्मिन् हृदयेशये ।।
व्यामिश्रयागयुक्तानां विप्राणां वेदवादिनाम्।
समन्त्रे तु चतुर्व्यूहे ह्यधिकारो न चान्यथा ।।
त्रयाणां क्षत्रियादीनां प्रपन्नानां च तत्त्वतः ।
अमन्त्रमधिकारस्तु चतुर्व्यूहक्रियाक्रमे ।।
सक्रिये मन्त्रचक्रे तु वैभवीये विवेकिनाम् ।
ममतासन्निरस्तानां स्वकर्मनिरतात्मनाम् ।।
कर्मवाङ्मनसैः सम्यग्भक्तानां परमेश्वरे ।
चतुर्णामधिकारो वै वृत्ते दीक्षाक्रमे सति ।।

(ஸாத்வதஸம்ஹிதை - 2-9)

விதிப்படி பிரபத்தி செய்த க்ஷத்திரியர் முதலான மூன்று வர்ணங்களுக்கும் நாலு வியூஹங்களுடைய ஆராதநத்தில் மந்திரமில்லாமல் அதிகாரமிருக்கிறது.

492. कुयोनिष्वपि (ஸநத்குமாரஸம்ஹிதை)

தாழ்ந்த ஜாதிகளில் பிறந்த எவன் ஒரு தடவை எம்பெருமானிடத்தில் பிரபத்தி பண்ணுகிறானோ, அவன் தாய் தகப்பனைக் கொன்றவனாய் இருந்தாலும் அவனை ஸம்ஸாரதுக்கத்தைப் போக்குகிற எம்பெருமான் ரக்ஷிக்கிறான்.

493. मां हि पार्थ (கீதை - 9-32)

பாபிகள் வயிற்றில் பிறந்த ஸ்திரீகளும் வைசியர்களும்

சூத்திரர்களும் ஆகிய இவர்களில் எவர்கள் என்னையடைகிறார்களோ, அவர்களும் உயர்ந்த கதியை அடைகிறார்கள்.

धर्मव्याधादय:

494. जनित्वाऽहं वंशे महति जगति ख्यातयशसां
शुचीनां युक्तानां गुणपुरुषतत्त्वस्थितिविदाम् ।
निसर्गादेव त्वच्चरणकमलैकान्तमनसाम्
अधोऽध: पापात्मा शरणद ! निमज्जामि तमसि ।।

(ஆளவந்தார் ஸ்தோத்திரம் - 61)

உலகத்தில் பிரஸித்தமான கீர்த்தியையுடையவர்களும் சுத்தமான வர்களும் யோகஞ்செய்கிறவர்களும் மூன்று குணமுள்ள பிரகிருதி, ஜீவன்கள் இவைகளின் உண்மையைத் தெரிந்தவர்களும் ஸ்வபாவத் தாலேயே தேவரீருடைய திருவடித்தாமரைகளில் நிலையுள்ள மனதை யுடையவர்களுமானவர்களுடைய பெரிய வம்சத்தில் பிறந்து நான் பாபத்தில் மனதுடையவனாய் ஸம்ஸாரத்தில் மூழ்கி கீழே போகிறேன். ரக்ஷிக்கிறவனே!

495. नाराणामयन–अधो न क्षीयते जातु यस्मात्तस्मादधोक्षज: ।
नाराणामयनत्वाच्च नारायण इति स्मृत: ।। —பார. உத்-63-32

லக்ஷ்மியோடு கூடிய நாராயணனையடைவதற்கு அவனுடைய இரண்டு திருவடிகளே உபாயம் என்கிற விச்வாஸமே த்வயத்தாலே சொல்லப்பட்ட சரணாகதி.

496. प्रपत्ति: (ஸ்ரீபாஷ்யகாரர் வாக்கியம்)

பிரபத்தியென்பது விச்வாஸம். அதாவது ஒரே தடவை பிரார்த்திப்ப தினாலேயே வேண்டியதை எம்பெருமான் கொடுப்பனென்கிற விச்வாஸத் துடன் பிரார்த்திப்பது.

497. अनन्य (பரதமுநி)

தனக்கு வேண்டியது வேறொருவனாலே முடித்துக்கொடுக்க முடியாதபோது மஹாவிச்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு, ஸமர்த்தனான ஒருவனையே உபாயமாக இருக்கவேண்டுமென்று பிரார்த்திப்பதே பிரபத்தி, அதுவே சரணாகதி.

न्यासः पञ्चा – निक्षेपापरपर्यायो न्यासः पञ्चाङ्गसंयुतः ।
संन्यासस्त्याग इत्युक्तः शरणागतिरित्यपि ।।

—லக்ஷ்மீதந்த்ரம் 17 - 74 (51-வது பக்கம் பார்க்க)

रक्षापेक्षां – सर्वज्ञोऽपि हि विश्वेशः सदा कारुणिकोऽपि सन् ।
संसारतन्त्रवाहित्वाद्रक्षापेक्षां प्रतीक्षते ।।

—லக்ஷ்மீதந்த்ரம் 17-78 (54-வது பக்கம் பார்க்க)

498. नमस्कारात्मकं यस्मै विधायात्मनिवेदनम् ।
त्यक्तदुःखोऽखिलान् कामानश्नुते तं नमाम्यहम् ।।

(மந்திரராஜபத ஸ்தோத்ரம் 11)

நமஸ்காரமாகிய ஆத்மஸமர்ப்பணத்தை (ஆத்மாவைக் கொடுப்பதை) எவனிடத்தில் செய்து, துக்கம் போய் வேண்டியதையெல்லாம் அநுபவிக்கிறானோ, அந்த எம்பெருமானை நமஸ்கரிக்கிறேன்.

अनेनैव

आत्मात्मीयभरन्यासो ह्यात्मनिक्षेप उच्यते ।

(லக்ஷ்மீதந்த்ரம் 17-79 -55-வது பக்கம் 264 நெ. பார்க்க)

षड्विधा शर – आनुकूल्यस्य सङ्कल्पः प्रातिकूल्यस्य वर्जनम् ।
रक्षिष्यतीति विश्वासो गोप्तृत्ववरणं तथा ।।
आत्मनिक्षेपकार्पण्ये षड्विधा शरणागतिः ।।

(அஹிர் - ஸம். 37 - 28, 29 (50-வது பக்கம் 232 நெ. பார்க்க)

499. प्रपत्तिं तां – आचम्य प्रयतो भूत्वा स्मृत्वाऽस्त्रं ज्वलनाकृति ।
तत्प्रविश्य विनिष्क्रान्तः पूतो भूत्वाऽस्त्रतेजसा ।।
प्रपत्तिं तां प्रयुञ्जीत स्वाङ्गैः पञ्चभिरावृताम् ।। (லக்ஷ்மீ தந்திரம் 28-11)

தன்னுடைய ஐந்து அங்கங்களோடு சேர்ந்த அந்தப் பிரபத்தியைச் செய்யக்கடவன்.

त्वमेव

500. स्वोज्जीवेनेच्छा (விஷ்ணுதத்வம்)

உன்னுடைய உயர்ந்த ஜீவநத்திலும், உன்னுடைய இருப்பிலும் ஆசையிருந்தால் எம்பெருமான் ஸ்வாமியாயிருப்பதும் அவனுக்கு ஆத்மா வேலைக்காரனாயிருப்பதும் ஸ்வபாவமாய் எப்போதுமிருக்கிறதென்று எப்போதும் நினை, இங்கே ஜீவநமென்பது மிகவுமுயர்ந்த புருஷார்த்தம் அடைவது. ஸத்தையென்பது அதற்கு வேண்டிய உபாயம்.

501. इज्याचार (யாஜ்ஞவல்க்யஸ்மிருதி - 1-8)

எம்பெருமானுடைய ஆராதநம், ஆசாரம், இந்திரியங்களை அடக்கு வது, ஒருவனை ஹிம்ஸிக்காமலிருப்பது, தாநம், வேதத்தை எப்போதும் சொல்லிக்கொண்டிருப்பது, இவைதவிர மற்ற வைதிககர்மங்கள், இவைகளுக்குள்ளே கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களாலே பரமாத்மாவைப் பார்ப்பது மிகவுமுயர்ந்த தர்மம்.

502. सर्वेषामेव (பாரதம் ஆநுசாஸநிகபர்வம் - 36-24)

எல்லா தர்மங்களுக்குள்ளே எம்பெருமானை ஆராதநம் செய்வதாகிய தர்மமானது மிகவுமுயர்ந்தது. அவன் தன் பக்தனைத் தன் சரீரம்போல ரக்ஷிக்கிறான்.

503. न विष्णवाराधनात् पुण्यं विद्यते कर्म वैदिकम् ।
तस्मादनादिमध्यान्तं नित्यमाराधयेद्धरिम् ।। (வ்யாஸஸ்ம். 2-42)

எம்பெருமானை ஆராதிப்பதைக் காட்டிலும் பாபத்தைப் போக்கக் கூடியதாய் வேதத்தில் சொன்ன கர்மம் வேறு இல்லை.

कृष्णं धर्मं – ये च वेदविदो विप्रा ये चाध्यात्मविदो जनाः ।
ते विदन्ति महात्मानं कृष्णं धर्मं सनातनम् ।।

(பார. ஆர. 71-123 -103 - வது பக்கம் 457 - நெ. பார்க்க )

504. कर्ता शास्त्रार्थ (பிரம்மஸூத்திரம் - 2-3-33 )

ஜீவன் பிரயத்நம் செய்வதாகிய கர்த்ருத்வமுள்ளவன், ஒன்றைச் செய் என்றும், ஒன்றைச் செய்யவேண்டாமென்றும் சொல்லுகிற சாஸ்திரத்திற்குப் பிரயோஜநமிருக்கவேண்டிய தாகையால்.

505. परात्तु (பிரம்மஸூத்திரம் - 2-3-40)

கீழே சொன்ன ஜீவனுடைய கர்த்ருத்வம் எம்பெருமானுக்-குட்பட்டது. இப்படியே வேதம் சொல்லுகிறபடியால்.

अचेष्टमानम्

साक्षादपि

506. अथ पातक (விஷ்ணுதர்மம் - 66-72)

ஒ பாரதனே ! நீ பாபங்களுக்குப் பயந்தால் வேறு வியாபாரங்களை ஆரம்பிக்காமல் எல்லா பிரகாரத்தாலும் நாராயணனையே அடைய வேண்டியவனாக எண்ணிக்கொண்டிரு.

507. अस्वर्ग्यं– कर्मणा मनसा वाचा यत्नाद्धर्मं समाचरेत् ।
अस्वर्ग्यं लोकविद्विष्टं धर्म्यमप्याचरेन्न तु ।।

(யாஜ்ஞவல்க்யஸ்மிருதி - 1-156)

உடம்பின் வேலையாலும் மனதாலும் வாக்காலும் பிரயத்நம் செய்து ஒருவன் தர்மத்தைச் செய்யவேண்டியது. சாஸ்திரத்தில் ஒரு பலனுக்கு உபாயமாகச் சொல்லப்பட்டதையும் ஸ்வர்க்கத்தை அடைவதற்கு விரோதியாயும் உலகத்தார் வெறுக்கக்கூடியதாயுமிருந்தால் செய்யக்-கூடாது.

तस्मै नम:

508. कलौ संकी – ध्यायन् कृते यजन् यज्ञैस्त्रेतायां द्वापरेऽर्चयन् ।
यदाप्नोति तदाप्नोति कलौ संकीर्त्य केशवम् ।।

(விஷ்ணுபுராணம் - 6-2-17)

கிருதயுகத்தில் தியாநஞ்செய்தும் , த்ரேதாயுகத்தில் யஜ்ஞங்கள் செய்தும் , த்வாபரயுகத்தில் எம்பெருமானுக்கு அர்ச்சனை செய்தும் , எந்த பலனை ஒருவன் அடைகிறானோ, அந்த பலனை கலியுகத்தில் எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி அடைகிறான்.

509. कलेर्दोष (ஸ்ரீபாரதம் - 11-3-51)

ஒ ராஜாவே ! தோஷத்துக்கிருப்பிடமான கலியுகத்துக்கு ஒரு பெரிய குணமிருக்கிறது. அதாவது கிருஷ்ணனுடைய திருநாமங்களைச் சொல்லுவ தாலே கர்மபந்தம் போய் எம்பெருமானை அடைகிறானென்பது.

510. कलौ कृतयुगम् (விஷ்ணுதர்மம் - 109-57)

எவனுடைய மனதில் கோவிந்தனிருக்கிறானோ அவனுக்கு கலியுகத்திலும் கிருதயுகமிருக்கிறது. எவனுடைய மனதில் அச்யு தனில்லையோ அவனுக்குக் கிருதயுகத்திலும் கலியுகமிருக்கிறது.

511. किन्तु तस्य (பௌஷ்கரஸம்ஹிதை)

பிரம்மாவே ! இந்த மந்திரத்துக்கும் அதைச் சொல்லிச் செய்யும் கர்மத்துக்கும் அதிகாரியும், இதைக் கேட்கிறவனும் கிடைக்கமாட்டார்கள்.

अकिञ्चनो- न धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी
न भक्तिमांस्त्वच्चरणारविन्दे ।
अकिञ्चनोऽनन्यगतिः शरण्य!
त्वत्पादमूलं शरणं प्रपद्ये ।।

ஆள.ஸ். 22 (50-வது பக்கம் 229 - ம் நெ. பார்க்க)

512. नरस्य (லக்ஷ்மீதந்திரம் - 28-17)

ஒருவன் தன் அதிகாரத்தை அறியாமையாகிய புத்திக் குறைவாலே பக்தியாகிய உபாயத்தைச் செய்ய ஆசைப்படுகிறான்.

कृतकृत्यः

513. अनुष्ठित - एवंरूपं तमभ्यर्च्य प्रक्षीणाशेषपातकः ।
अनुष्ठितक्रतुशतो भवत्येव न संशयः ।।

(அஹிர்புத்ந்யஸம்ஹிதை - 37-49)

இப்படிப்பட்ட அந்த எம்பெருமானை ஒருவன் அர்ச்சித்து, எல்லா பாபங்களிலிருந்து விலகினவனாய் நூறுயஜ்ஞங்களைச் செய்தவனாக ஆகிறான். இதில் ஸம்சயமில்லை.

514. तपस्विभ्यः (தை - 6-46)

யோகியானவன் தபஸ்ஸு செய்கிறவர்கள், ஜ்ஞாநமுடையவர்கள், கர்மஞ்செய்கிறவர்கள் இவர்களைக் காட்டிலுமுயர்ந்தவன். ஆகையால் அர்ஜுநனே ! நீ யோகியாக ஆகு. இங்கே யோகி என்பவன் ஆத்மஸ்வ ரூபத்தைத் தியானம் பண்ணுகிறவன். தபஸ்ஸு என்பது எம்பெருமானுக்கு

ஆராதநமாகச் செய்யப்பட்ட தபஸ்ஸு. ஜ்ஞாநமென்பது ஆத்மஜ்ஞாநத்தைக் காட்டிலும் வேறான ஜ்ஞாநம். கர்மம் என்பது அச்வமேதம் முதலான யாகங்கள்.

515. योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।
श्रद्धावान् भजते यो मां स मे युक्ततमो मतः ।। (கீதை - 6-47)

எவன் என்னிடத்தில் மனதை வைத்துச் சிரத்தையுடன் என்னைப் பஜிக்கிறானோ அவன் எல்லா யோகிகளைக் காட்டிலும் உயர்ந்தவனாக எண்ணப்படுகிறான்.

516. तेषां तु तप – यानि निःश्रेयसार्थानि चोदितानि तपांसि वै ।
तेषां तु तपसां न्यासमतिरिक्तं तपः श्रुतम् ।।

(அஹிர்புத்ந்யஸம்ஹிதை - 37-36)

எந்த தபஸ்ஸுக்கள் ஒருவனுக்கு மோக்ஷத்துக்கு ஸாதநங்களாக விதிக்கப்பட்டிருக்கின்றனவோ, அவைகளில் பிரபத்தி என்கிற தபஸ்ஸானது உயர்ந்த தபஸ்ஸாகச் சொல்லப்படுகிறது.

सत्कर्म

517. मानसं – यत्तु सातपवर्षेण दिव्यं तत् स्नानमुच्यते ।
वारुणं त्ववगाहस्तु मानसं विष्णुचिन्तनम् ।।

(கார்க்யஸ்மிருதி)

வெய்யிலோடு கூடின மழையினால் ஸ்நாநஞ் செய்வதைத் திவ்யமென்றும், ஜலத்தில் மூழ்கி ஸ்நாநஞ்செய்வதை வாருணமென்றும், எம்பெருமானை நினைப்பதை மாநஸஸ்நாநமென்றும் சொல்லுகிறது.

518. आर्तो वा यदि वा दृप्तः परेषां शरणागतः ।
अरिः प्राणान् परित्यज्य रक्षितव्यः कृतात्मना ।।

(ராமாயணம் யுத்தகாண்டம் - 18-28)

ஒருவன் ஆர்த்தனாகவோ, திருப்தனாகவோ மற்றவர்களிடத்தில் பிரபத்தி பண்ணினால் சாஸ்திரமறிந்த அவர்களால் அவன் விரோதியாயிருந்தாலும் தங்களுடைய பிராணனை விட்டாவது அவன் ரக்ஷிக்கத் தகுந்தவன். இங்கே ஆர்த்தனென்பது உடனே பலனை வேண்டுகிறவன்.

திருப்தனென்பவன் தாமதித்துப் பலனைப் பெறவேண்டுகிறவன்.

519. मित्रभावेन (ராமாயணம் யுத்தகாண்டம் - 18-3)

வேண்டியவன்போல் வந்தவனை நான் எந்தவிதத்தாலும் விடமாட்டேன். அவனிடத்தில் தோஷமிருந்தாலுமிருக்கட்டும் இதைப் பெரியோர்கள் கொண்டாடுவார்கள்.

520. यदि वा राव – आनयैनं हरिश्रेष्ठ ! दत्तमस्याभयं मया ।
विभीषणो वा सुग्रीव ! यदि वा रावणः स्वयम् ।।

(ராமாயணம் யுத்தகாண்டம் - 18-34)

ஸுக்கிரீவ ! அவன் விபீஷணனோ அல்லது ராவணனையோ, அவனை அழைத்துக்கொண்டுவா. வாநரசிரேஷ்டனே ! அவனுக்கு என்னால் அபயம் கொடுக்கப்பட்டது.

521. अनालोचितविशेषाशेषलोकशरण्य..........अनन्यशरणस्त्वत्पादार
विन्दयुगलं शरणमहं प्रपद्ये ।। (சரணாகதிகத்யம்)

தன்னையடைகிறவர்களிடத்தில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற வித்தியாஸத்தைப் பார்க்காமல் உலகத்தார் எல்லாருக்கும் ரக்ஷகன்.

षड्विधा शर – आनुकूल्यस्य सङ्कल्पः प्रातिकूल्यस्य वर्जनम् ।
रक्षिष्यतीति विश्वासो गोप्तृत्ववरणं तथा ।।
आत्मनिक्षेपकार्पण्ये षड्विधा शरणागतिः ।।

அஹிர்-ஸம். 37 - 28, 29 (50-வது பக்கம் 232 -ம் நெ. பார்க்க)

न्यासः पञ्चा – निक्षेपापरपर्यायो न्यासः पञ्चाङ्गसंयुतः ।
संन्यासस्त्याग इत्युक्तः शरणागतिरित्यपि ।।

லக்ஷ்மீதந்த்ரம் 17 - 74 (51 - வது பக்கம் 233 -ம் நெ. பார்க்க)

प्रपत्तिं तां – आचम्य प्रयतो भूत्वा स्मृत्वाऽस्त्रं ज्वलनाकृति ।
तत्प्रविश्य विनिष्क्रान्तः पूतो भूत्वाऽस्त्रतेजसा ।।
प्रपत्तिं तां प्रयुञ्जीत स्वाङ्गैः पञ्चभिरावृताम् ।।

ல.த. 28-10, 11 (113 - வது பக்கம் 499 - ம் நெ. பார்க்க)

522. प्रपत्तेः (ஸநத்குமாரஸம்ஹிதை)

இப்படி பிரபத்திக்கு வேறொன்றினுடைய அபேக்ஷை ஓரிடத்திலும் ஒருகாலத்திலுமில்லை. அது எல்லாவிடங்களிலும் எல்லாருக்கும் எல்லா பலனையும் கொடுக்கும்.

523. न विश्वसेदविश्वस्ते विश्वस्ते नातिविश्वसेत् ।
विश्वस्ताद्भयमुत्पन्नं समूलमपि कृन्तति ।। (பாரதம் உத்யோக -38-9)

ஒருவன் தன்னிடத்தில் நம்பிக்கையில்லாதவனிடத்தில் நம்பிக்கை வைக்கக்கூடாது. நம்பப்பட்டவனிடத்திலும் அதிக நம்பிக்கை வைக்கக் கூடாது. நம்பிக்கை வைப்பதாலுண்டாகும் பயமானது வேருடன் ஒருவனைக் கெடுத்துவிடும்.

524. यस्य यावांश्च (நாரதீயகல்பம் - 1-14)

எவனுக்கு மூலமந்திரத்தில் எவ்வளவு நம்பிக்கையிருக்கிறதோ அவனுக்கு அதற்குத் தகுந்தபடி பலன் கிடைக்கும். அதனுடைய பெருமையை இவ்வளவுதான் என்று அளக்கமுடியாது.

525. सकृदुच्चरितम् (விஷ்ணுதர்மம் - 70-84)

ஹரி: என்கிற இரண்டெழுத்துக்கள் எவனால் ஒருதரம் சொல்லப் பட்டனவோ, அவனால் மோக்ஷம் போவதற்கு ஸாதநங்கள் ஸித்தம் பண்ணப்பட்டன.

526. त्वदङ्घ्रिम् (ஆளவந்தார் ஸ்தோத்திரம் - 28)

தேவரீருடைய திருவடியைக் குறித்து எவனாலேயாவது எப்போதாவது எப்படியாவது ஒரு தடவை அஞ்ஜலி செய்யப்பட்டால் அது அப்போதே எல்லா பாபங்களையும் போக்கடிக்கிறது, நல்லவைகளை வளர்க்கிறது. அது ஒருகாலத்திலும் பலனில்லாமல் போகாது. இங்கே நல்லவைகளென்பது - எம்பெருமானுடைய அநுபவமும், அதற்காகச் செய்யவேண்டிய உபாயமும், அதற்கு வேண்டிய அங்கங்களும், அதின் அதிகாரமும், உபாயஞ் செய்தவனுக்கு ஸ்வயம்பிரயோஜநமான கைங்கரியமும்.

527. उदीर्णसंसारदवाशुशुक्षणिं क्षणेन निर्वाप्य परां च निर्वृतिम् ।
प्रयच्छति त्वच्चरणारुणाम्बुजद्वयानुरागामृतसिन्धुशीकरः ।।

(ஆளவந்தார் ஸ்தோத்திரம் - 29)

தேவரீருடைய திருவடிகளாகிய இரண்டு செந்தாமரைகளில் உண்டாகியிருக்கும் பக்தியாகிய அமிருதஸமுத்திரத்தின் ஒரு திவலை யானது, விருத்தியாகிக் கொண்டிருக்கிற ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயை ஒரு க்ஷணத்தில் அணைத்து, மிகவும் உயர்ந்த ஸுகத்தைக் கொடுக்கிறது.

528. वृथैव (சாண்டில்ய ஸ்ம்ருதி)

உன்னுடைய அனேகமான ஜந்மபரம்பரைகள் வீணாகப் போய் விட்டன. இந்த ஜந்மமும் அப்படியே வீணாகப் போய் விட்டதென்று நினைத்து பிரபத்தியைப் பண்ணு.

शरण्यं शर – इन्द्रकर्मा महेन्द्रस्त्वं पद्मनाभो रणान्तकृत् ।
शरण्यं शरणं च त्वामाहुर्दिव्या महर्षयः ।।

529. आलोड्च (பாரதம் ஆநுசாஸநிகபர்வம் -178-11)

எல்லா சாஸ்திரங்களையும் படித்து யுக்திகளைக் கொண்டு அடிக்கடி விசாரித்ததில் இது ஒன்று தான் நன்றாய் ஏற்படுகிறது. நாராயணனே எப்போதும் தியாநம் செய்யத் தகுந்தவன் என்று.

530. हरिरेकः सदा– एवमेव विजानीत नात्र कार्या विचारणा ।
हरिरेकः सदा ध्येयो भवद्भिः सत्त्वसंस्थितैः ।।
नान्यो जगति देवोऽस्ति विष्णोर्नारायणात्परः ।।

(ஹரிவம்சம் - 132-8)

ஸத்துவகுணமுள்ள உங்களாலே ஹரி ஒருவனே தியாநம் செய்யத் தகுந்தவன்.

531. स्मर्तव्यः सततं विष्णुर्विस्मर्तव्यो न जातुचित् ।
सर्वे विधिनिषेधाः स्युरेतयोरेव किङ्कराः ।। (ஹரிவம்சம் -132-14)

விஷ்ணுவை எப்போதும் நினைக்கவேண்டியது; ஒருபோதும் அவனை மறக்கக்கூடாது. சாஸ்திரங்களில் சொல்லிய விதி நிஷேதங்களெல்லாம், கீழே சொன்ன இரண்டையே விரிவாய்ச் சொல்லுகின்றன.

532. मामेव ये – दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ।। (கீதை - 7-14)

என்னிடத்திலேயே யார் பிரபத்தி பண்ணுகிறார்களோ, அவர்கள் தாண்டமுடியாத மாயையைத் தாண்டுகிறார்கள். இங்கே மாயை யென்பது ஸத்துவம் முதலான மூன்று குணங்களை யுடைய பிரகிருதி.

533. शरणं (ப்ராம்மபுராணம்)

எவர்கள் பக்தியோகம் பண்ணச் சக்தியில்லாதவர்களாய் தேவரீரை உபாயமாக அடைகிறார்களோ, அவர்களும் ஸம்ஸாரத்தைத் தாண்டி தேவரீருடைய இடமாகிய வைகுந்தத்தை அடைகிறார்கள்.

534. यद्येन (அஹிர்புத்ந்யஸம்ஹிதை - 37-25)

பலத்தில் ஆசையையுடைய எவனெவனால் எந்தெந்த பலன்கள் வேறு ஸாதநங்களாலே அடையமுடியாதனவோ, முமுக்ஷுவாலே எந்த மோக்ஷமென்கிற பலனானது கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோக-மாகிய இவைகளால் அடையமுடியாதோ, ஏ மஹர்ஷியே ! அவனவனாலே பிரபத்தியாலேயே அந்தந்த பலன்கள் அடையப்படுகின்றன. புருஷோத்தம னான பரமாத்மாவும் அதனாலேயே அடையப்படுகிறான். முமுக்ஷு ஆசைப்படுகிற இடமானது எங்கே போய்த் திரும்பி வருவதில்லையோ, அந்த உயர்ந்த இடம்.

535. ततश्च प्रत्यहं (ஸ்ரீ வைகுண்ட கத்யம்)

மேலே ஒவ்வொரு நாளும் தான் கடைத்தேறுவதற்காக இப்படி த்யாநம் செய்ய வேண்டியது.

536. अथ परमैकान्तिन: (நித்யம்)

பரமைகாந்திகள் எம்பெருமானுக்கு ஆராதநம் செய்ய வேண்டிய க்ரமத்தைச் சொல்லுகிறேன். எம்பெருமானுடைய கைங்கரியமொன்றிலேயே ஆசையையுடைய பரமைகாந்தியாக ஆகி.

537. अत्यर्थ (நித்தியம்)

அளவில்லாத பிரீதியோடு கூடிய, நடுவில் வேறு எண்ணம் கலக்காத கண்ணாலே பார்ப்பது போல் மிகவும் தெளிவான தியாநத்தைச் செய்துகொண்டிரு.

538. अभिगच्छन् (வங்கிபுரத்துநம்பிகாரிகை - 34-36)

காலைவேளையில் எம்பெருமானிடம் போய், பிறகு அவனுடைய ஆராதநத்துக்கு வேண்டிய வஸ்துக்களை ஸம்பாதித்து அதற்கு மேலே அவனை ஆராதநஞ் செய்து, அதற்கு மேலே மந்திரங்களை ஜபித்துக் கொண்டிருந்து, கடைசியில் மிகவுமுயர்ந்தவனான அவனைத் தியாநம் பண்ணிக்கொண்டு, இப்படி சொல்லப்பட்ட ஐந்து காலங்களில் அவனை ஆராதித்துக் கொண்டு நாட்களைப் போக்குவேன். 294-வதையும் பார்க்க. எம்பெருமானிடம் போய் என்பதற்கு — அவனிடம் போய் இன்றைக்குத் தேவரீருடைய கைங்கரியங்கள் அபராதமில்லாமல்நடக்க வேண்டுமென்று பிரார்த்திப்பது என்று பொருள். இதற்கு அபிகமநம் என்று பொருள். மற்ற நாலு காலங்களில் செய்கிற வேலைகளுக்கு, உபாதாநம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம் என்று பெயர்.

539. न देवलोका (ராமாயணம் அயோத்யா - 31-5)

தேவரீரை விட்டு, வைகுந்தமென்கிற லோகத்துக்குப் போவதையும், சாவில்லாமல் ஆத்மாவை அநுபவித்துக்கொண்டிருப்பதையும், உலகங் களை ஆளுவதாகிய ஐசுவரியத்தையும் நான் ஆசைப்படவில்லை.

भवांस्तु

540. यत्र कुत्र कुले (இரண்டாவது ஜிதந்தா - 8)

எனக்கு எந்த குலத்தில் வாஸமிருந்தாலுமிருக்கலாம்; எவர் களிடத்திலாவது பிறப்பு இருக்கட்டும். தேவரீருடைய கைங்கரியமாகிய போகத்தில் எந்தவிடத்திலும் எந்தக்காலத்திலும் பிரீதியிருக்கவேண்டும். தேவரீரைத்தவிர வேறு எந்த தேவதையையும் உத்தேசித்து உடம்பின் வேலை, மனது, வாக்கு, தலை இவைகளாலே ஒருவிதமாயும் ஒன்றையும் செய்யமாட்டேன்.

541. विष्णुं ब्रह्मण्य (பாரதம் ஆநுசாஸநிக - 142-59-61)

எவன் தாமரைக்கிழங்கைத் திருடுகிறானோ, அவன் பிராம்மணர்-களுக்கு ஹிதத்தைச் செய்கிறவனும் தேவர்களுக்கு நியமநஞ் செய்கிறவனும் எல்லா உலகத்தாராலும் நமஸ்காரம் செய்யப்பட்டவனும் மூன்று உலகங்களுடைய ஸிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளுக்குக் காரணமும், தன்னை நியமநம் பண்ணுகிற வேறொருவனில்லாதவனும், உலகத்துக்கு ஆதாரமாயும் அதை உண்டுபண்ணி அழிக்கிறவனும்,

உலகங்களுக்கு குருவுமான விஷ்ணுவை விட்டு வேறு தேவதையை பஜிக்கட்டும். இங்கே ஸிருஷ்டியையும் ஸம்ஹாரத்தையுமிரண்டு தடவை சொன்னது-மஹத்தத்துவம் முதல் பிருதிவீ வரையிலுள்ளவைகளின் ஸிருஷ்டியாகிய ஸமஷ்டி ஸிருஷ்டியையும், பிறகு நான்கு வித மான பிராணிகளை ஸிருஷ்டிப்பதாகிய வியஷ்டி ஸிருஷ்டியையும் நினைத்து.

542. विष्णुधर्म (இதிஹாஸஸமுச்சயம் - 12-77)

எவன் தாமரைக்கிழங்கைத்திருடுகிறானோ அவன் எம்பெருமானை ஸந்தோஷப்படுத்துகிற தர்மங்களைச் செய்யாதவனாயும், அவைகளுக்கு முகங்கொடாதவனாயும், கெட்டதர்மங்களையும், கெட்டவிரதங்களையும் செய்யும் ஸ்வபாவமுள்ளவனாயும் ஆகக்கடவன்.

आराधनानाम्

543. धर्मः श्रुतः (பாரதம் ஆச்வமேதிகபர்வம் - 96-31)

ஒ ராஜச்ரேஷ்டனே! ஒருவன் தர்மஞ் செய்ததைக் கேட்ப தும், பார்ப்பதும், நினைப்பதும், சொல்லுவதும், அதைப் பார்த்து ஸந்தோஷப்படுவதும், இவைகளைச் செய்கிறவனை எப்போதும் பரிசுத்தம் செய்யும்.

544. तस्मात् सप्रणवं शूद्रो मन्नामानि न कीर्तयेत् ।
प्रणवं हि परं लोके ब्रह्म ब्रह्मविदो विदुः ॥

(பாரதம் ஆச்.பர்வம் - 1(18-14)

ஆகையாலே சூத்திரன் என்னுடைய திருநாமங்களைப் ப்ரணவத் தோடு சேர்த்து சொல்லக்கூடாது.

545. अष्टाक्षर (நாரதீயகல்பம்)

எட்டெழுத்தாகிய மூலமந்திரத்தினுடைய ஜபமானது நான்காம் வேற்றுமையுருபில்லாமல் செய்யப்படவேண்டியதென்று விதிக்கப்-பட்டிருக்கிறது. அப்படியே, ஸ்வரமும், பிரணவமும், அங்கநியாஸமும், வேறுவிதிகளும் இல்லை. ஸ்திரீகளுக்கும் சூத்ரஜாதிகளுக்கும் மந்திரம் மாத்திரத்தைச் சொல்லுவதுதான் ஜபமென்று சாஸ்திரத்தில் சொல்லப்-படுகிறது.

546. नमो नाराय - ततः प्रभाते विमले विनिवृत्ते च जागरे ।
नमो नारायणेत्युक्त्वा श्वपाकः पुनरागमत् ॥

(வராஹபுராணம் - 139-53)

பிறகு நன்ருய் பொழுது விடிந்தவுடன் விழித்துக்கொண்டு, எம்பெருமானைப் பாடுவது என்கிற விரதம் முடிந்தவுடன், நமோ நாராயண என்று சொல்லி நாய் மாம்ஸத்தைத் தின்கிற ஜாதியில் பிறந்த நம்பாடுவன் என்பவன் திரும்பிவந்தான்.

547. आध्यात्मिकाधिभौतिकाधिदैविकदुःखविघ्नगन्धरहितस्त्वं द्वयमर्थानु-सन्धानेन सह सदैवं वक्ता यावच्छरीरपातमत्रैव श्रीरङ्गे सुखमास्स्व ॥ २० ॥ शरीरपातसमये तु केवलं मदीययैव दयया अतिप्रबुद्धो मामेवावलोकयन् अप्रच्युतपूर्वसंस्कारमनोरथो जीर्णमिव वस्त्रं सुखेनेमां प्रकृतिं स्थूलसूक्ष्मरूपां विसृज्य तदानीमेव मत्प्रसादलब्ध मच्चरणारविन्दयुगलैकान्तिकात्यन्तिक परभक्ति - परज्ञान - परमभक्ति - कृतपरिपूर्णानवरत नित्यविशदतमानन्य-प्रयोजनानवधिकातिशय-प्रियमदनुभवस्त्वं तथाविध मदनुभवजनिता-नावधिकातिशयप्रीति-कारिताशेषावस्थोचिताशेषशेषतैक रतिरूपनित्यकिङ्करो भविष्यसि २१ मा ते भूदत्र संशयः२२‘अनृतं ....’ ‘मा शुचः’ इति मयैव ह्युक्तम् २३ अतस्त्वं .........सुखमास्स्व ॥ (சரணாகதிகத்யம் 20 முதல் 24 வரை)

த்வயமென்கிற மந்திரத்தை அதின் அர்த்தத்தை நினைப்பதுடன் கூட எப்போதும் இப்படியே சொல்லிக்கொண்டிருக்கிற நீ.

548. क्लेशानां - तदेतत् कथितं बीजमविद्याया मया तव ।
क्लेशानां च क्षयकरं योगादन्यन्न विद्यते ॥ (விஷ்ணுபுராணம்- 6-7-25)

அவித்யை முதலான க்லேசங்களை நாசம் செய்யத்தகுந்தது யோகத்தைக் காட்டிலும் வேறில்லை. க்லேசம் என்பதின் பொருளை 12-வது பக்கம் 53-வதில் பார்க்க.

549. न कर्मणाम् (விஷ்ணுதர்மம் - 102-4)

கர்மங்களை நாசம் பண்ணுவது யோகமில்லாமல் பதினுயிரம் பிறப்புகளாலும் முடியாது. யோகமாகிய நெருப்பே கர்மமாகிய உலர்ந்த புல்லை நாசம் செய்கிறது.

---

### தமிழ் வசனங்கள்

குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள் நாலிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன் புனித நின்
இலங்குபாதமன்றிமற்றொர் பற்றிலேனெம்மீசனே .

110. செய்தவேள்வியர் (திருவாய்மொழி - 5-7-5)
யஜ்ஞங்களைச்செய்தவர்கள், இங்கேவேள்வியென்பது பிரபத்தி.

111. மொய்த்தவல்வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால்
கத்திரபந்துமன்றே பராங்கதிகண்டுகொண்டான்
இத்தனையடியராஞர்க்கிரங்குநம்மரங்கனுய
பித்தனைப்பெற்றுமந்தோ பிறவியுள்பிணங்குமாறே. (திருமாலை - 4)

நெய்க்குடத்தில் எறும்பு மொய்த்துக்கொண்டிருப்பது போல தன்னைச் சூழ்ந்துகொண்டிருக்கிற பலமான கர்மங்களுக்குள் நின்று, மூன்றெழுத்தை உடைய கோவிந்தா என்கிற பெயரால் க்ஷத்ரபந்துவென்பவனும் உயர்ந்த கதியையடைந்தான். தன்னுடைய தாஸர்கள் விஷயத்தில் இவ்வளவு இரக்கப்படும் பயித்தியக்காரனுகிய ரங்கநாதனை அடைந்தும் ஸம்ஸாரத்தில் கஷ்டப்படும் விதம் என்ன?

நிரந்தரம்- இரந்துரைப்பதுண்டு வாழி ஏமநீர்நிறத்தமா
வரந்தரும் திருக்குறிப்பில் வைத்தாகில்மன்னுசீர்
பரந்தசிந்தையொன்றிநின்று நின்னபாதபங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்கவேண்டுமே.

பூசித்தும்-தரித்திருந்தேனாகவே தாராகணப்போர்
விரித்துரைத்தவெந்நாகத்துன்னைத் - தெரித்தெழுதி
வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது.

*தனக்கேயாக-எனக்கேயாட்செய் யெக்காலத்துமென்று என்*
*மனக்கேவந்திடைவீடின்றிமன்னித்*
*தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே*
*எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே.*

112. *இனிப்போய் - உனக்குப்பணிசெய்திருக்கும் தவமுடையேனினிப்*
*போயொருவன்றனக்குப்பணிந்து கடைத்தலைநிற்கைநின்சாயை*
*யழிவுகண்டாய் புனத்தினைகிள்ளிப்புதுவவிகாட்டி உன்பொன்*
*னடிவாழ்கவென்று இனக்குறவர்புதியதுண்ணும் எழில்மாலி*
*ருஞ்சோலையெந்தாய்.* - பெரியாழ்வார் திரு. 5-6-3

தேவரீருக்குக் கைங்கரியம்செய்து கொண்டிருக்கும்படியான தபஸ்ஸை யுடைய நான் இனிமேல் வேரெருவனிடம் போய் வணங்கி அவன் வீட்டு வாசலிலே தூரநிற்பது தேவரீருடைய தேஜஸ்ஸுக்குக் குறைவு. இதைத் தேவரீர் பார்த்தருளவேணும்.

113. *கூறைசோ - நெடுமையாலுலகேழுமளந்தாய் நின்மலர்நெடியாய்*
*அடியேனைக் குடிமைகொள்வதற்கையுறவேண்டா கூறைசோ*
*றிவைவேண்டுவதில்லை, அடிமையென்னுமக்கோயின்மையாலே*
*அங்கங்கேயவைபோதருங்கண்டாய் கொடுமைக் கஞ்ஞனைக்*
*கொன்று நின்தாதைகோத்தவன் தளைகோள்விடுத்தானே.*
- பெரியாழ்வார் திருமொழி 5-1-4

உடுத்திக்கொள்ளத் துணியையும் சாப்பிடச் சோற்றையும் தேவரீரிடத்தில் நான் கேட்பதில்லை.

*உன்னித்துமற்றொருதெய்வம் தொழாளவனையல்லால்*
*நும்மிச்சைசொல்லி நும்தோள்குலைக்கப்படுமன்னைமீர்*
*மன்னப்படும் மறைவாணனை வண்டுவராபதி*
*மன்னனை ஏத்துமினேத்துதலும் தொழுதாடுமே.*

114. *தேவனெம்-தேவுமெப்பொருளும் படைக்கப்*
*பூவில்நான்முகனைப் படைத்த*
*தேவனெம்பெருமானுக்கல்லால்*
*பூவும்பூசனையும் தகுமே?* - திருவாய்மொழி 2-2-4

தேவனுன எம்பெருமானுக்கில்லாமல் வேறு எவனுக்கு புஷ்பமும் பூஜையும் தகும்.

115. ஈன்றோளி-உலகின தியல்வே, ஈன்றோளிருக்க
மணைநீராட்டி, படைத்திடந் துண்டுமிழ்ந்
தளந்து, தேர்ந்துலகளிக்கும்முதற்பெரும்
கடவுள்நிற்ப, புடைப்பலதானறி
தெய்வம்பேணுதல், தனது
புல்லறிவாண்மைபொருந்தக்காட்டி,
கொல்வனமுதலாவல்லனமுயலும்,
இனையசெய்கை யின்புதுன்பளி,
தொன்மாமாயப்பிறவியுள்நீங்கா,
பன்மாமாயத்தழுந்துமாநளிர்ந்தே. (திருவாசிரியம் - 6)

பெற்ற தாயாரிருக்க, அவளை விட்டு மரப்பாச்சிக்கு ஸ்நானம் செய்து. இது போல் உண்டுபண்ணின எம்பெருமானிருக்க வேறு தெய்வத்தை உலகத்தார் பூஜை செய்வதாகிய ஸ்வபாவம் என்னவென்று ஆழ்வார் ஆச்சரியப்படுகிருர்.

116. பேயிருக்குநெடுவெள்ளம் பெருவிசும்பின் மீதோடிப் பெருகு
காலம், தாயிருக்கும்வண்ணமே யும்மைத்தன்வயிற்றிருத்தியுய்
யக்கொண்டான்,போயிருக்கமற்றிங்கோர் புதுத்தெய்வம்
கொண்டாடும் தொண்டீர், பெற்றதாயிருக்கமணைவெந்நீராட்டு
திரோ மாட்டாததகவற்றீரே. - பெரியதிருமொழி 11-6-6

இங்கே எம்பெருமானை விட்டு ஒரு ஜீவனை தைவமாக வைத்துக் கொண்டு அவனைக் கொண்டாடும்படியான உலகத்தார்களே! பெற்றதா யிருக்க, அவளை விட்டு ஒரு மரப்பாச்சிக்கு வெந்நீரால் ஸ்நானம் செய் கிறீர்களா? எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யமுடியாதபடி அவனுடைய கருணையில்லாதவர்களா நீங்கள்?

வாயவனை யல்லது வாழ்த்தாது கையுலகம்
தாயவனை யல்லது தாம்தொழா- பேய்முலைநஞ்
சூணாகவுண்டானுருவொடு பேரல்லால்
காணாத கண் கேளா செவி.

117. சொன்னல் (திருவாய்மொழி - 3-9-1)

நான் எம்பெருமானைத் தவிர வேறொருவனையும் பாடமாட்டேன். இந்த விஷயத்தை நான் சொல்வதுகூட விரோதம். ஆனபோதிலும் சொல்லுகிறேன் கேளுங்கள்.

118. சிந்தை (திருவாய்மொழி - 7-10-10)

என் நினைவானது வேறு தேவதை விஷயத்தில் இருக்கிறதில்லை-யென்கிற என் ஸ்வபாவத்தைத் தேவர்களுக்கு உபகாரம் செய்யும் எம்பெருமான் அறிவான்.

119. வருதேவர்- பெருநீரும் விண்ணும் மலையுமுலகேழும்
ஒருதாராநின்னுளொடுக்கிய நின்னையல்லால்
வருதேவர் மற்றுளரென்றென் மனத்திறையும்
கருதேன் நான் கண்ணபுரத்துறையம்மானே.

-பெரியதிருமொழி 8-10-2

நான் அடையும்படியாக என்னிடம் வரும் தேவதை வேறொருவன் இருக்கிறனென்று நான் கொஞ்சமும் எண்ணமாட்டேன்.

120. குன்றமெடுத்தபிரானடியாரொடும்
ஒன்றிநின்ற சடகோபனுரைசெயல்
நன்றிபுனைந்த ஓராயிரத்துள்ளிவை
வென்றிதரும்பத்தும் மேவிக்கற்பார்க்கே. - திருவாய் 7-4-11

கோவர்த்தநமலையைத் தூக்கி கோகுலத்தை இரக்ஷித்த எம்பெருமான் உடைய தாஸர்களோடு சேர்ந்திருந்த சடகோபன்.

121. ஏத்தியிருப் - மாறாயதானவனை வள்ளுகிரால்மார்விரண்டு
கூறாகக்கீறியகோளரியை - வேறாக
ஏத்தியிருப்பாரைவெல்லுமே, மற்றவரைச்
சாத்தியிருப்பார்தவம். - நான்முகன்திரு. 18

எம்பெருமானை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்கிறவர்களை, அவர்களை காட்டிலும் வேறாய், அவர்களைச் சேர்ந்திருப்பவர்களுடைய தபஸ்ஸானது ஜயிக்கும்.

வாயினால்-சீயினால் செறிந்தேறியபுண்மேல்செற்றலேறிக்குழம்
பிருந்து எங்கும்-ஈயினாலரிப்புண்டு மயங்கி யெல்லைவாய்ச்சென்று
சேர்வதன் முன்னம் வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்தி
டைக்கைகளைக்கூப்பிப் போயினால்பின்னை இத்திசைக்கென்றும்
பிணைகொடுக்கிலும் போகவொட்டாரே.

122. நாமஞ்சொல் - கிடந்தநம்பிகுடந்தைமேவிக் கேழலாயுலகை யிடந்த
நம்பி, எங்கள்நம்பி யெறிஞரரணழியக், கடந்தநம்பிகடியாரி

*லங்கை உலகையீரடியால், நடந்தநம்பிநாமம்சொல்லில் நமோ நாராயணமே.*
- பெரிய திருமொழி 6.10.1

எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லும்போது நமோ நாராயண என்று சொல்லவேண்டியது.

---

*அரும்பதவுரை*

செருக்கு — கர்வம்.
விழுக்காடு — தானுய்ப்போய் விழுவதாலே ஏற்பட்டது.
கடகம் — கத்தி முதலானவைகள் உடம்பில் படாதபடி ஒருவனுல் தரித்துக்கொள்ளப்பட்ட ஆயுதம்.

---

## 25. ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரம்
### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

550. आस्फोटयन्ति (வராஹ புராணம்)

பிதிருக்களும் பிதாமஹன்களும், நம்முடைய குலத்திலே விஷ்ணுபக்தன் பிறந்திருக்கிருன். அவன் நம்மைக் கரையேற்றுவனென்று தோளைத் தட்டிக் கொண்டு கூத்தாடுகிருர்கள்.

551. यो ह्येनं पुरुषं वेद देवा अपि न तं विदुः ।
सर्वमाश्चर्यमेतस्मिन् निर्वृत्तं राजसत्तम ! ।।

(பாரதம் ஆரண்ய பர்வம் 191 - 29)

எவன் இந்த கிருஷ்ணனை உள்ளபடி அறிகிருனே அவனுடைய பெருமையை நித்தியஸூரிகளும் இவ்வளவென்று அறியார்கள்.

552. स शूद्र इति - ब्राह्मणस्य न कर्तव्यं त्रिर्यक्पुण्ड्रस्य धारणम् ।
स शूद्र इति मन्तव्यस्तिर्यक्पुण्ड्रस्य धारणात् ।।

(பாரதம் ஆச்வமேதிகபர்வம் - 118-32)

சூத்திரர்களான எவர்கள் எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவர்களாக இருக்கிருர்களோ, அவர்கள் சூத்திரர்களன்று. அவர்கள் பாகவதர்களான பிராம்மணர்கள். எல்லா ஜாதிகளிலும் எவர்கள் ஜநார்த்தநனுன எம்பெருமானிடத்தில் பக்தியில்லாதவர்களோ, அவர்களே சூத்திரர்கள்.

553. मा जनिष्ट (வராஹபுராணம்)

எவனுக்கு பிறந்ததுமுதல் சாகிறவரையில் வாஸுதேவன் தைவ மன்றே, அவன் நம்முடைய குலத்தில் பிறக்கவேண்டாம். பிறந்தாலும் சீக்கிரம் மரணமடையட்டும்.

554. स शूद्रः (பாரமேஷ்டிய ஸம்ஹிதை)

பிராமணன் நெற்றியில் புண்ட்ரத்தைக் குறுக்காகத் தரிக்கக்கூடாது. அப்படித் தரிக்கிறவன் அந்தக் காரணத்தாலே சூத்திரனென்று எண்ணத் தகுந்தவன்.

555. चण्डालमपि –

न जात्या पूजिता राजन् ! गुणाः कल्याणकारणाः ।
चण्डालमपि वृत्तस्थं तं देवा ब्राह्मणं विदुः ॥

(பாரதம் ஆச்வமேதிகபர்வம் - 116-8)

ராஜாவே! கௌரவம் செய்யத்தகுந்த மங்களத்தைச் செய்கிற குணங்கள் ஜாதியினால் உண்டாகிறதில்லை. தன்னுடைய ஆசாரப்படி நடக்கிற சண்டாளனையும் பிராம்மணனென்று தேவர்கள் அறிகிறார்கள்.

556. चण्डालाः प्रत्यवसिताःपरिव्राजकतापसाः ।
तेषां जातान्यपत्यानि चण्डालैः सह वासयेत् ॥ (தக்ஷஸ்ம்ருதி 4 - 20)

ஸந்நியாஸிகளும் தபஸ்ஸு செய்கிறவர்களும் பிரஷ்டர்களானால் சண்டாளர்களாகிறார்கள். அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகளைச் சண்டாளர் களுடன் வஸிக்கும்படி ராஜா செய்ய வேண்டியது.

557. न तेन वृद्धः (மநுஸ்மிருதி — 2 - 156)

எவன் தலை நிறைத்திருக்கிறதோ, அதனாலே அவன் கிழவனாக விளங்குவதில்லை. சிறு பிள்ளையாயிருந்தாலும் எவனுக்கு நல்ல ஜ்ஞானமிருக்கிறதோ, அவனைக் கிழவனென்று தேவர்கள் அறிகிறார்கள்.

558. भुक्तवत्सु (பாரதம் உத்யோகபர்வம் — 93 - 43,45)

பிராமணசிரேஷ்டர்கள் சாப்பிட்டபிறகு, மிகவுமுயர்ந்த ஆஸநத்தில் உட்கார்ந்துகொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் சுத்தமாயும் குணமுடையதுமான விதுரருடைய அந்நத்தைச் சாப்பிட்டான்.

559. भीष्मद्रोणौ (பாரதஸாவித்ரீ)

தாமரைப்பூபோன்ற திருக்கண்களையுடையவனே! பீஷ்மரையும், த்ரோணரையும், என்னையும் விட்டுவிட்டு, எதற்காக சூத்ரனுடைய போஜநத்தைச் சாப்பிட்டீர்.

560. द्विषदन्नम् (பாரதம் உத்யோகபர்வம் - 91-27)

த்வேஷமுள்ளவன் கொடுக்கும் அந்நத்தைச் சாப்பிடக்கூடாது, த்வேஷமுள்ளவனுக்கு அந்நத்தைக் கொடுத்துச் சாப்பிடச் சொல்ல கூடாது. ராஜாவே! பாண்டவர்களிடத்தில் நீ த்வேஷம் பண்ணுகிறாய். அவர்கள் எனக்குப் பிராணனல்லவா?

561. आर्याधिष्ठिता: (ஆபஸ்தம்பஸூத்ரம் - 2-2-4)

பிராம்மணர்களாலே நியமநம் பண்ணப்பட்ட சூத்திரர்கள் அவர்களுடைய அந்நத்தைப் பாகம் செய்யத் தகுந்தவர்கள்.

562. भुक्तवत्सु द्विजाग्र्येषु निषण्णेषु वरासने ।
शुचिस्तु प्रयतो भूत्वा विदुरोऽन्नमुपाहरत् ।।

(பாரதம் உத்யோகபர்வம் - 91-43)

ஸ்வயம் பரிசுத்தனான விதுரன் பிராம்மணர்களுக்கு அந்நத்தைப் பாகஞ்செய்வதற்கு வேண்டிய குணமுள்ளவனாய் அந்நத்தைக் கொண்டு வந்தார்.

563. विष्णु: नित्यम्

ஓ குழந்தாய்! எம்பெருமான் ஜ்ஞானத்தால் எப்போதும் ஸ்தோத்ரம் பண்ணத் தகுந்தவன். ஆகையால் நித்தியமான அவன் விஷயமான உயர்ந்த ஜ்ஞாநத்தைப் பிராம்மணனிடத்திலிருந்து ஸம்பாதித்துக் கொள்ள வேண்டியது.

564. प्राप्यं ज्ञानं ब्राह्मणात् क्षत्रियाद्वा
वैश्याच्छूद्राद्वाऽपि नीचादभीक्ष्णम् ।
श्रद्धातव्यं श्रद्धधानेन नित्यं
न श्रद्धिनं जन्ममृत्यू विशेताम् ।।

(பாரதம் சாந்திபர்வம் — 323- 88)

ஜ்ஞாநமானதுபிராம்மணனிடமிருந்து, அல்லது க்ஷத்திரியனிட மிருந்து அல்லது வைசியனிடமிருந்து அல்லது சூத்திரனிடமிருந்து அல்லது அதற்கும் தாழ்ந்த ஜாதியிலிருக்கிறவனிட மிருந்தும் அடிக்கடி ஸம்பாதிக்க வேண்டியது.

565. शूद्रयोनावहं जातो नातोऽन्यद्वक्तुमुत्सहे ।
कवेरस्य तु या बुद्धिर्वेद तां शाश्वतीमहम् ।।

(பாரதம்-உத்யோகபர்வம்-41-5)

சூத்திரஜாதியில் பிறந்த நான் இதற்கு மேல் வேறொன்றையும் சொல்லத் துணியவில்லை.

भक्तिरष्टविधा

यः शूद्रं भगवद्भक्तं निषादं श्वपचं तथा ।
वीक्षते जातिसामान्यात् स याति नरकं नरः ।।

स्त्रियो वैश्याः -

566. स्वे स्वे कर्मणि (கீதை — 18-45-46)

தன் தன் கர்மத்தில் பிரீதியுள்ளவனுயிருந்து மனிதன் அடைய வேண்டிய புருஷார்த்தத்தை அடைகிறுன். இதை எப்படி அடைகிறு னென்பதைக் கேள். எம்பெருமானை தன்னுடைய கர்மத்தினுல் ஆராதித்து மனிதன் ஸித்தியையடைகிறுன்.

तस्मात् सप्रणवं शूद्रो मन्नामानि न कीर्तयेत् ।
प्रणवं हि परं लोके ब्रह्म ब्रह्मविदो विदुः ।।

567. वर्णाश्रमाचारवता (விஷ்ணுபுராணம் — 3-8-9)

ஜாதிக்கும் ஆச்ரமத்துக்கும் ஏற்பட்ட ஆசாரத்தையுடைய மனிதனுலே மிகவுமுயர்ந்தவனுன எம்பெருமான் ஆராதிக்கப்படுகிறுன். இந்த ஆராதநத்தைக் காட்டிலும் அவனுடைய ஸந்தோஷத்தையுண்டு பண்ணுவது வேறொன்றில்லை.

568. न चलति निजवर्णधर्मतो यः सममतिरात्मसुहृद्विपक्षपक्षे ।
न हरति न च हन्ति किञ्चिदुच्चैः सितमनसं तमवेहि विष्णुभक्तम् ॥
(விஷ்ணுபுராணம் — 3-7-20)

எவன் தன்னுடைய ஜாதிக்கு ஏற்பட்ட கர்மங்களினின்றும் கொஞ்சங்கூட விலகாமல், தனக்கு நல்லதை எண்ணுகிறவர்களிடத்திலும் தனக்கு விரோதம் பண்ணுகிறவர்களிடத்திலும் ஒரே விதமான எண்ண முள்ளவனுய், ஒருவனிடமிருந்தும் ஒன்றையும் அபஹரிப்பதையும், ஹிம்ஸை பண்ணுவதையும் செய்கிறதில்லையோ, மிகவும் ஆசை முதலான குற்றங்களில்லாத மனதையுடைய அவனை விஷ்ணுபக்தனுக அறி.

569. शूद्रः साधुः कलिः साधुरित्येवं श्रृण्वतां वचः ।
तेषां मुनीनां भूयश्च ममज्ज स नदीजले ॥ (விஷ்ணுபுராணம் — 6-2-6)

கங்கையின் ஜலத்தில் மூழ்கி அதிலிருந்து, கிளம்பி ''சூத்ரன் உயர்ந்தவன், கலியுகமுயர்ந்தது'' என்று என் பிள்ளையான வியாஸர் சொன்னுன்.

570. तमः शूद्रे रजः क्षत्रे ब्राह्मणे सत्त्वमुत्तमम् ।
इत्येवं त्रिषु वर्णेषु विवर्तन्ते गुणास्त्रयः ॥

(பாரதம் ஆச்வமேதிகபர்வம் - 40-11)

சூத்திரனிடத்தில் மிகுந்த தமோகுணமும், க்ஷத்திரியனிடத்தில் மிகுந்த ரஜோகுணமும், பிராம்மணனிடத்தில் மிகுந்த ஸத்துவகுணமும் இப்படி மூன்று ஜாதிகளில் மூன்று குணங்கள் இருக்கின்றன. இங்கே மிகுந்த என்கிற சொல்லாலே ஒவ்வொரு குணமும் மற்ற இரண்டு குணங்களையடக்கிக்கொண்டு தலையெடுத்திருக்கிறதென்று காட்டப் படுகிறது.

571. एतैस्समेतः (யாஜ்ஞவல்க்யஸ்மிருதி - 1-116)

வித்யா, (ஜ்ஞானம்) கர்மம், வயது, பந்து, பணம் இவைகளாலே கிரமப்படி பூஜிக்கத் தகுந்தவர்கள். இவைகளுடன் சேர்ந்த சூத்திரனும் கிழவயதில் கௌரவம் பண்ணத் தகுந்தவன்.

जनित्वाऽहम्

572. ऐकान्त्यं भगवत्येषां समानमधिकारिणाम् ।
यावत्प्राप्ति परार्थी चेत्तदेवात्यन्तमश्नुते ।।

(கீதார்த்த ஸங்கிரஹம் 28,+32)

இந்த மூன்று அதிகாரிகளுக்கும் எம்பெருமானிடத்தில் ஐகாந்தியம் ஸமம். ஐகாந்தியமென்பது அவனைத்தவிர வேறு தேவதையைப் பார்க்காமல் அவனையே நம்பியிருப்பது. அவர்களில் எவன் எம்பெருமானை அடைகிற வரையில் வேறு பலனில் ஆசையில்லாமல் அவனையே வேண்டுகிருனே, அவன் அந்த எம்பெருமானை முடிவில்லாமல் அநுபவிக்கிருன். அவர்களில் ஜ்ஞாநியென்பவன் பரமைகாந்தி யென்று சொல்லப்படுகிருன், அவன் பிழைத்திருப்பது எம்பெருமானுக்கு அதீநமாயிருக்கிறது. அவனுடன் சேர்ந்திருப்பதே அவனுக்கு ஸுகம். அவனை விட்டுப் பிரிவதே அவனுக்கு துக்கம்; எம்பெருமானொ ருவனிடத்திலேயே மனதிருக்கிறது. எம்பெரு மானைத் தியாநம் பண்ணுவது, புண்ணியதீர்த்தங்களுக்குப் போவது, அவனைப்பற்றி கேட்பவர்களுக்குச் சொல்லுவது, அவனுக்கு நமஸ்காரம் செய்வது, அவனை ஸ்தோத்திரம் பண்ணுவது, அவனுடைய திருநாமங்களைச் சொல்லுவது, இவைகளாலே தன்னைத்தான் ஒரு வஸ்துவாக இருப்பதாக எண்ணுவன். அவனிடத்தில் கொடுக்கப்பட்ட பிராணன் மனது, புத்தி, இந்திரியங்கள் இவைகளின் வேலைகளைச் செய்கிறவன். இங்கே எம்பெரு மானுடன் சேர்வதாவது சாஸ்திரத்திஞல் விதிக்கப்பட்டு மூன்று கரணங் களால் செய்யக்கூடிய ஆராதநத்தில் நோக்குள்ளவஞயிருப்பது. 342-வதையும் பார்க்க.

573. नारायणैकनिष्ठस्य (விஹகேந்திர ஸம்ஹிதை)

நாராயணன் ஒருவனையே எப்போதும் நினைத்துக் கொண்டு இருக்கிறவன் எந்தெந்த விருத்தியாலே பிழைக்கிருனே, அது அவனுடைய அர்ச்சநம், அவன் எதைப் பேசுகிருனே, அது எல்லாம் ஜபம்; அவன் எதைப் பார்க்கிருனே, அது தியானம்; அவன் காலில் பட்ட ஜலம் ஒப்பில்லாத தீர்த்தம்; அவன் சாப்பிட்ட மீதி மிகுந்த பரிசுத்தியைக் கொடுக்கிறது; அவனுடைய வெறுஞ் சொல்லானது உயர்ந்த மந்திரம்; அவன் தொட்ட தெல்லாம் சுத்தமாக ஆகிறது.

574. आपस्त्व - अथैतेषां वृत्तयः - ब्राह्मणस्य याजनप्रतिग्रहौ, क्षत्रियस्य क्षितित्राणम्, कृषिगोरक्षण वाणिज्यकुसीदयोनि पोषणानि

वैश्यस्य,शूद्रस्य सर्वशिल्पानि । आपत्स्वनन्तरा वृत्तिः ।।

(வைஷ்ணவதர்மசாஸ்த்ரம் 2-5,6)

ஒருவனுக்கு ஏற்பட்ட விருத்தியைச் செய்யமுடியாத ஆபத்காலங்களில் அதற்கு அடுத்த விருத்தியானது பிழைப்பதற்கு ஸாதநமாக வைத்துக் கொள்ளலாம்.

575. मन्निमित्तम्

எனக்காகச் செய்யப்பட்ட பாபமும் தர்மமாக ஆகிறது.

576. यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय ! तत्कुरुष्व मदर्पणम् ।। (கீதை 9 - 27.)

உடம்பின் ஸம்ரக்ஷணைக்காக எத்தைச்செய்கிருயோ எதைச் சாப்பிடுகிருயோ, எந்த ஹோமதாந தபஸ்ஸுக்களைச் செய்கிருயோ, குந்தியின் பிள்ளையே! அவைகள் என்னிடத்தில் எப்படி ஸமர்ப்பிக்கப் படுமோ அப்படிச் செய். அதாவது - அந்த கர்மங்கள் என்னுடையதென்றும், அவைகளின் பலன்கள் என்னுடையனவென்றும், நானே அவைகளைச் செய்கிறேனென்றும் எண்ணிக்கொண்டு அவைகளைச் செய்.

577. पारुष्यमतिवादः (மநுஸ்மிருதி - 12-6)

(1) கடுமையாகப் பேசுவது, (2) அந்தந்த வஸ்துக்களுக்கு உள்ள பெருமைக்கு மேல்பட்டு அவைகளைச் சொல்வது, (3) கோள் சொல்லுவது, (4) பொருத்தமில்லாமல் பேசுவது, இப்படி வாக்கு விஷயமான பாபங்கள் நான்கு விதங்கள்.

578. न विगृह्य कथां कुर्यात् बहिर्माल्यं न धारयेत् ।
गवां च यानं पृष्ठेन सर्वथैव विगर्हितम् ।। (மநுஸ்மிருதி — 1-72)

உண்மையான அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று ஆசையில்லாமல் சண்டை போடுவதற்காக மாத்திரம் ஒருவனிடம் விவாதம் செய்யக்கூடாது. மாலையை வெளியில் தரிக்கக்கூடாது. பசுமாட்டின்மேல் ஏறிப்போவது எல்லா விதத்தாலும் நிந்திக்கப்படுகிறது.

579. यथाशक्ति

தேவதையையும் அதாவது-எம்பெருமானையும், ஆசாரியனையும் நிந்திக்கிறவர்களைச் சக்திக்குத் தகுந்தபடி கண்டிக்க வேண்டியது.

580. अहं हरिः सर्वमिदं जनार्दनो नान्यत्ततः कारणकार्यजातम् ।
ईदृङ्मनो यस्य न तस्य भूयो भवोद्भवा द्वन्द्वगदा भवन्ति ॥

(விஷ்ணுபுராணம் -1-22-87)

நான் ஹரி; இதெல்லாம் ஜநார்த்தநன்; மஹத் முதலான காரண திரவியங்களும், அவைகளிலிருந்து உண்டானவைகளும் இவைகள் எல்லாம் அவனைக் காட்டிலும் வேறன்று. எவனுக்கு இவ்விதமான எண்ண மிருக்கிறதோ, அவனுக்கு ஸம்ஸாரத்தில் உண்டாகிற ஸுக துக்கங்களாகிய வியாதிகள் வாரா.

581. निर्माल्यम् (ஸநத்குமாரஸம்ஹிதை)

வேறு தேவதைகளுக்கு நிவேதநம் பண்ணினதையும், குரு வில்லாதவன் சாப்பிட்டு மீந்ததையும் சாப்பிடுகிற மனிதன் ஒரு மாதம் பயோவ்ரதத்தைச் செய்து, எட்டெழுத்துள்ள மூலமந்திரத்தை எப்போதும் ஜபித்துக்கொண்டு, பிரும்மகூர்ச்ச பஞ்ச கவ்யத்தைச் சாப்பிட்டு சுத்தனுக ஆகிறுன். பயோவிரதமென்பது பாலையே சாப்பிட்டுக்கொண்டு செய்யும் விரதம்.

582. परित्यजेत् (மநுஸ்மிருதி 4-176)

தர்மத்தை விட்டு விலகின அர்த்தத்தையும் காமத்தையும் ஒருவன் விட்டுவிடவேண்டியது. தர்மம்கூட மேலே துக்கத்தைக் கொடுப்ப தானுலும், உலகத்தார் வெறுக்கக்கூடியதாயிருந்தாலும் அதை விட்டுவிட வேண்டியது.

583. उदुम्बरं - पिप्पलं च वटं चैव शणशाकं तथैव च ।
उदुम्बरं न खादेत्तु भवार्थी (?) पुरुषो नृप ! ॥

(பாரதம் ஆநுசாஸநிகபர்வம்—161-97)

அத்திக்காயைச் சாப்பிடக்கூடாது.

584. कालिङ्गोदुम्बर

கொம்மட்டி, அத்திக்காய், சுரைக்காய், கோவைப்பழம் இவைகளைச் சாப்பிடக்கூடாது. இவைகளை எப்போதும் சாப்பிடுகிறவனுக்கு எம்பெரு மான் எப்போதும் தூரத்திலிருப்பன். வெண்கத்திரி, தேத்தாங் கொட்டை, கொம்மட்டி, குவளை, அத்திக்காய், காந்தல், இவைகளை எவன் தெரியாமல்

சாப்பிடுகிருனே அவனுக்கு தூரத்தில் எம்பெருமான் இருக்கிருன். கொம் மட்டி, சித்தவரை, காந்தல், நிலப்பனை, சுரைக்காய் இவைகளை எவன் சாப் பிடுகிருனே, அவனுக்கு தூரத்தில் எம்பெருமான் இருக்கிருன். வெண்கத் திரி, கொம்மட்டி, கன்றுபோட்டு பத்து நாளைக்குட் பட்ட பசுவின் பாலா லுண்டான ஆமிக்ஷை, தாமிரைக் கிழங்கு இவைகளை எவன் சாப்பிடு கிருனே, அவன் கடைசி காலத்தில் உலகத்துக்கு யஜமாநனுன கோவிந் தனை நினைக்கமாட்டேன். காலிங்கம் என்பதற்கு முள்ளங்கியென்றும் பொருள் கொள்ளலாம். ஆமிக்ஷா கொதிக்கிற பாலில் தயிரை விட்டால் அது திரியும். அதில் கெட்டியாயிருக்கும் பாகத்துக்கு ஆமிக்ஷையென்று பெயர்.

585. तुम्बम् (பாரதம் ஆச்வமேதிகபர்வம்-112-44)

வேலங்காய், பீர்க்கு, ஈருள்ளி, வெள்ளுள்ளி, நாய்க்குடை, ஊர்ப்பன்றிக் கிழங்கு இவைகளைச் சாப்பிட்டவன் சாந்திராயணம் என்கிற விருதத்தைச் செய்யக்கடவன்.

586. नालिका

தேங்காய்முளை, சணைப்புக்கீரை, நாய்க் குடை, குசும்பை, சுரைக்காய், விஷ்டையை எறுவாகப்போட்டு அதனுலுண்டானவைகள், உப்போடு சேர்ந்த பால், எச்சிலில் குத்தின நெய், வண்ணுன்துறை ஜலம் இவைகளைச் சாப்பிடுவது கள்ளைக் குடிப்பதற்கு ஸமமாகும்.

587. आरनालम् (சாண்டில்யஸ்மிருதி-2-51)

எம்பெருமானை நினைத்துக்கொண்டிருக்கிறவன் காடியை ஒரு காலத்திலும் சாப்பிடக்கூடாது. அது கள்ளுக்கு ஸமமாக அறியப்படுகிறது. ஆகையினுல் பிரயத்னப்பட்டு அதை விலக்க வேண்டியது.

588. प्रमादादपि (வராஹபுராணம்)

ரத்தத்தைத் தெரியாமல் எந்த விஷ்ணுபக்தன் தொடுகிருனே, அவன் குற்றத்தை நூறு உபசாரங்கள் செய்தாலும் ஒ பூமியே! நான் பொறுத்துக் கொள்ளுகிறதில்லை.

589. एकादश्याम् (ஸாத்வதஸம்ஹிதை)

பிரம்மணுய் பிறந்து எவன் ஏகாதசியில் அந்நம் சாப்பிடுகிருனே, அவன் ஒவ்வொரு கபளத்திலும் பாபத்தைச் சாப்பிடுகிருன். அந்த கபளமானது நாய் விஷ்டைக்கு ஸமம்.

590. एकादश्याम्

எவன் சக்தனுயும் உடம்பில் உபத்திரவமில்லாமலுமிருந்து ஏகாதசியில் அந்நத்தைச் சாப்பிடுகிருனே, அவனுக்குக் கள்ளு குடிப்பதற்கு ஸமமான பாபம் உண்டாகிறது. இதில் ஸந்தேஹமில்லே. மத்யத்தைக் குடிக்கிறவன் தான்மாத்திரம் நரகத்திற்குப் போகிருன். ஏகாதசியில் சாப்பிடுகிறவன் அவன் பித்ருக்களுடன்கூட நரகத்தில் மூழ்குகிருன்.

591. अन्नदोषात् (ஸ்ரீரங்கமாஹாத்மியம்—47-10)

தோஷமுள்ள ஆஹாரத்தைச் சாப்பிடுவதாலும், தனக்குக் கிடையாததில் ஆசையாலும், அதாவது வைராக்கியமில்லாமையாலும், பலவிதங்களான விஷயங்களேப் பார்ப்பதாலும், உடம்பின் சுத்தியில்லாமையாலும் மனதானது தோஷமுள்ளதாகிறது.

592. आलस्यात् (மநுஸ்மிருதி—5-3)

வேதங்களே அப்யாஸம் செய்யாமையாலும், ஆசாரம் இல்லாமையாலும், சோம்பலாலும், ஆஹாரதோஷத்தாலும் யமன் பிராமணர்களேக் கொல்ல எண்ணுகிருன்.

593. नियतस्य तु (கீதை—18-7)

ஜாதிகளுக்கும் ஆசிரமங்களுக்கும் ஏற்பட்ட கர்மத்தை விடுவது கூடாது. அஜ்ஞாநத்தால் அதை விடுவது தாமஸமான தியாகமென்று சொல்லப்படுகிறது.

594. दुःखमित्येव (கீதை—18-8)

கர்மத்தைச் செய்வது துக்கமாயிருக்கிறதென்றும் உடம்புக்கு வருத்தமுண்டாகிறதென்றும் பயத்தால் எவன் கர்மத்தை விடுகிருனே, அவன் ராஜஸமான தியாகத்தைச் செய்து தியாகத்தின் பலனேயடைகிறதேயில்லே.

595. कार्यमित्येव (கீதை—18-9)

தன் அதிகாரத்துக்குக் தகுந்த எந்த தர்மமானது இதுவே எனக்குப் பிரயோஜநம் இதுவே நான் செய்யவேண்டியதென்றும், எந்த கர்மா தனதென்கிற எண்ணத்தையும் அதனுலுண்டாகும் பலனேயும் விட்டு விட்டும் செய்யப்படுகிறதோ, அது ஸாத்துவிகத்தியாகமென்று எண்ணப் படுகிறது.

596. त्यज धर्ममधर्मं च त्यज सत्यानृते अपि ।
उभे सत्यानृते त्यक्त्वा येन त्यजसि तत् त्यज ।।

(பாரதம் சாந்திபர்வம்—339-44)

ஒரு பலனுக்கு உபாயமாகச் சொல்லப்பட்ட தர்மத்தையும் செய்யக் கூடாதென்று நிஷித்தமான கர்மத்தையும் விடு. ஸத்யமென்று சொல்லப் பட்ட ஆத்மாவின் அநுபவத்தையும், அந்ருதமென்று சொல்லப்பட்ட விஷயங்களின் அநுபவத்தையும் விட்டுவிடு. எந்த எண்ணத்தால் இந்த இரண்டு அநுபவத்தையும் விடுகிருயோ, அந்த எண்ணத்தை அதாவது– நானே இதைச் செய்தேன் என்கிற எண்ணத்தை விட்டுவிடு.

597. तस्मात् त्वम् (பாகவதம் — 11-12-14,15)

ஏ உத்தவனே! ஆகையால் ஒரு பலனுக்கு ஸாதநமாக இதைச் செய் என்கிற விதியையும், இதைச் செய்ய வேண்டாமென்கிற நிஷேதத்தையும், இப்படி விதிக்கப்பட்ட ப்ரவிருத்தி தர்மத்தையும் நிவ்ருத்தி தர்மத்தையும், இவ்விதமான இரண்டு கர்மங்களுக்கு வேண்டியதாக உன்ஞல் இதுவரை யில் கேட்கப்பட்டும், இனிமேல் கேட்கப்படுவதுமாகிய அங்கங்களேயும் விட்டுவிட்டு, எல்லா பிராணிகளுக்கும் ஆத்மாவான என்னேயொருவனேயே எல்லா பிரகாரத்தாலும் சரணமாக அடை. அப்படிச் செய்தால் ஒருவரிடமும் பயமில்லாமலிருக்கிற இருப்பாகிய மோக்ஷத்தையடைவாய்.

598. भक्ष्योत्तम (பாரதம் உத்யோகபர்வம்—34-13)

மீஞனது உயர்ந்த சாப்பிடத்தகுந்த ஒரு வஸ்துவாலே மூடப்பட்ட இரும்பால் செய்யப்பட்ட முள்ளே அந்தச் சாப்பாட்டு வஸ்துவின் ஆசை யாலே அதை விழுங்குகிறது. அதஞலுண்டாகும் கெடுதியைப் பார்க் கிறதில்லே.

599. अहो बत (பாரதம் ஆரண்யபர்வம்—2-64)

ஸாதுவான எவன் எதைக்கண்டு வெறுக்கிருஞே, துர்ஜநன் அதையே கண்டு ஸந்தோஷப்படுகிருன். இதென்ன பெரிய கஷ்டம்! இவ்வுலகத்தின் செய்கை விபரீதமாயிருக்கிறது.

600. त्रैवर्गिकांस्त्यजेद्धर्मानारम्भानवनीपते ! ।
मित्रादिषु समो मैत्रस्समस्तेष्वेव जन्तुषु ।। ?

(விஷ்ணுபுராணமென்று முன்ஞேர்கள்)

தர்மம், அர்த்தம், காமம் ஆகிய இவைகளுக்கு ஸாதநங்களான தர்மங்களை ஒருவன் விட்டுவிடவேண்டியது.

अज्ञानात्

601. विद्यते गोषु संपन्नं विद्यते ब्राह्मणे दमः ।
विद्यते स्त्रीषु चापल्यं विद्यते ज्ञातितो भयम् ॥

(ராமாயணம் யுத்தகாண்டம்—16-9)

பசுமாடுகளிடத்தில் ஸம்பத்துக்கு ஸாதநம் இருக்கிறது. பிராம்மணனிடத்தில் இந்திரியஜயமிருக்கிறது. ஸ்திரீகளிடத்தில் சபலத் தன்மையிருக்கிறது. தாயாதிகளிடமிருந்து பயமிருக்கிறது.

अपायसम्प्लवे

602. न च संकुचितः (ராமாயணம்-கிஷ்கிந்தா—30-81)

எந்த வழியாலே வாலி கொல்லப்பட்டுப்போனானோ அந்த வழி குறுகிப்போகவில்லை. ஸுக்ரீவ! நீ சொன்னதைச் செய். வாலி போனவழி போகாதே.

कृतापराधस्य

यदि किञ्चित्

यच्च शोकाभि

अकिञ्चनो- न धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी
न भक्तिमांस्त्वच्चरणारविन्दे ।
अकिञ्चनोऽनन्यगतिः शरण्य!
त्वत्पादमूलं शरणं प्रपद्ये ॥

---

## தமிழ் வசனங்கள்

123. *கேசவன்தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும்,*
*மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வுவாய்க்கின்றவா*

ஈசனென்கருமாணிக்கமென்செங்கோலக்கண்ணன்விண்ணோர்
நாயகன், எம்பிரானெம்மான் நாராயணனாலே. -திருவாய்மொழி 2-7-1

என்னுடைய வம்சத்தில் பிறந்தவர்களில் மேலேழு தலைமுறையும், கீழேழு தலைமுறையும், நடுவில் எழு தலைமுறையும் எம்பெருமானுடைய தாஸர்களானார்கள். இவ்விதமான பெரிய ஸாமர்த்தியமாகிய வாழ்வு நமக்குக் கிடைத்திருக்கிறது.

124. பண்டைக்-அண்டக்குலத்துக்கதிபதியாகி அசுரரிராக்கதரை
இண்டைக்குலத்தை எடுத்துக்களைந்த இருடீகேசன்றனக்குத்
தொண்டக்குலத்திலுள்ளீர் வந்தடிதொழுது ஆயிரநாமம் சொல்லிப்
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து பல்லாண்டு பல்லாயிரத்தாண்
டென்மினே. (திருப்பல்லாண்டு—5)

பழைய குலத்தைப் போக்கி பல்லாண்டு பாடுவோம்.

குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள் நாலிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன் புனித நின்
இலங்குபாதமன்றிமற்றொர் பற்றிலேனெம்மீசனே

125. நிற்கின்ற- தேவராய்நிற்குமத்தேவும், அத்தேவரில்
மூவராய் நிற்கும் மூதுபுணர்ப்பும் - யாவராய்
நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்றோராதார்
கற்கின்றதெல்லாம் கடை. -நான்முகன் திருவந்தாதி 54

கண்ணுக்குத் தோன்றுமவையெல்லாம் ஸர்வேசுவரன்.

126. வானுளாரறியலாகா வானவா என்பராகில்
தேனுலாந்துளவமாலைச் சென்னியாயென்பராகில்
ஊனமாயினகள் செய்யுமூனகாரகர்களேலும்
போனகம் செய்தசேடம் தருவரேல்புனிதமன்றே? - திருமாலை 41

எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவர்கள் தாங்கள் சாப்பிட்டு மீந்ததை எனக்குக்கொடுத்தால், அது உடனே சுத்தியைச் செய்யும்.

127. வையத்துவாழ்வீர்காள் நாமும்நம்பாவைக்குச்,
செய்யும்கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்,
பையத்துயின்ற பரமனடிபாடி,
நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி,

**மையிட்டெழுதோம் மலரிட்டுநாம்முடியோம்,**
**செய்யாதனசெய்யோம் தீக்குறளைசென்றோதோம்,**
**ஐயமும்பிச்சையும் ஆந்தனையும்கைகாட்டி,**
**உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம்பாவாய்.** - திருப்பாவை-2

செய்யத்தகாத கர்மங்களைச் செய்யமாட்டோம். ஒரு ஆசாரியனிடம் போய் அஸத்தான சாஸ்திரங்களைப்படிக்கமாட்டோம்.

128. **செய்யேல்** (திருவாய்மொழி—2-9-3)

கெட்ட கர்மங்களைச் செய்யாதேயென்று கிருபை செய்யும்.

129. **வைதுநின்னைவல்லவா பழித்தவர்க்கும்மாறில்போர்**
**செய்துநின்னசெற்றத்தீயில் வெந்தவர்க்கும்வந்துன்னை, எய்த**
**லாகுமென்பரா, தலாலெம்மாயநாயினேன், செய்தகுற்றம்நற்ற**
**மாகவேகொள் ஞாலநாதனே.** - திருச்சந்தவிருத்தம் 111

உலகத்துக்கு நாதனே! அடியேன் செய்யும் குற்றத்தைத் தேவரீர் குணமாகக் கொள்ளவேணும்.

130. **தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலும்**
**சிதகுரைக்குமேல் என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்று**
**செய்தாரென்பர்போலும் மன்னுடையவிபீடணற்கா மதிளிலங்**
**கைத்திசைநோக்கிமலர்க்கண்வைத்த என்னுடையதிருவரங்கர்க்**
**கன்றியும்மற்றொருவர்க்காளாவரே.** -பெரியாழ்வார் திரு.4-9-2

என்னுடைய தாஸர்கள் அபசாரத்தைச் செய்யமாட்டார். செய்தால் நல்லதைச் செய்தாரென்று எம்பெருமான் சொல்லுவன் போலும்.

**குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தணமைதன்னை**
**ஒளித்திட்டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன்**
**களிப்பதென்கொண்டுநம்பி கடல்வண்ணாகதறுகின்றேன்**
**அளித்தெனக்கருள் செய்கண்டா யரங்கமாநகருளானே.**

---

## அரும்பதவுரை

பொலிசைக்கிடுவர் — வட்டிக்குக் கடன் கொடுப்பவர்கள்.

அவிடு — பரிஹாஸ வார்த்தை.

ஒட்டத்துக்கு — பந்தயத்துக்கு.

---

## 26. ப்ரபாவரக்ஷாதிகாரம்

### *ஸம்ஸ்கிருத வசனங்கள்*

603. अत्युत्कटैः – त्रिभिर्दिनैस्त्रिभिः पक्षैस्त्रिभिर्मासैस्त्रिवत्सरैः ।
अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते ।।

(விஹகேந்திரஸம்ஹிதை)

மிகவும் பலமான புண்ணியங்களையும் பாபங்களையும் செய்தவன் இங்கேயே மூன்று நாட்களிலோ, மூன்று பக்ஷங்களிலோ மூன்று மாதங்களிலோ, மூன்று வர்ஷங்களிலோ அவைகளின் பலன்களை அனுபவிக்கிறான்.

उपायभक्तिः
यस्यानुग्रहमिच्छामि धनं तस्य हराम्यहम् ।
बान्धवैश्च वियोगेन भृशं भवति दुःखितः ।।

604. दुर्गसंसार (விஷ்ணுதர்மம்—1-18)

ஸம்ஸாரமாகிய செல்லமுடியாத கரையில்லாத காட்டில் ஓடித் திரிகிறவர்களுக்கு கிருஷ்ணன் விஷயத்தில் ஒரு நமஸ்காரமானது மோக்ஷமாகிய கரையைச் சேர்ப்பிக்கிறது.

605. एकोऽपि (பாரதம்-சாந்திபர்வம்—46-19)

கிருஷ்ணன் விஷயத்தில் செய்த ஒரு ஸுக்ருதப்ரணாமமானது பத்து அச்வமேதங்களுக்கும் ஸமமாகுமா? ஆகாது. ஆனால் பத்து அச்வமேதங்கள் பண்ணினவன் திரும்பிவருகிறான். கிருஷ்ணனிடத்தில் ப்ரணாமம் பண்ணினவனோ திரும்பி வருகிறதில்லை. ஸுக்ருதப்ரணாமம் என்பது- இரண்டு கைகளால் மூன்று தரம் அஞ்சலிசெய்து முழங்கால் வரைக் கால்களை நீட்டி, நெற்றி, மூக்கு, கன்னம் இவைகளால் பூமியை மூன்று தரம் தொட்டு செய்யப்பட்டு இப்படிச் செய்யப்படும் அஷ்டாங்கமான நமஸ்காரத்தைப் பன்னிரண்டு தரம் செய்வது.

सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ।
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम ।।

अथ पातक

कुयोनिष्वपि

606. शरणं च (விஷ்ணுதர்மம்—106-53)

சரணமடைந்தவர்களையும், உனக்காக நான் இருக்கிறேன் என்று பிரார்த்திப்பவர்களையும், அவர்கள் தகப்பனைக் கொன்றவர்களாயிருந்தாலும் ஸாதுக்கள் இரக்ஷிக்கிறார்கள்.

डम्भिहैतुक - राजान्तेवासियाज्येभ्यः सीदन्निच्छेद्धनं क्षुधा ।
डम्भिहैतुकपाषण्डिबकवृत्तींश्च वर्जयेत् ।।

ये तु सामान्य

607. पुंसां जटाभरणमौण्ड्यवतां वृथैव
मोघाशिनामखिलशौचनिराकृतानाम् ।
तोयप्रदानपितृपिण्डबहिष्कृतानां
संभाषणादपि नरा नरकं प्रयान्ति ।। (விஷ்ணுபராணம்—3-18-105)

ஜடையாகிய ஆபரணத்தையோ, குடுமியில்லாத மொட்டைத் தலையையோ உடையவர்களாய் தேவயஜ்ஞம் முதலானவைகளைச் செய்யாமல் சாப்பிடுகிறவர்களாய், ஒருவிதமான சௌசமில்லாதவர்களாய் பித்ருக்களுக்கு தர்ப்பணத்தையும் சிராத்தத்தையும் செய்யாதவர்களாயிருக்கிறவர்களுடன் பேசுவதாலும்கூட மனிதர்கள் நரகத்தை யடைகிறார்கள்.

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ।।

608. पार्थ नैवेह (கீதை—6-40)

ப்ருதையின் பிள்ளையே! யோகம் செய்ய ஆரம்பித்து அது முடியாதவனுக்கு இங்கும் மேலுலகத்திலும் நாசம் கிடையாது. நல்ல விஷயத்தைச் செய்தவன் கெட்ட கதியையடையமாட்டானன்றோ?

अपि चेत्

609. अपि पापेषु (பாரதம் ஆச்வமேதிக—96-46)

பாண்டுவின் பிள்ளையே! என் பக்தர்கள் பாபங்களில் ருசியுள்ளவர் களாயிருந்தாலும் , தாமரை யிலையில் ஜலம் ஒட்டாததுபோல் அவர்களிடத் தில் ஒரு பாபமும் ஒட்டாது. பாபங்களுக்குத் தகுந்த பரிஹாரம் ஏற்படும் என்று கருத்து.

610. चीरवासा: (இதிஹாஸஸமுச்சயம்—33,123,124)

ஓ பிராம்மணச்ரேஷ்டனே! எம்பெருமானை ஆச்ரயித்திருக்கிறவன் மரவுரியையுடுத்திக் கொண்டிருந்தாலும், ஜடையுள்ள வனுயிருந்தாலும், த்ரிதண்டமுள்ளவனுயும், தலையில் குடுமியில்லாதவனுயும், வேறு ஆச்ரமத்தின் அடையாளங்களுள்ளவனுயுமிருந்தாலும் இவைகளில்லா விட்டாலும் இந்த அடையாளங்கள் மோக்ஷத்துக்குக் காரணமன்று. எவர்கள் இரக்கமில்லாதவர்களாயும், கெட்ட மனதையுடையவர்களாயும், எப்போதும் கெட்ட ஆசாரங்களில் ருசியையுடையவர்களாயுமிருக்கிருர்களோ, நாராயணனை அடைந்திருந்தால் அந்த மனிதர்களும் உயர்ந்த கதியை அடைகிருர்கள்.

611. लिप्यते (இதிஹாஸஸமுச்சயம்—27-25)

விஷ்ணுபக்தர்களுக்குப் பாபம் நேர்ந்தால் அதற்கு உடனே பிராயச் சித்தம் செய்வார்களா கையாலே அவர்களிடத்தில் பாபம் ஒட்டாது. உதய மான ஸூரியன்போல் உலகம் முழுவதையும் அவர்கள் பரிசுத்தம் செயகிருர்கள்.

612. जन्मान्तरसह (இதிஹாஸஸமுச்சயம்—33-125-127)

அனேகமாயிரம் புண்ணியஜந்மங்களின் கடைசியில் எல்லா உலகங்களிலும் இவனொருவனே மஹாத்மாவென்று சொல்லும் படியிருக் கிற வாஸுதேவனுக்கு நான் தாஸன் என்கிற இவ்வித மான புத்தியானது எவனுக்கு உண்டாகிறதோ, அவன் எம்பெருமானிருக்கிற உலகத்துக்குப் போகிருன். இந்த விஷயத்தில் ஸந்தேஹமில்லை. எவர்கள் இந்திரியங்களை அடக்கிக்கொண்டு எம்பெருமானிடத்தில் வைக்கப்பட்ட பிராணனை யுடைவர்களோ அவர்களைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ.

613. अश्वमेधशतै: (இதிஹாஸ ஸமுச்சயம்—33-180)

எவர்கள் நாராயணனுக்கு முகங்கொடுக்கவில்லையோ, அவர்கள்

அநேகம் நூறு அச்வமேதங்கள் செய்தாலும் அநேகம் நூறு வாஜபேயங்கள் செய்தாலும் நல்ல கதியை அடைகிறதில்லை.

योहेनं पुरुषं वेद देवा अपि न तं विदुः ।
सर्वमाश्चर्यमेतस्मिन् निर्वृत्तं राजसत्तम ! ।।

614. अवैष्णवनमस्कारात् (நாரதீயம்)

விஷ்ணுபக்தனல்லாதவர்களுக்கு நமஸ்காரம் செய்வதாலும், எம்பெருமான் விஷயத்தில் அவமாநம் செய்வதாலும் விஷ்ணுபக்தனைத் தூஷிப்பதாலும் ஒருவன் உடனே பதிதனாகிறான். (கீழே விழுகிறான்; மேலுலகமில்லை) இதில் ஸந்தேஹமில்லை.

615. यतिनिन्दापरः (இதிஹாஸ ஸமுச்சயம்—12-71-72)

தாமரைக்கிழங்கைத் திருடினவன் எப்போதும் ஸந்நியாஸிகளை நிந்திக்கிறவனாயும், விஷ்ணுபக்தர்களை அவமாநம் செய்கிறவனாயும், வேதாந்தசாஸ்திரத்தில் நோக்கமில்லாதவனாயும் ஆகட்டும். தாமரைக் கிழங்கைத் திருடினவன் உள்ளுக்குள்ளே துஷ்டனாய் மேலுக்கு நல்லவனா யும், ப்ரும்மவித்துகளிடத்தில் த்வேஷம் பண்ணுகிறவனாயும், சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட நல்லகர்மங்களைத் தூஷிக்கிறவனாயும் ஆகட்டும். தாமரைக்கிழங்கைத் திருடினவன் கெட்டபுத்தியையுடையவனாய், எப் போதும் நல்ல அநுஷ்டாநத்தையுடையவர்களாயும், ஆத்மபரமாத்ம விஷயமான சாஸ்திரத்தில் த்ருடமான ஜ்ஞாநமில்லாமலுமிருக் கிறவர்களை மயங்கும்படி செய்யட்டும்.

616. न शब्दशास्त्रा (இதிஹாஸ ஸமுச்சயம்—2-10)

வியாகரணசாஸ்திரத்தில் மிகுந்த பிரீதியுள்ளவனுக்கும், சாப்பாட்டி லும் வஸ்திரத்திலும் அதிக கவனமுள்ளவனுக்கும் அழகான வீட்டிலிருப்பதில் பிரீதியுள்ளவனுக்கும் உலகத்தாருடைய மனதைத் தன் பேச்சால் இழுக்கும் சக்தியுள்ளவனுக்கும் மோக்ஷம் கிடையாது.

617. शिश्नोदरे (பாரதம் சாந்திபர்வம்—305-36)

எவர்கள் எப்போதும் ஸ்திரீஸங்கமத்திலும், சாப்பாட்டிலும் நோக் குள்ளவர்களோ, எவர்கள் திருட்டு, பொய் சொல்லுவது, கடுமையாகப் பேசுவது, இவைகளைச் செய்கிறார்களோ அவர்களைத் தர்மத்தை விட்டவர்

களென்று தேவர்கள் அவர்கள்கிட்டப் போகாமல் அவர்களை விட்டுவிடு கிறார்கள்.

618. पराङ्मुखाम् (விஷ்ணுதர்மம்—99-13)

எவர்கள் எம்பெருமானிடத்தில் முகங்கொடுக்காமல் விஷயங்களில் நன்றாய் படிந்திருக்கிற மனதையுடையவர்களாய் இருக்கிறார்களோ, அவர் களுக்கு வெகுதூரத்தில் அந்த பரம்பிரம்மம் (எம்பெருமான்) இருக்கிறது.

619. तन्मयत्वेन (விஷ்ணுதர்மம்—99-15)

எவர்கள் கோவிந்தனையே எப்போதும் நினைத்துக்கொண்டு அவனிடத்தில் வைக்கப்பட்ட மனதையுடையவர்களாய், விஷயங்களை விட்டிருக்கிறார்களோ, அவர்களுடைய ஸமீபத்தில் அந்த எம்பெருமான் இருக்கிறானென்று அறியவேண்டியது.

न लिङ्गं धर्म

620. फलं कतक(மநுஸ்மிருதி—6-67)

தேத்தாங்கொட்டை மரத்தினுடைய பழமானது ஜலத்தைத் தெளிவிக்கிறதாயிருந்தாலும், அதின் பெயரைச் சொல்லுவதால் மாத்திரம் ஜலம் தெளிகிறதில்லை.

621. आर्ता विषण्णा:(வியாஸஸஞ்சயஸம்வாதம்)

இந்த உலகத்து ஸுகங்கிடைக்காமல் வருத்தப்படுகிறவர்களும், மேல் உலகத்து ஸுகம் கிடைக்காமல் வருத்தப்படுகிறவர்களும், ஒன்றிலும் நிலையில்லாதவர்களும், ஸம்ஸாரதுக்கத் தைக்கண்டு பயப்படுகிறவர்களும், கோரமான வியாதிகளில் தப்பிக்கிறவர்களும் நாராயணன் என்கிற சொல்லை மாத்திரம் சொல்லித்துக்கங்களால் விடப்பட்டவர்களாய் ஸுகமுள்ளவர் களாக ஆகிறார்கள்.

622. अवशेनापि (விஷ்ணுபுராணம்—6-8-19)

தன் வசமில்லாமல் எந்த எம்பெருமானுடைய திருநாமமானது ஒருவனால் சொல்லப் படுகிறதோ, அவன் ஸிம்மத்தைக்கண்டு பயந்த மிருகங்களால் அந்த ஸிம்மமிருக்கும் காடு விடப்படுவதுபோல் அவன் எல்லாப் பாபங்களாலும் உடனே விடப்படுகிறான்.

623. साङ्केत्यम् (பாகவதம்—6-2-14)

எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லுவது, ஒருவனுக்கு நாராயணன் என்று பெயர் வைத்து, அந்தப் பெயரைக்கொண்டு அவனைக் கூப்பிட்டபோதிலும், பரிஹாஸம் பண்ணுவதற்காகச் சொன்னபோதிலும், ஸ்தோபமாஞலும், ஹேளநமாஞலும் எல்லாப் பாபங்களையும் போக்கும். இங்கே ஸ்தோபமென்பது—நாராயணன் என்று சொல்லுவதற்குப் பதிலாக நாநாநந என்று சொல்லுவது, ஹேளநமென்பது—ஒருவன் எப்போதும் நாராயண என்று சொல்லிக்கொண்டிருக்கிருயேயென்று பிரீதியில்லாமல் சொல்லுவது.

624. हरिर्हरति (ஹர்யஷ்டகம்)

ஹரி:- எம்பெருமான் கெட்டமனதுள்ளவர்களாலும் நினைக்கப் பட்டால் பாபங்களைப் போக்குகிருன். இச்சையில்லாமல் அக்நியை ஒருவன் தொட்டா லும் அவனை அது பொசுக்கியே விடும்.

625. एतावतालम् (பாகவதம்—6-3-24)

எம்பெருமானுடைய குணங்களையும் சேஷ்டைகளையும் காட்டுகிற அனேகம் திருநாமங்களைச் சொல்லுவது மனிதர்களுடைய பாபங்களைப் போக்குவதற்கு மிகவும் அதிகமானது, ஒரு திருநாமத்தைச் சொல்வதே போதும்; எந்தக் காரணத்தால் அஜாமிளன் என்பவன் மிகுந்த பாபமுள்ளவஞயிருந்தபோதிலும், சாகிறகாலத்தில் பிள்ளையை நாராயண என்று கூப்பிட்டு முக்தியையடைந்தாஞே.

ये द्विषन्ति (74-வது பக்கம் 337-நெ. பார்க்க)

626. यः पुत्रः (பிரும்மாண்டபுராணம்)

எந்தப்பிள்ளை தகப்பஞரிடத்தில் த்வேஷம்பண்ணுகிருஞே அவனை வேரெருவனுக்குப் பிறந்தவஞக அறியவேண்டியது. எவன் எம்பெரு மானிடத்தில் எப்போதும் த்வேஷம் பண்ணு கிருஞே, அவனைக் கடைசி ஜாதியில் பிறந்தவஞக அறியவேண்டியது.

627. गोप्यः (பாகவதம்—7-1-32)

கோபிகைகள் காமத்தினுலும், கம்ஸன் பயத்தாலும், சிசு பாலன் முதலான ராஜாக்கள் த்வேஷத்தாலும், விருஷ்ணிகள் ஸம்பந்தத்தாலும்,

நீங்கள் ஸ்நேஹத்தாலும், நாங்கள் பக்தியாலும் பிரபுவே! நல்ல கதியை யடைவோம். (இது தர்மபுத்திரரைப் பார்த்து நாரதர் வசநம்).

628. यया कया (ஸ்ரீரங்கமாஹாத்மியம்—8-12)

நிணைத்த மாத்திரத்தில் பாபத்தைப் போக்குகிறவனுய், ஸ்வயம் பரிசுத்தனுன எம்பெரு மானுடனே எப்படியாவது ஸம்பந்தமுண்டானுல் அது பாபத்தைப் போக்கும்.

दुष्टेन्द्रिय (84-வது பக்கம் 385-நெ. பார்க்க)

यं योगिनः प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति ।
स तं पुरस्ताद्धरिमीक्षमाणाः प्राणान् जहौ प्राप्तफलो हि भीष्मः ।।

629. एकः शास्ता न द्वितीयोऽस्ति शास्ता
यो हृच्छयस्तमहमनुब्रवीमि ।
तेनैव युक्तः प्रवणादिवोदकं यथा
नियुक्तोऽस्मि ? तथा वहामि ।। (பாரதம் ஆச்வமேதிகபர்வம்—27-1)

எம்பெருமான் ஒருவனே உத்திரவு பண்ணுகிறவன்; உத்திரவு பண் ணுமவர் இரண்டாமவரில்லை. அவன் ஹிருதயத்திலிருக்கிருன். அவனை நான் சொல்லுகிறேன். ஜலம் பள்ளத்தில் ஓடுவதுபோல் அவனொருவனோடே சேர்ந்தவனுய், அவன் ஏவின வேலையைத் தலையாலே வஹிக்கிறேன்.

प्रशासितारं सर्वेषामणीयांसमणीयसाम् ।
रुक्माभं स्वप्नधीगम्यं विद्यात्तु पुरुषं परम् ।।

630. शास्ता विष्णुरशेषस्य जगतो यो हृदि स्थितः ।
तमृते परमात्मानं तात ! कः केन शास्यते ? ।।

(விஷ்ணுபுராணம்—1-17-20)

எவன் ஹிருதயத்திலிருக்கிருனே, அந்த விஷ்ணு உலகம் முழுவதையும் நியமநம் பண்ணுகிருன். அந்த பரமாத்மாவை விட்டு எவன் எவனுல் நியமிக்கப்படுகிருன்.

631. रागादिदूषिते (விஷ்ணுதர்மம்—9-11)

ஆசைமுதலானவைகளாலே தூஷிக்கப்பட்ட ஒருவனுடைய மனதில் மதுவைக்கொன்ற எம்பெருமான் இருக்கிறதில்லை. ஹம்ஸமானது சேறு கலந்த ஜலத்தில் ஒருபோதும் ப்ரீதியைப் பண்ணுகிறதில்லை.

632. कर्मणा मनसा (பாரதம் உத்யோகபர்வம்—39-56)

எதையொருவன் உடம்பின் வேலையாலும் மனதாலும் வாக்காலும் அடிக்கடி செய்கிருனே, அதுவே அவனைத் தன் வசப்படுத்திக்கொள்ளு கிறது. ஆகையால் ஒருவன் நல்லதையே செய்யவேண்டியது.

633. संसारविषवृक्षस्य

ஸம்ஸாரமாகிய விஷமரத்தில் அமிருதம்போல் இரண்டு பழங்கள் இருக்கின்றன. அவைகளாவன— ஒருகால் எம்பெருமானிடத்தில் பக்தியுண்டாவதும், அவனிடத்தில் பக்தியுள்ளவர்களுடன் சேருவதும்.

---

## *தமிழ் வசனங்கள்*

131. *பாம்போடொ-தூங்கார் பிறவிக்களின்னம்புகப்பெய்து*
*வாங்காயென்று சிந்தித்து நானதற்கஞ்சிப்*
*பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல்*
*தாங்காதுள்ளம் தள்ளுமென்தாமரைக்கண்ணா.*

- பெரிய திருமொழி 11-8-3

கூரையில் பாம்பிருக்கிற ஒரு வீட்டிலிருப்பது எப்படி பயத்தை யுண்டுபண்ணுமோ , அதுபோல ஸம்ஸாரத்திலிருப்பது. இதை என் மனது தாங்காது. அது தளும்புகிறது. என் தாமரைக் கண்ணனே!

132. *பரமனை* (திருவாய்மொழி—3-7-1)

*மொய்த்தவல்வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால்*
*கத்திரபந்துமன்றே பராங்கதிகண்டுகொண்டான்*
*இத்தனையடியரானர்க்கிரங்குநம்மரங்கனாய*
*பித்தனைப்பெற்றுமந்தோ பிறவியுள்பிணங்குமாறே.*

பரமாத்மாவை அடையும்படியாகிய பாக்கியத்தையுடைய சிறு மாமனிசருடன் சேர்க்கை. இங்கே சிறுமாமனிசர் என்பதற்கு உலகத்

தாருக்குச் சிறியவனுய்த்தோற்றி, ஜ்ஞாநம் வைராக்கியம் முதலான குணங்களால் மிகுந்த பெருமையையுடைய பாகவதர் என்று பொருள்.

133. திருமால்தலை -

**திருமாலுருவொக்கும்மேரு,அம்மேருவில்செஞ்சுட**
**ரோன் திருமால்திருக்கைத்திருச்சக்கரமொக்கும், அன்னகண்டும்**
**திருமாலுருவோடவன் சின்னமே பிதற்றாநிற்பதோர் திரு**
**மால்தலைக் கொண்டநங்கட்கு, எங்கே வரும் தீவினையே.**

(திருவிருத்தம்—88)

லக்ஷ்மீபதியால் ஏற்றுக்கொள்ளப்பட்ட நமக்குக் கெட்ட கர்மங்கள் எங்கே வரும்?

134. **ஆள்கின்றானுழியானுரால்குறைவுடையம்**
**மீள்கின்றதில்லை பிறவித்துயர்கடிந்தோம்**
**வாள்கெண்டையொண்கண் மடப்பின்னைதன்கேள்வன்**
**தாள்கண்டுகொண்டென்றலைமேல்புனைந்தேனே.** -திருவாய். 10-4-3

சக்கிராயுதத்தையுடைய எம்பெருமான் நம்மை ரக்ஷிக்கிருன். வேறு எவனுல் நாம் அடையவேண்டியதற்கு குறை செய்யமுடியும்.

---

## அரும்பதவுரை

நசை — ஆசை. கசை — சாட்டை.
பரிமாற்றம் — ஆதரம்.
பசை — எம்பெருமானிடத்தில் பிரீதி.
வாய்வெருவுதல் — தூக்கத்தில் நினைவில்லாமல்
ஒன்றைச்சொல்வதுபோல் வாய் வெறுமனே இருக்கமுடியாமல்
ஏதாவதொன்றைச் சொல்லுதல்.

---

## 27. மூலமந்திராதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

634. व्यक्तं हि (நாரதீயம்—1-32)

ஆறு குணங்கள் நிறைந்த தேவனுன நாராயணன் தானே எட்டெழுத்தான மூலமந்திரரூபமாய் அதை ஜபிக்கிறவர்களுடைய வாயில் இருக்கிருர். இது நிச்சயம்.

635. मन्त्राणां परम: (நாரதீயம்—1-11)

எப்போதுமிருக்கிற மூலமந்திரமானது மந்திரங்களுக்குள்ளே மிகவுமுயர்ந்த மந்திரம். ரஹஸ்யமானவைகளுக்குள்ளே மிகவும் ரஹஸ்ய மானது. சுத்தியைச் செய்யுமவைகளுக்குள் மிகவும் பரிசுத்தமானது.

636. बहवो हि (நாரதீயம்—1-16)

ஸநகர் முதலான அநேக மஹாத்மாக்களான ருஷிகள் அஷ்டா க்ஷரத்தை ஜபித்து எம்பெருமானுடைய ஸ்தாநத்தை யடைந்தார்கள்.

637. यथा सर्वेषु (நாரதீயம்—1-42)

எப்படி எல்லா தேவர்களுக்குள்ளே நாராயணனைக் காட்டிலும் உயர்ந்தவனில்லையோ, அப்படியே எல்லா மந்திரங்களுக்குள்ளும் எட்டெழுத்து மந்திரத்தைக் காட்டிலும் மேற்பட்டதில்லை.

638. भूतोर्ध्व (நரஸிம்மபுராணம்—18-32)

கையைத் தூக்கிக்கொண்டு ஸத்யம் பண்ணி உங்களுக்கு இப்போது இங்கே சொல்லுகிறேன். பிள்ளைகளே! சிஷ்யர்களே கேளுங்கள். எட்டெழுத்து மந்திரத்தைக் காட்டிலும் உயர்ந்த மந்திரம் கிடையாது. அதைக்கொண்டு எம்பெருமானை எப்போதும் அர்ச்சனை செய்து கொண்டிரு; அதைக்கொண்டு அவனிடத்தில் பக்தியைச் செய். அதைக்கொண்டு அவனுக்கு நமஸ்காரம் பண்ணு. இப்படி அந்த மந்திரத்தை உயர்ந்த மந்திரமாக எண்ணிக்கொண்டு அவனிடத்தில் பக்தி பண்ணுகிறவர்கள் நாசத்தை அடைகிறதில்லை, அதாவது ஸம்ஸாரத்திலிருப்பதில்லை.

639. आसीना वा (நாரதீயம்)

உட்கார்ந்துகொண்டிருந்தாலும் படுத்துக்கொண்டிருந்தாலும் எங்கேயாவது நின்றாலும், நமோ நாராயண என்கிற மந்திர மொன்றையே உபாயமாகப் பற்றினவர்கள் நாங்கள்.

640. नमो नारा

नमो नाराय – तत: प्रभाते विमले विनिवृत्ते च जागरे ।
नमो नारायणेत्युक्त्वा श्वपाक: पुनरागमत् ।।

(இதிஹாஸஸமுச்சயம்—33-130)

தர்மத்தில் மனதையுடைய புண்டரீகனும் நாராயணனையே அடையவேண்டியவைகளில் மிகவுமுயர்ந்தவனாக நினைத்து, நமோ நாராயணாய என்கிற எட்டெழுத்து மந்திரத்தை ஜபித்துக் கொண்டு முக்தியையடைந்தான்.

## नमो नारायण

641. **वैदिकम्** (நாரதீயம்)

கர்மமானது வைதிகமென்றும், தாந்திரிகமென்றும், வைதிக தாந்திரிகமென்றும், இப்படி மூன்று விதமென்று பாஞ்சராத்ரமாகிற பாற்கடலில் சொல்லியிருக்கிறது. பிராம்மணர்களுக்கு வைதிகமான கர்மம், ராஜாக்களுக்கு வைதிகதாந்திரிகமான கர்மம், வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும் தாந்திரிக கர்மம், எல்லாருக்கும் கர்மமானது தாந்திரிகமாக இருக்கலாம். எட்டெழுத்து மந்திரமும், பன்னிரண்டெழுத்து மந்திரமும், ஆறு எழுத்துமந்திரமும் அளவில்லாத தேஜஸ்ஸையுடைய விஷ்ணுவின் மந்திரங்கள். இந்த முக்கியமான மந்திரங்கள் பிரணவத்தோடு சேர்ந்து வைதிகமந்திரங்களாகின்றன. அத்துடன் சேராதபோது அவைகள் தாந்திரிகங்களென்று சொல்லப்படுகின்றன.

642. **तत्रोत्तरायणस्यादि:** (நாரதீயம்—1-57)

மூலமந்திரத்தில் மேலேயிருக்கிற அயநம் என்கிற சொல்லில் முதல் எழுத்தான அகரம் விஷ்ணுவைச் சொல்லுகிறது. அத்துடன் அநுஸ்வாரத்தைச் சேர்த்தால் இப்படிச் சேர்க்கப்பட்ட அகரமானது மூலமந்திரத்திற்குப் பீஜமாகிறது. இப்படிச் சேர்ப்பதினால் மந்திரம் எட்டெழுத்துள்ள மந்திரமாக ஆகிறது.

643. **किं तत्र** (நாரதீயம்—1-41)

ஒருவனுக்கு வேண்டிய பலன் விஷயத்தில் அனேக மந்திரங்களால் என்ன பிரயோஜநம்? அனேக விரதங்களாலே என்ன பிரயோஜநம்? நமோ நாராயணாய என்கிற மந்திரமானது வேண்டிய பலன்களையெல்லாம் கொடுக்கும்.

644. **आद्यं तु त्र्यक्षरम्** (மநுஸ்மிருதி—11-265)

மூன்று எழுத்தான வேதமானது (பிரணவமானது) முதலிலிருந்தது. அதில் மூன்று வேதமும் இருந்தது. இந்த மூன்று எழுத்து வேதமானது மற்ற வேதங்களைக் காட்டிலும் வேறு. ஸ்திரீகளும் சூத்திரர்களும் அறியாதபடி அதை ரக்ஷிக்கவேண்டியது. அதையறிந்தவன் மூன்று வேதங்களை அறிந்தவன்.

645. हविर्गृहीत्वा

ஆத்மாவாகிய ஹவிஸ்ஸை 'வஸுரண்ய' என்று ஆரம்பிக்கிற மந்திரத்தாலேயெடுத்துக் கொண்டு எப்போதுமிருக்கிற அச்யுதனுகிற அக்கினியில் பிரணவம் என்கிற மந்திரத்தினுல் ஹோமம் செய்ய வேண்டியது.

646. क्षेत्रज्ञस्य (யாஜ்ஞவல்க்யஸ்மிருதி—3-34)

ஈசுவரனுடைய ஜ்ஞாநத்தால் பத்தஜீவனுக்கு மிகவும் உயர்ந்த சுத்தி வருகிறதென்று எண்ணப்படுகிறது.

647. ईदृश: परमात्मा (சாண்டில்யஸ்மிருதி—5-17)

பரமாத்மா இப்படியிருக்கிருன், ஜீவன் இப்படியிருக்கிருன் என்று அவர்களுடைய ஸம்பந்தத்தை நினைப்பது யோகமென்று சொல்லப்படுகிறது.

648. अकारार्थो विष्णु: (அஷ்டச்லோகீ—1)

அகாரத்தின் அர்த்தம் உலகத்தை யுண்டுபண்ணி ரக்ஷித்து, அழிப்பவனுகிய விஷ்ணு. மகாரத்தின் அர்த்தம் ஜீவன். இந்த ஜீவன் அந்த விஷ்ணுவின் கைங்கரியத்துக்கு ஸாதநம். இருவருக்குமுள்ள ஸம்பந்தத்தை வேருெருவருக்கும் தகாததென்று உகாரம் காட்டுகிறது மூன்று எழுத்து ரூபமாயும், வேதத்தின் ஸாரமாயுமிருக்கிற பிரணவமானது இந்த அர்த்தத்தைச் சொல்லிற்று.

649. अष्टाक्षरशरीराङ्ग (வாமநபுராணம்)

எட்டெழுத்து மந்திரத்தில் ஒரு உடம்பில் ஒரு அங்கமிருப்பதுபோல ஒரு பாகமாகிய பிரணவத்தின் முதலெழுத்தான அகாரத்தாலே எல்லாவற்றுக்கும் ஆதாரமான எம்பெருமான் சொல்லப்படுகிருன். எல்லா சொற்களுக்கும் அகாரம் ஸ்வபாவத்தினுலே காரணமாயிருப்பதாலும், அந்த சொற்களாலே சொல்லப்பட்ட எல்லா வஸ்துக்களுக்கும் பிரம்மம்

(எம்பெருமான்) காரணமாயிருப்பதாலும், அகாரம் அவனைச் சொல்லுகிறது. அவன் அதினுல் சொல்லப்பட்டவன். இவ்விதமான ஸம்பந்தமானது அந்த அகாரத்துக்கும் எம்பெருமானுக்கும் உசிதமாயிருப்பதாலே தோன்றுகிறது.

650. अ निषेधे

அ என்கிற எழுத்து, இல்லையென்கிற அர்த்தத்தையும், விஷ்ணுவை யும் சொல்லுகிறது. விஷ்ணுவைச் சொல்லும் போது அது பும்லிங்கம்.

651. अकारो विष्णुवाचक:

அகாரம் விஷ்ணுவைச் சொல்லுகிறது.

652. अ इति (ஹரிகிரந்தம்)

பகவானுன நாராயணனுடைய முதல் பெயரான அ என்பதைச் சொல்லுவதாலே எந்த மங்களம் செய்யப்படவில்லை.

लक्ष्म्या सह (104-வது பக்கம் 463-நெ. பார்க்க)

तदन्तर्भावात् – स्वरूपं स्वातन्त्र्यं भगवत इदं चन्द्रवदने !
त्वदाश्लेषोत्कर्षाद्भवति खलु निष्कर्षसमये ।
त्वमासीर्मात: ! श्री: कमितुरिदमित्थंत्वविभव:
तदन्तर्भावात्त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि ।।

भास्करेण

नरसंबन्धिनो नारा: (பாஞ்சராத்ரம் )

நரன் என்ற எம்பெருமானைச் சேர்ந்த சேதனர்களை நாரா: என்பர்.

653. त्वं मेऽहं मे कुतस्तत्तदपि कुत इदं वेदमूलप्रमाणात्
एतच्चानादिसिद्धादनुभवविभवात् सोऽपि साक्रोश एव।
क्वाक्रोशस्तस्य गीतादिषु मम विदित: कोऽत्र साक्षी सुधी:स्यात्
हन्त त्वत्पक्षपाती स इति नृकलहे मृग्यमध्यस्थवत् त्वम् ।।

எம்பெருமான் ஜீவனைப்பார்த்து நீ எனக்குச் சேஷன் என்று சொல்ல, ஜீவன் நான் எனக்கே சேஷன் என்ன ; எம்பெருமான் - நீ சொன்னது எந்தக் காரணத்தாலே; ஜீவன் - தேவரீர் சொன்னது எந்தக்காரணத்தாலே; எம்பெருமான் - நான் சொன்னது வேதத்தை மூலமாகக்கொண்ட பிரமாணத் தாலே; ஜீவன்- நான் சொன்னதும் அநாதியாய் ஏற்பட்ட அநுபவத்தின் பெருமையால் ; எம்பெருமான்- உன் அநுபவம் ஆக்ஷேபிக்கப் பட்டது; ஜீவன்- எங்கே எவனுல் ஆக்ஷேபிக்கப்பட்டது; எம்பெருமான்- கீதைமுத லான புஸ்தகங்களில் ஆக்ஷேபிக்கப் பட்டிருக்கிறதென்று எனக்குத் தெரியும்; ஜீவன்- இந்த விஷயத்தில் எவன் ஸாக்ஷி; எம்பெருமான்- நல்ல அறிவுடைய பெரியவர் ஸாக்ஷி; ஜீவன்- அவன் தேவரீரிடத்தில் பக்ஷபாதமுள்ளவன்; இவ்விதமாய் ஜீவனுடன் கலகமுண்டானபோது தேவரீர் ஸத்யம் பண்ணத் தயாராயிருக்கிறவன்போல் விளங்குகிறீர். இது திருமஞ்ஜநகாலத்தில் ஸ்ரீரங்கநாதன் ஈரவஸ்திரத்தைச் சாத்திக்கொண்டு, ஒற்றை மாலை போட்டுக் கொண்டிருப்பதை ஸேவித்து பட்டர் உத்ப்ரேக்ஷித்தது.

654. अस्या मम च (விஷ்வக்ஸேந ஸம்ஹிதை)

லீலை- போக என்ற இரண்டு விதமான விபூதியானது அவளுக்கும் (பிராட்டிக்கும்) எனக்கும் சேஷம் என்று வேதாந்தங்களிலும் என்னுடைய சாஸ்திரங்களிலும் ஏற்பட்டிருக்கிறது.

उभयाधिष्ठानम्

परगतातिशय

655. मकारम्

ஜீவனைச் சொல்லுகிற மகாரத்தைக் கொண்டு வியாபக நியாஸம் செய்யவேண்டியது. மந்திரத்தை ஜபிக்கும்போது செய்ய வேண்டியவை களில் இவையொன்று.

656. पञ्चार्णानाम् (தத்வஸாகரஸம்ஹிதை)

வடமொழியில் ககாரம் முதலாய் மகாரத்தோடு முடிகிற ஐந்து ஐந்து அக்ஷரங்கள் அடங்கிய ஐந்து வர்க்கங்களாலே சொல்லப்பட்ட தத்துவங் களுக்கு ஆத்மாவாக எல்லா ஈசுவரர்களுக்கும் மேற்பட்ட ஈசுவரன் இருக்கிருன்.

657. भूतानि (பாத்மோத்தரம்—4-25, 26, 27)

கவர்க்கத்தாலே ஐந்து பூதங்களும், சவர்க்கத்தாலே ஐந்து கர்மேந்திரியங்களும், டவர்க்கத்தாலும் தவர்க்கத்தாலும் முறையே ஐந்து ஜ்ஞாநேந்திரியங்களும், ஐந்து தந்மாத்திரங்களும், பகாரத்தால் மனதும், फ காரத்தாலே அஹங்காரமும்; ब காரத்தாலும் भ காரத்தாலும் முறையே மஹத்தும், ப்ரகிருதியும் சொல்லப்படுகின்றன. மகாரத்தாலே சொல்லப்பட்ட ஜீவாத்மா பஞ்சவிம்சகன் என்று சொல்லப்படுகிருன்.

658. ज्ञोऽत एव (ப்ரம்மஸூத்திரம்—2-3-19)

ஜீவாத்மா அறிகிறவன் அதாவது—ஜ்ஞாநமென்கிற குணமுள்ளவன். அதிஞலேயே-அதாவது சுருதியிஞலேயே.

659. व्यतिरेकः (ப்ரம்மஸூத்திரம்—3-3-52)

ஜீவன் எம்பெருமானைத் தியானம் பண்ணும்போது அவனுடைய உடம்பாகத் தன்னையும் தியாநம் செய்யவேண்டியது. அப்போது இப்போதிருக்கிற ஆகாரத்தை விட்டுவிட்டு, அதற்கு வேருன தனக்கு ஸ்வபாவமாயுள்ள ஆகாரத்தையே தியாநம் செய்யவேண்டியது. அதுதான் முக்தியடையும்போது மறைந்திருந்து தோன்றவேண்டியது. ஜீவன் எம்பெருமானை மாத்திரம் தியாநம் செய்யக்கூடாது. தன்னையும்கூட தியாநம் செய்யவேண்டியது. எம்பெருமானுக்கு எந்த ஆகாரமிருக்கிறதோ அதைத் தியானம்பண்ணுவதுபோல் தனக்கும் இயற்கையாயுள்ள ஆகாரத்தைத் தியானம் செய்யவேண்டியது.

660. नात्मा श्रुतेर्नित्यत्वाच्च ताभ्यः ।। (ப்ரம்மஸூத்திரம்—2-3-18)

ஆத்மாவு(ஜீவனு)க்கு ஆகாசம் முதலானதுபோல் ஸ்வரூபத்தில் வேறுபாடில்லை. அப்படியே வேதம் சொல்லுகிறபடியால்.

अतोऽहं - दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः ।
अतोऽहमपि ते दास इति मत्वा नमाम्यहम् ।।

मम नाथ ! यदस्ति योऽस्म्यहं सकलं तद्धि तवैव माधव ! ।
नियतस्वमिति प्रबुद्धधीरथवा किं नु समर्पयामि ते ? ।।

661. अकारार्थायैव स्वमहम्, अथ मह्यं न, निवहा: नराणां नित्यानाम् अयनमिति नारायणपदम् । यम् आहास्मै कालं सकलमपि सर्वत्र सकलासु अवस्थासु आवि: स्युर्मम सहजकैङ्कर्यविधय: ॥

(அஷ்டச்லோகீ—3)

நான் அகாரத்தின் பொருளான எம்பெருமானுக்காகவே இருக்கிற ஸொத்து; நான் எனக்காக இருக்கவில்லை; நித்தியர்களான நரங்களு (ஜீவன்களு)டைய கூட்டமானது எவனுக்கு இருப்பிடமாயி ருக்கிறதோ என்று நாராயணன் என்கிற சொல்லானது எவனைச் சொல்லுகிறதோ, எனக்குத் நாதனாகவுள்ள அவனுடைய கைங்கரிய பிரகாரங்களும் எல்லாவிடங்களிலும் எல்லா காலங்களிலும் தோன்றவேண்டும்.

662. द्व्यक्षरस्तु (பாரதம் சாந்திபர்வம்—13-4)

ஸம்ஸாரத்துக்குக் காரணமான இரண்டெழுத்து மம என்பது. எப்போதுமிருக்கிற பிரும்மத்தையடைவதற்குக் காரணமான மூன் றெழுத்துச் சொல் ந மம என்பது.

सर्वं जिह्मं
परात्तु
दास्यम् ऐश्वर्ययोगेन (சாந்திபர்வ 81- 5)

ஈச்வரனின் ஸ்வபாவமாகிய ஸ்வாத்ந்த்ர்யத்தால் நான் என் ஜ்ஞாதி களுக்கு தாஸனாக இருப்பதையும் செய்கிறேன். போகங்களில் பாதியை நானே அநுபவிக்கிறேன். என் மீது வெறுப்பால் சிலர் கூறும் கொடிய சொற்களையும் நான் பொறுக்கிறேன் - (இது எம்பெருமானின் திருவாக்கு.)

663. यस्स देव: (பாரதம் ஆரண்யபர்வம்—192-51)

தாமரைப்பூவின் இதழ்போன்ற திருக்கண்களையுடைய எந்த தேவன் முன்பு என்னாலே பார்க்கப்பட்டானோ, ஓ புருஷச்ரேஷ்டனே! ஜநார்த்த நனான அந்தப் புருஷனே உனக்கு ஸம்பந்தியாக இருக்கிறான். (இது மார்க்கண்டேயர் பாண்டவர்களைக் குறித்துச் சொன்னது).

सर्वेषामेव धर्माणामुत्तमो वैष्णवो विधि: ।
रक्षते भगवान् विष्णुर्भक्तमात्मशरीरवत् ॥

664. एवमुक्ता: (பாரதம் ஆரண்யபர்வம்—192-56)

இப்படிச் சொல்லப்பட்ட ப்ருதையின் பிள்ளைகளான மூன்று பேர்களும் இரட்டையர்களும் புருஷச்ரேஷ்டனே! த்ரௌபதியுடன் கூடச்சேர்ந்து எல்லாரும் ஜநார்த்தநனுக்கு நமஸ்காரம் செய்தார்கள்.

665. शरणं प्रति - सा विनिश्चित्य बहुधा विचार्य च पुनः पुनः ।
शरणं प्रति देवानां प्राप्तकालममन्यत ।। (பாரதம் ஆர.—54-16)

தேவர்களைக் குறித்து சரணுகதி பண்ணவேண்டிய காலம் வந்ததாக அவள் (தமயந்தீ) எண்ணினுன். அவள் வாக்காலும் மனதாலும் நமஸ்காரத்தைச் செய்து.

666. शरणं प्रति (அஹிர்புத்ந்யஸம்ஹிதை—37-37)

ஸமித்தை ஸாதநமாகவுடைய யஜ்ஞும் முதலான யஜ்ஞுங்களுக் குள்ளே எம்பெருமானிடத்தில் ஆத்மாவின் ஸமர்ப்பணத்தை எவன் செய் தானே, அவன் நல்ல யஜ்ஞும் செய்யப்பட்டவனென்று சொல்லப்படு கிருன்.

नमस्कारात्मकं यस्मै विधायात्मनिवेदनम् ।
त्यक्तदु:खोऽखिलान् कामानश्नुते तं नमाम्यहम् ।।

667. प्रेक्षावत: (அஹிர்புத்ந்யஸம்ஹிதை—52-2+33)

புத்திமானெருவன் தன்னைக்காட்டிலும் வேருன உயர்ந்தவனை குறித்து, ஒரு பிரயோஜநத்தை வேண்டாமல் தானுய் வணங்குவதாகிய உடம்பின் வேலை நமஸ்ஸு என்று சொல்லப்படுகிறது(2). சாஸ்திரத்தில், அறிவுள்ளவர்கள் (சேதநர்கள்) உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்று இருவகைப்- பட்டவர்களாகச் சொல்லப்படுகிருர்கள். இவர்களைக் காட்டிலும் வேறெருவனில்லை (3). அவர்களில் எவனிடத்தில் காலத்தி னாலும் குணங்களாலும் மேன்மை இருக்கிறதோ அவனே ஜ்யாந் (உயர்ந்தவன்) என்கிற சொல்லுக்கு முக்கியமான பொருள். (இங்கே காலத்தைச் சொன்னதாலே இடமும் சொல்லப்பட்டதாகிறது). எம்பெரு மானே எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிம் இருப்பதாலேயும் அவனுடைய குணங்களுக்கு அளவில்லாமையாலும் அவனே உயர்ந்தவன் (ஜ்யாந்) (4). அவனைக் காட்டிலும் வேருன அறிவுள்ளவர்களெல்லாரும்

தாழ்ந்தவர்கள் (அஜ்யாந்) என்று சொல்லப்படுகிருர்கள். உயர்ந்த அவனுக்கும், தாழ்ந்த இவர்களுக்கும் ஸம்பந்தமானது அவன் சேஷியாயும், இவர்கள் சேஷமாயுமிருப்பது (5). உயர்ந்தவன் ஒருவனே, மற்ற எல்லாரும் தாழ்ந்தவர்கள். அவன் வணங்கப்படுகிறவனுயும், இவர்கள் வணங்கு கிறவர் களாயும் இருப்பது அவனுடன் இவர்களுக்கு ஸம்பந்தம் (6). வணங்கப்படுகிறவன் உயர்ந்தவனென்றும் சேஷியென்றும் சொல்லப் பட்டவன். சேஷர்களான மற்றவர்கள் வணங்குகிறவர்களென்று சொல்லப் படுகிருர்கள். இவர்களுக்கு அவனுடன் ஸம்பந்தமானது ஒரு பிரயோ ஜநத்தை முன்னிட்டு அன்று, தாழ்ந்தவர்களுக்கும் உயர்ந்தவர்களுக்கும் இருக்கிற இந்த ஸம்பந்தமானது தாஞயிருக்கிறது (71/2). இந்த சேதநன் உயர்ந்த அவனைக்குறித்து ஒரு பிரயோஜநத்தைத்தேடாமல் எந்தத்தன்மை யோடு வணங்குகிருஞே, அதற்கு நமநம் என்று பெயர். அவனைச் சேஷியாக வும் தன்னைச் சேஷனுகவுமெண்ணுவதும் நமநம் (81/2). இது எப்படி யென்ருல்— பகவான் எனக்கு எப்போதும் சேஷி; அவனுக்கு நான் எப்போதும் சேஷன் என்கிற இந்த எண்ணம் நமஸ் என்று சொல்லப்படு கிறது. ஏனென்றால் அது உடம்பின் வேலையாகிய நமஸ்காரத்துக்குக் காரணமாயிருக்கிறது (91/2). இப்படி நமஸ் என்கிற சொல்லுக்கு இரண்டு அர்த்தங்கள் சொல்லி, சரணுகதியாகிய மூன்ருவது அர்த்தம் சொல்லப்படு கிறது. எம்பெருமானை இந்த வணக்கமானது வணங்கும்படி செய்கிறது. அதாவது வணங்குகிறவனுக்குக் கேட்டதைக் கொடுக்கும்படியாக எம்பெருமானைச் செய்கிறது. இது நிச்சயம். உயர்ந்தவனுன எம்பெருமான் தாழ்ந்தவனுய் வணங்குகிறவனிடத்தில் அவன் வணக்கத்தைப் பார்த்து தானும் வணக்கமுள்ளவனுக ஆகிருன் (101/2). ஆகையினுலே- அதாவது எம்பெருமானை வணங்கும்படி செய்வதாலே- இந்த வேலை நமஸ் என்று சொல்லப்பட்டது (11). வாக்காலே நம: என்று சொல்லி, மனதாலே இதை நினைத்துக்கொண்டு, உடம்பாலே வணங்குவது பூர்ணமான நமஸ் (சரணுகதி) என்றும், இதைக் காட்டிலும் வேருனது அதாவது சொன்ன அம்சங்களில் ஏதாவது குறைந்தது - குறைந்த நமஸ் என்றும் சொல்லப் படுகறது (12). இது பூர்ணமான பிரபத்தி. இதினுடைய அங்கங்களி ருப்பதைச் சொல்லுகிறேன் கேள் (121/2)./234-வதைப் பார்க்க (14). அநாதியாகக் கெட்ட வாஸனைகள் ஏறியிருப்பதாலும், ஸ்வபாவத்திஞல் ஒருவனுக்கு உட்பட்டிருந்தாலும், ராகத்வேஷம் முதலான மலங்களிஞலே மனது மூடப்பட்டிருப்பதாலு முண்டான, பக்தியைச் செய்வதற்கு அறிவும், சக்தியுமில்லாமை ஆகிஞ்சந்யம் என்று சொல்லப்படுகிறது.

அதனுலுண்டான வருத்தம் வெளியில் தோன்றுவது கார்ப்பண்ய மென்கிற இரண்டாவது அங்கம். தான் ஸ்வதந்திரன் அதாவது தாஞகவே வேலையைச் செய்யத்தகுந்தவன் என்கிற எண்ணம் அதற்கு விரோதியென்று சொல்லப்படுகிறது (15-16). எம்பெருமான் உயர்ந்தவனேயாகிலும் பிராணிகளிடத்தில் இரக்கமுள்ளவஞயும், எப்போதும் அநுக்கிரஹ மொன்றையே செய்யவேண்டுவது அங்கம் (17). அவன் கர்மத்துக்குத் தகுந்தபடி பலம் கொடுக்கிறவன், நம்மிடத்தில் உபேக்ஷை செய்பவன் என்கிற எண்ணம் மஹாவிச்வாஸம் என்கிற மூன்ருவது அங்கத்தை எப்போதும் கெடுக்கிறது (18). இப்படி இரக்கமுள்ளவ ஞயிருந்தபோதிலும், அவனுக்குச் சக்தியில்லாமையால் நம்மை ரக்ஷிக்கத் தகுந்தவனல்லன் என்கிற புத்தியை விட்டு அவன் நம்மை ரக்ஷிக்கச் சக்தியுள்ளவன் என்று எம்பெருமானுடைய சக்தியை நினைத்து ரக்ஷிக்கவேண்டுமென்று அவனைக் கேட்பது நான்காவது அங்கம். இந்த அங்கத்திற்கு விரோதியானது, அவனுக்குக் குணமில்லாமையால் உதாஸீநஞயிருப்பன் என்று எண்ணுவ தாகலுமுண்டாகும் (19-20). ஒருவன் தன்னுடைய ஸ்வாமிக்கு விரோத மானதைச் செய்வதை விட்டிருப்பதாகிய இருப்பு, ப்ராதிகூல்யவர்ஜந மென்கிற ஐந்தாவது அங்கம். இதற்கு விரோதி—சாஸ்திரத்துக்கு விருத்த மானதைச் செய்வது (211/2). ஜங்கம ஸ்தாவரங்களான எல்லாப் பிராணிகளும் எம்பெருமானுடைய உடம்பு. ஆகையால் அவைகளுக்கு அநுகூலமானதைச் செய்யவேண்டியதென்கிற நிச்சயம் ஆருவது அங்கம். அதற்கு விரோதி— அவைகளுக்குப் பிராதி கூல்யத்தைச் செய்வது (23). இப்படி அங்கங்களோடும், அவைகளுக்கு விரோதிகளைச் செய்யாதிருப்ப தாகிய உபாயங்களோடும் கூடின நமநம் (சரணுகதி) உனக்குச் சொல்லப்பட்டது. இது நமஸ் என்கிற சொல்லுக்கு ஸ்தூலமான பொருள். இதற்கு வேருன ஸூக்ஷ்மமான பொருளைக் கேள் (24). சேதநன் எப்போது தன்னையும் தன்னைச் சேர்ந்த வஸ்துக்களையும் என்னதென்று எண்ணுகிருனோ, அப்போது மம என்கிற இரண்டெழுத்தும் மமகாரத்தைச் சொல்லும் (25). தன் விஷயத்திலும் தன்னுடைய பதார்த்தங்கள் விஷயத்திலும் நான் ஸ்வதந்திரன், இவைகள் என்னுடையவைகள் என்கிற எண்ணமானது, அநாதியான கெட்ட வாஸனைகளாலே பலப்பட்டிருக்கிற தப்பெண்ணத் திஞலே உண்டாகியிருக்கிறது; அந்த எண்ணம் இவைகள் என்னுடைய தன்று (மே-ந) என்கிற நல்ல எண்ணத்தாலே விலக்கப்படுகிறது (261/2). நான் ஸ்வதந்திரனன்று, நான் எனக்குச் சேஷனன்று என்பது ''மே-ந'' என்பதற்குப் பொருள் (27). உடம்பு முதலானவைகள் என்னுடையவை அன்று. அவைகள் பரமாத்மாவுக்குச் சேஷங்கள். இந்த புத்தியாலே

என்னுடையது என்கிற அந்தந்த எண்ணங்கள் போக்கப்படுகின்றன (28). அநாதிகளான கெட்ட வாஸனைகளாலுண்டான வஸ்துக்களின் உண்மை யான இருப்புக்கு விரோதமான அந்தந்த எண்ணங்களாலே பலமாய் ஏறியிருக்கிற நான் ஸ்வதந்திரன், இவைகள் என்னுடையவை என்கிற எண்ணமானது— எம்பெருமான் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருக்கிறான் என்கிற நல்ல அறிவினாலுண்டான 'நம:' என்கிற சொல்லாலே பிரபத்தி பண்ணுகிறவனாலே தன்னிடத்திலிருந்து விலக்கப்படுகிறது (30). இப்படி ஸூக்ஷ்மம் என்கிற அர்த்தம் சொல்லப்பட்டது. இதற்கு வேறான பரம் என்கிற அர்த்தத்தைக் கேள் (301/2). நகாரமானது உபாயத்தையும், ம என்பது முக்கியமானதென்பதையும், விஸர்க்கமானது எம்பெருமானையும் சொல்லுகின்றன. அந்தச் சொல்லுக்கு இந்த அர்த்தம் கிடைக்கிறது. அதாவது– அநாதியாயும் மிகவும் உயர்ந்த ஈசுவரனாயும் சக்தியுள்ளவனாயும் புருஷோத்தமனென்றும் சொல்லப்பட்ட எம்பெருமானே அவனை அடை வதற்கு முக்கியமான நமஸ்ஸு என்று சொல்லப்பட்ட உபாயம் (321/2). இப்படி நமஸ்ஸின் மூன்று விதமான அர்த்தங்கள் உனக்குச் சொல்லப் பட்டன (33).

संकीर्त्य

668. नारायणेति यस्यास्ये वर्तते नाम मङ्गलम् ।
नारायणस्तम् अन्वास्ते वत्सं गौरि व वत्सला ।। (?)

நாராயண என்கிற மங்களமான திருநாமமானது எவனுடைய வாயில் இருக்கிறதோ, அவனை நாராயணன் பின்தொடருகிறான். கன்றை மாடு பின்தொடருவதுபோல.

669. नारायणेति शब्दोऽस्ति वागस्ति वशवर्तिनी ।
तथाऽपि नरके घोरे पतन्तीत्येतदद्भुतम् ।।

நாராயண என்கிற சொல்லிருக்கிறது. நம்முடைய வாக்கு நமக்கு உட்பட்டிருக்கிறது. இப்படியிருந்தும் வாக்காலே நாராயண என்று சொல்லாமல் கோரமான நரகத்தில் ஜீவன்கள் விழுகிறார்களே. இது ஆச்சரியமாயிருக்கிறது.

670. रोगाद्द्य – (நாரதீயம்—1-38)

நாராயணன் என்கிற இந்தச் சொல்லை மாத்திரம் சொல்லுகிறவர்

களும் வியாதி, ஆபத்து, பயம், துக்கம் இவைகளிலிருந்து விடப்படு கிறார்கள். இதில் ஸம்சயமில்லை.

671. सृष्ट्वा नारं तोयमन्तः स्थितोऽहं येन स्यान्मे नाम नारायणेति ।
कल्पे कल्पे तत्र शयामि भूयः सुप्तस्य ते नाभिजं स्याद्यथाऽब्जम् ।।

(வராஹபுராணம்)

நாரம் என்று சொல்லப்படுகிற ஜலத்தை உண்டுபண்ணி அதற்குள் நான் இருந்தேன். ஆகையால் எனக்கு நாராயணன் என்று பெயர் வந்திருக்கிறது.

672. आपो नारा इति प्रोक्ताः आपो वै नरसूनवः ।
ता यदस्यायनं पूर्वं तेन नारायणः स्मृतः ।। (மநுஸ்மிருதி—1-19)

ஜலம் நாரம் என்று சொல்லப்படுகிறது. ஏனென்றால் அது நரனிடமிருந்து உண்டானது. அது அவனுக்கு முன்னால் இருப்பிடமாய் இருந்தது. ஆகையால் அவன் நாராயணன் என்று எண்ணப்படுகிறான்.

673. नराज्जातानि (பாரதம் ஆநுசாஸநிகபர்வம்—186-7)

தத்துவங்கள் நரனிடமிருந்து உண்டானவைகள் ஆகையால் அவைகளை நாரங்களென்று அறிகிறார்கள். அவனுக்கு அவைகளே இருப்பிடம். அதனால் அவன் நாராயணனென்று எண்ணப்படுகிறான்.

674. नाराणामयन – अधो न क्षीयते जातु यस्मात्तस्मादधोक्षजः ।
नाराणामयनत्वाच्च नारायण इति स्मृतः ।।

(பாரதம் உத்யோகபர்வம்—69-10)

நரங்களுக்கு ஆதாரமாயிருப்பதாலே நாராயணனென்று சொல்லப் படுகிறான்.

675. नारस्त्विति (பாத்மோத்தரம்)

நார என்று எல்லா ஜீவன்களுடைய கூட்டம் சொல்லப்படுகிறது. அதற்கு அடையவேண்டியதாகவும், அடைவதற்கு உபாயமாகவும் எம்பெருமான் இருப்பதாலே அவன் நாராயணனென்று எண்ணப்படுகிறான்.

676. नारो नराणाम् (பாத்மோத்தரம்)

நாரம் என்பது நரனென்று சொல்லப்பட்ட ஜீவன்களுடைய கூட்டம். அதற்கு நான் அடையவேண்டியதாகவும், அடைவதற்கு உபாயமாகவும் இருக்கிறேன். ஆகையால் ருஷிகளால் நான் நாராயணன் என்று சொல்லப் படுகிறேன். நார என்கிற சொல்லாலே ஜீவன்களுடைய கூட்டம் அறிவுள்ள வர்களாலே சொல்லப்படுகிறது. அவைகளுக்கு அயநமாய் இருப்பதாலே நாராயணன் என்று சொல்லப்படுகிருன். ஆகையாலே வேதங்கள் வேதாந்தங்கள் இவைகளின் கரையைக் கண்டவர்கள் நாராயணனே பந்துவென்றும், தாயென்றும், தகப்பனென்றும், குருவென்றும், ஆதாரமென்றும், உபாயமென்றும் சொல்லுகிருர்கள்.

677. विष्णवाधारं यथा चैतत् त्रैलोक्यं समवस्थितम् ।
परमार्थश्च मे प्रोक्तो यथाज्ञानं प्रधानतः ।। (விஷ்ணுபுராணம்—2-13-2)

எப்படி இந்த மூன்று உலகங்களும் விஷ்ணுவை ஆதாரமாக உடையவைகளாயிருக்கிறது என்பது சொல்லப்பட்டது.

यो लोक - उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ।।

678. नारायणमणीयांसमशेषाणामणीयसाम् ।
समस्तानां गरिष्ठं च भूरादीनां गरीयसाम् ।। (விஷ்ணுபு.—1-9-41)

ஸூக்ஷ்மங்களான எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் ஸூக்ஷ்மமான நாராயணனை.

679. रामानुजं - नूनं स कालो मृगरूपधारी
मामल्पभाग्यां लुलुभे तदानीम् ।
यत्रार्यपुत्रं विससर्ज मूढा
रामानुजं लक्ष्मणपूर्वजं च ।। (ராமாயணம் ஸுந்தரகா.—28-10)

ராமன் தம்பியையும், லக்ஷ்மணன் தமையனையும்

680. चेतनाचेतनम्

நாராயணனைக் காட்டிலும் வேருன அறிவுள்ளதும் அறிவில்லாதது மான எல்லாம் நாரம். அது எவனுக்கு இருப்பிடமாய் இருக்கிறதோ, அவன் நாராயணன்.

681. जह्नुर्नारा - सुप्रसादः प्रसन्नात्मा विश्वसृग्विश्वभुग्विभुः ।
सत्कर्ता सत्कृतः साधुर्जह्नुर्नारायणो नरः ।।

(பாரதம் ஆநுசாஸநிக—231-29)

இந்த மூன்று சொற்களும் நாராயணனுடைய பெயர்

(ஸஹஸ்ரநாமம்)

682. आपो नारायणोद्भूतास्ता एवास्यायनं पुनः ।
तस्मान्नारायणं देवं स्नानकाले सदा स्मरेत् ।। (வியாஸஸ்மிருதி)

ஜலம் நாராயணனிடமிருந்துண்டானது. அது எவனுக்கிருப் பிடமோ?

683. नरसम्बन्धिनः (அஹிர்புத்ந்யஸம்ஹிதை-52-50+54)

நரனைச் சேர்ந்தவைகள் நாரங்கள். அந்த நரன் புருஷோத்தமன். அவன் தன் ஆச்ரிதர்களுக்கு எல்லா அறிவையும் கொடுக்கிறவன். அவர் களுடைய எல்லா அஜ்ஞாநத்தையும் நாசம் பண்ணுகிறவன். எங்கேயிருந் தாலும் அவன் வேறுபாட்டையடைகிறதில்லை. ஆகையால் எப்போதும் ஒரே விதமாயிருக்கிறபடியாலே நரனென்று சொல்லப்படுகிறான். அவனைச் சேர்ந்தவர்களான அறிவுள்ளவர்களும் அறிவில்லாதவைகளும் அவனுக்குச் சேஷமாயும் அவனால் தாங்கப்பட்டவைகளாயும் நியமநம் பண்ணப் பட்டவைகளாயும், உண்டுபண்ணப்பட்டவைகளாயும், அவன் அவை களுக்குள்ளே நுழைந்து அவைகளைத் தூக்குகிறவனாயுமிருப்பதாலே நாரங்கள். எல்லா நாரங்களையும் அவன் நியமநம் பண்ணுகிறான். அதாவது- அவைகளுக்குள்ளே இருந்து அவைகளைப் போஷிப்பது முதலான

வேலைகளாலே அவைகளில் வியாபித்திருக்கிறான். நாரங்கள் அவனை அறிவதற்கு ஸாதநம். எப்படியென்றால் அவைகளாலே அவனிருக்கிறான் என்பது அறியப்படுகிறது. நாரங்களுக்கு அவன் அயநம், அதாவது இருப்பிடம். அவைகள் எப்போதும் இருப்பிடம். நாரங்களான அந்த ஆத்மாக்களுக்கு அவன் உயர்ந்த புருஷார்த்தமாகவும், அதற்கு உபாய மாகவுமிருக்கிறான்.

त्वमेव
पिता त्वम्

684. यस्य प्रसादे (ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம்–4-21)

எவனுடைய அநுக்கிரஹமிருக்கும்பொழுது இந்த எல்லாப் பிரஜைகளும் அநுக்கிரஹம் பண்ணுகிறவர்களாக ஆகுவார்களோ, அந்த ராமன் வாநர ச்ரேஷ்டஞன ஸுக்ரீவனுடைய அநுக்கிரஹத்தை எதிர்பார்க்கிருன்.

685. प्रसन्नमभवत्तस्मै (இதிஹாஸஸமுச்சயம்—33-141)

பக்தர்களிடத்தில் ஆசையுள்ள தேவசிரேஷ்டஞன கேசவன் பிரஸாதத்தை அடையும்போது; அந்தக் காரணத்தாலே தெளிந்த மனதை யுடையவன் விஷயத்தில் ஜங்கமஸ்தாவரங்களான எல்லா பிராணிகளும் பிரஸாதத்தையடைந்தன.

686. प्रसन्ने देवदेवेशे (நாரஸிம்மபுராணம்)

தேவதைகளுக்குத் தேவஞய் பிரும்மாவையும் நியமநம் பண்ணும் எம்பெருமான் பிரஸாதம் பண்ணும்போது மூன்று உலகங்களும் பிரஸாதமுள்ளவைகளாக ஆய்விட்டன.

सुहृदं

687. षष्ठपञ्चदशात् (நாரதீயம்—1-59)

மூலமந்திரத்தில் நகாரம் முதல் ஆருவது எழுத்தாயும், வடமொழி யில் ககாரம் முதல் பதினைந்தாவது எழுத்தாயும் ஆன ணகாரத்தைவிட்டு மந்திரத்தில் பாக்கியிருக்கிற பாகமானது (ஆய) அந்த மந்திரத்துக்குச் சக்தியென்று சொல்லப்படுகிறது.

688. अर्थात् (வாக்யபதீயம்)

அர்த்தம், பிரகரணம், அடையாளம், தகுதி, இடம், காலம் இவைகளால் சொற்களுக்கு அர்த்தங்கள் வெவ்வேருக இருக்கின்றன. இவைகளைக் கவனிக்காமல் சப்தத்தை மாத்திரம் கொண்டு பொருள் கொள்ளக்கூடாது.

689. दीयमानार्थ (வாக்யபதீயம்)

கொடுக்கப்படுகிற ஒரு வஸ்துவுக்குசேஷியாய் (அதாவது பெற்றுக் கொள்ளுகிறவஞய்) இருப்பதை ஸம்பிரதாநமென்று சொல்லுகிறது.

690. नीचीभावेन (அஹிர்புத்ந்யஸம்ஹிதை—52-35,36)

ஆத்மாவைத் தாழ்ந்தவ(சேஷ)னுகக் காட்டிச் செய்யப்படுகிற அவனுடைய ஸமர்ப்பணமானது, விஷ்ணு முதலான சொற்களிலிருக்கிற நான்காம் வேற்றுமையில் காட்டப்படுகிற ஸம்பிரதாநத்தைத் தெரிவிக் கிறது. தாழ்ந்தவ(சேஷ)னுன இந்த ஆத்மா ரக்ஷிக்கப்பட வேண்டியவனுகக் கொடுப்பதானது எவனிடத்தில்? என்று கேள்வியுண்டாக, 'விஷ்ணவே' (விஷ்ணுவுக்கு) என்று அவன் சொல்லப்படுகிருன்.

691. नायकत्वम् (பூர்வாசார்யகாரிகை)

எல்லாருக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கை, பரமபதத்தில் மனது விழும்படி செய்கை, அதற்கு விரோதியான ஆத்மாவுக்குத் தகாத குணங் களே நாசம் பண்ணுகை. இவைகள் 'ந' என்பதின் பொருள்கள். தன்னே அடைந்தவர்களுக்கு மங்களத்தைச் செய்கையும், அவர்களுடைய குண மான ஜ்ஞாநத்துக்கு விகாஸத்தையுண்டுபண்ணுகையும், அவர்களுக்கு மற்றவர்கள் பூஜை பண்ணும்படி செய்கையும் மகாரம் செய்வதால், அதற்கு இவைகள் அர்த்தமென்று தெரிந்தவர்களால் சொல்லப்படுகிறது. நாஸ்திகனாய் இருப்பதை விட்டுவிடுவது, எம்பெருமானுடைய கைங்கரியத்தை எப்போதும் செய்துகொண்டிருப்பது, பரமபதத்துக்கு ஒருவனேக் கொண்டுபோய்ச் சேர்க்கும்படியானவை ஆசாரியனுடைய வேலே. இவைகள் 'நா' என்கிற எழுத்தைத் தியானம் பண்ணுகிறவர்களுக்கு உண்டாகுமென்று மந்திரத்தைத் தெரிந்தவர்களால் சொல்லப்படுகிறது. எம்பெருமானிடத்தில் சீக்கிரத்தில் பிரீதியுண்டாவது, அவனேக் காட்டிலும் வேருனவைகளிடத்தில் இருக்கும் ஆசையை விடுவது, ராஜ்யத்தை ரக்ஷிப்பது முதலியவைகள் ரா என்பதைத் தியாநம் பண்ணுகிறவர்களுக்கு வரும். எம்பெருமானே அடைவதற்குச் செய்யவேண்டிய யோகத்தில் பரபரப்பும், அதின் பலனும் யகாரத்தில் அறிவுள்ளவர்களால் அடையப் படுகின்றன. எம்பெருமானே ஸ்தோத்ரம் பண்ணுவதும், அதற்குத் தகுந்த வாக்கின் ஸித்தியும் ணகாரத்தாலுண்டாகும். யக்ஷன், ராக்ஷஸன், வேதாளம், பூதங்கள் இவைகளுக்குப் பயம் யகாரத்தாலுண்டாகிறது. இப்படி மந்திரத்தின் எழுத்துக்கள் செய்யும் வேலேகள் மந்திரம் தெரிந்தவர்களால் சொல்லப்பட்டன.

सर्वमष्टाक्षर

692. तस्य वाचकः (பாதஞ்ஜல யோகஸூத்ரம்—1-1-27)

அந்த எம்பெருமானேச் சொல்லுகிற சொல்லானது பிரணவம்.

693. अव्यक्तार्थतया (சாண்டில்யஸ்மிருதி—5-71)

பிரணவமானது அதிலுல் சொல்லப்பட்ட ரக்ஷகனெவனென்று தெளிவாகத் தெரிவிக்காமையால் அதைத் தெளிவிக்கச் சக்தியில்லாதது.

694. बद्धाञ्जलि (பாரதம் சாந்திபர்வம்—344-45)

கையைக் கூப்பிக்கொண்டு நம: என்ற சொல்லேயே சொல்லிக் கொண்டு ஸந்தோஷப்பட்டவர்களாய்.

695. मूलमन्त्रेण (நித்யம்)

மூலமந்திரத்தாலே ஒருவன் தன்னே எம்பெருமானுக்கு ஸமர்ப்பித்து.

696. श्रीमता (ஸ்ரீ வைகுண்டகத்யம்)

தேவரீருக்கே எப்போதும் கைங்கரியம் செய்வதற்காக அடியேனே ஏற்றுக்கொள்ளவேணுமென்று பிரார்த்தித்து நமஸ்காரம் செய்து, ஒருவன் தன்னே மிகுந்த பெருமையையுடைய திருமந்திரத்தாலே எம்பெருமானிடம் ஸமர்ப்பிக்க வேண்டியது.

697. नित्यकिङ्करताम् (சிறிய கத்யம்)

எப்போதும் தேவரீருக்கு வேலேக்காரனுயிருப்பதை வேண்டுகிறேன்.

698. नित्यकिङ्करो भवानि (சிறியகத்யம்)

எப்போதும் தேவரீருக்கு வேலேக்காரனுயிருக்கவேண்டும்.

699. त्रैगुण्यम् (லக்ஷ்மீதந்திரம்)

மூன்று குணங்களுமுள்ளதென்றும், ஆறு குணங்களுள்ளதென்றும், அந்நம் இருவகையாகச் சொல்லப்படுகிறது. மூன்று குணங்களுள்ளது கர்மத்தினுல் கட்டுப்பட்டவர்களுக்கு. மற்றது மற்றவர்களுக்கு. இங்கே மூன்று குணங்களுள்ள அந்நம் பிரகிருதியிலிருந்து உண்டான வைகள்.

700. सर्वं परवशं दुःखं सर्वमात्मवशं सुखम् ।
एतद् विद्यात् समासेन लक्षणं सुखदुःखयोः ।। (மநுஸ்மிருதி—4-160)

அயலாரைப் பொருத்த எல்லாம் துக்கத்திற்குக் காரணம். தன்னேயே பொருத்ததெல்லாம் ஸுகத்திற்குக் காரணம். ஸுகத்திற்கும் துக்கத்திற்கும் இதுவே சுருக்கமான லக்ஷணமென்று அறி.

701. प्रणवोदित (பட்டர் நித்யம்)

நான் பிரணவத்தால் சொல்லப்பட்டபடி எம்பெருமானுக்குச் சேஷனுக இருக்கிறேன். அப்படியிருந்தும் என்னுடைய கர்மங்களாலே உண்டான அஹங்கார - மமகாரங்களாலே ஜயிக்கப்பட்டிருந்தேன். இனி மேல் அவனுக்குச் சேஷமாயிருப்பதை நினேத்துக்கொண்டு, அவனுக்குக் கைங்கரியங்களேச் செய்கிறவனுயிருக்கவேண்டுமென்கிற இந்த அர்த்தத்தை நம: என்கிற சொல் சொல்லுகிறது. இங்கு அஹங்காரமென்பது தன் ஸ்வரூபவிஷயமான தப்பான எல்லா எண்ணங்கள்.

702. अस्य जीवात्मनः (வேதார்த்தஸங்கிரஹம்)

அநாதியாக இருக்கிற அவித்யையினுல் புண்ணியம் - பாபம் என்று இருவகைப்பட்ட கர்மங்கள் ஆறுபோல் பெருகிவருகின்றன. அதினுல் பிரும்மா முதலான தேவன், மனிதன், மிருகம், ஸ்தாவரம் ஆகிய இந்த நாலு விதமான உடம்புகளில் ஜீவனுக்கு இருப்பு உண்டாகிறது. அதனுல் ஜீவன் தான் எப்படியிருப்பதாக எண்ணுகிருனே, அதினுலே ஸம்ஸாரம் பெருகி வருகிறது. இதினுல் உண்டாய் விலக்கமுடியாமலிருக்கிற பயம்போர் வதற்காக.

703. सम्पद्य (ப்ரம்மஸூத்திரம்—4-4-1)

ஜீவன் எம்பெருமானே அடையும்போது அவனுக்கு இயற்கையாய் உள்ளதாய் இதுவரையில் மறைந்திருந்த குணங்கள் வெளிக்கு வந்திருக் கின்றன. இது வேதவாக்கியத்தில் सम्पद्य என்கிற சொல்லாலே ஏற்படுகிறது.

704. यथा न क्रियते (விஷ்ணுதர்மம்—104-55-57)

எப்படி அழுக்கையலம்புவதாலே மாணிக்கத்துக்கு பிரகாசம் உண்டுபண்ணப்படுகிறதில்லையோ, அப்படியே ஆத்மாவுக்கு தோஷங்களை விடும்போது ஜ்ஞானம் உண்டுபண்ணப்படுகிறதில்லை. குளம் வெட்டும் போது ஜலமும், இடவெளியும் உண்டு பண்ணப்படவில்லை. நீரே இருக்கிற வெளிக்கு வருகிறது. முன்னுலில்லாதது எப்படி உண்டாகக்கூடும். அப்படியே கெட்ட குணங்களை விடுவதாலே ஆத்மாவுக்கு ஜ்ஞாநம் முதலான குணங்கள் பிரகாசிக்கின்றன, உண்டுபண்ணப்படவில்லை. ஏனென்ருல் ஆத்மாவுக்கு அவைகள் எப்போதுமிருப்பவைகளாகச் சொல்லப்படுகின்றன.

इच्छात:

705. अविद्या (ஸ்ரீபாஷ்யம் லகுஸித்தாந்தம்)

அவித்யை போவதே மோக்ஷம். இங்கே அவித்யையென்பது முன் செய்த கர்மங்கள்.

नाना ..., विकल्पः ...

706. सहकारित्वेन (ப்ரம்மஸூத்திரம்—3-4-33)

பக்தி செய்கிறவன் தன் ஜாதிக்கும் ஆசிரமத்துக்கும் ஏற்பட்ட தர்மங்களை பக்திக்கு அங்கமாகவும் செய்யவேண்டியது.

707. विहितत्वाच्च (ப்ரம்மஸூத்திரம்—3-4-32)

செய்யவேண்டியதாக விதிக்கப்பட்டிருப்பதால் யஜ்ஞம் முதலானவைகள் ஆசிரமத்துக்கு ஏற்பட்ட தர்மங்களாகவுமாகின்றன.

708. प्रज्ञाप्रासादम् (பாரதம் சாந்திபர்வம்—150-11)

மூலமந்திரத்தினுடைய உயர்ந்த ஜ்ஞாநமாகிய மாடியில் ஏறி, தன்னைப்பற்றி வருத்தம் தீர்ந்தவன் இந்த அறிவில்லாமல் வருத்தப்படுகிற ஜநங்களை மலைமேலிருப்பவன் பூமியிலிருப்பவர்களைப் பார்ப்பதுபோல் பார்க்கிருன். மலைமேலிருக்கிறவனுக்குக் கீழிருக்கும் ஜநங்கள் கொசுப்போல் தோன்றும். அப்படிப்போல இவன் அவர்களை மிகவும் தாழ்ந்தவர்களாக எண்ணுவன்.

709. ज्ञानेन

आहार निद्रा भय मैथुनानि सामान्यमेतद् पशुभिर्नराणाम् ।
ज्ञानं हि तेषामधिको विशेषः, ज्ञानेन हीनः पशुभिः समानः ।।

(நரஸிம்மபுராணம்—16-13)

சாப்பாடும், தூக்கமும், பயமும், ஸ்திரீஸங்கமமும், மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் ஸமம், மனிதர்களுக்கு மிருகங்களைக்காட்டிலும் விசேஷம், ஜ்ஞாநமுள்ளவர்களாயிருப்பது. ஜ்ஞாநமில்லாதவர்கள் மிருகங்களுக்கு ஸமம்.

710. न प्रहृष्यति (பாரதம் உத்யோகபர்வம்—33-33)

எவன் பஹுமாநம் பண்ணும்போது ஸந்தோஷப்படுகிறதில்லையோ, அவமாநம் செய்யும்போது வருத்தப்படுகிறதுமில்லையோ, கங்கையின் மடுவைப்போல கலங்கும்படி செய்யமுடியாதவனோ, அவன் பண்டிதன் என்று சொல்லப்படுகிறான்.

711. यत्राष्टाक्षर (நாரதீயம்—1-20)

எந்த தேசத்தில் மூலமந்திரத்தினுடைய ஸித்தியையடைந்த மஹாபாகவதன் பூஜிக்கப்படுகிறானோ, அந்த தேசத்தில் வியாதியும், பஞ்சமும், திருடர்களுமிருக்கமாட்டார்கள். இந்த சொற்களுக்கு அர்த்தம் மூலத்திலேயே சொல்லியிருக்கிறது. இங்கே ஸித்தியென்பது மந்திரத்தின் அர்த்தத்தைத் தெரிந்து அதை தன் அநுஷ்டாநத்தில் தோன்றும்படி எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பது.

712. रागादिदोषान् (வாக்படம்)

எல்லா உடம்புகளில் பரவியும் எப்போதும் சேர்ந்தும், ஔத்ஸுக்யத்தையும், மோஹத்தையும், பிரீதியில்லாமையும் கொடுக்கிறவைகளுமான ராகம் த்வேஷம் முதலான தோஷங்களை யெல்லாம் எந்த விலக்ஷணனான வைத்தியன் போக்கினானோ அவனுக்கு நமஸ்காரம். இங்கே ராகமென்பது ஆசை. அது முற்றி ஆசைப்பட்ட வஸ்துவை அநுபவிக்காமல் இருக்கக் கூடாத கடுமையான அதின் அவஸ்தையை ஔத்ஸுக்யமென்று சொல்லுகிறது.

713. व्याप्तिकान्ति (அஹிர்புத்ந்யஸம்ஹிதை—52-38)

அந்தந்த தாதுக்களில் சொல்லப்பட்ட வியாப்தி-எங்கும்

நிறைந்திருப்பது, காந்தி, பிரவேசம்-உள்ளே நுழைவது, இச்சை ஸங்கல்பம் ஆகிய இவைகள். பரமாத்மாவாயும் தேவனுயுமிருக்கிற விஷ்ணுவினுடைய மேன்மையைச் சொல்லும்போது மிகவும் அதிகமாக இருக்கின்றன.

714. ऋचो यजूंषि (நாரதீயம்—1-10)

ருக் முதலான மூன்று வேதங்களை, அநேகந்தடவை நன்ருய் ஜபிக்கிறவர்கள் எந்த பலனை அடைகிருர்களோ, அந்த பலனை எட்டெழுத்து மந்திரத்தை ஒரு தரம் ஜபிப்பதாலே ஒருவன் அடைகிருன்.

यस्य यावांश्च

715. ग्रहणम् (காமந்தகீயம் 1)

சொல்லும் விஷயத்தை வாங்கிக் கொள்ளுவது, அதை மறந்து போகாமல் வைத்துக் கொள்வது, அதை நினைவுக்குக் கொண்டு வருவது, பிறருக்குச் சொல்லுவது, சொல்லாத விஷயத்தையும் ஊஹித்துக் கொள்வது, சொல்லாத விஷயத்தைச் சேர்த்து சொல்லியிருப்பதை விடவேண்டிய இடத்தில் விட்டு விடுவது, அர்த்தத்தை நன்ருய் அறிவது, உண்மையை அறிவது, ஆகிய இவைகள் புத்தியின் குணங்கள்.

716. अहिंसा (பரத்வாஜர்)

பிறருக்கு ஹிம்ஸை செய்யாதிருப்பது முதல் புஷ்பம், இந்த்ரியங்களை அடக்குவது இரண்டாவது, எல்லாரிடத்திலும் இரக்கமுள்ளவனு யிருப்பது மூன்ருவது. மனதை அடக்குவது நாலாவது. இது சிறந்தது. ஜ்ஞாநம் ஐந்தாவது, தபஸ்ஸு ஆருவது, தியாநம் ஏழாவது, ஸத்யம் எட்டாவது, இப்படி எட்டு விதங்களான புஷ்பங்கள் எம்பெருமானுக்குப் பிரீதியைச் செய்கின்றவையாயிருக்கின்றன.

717. ऊहः शब्दो (तर्को)ऽध्ययनं दुःखविघातास्त्रयः सुहृत्प्राप्तिः ।
दानं च सिद्धयोऽष्टौ सिद्धेः पूर्वोऽङ्कुशस्त्रिविधः ।।

(ஸாங்கியகாரிகை 51)

ஊஹம்-வேதத்துக்கு விரோதமில்லாத நியாயங்களைக் கொண்டு பிறமதங்களைக் கண்டித்து ஸித்தாந்தமான அர்த்தம் இன்னதென்று தீர்மானிப்பது; சப்தம்-சொற்களின் பொருளையறிவது; அத்யயநம்-

வேதத்தினுடைய அக்ஷரராசியைத்தெரிந்து கொள்வது. மூன்று துக்கங்களில்லாமை; துக்கங்களாவன- உடம்பாலுண்டானது, மழை, காற்று முதலான தேவதைகளாலுண்டுபண்ணப்பட்டது, பிராணிகளால் உண்டாகுவது. தான் தெரிந்துகொண்ட விஷயங்கள் ஸரியாகத் தெரிந்து கொள்ளப் பட்டவைகள் என்று எண்ணுவதற்கு வேண்டிய ஒரு ஸ்நேஹிதனுடைய சேர்க்கை; ஸந்தேஹமும், தப்பெண்ணமும் இடையிடாத நல்லறிவின் பிரவாஹம் ஒன்றின்பின் ஒன்றாகத் தொடர்ந்துவருவது. இது ஸாரப்பிரகாசிகையையொத்து எழுதப்பட்டது. ஸாராஸ்வாதிநியில் शब्दः என்பதற்குப் பதிலாக तर्कः என்று பாடம். அதற்கு யுக்தியைக்கொண்டு விசாரிப்பது என்று பொருள்.

இந்த எட்டு ஸித்திகளும் கிடைக்கும் வரிசை:- முதலில் அத்யயநம், பிறகு அங்கங்களைப் படிப்பதாலுண்டாகும் வேதத்தின் அர்த்தஜ்ஞாநம்; பிறகு நியாயங்களைக்கொண்டு விசாரித்து அர்த்தமின்னதென்று தீர்மானிப்பது. இந்த விசாரத்துக்கு மீமாம்ஸை என்று பெயர்; பிறகு பெரியோர்களுடன் சேருவது, இதனால் அவர்களுடன் கலந்து பேசி தான் தெரிந்து கொண்டது ஸரியாயிருக்கிறதென்று தேறுவது. இதன்மேல் ஸந்தேஹமும் தப்பெண்ணமுமில்லாமல் உண்மையான அர்த்தத்தை எப்போதும் நினைத்துக்கொண்டிருப்பது. இதின் பலம் மூன்று தாபங்கள் கழிவது.

718. अणिमा (ஸாங்கியகாரிகை)

தன் உடம்பை ஸூக்ஷ்மமாகப் பண்ணுவது அணிமை; அதைப் பெரிதாகப் பண்ணுவது மஹிமை; அதைக் கனமில்லாமல் பண்ணுவது லகிமை; அதைக் கனமாகப்பண்ணுவது கரிமை. இதற்கு உடம்பை எல்லாரும் ஆசைப்படும்படியாகப் பண்ணுவதென்றும் பொருள் கொள்ளலாம். எல்லாரையும் தன் வசப்படுத்திக்கொள்வது வசித்வம்; எல்லாரையும் நியமநம் பண்ணுவது ஐச்வரியம்; தனக்கு வேண்டியதை யடைவது பிராப்தி; தான் நினைத்ததற்குத் தடையில்லாமை பிராகாம்யம்.

719. अष्टौ गुणाः पुरुषं दीपयन्ति प्रज्ञा च कौल्यं च दमः श्रुतं च ।
परा‌क्रमश्चाबहुभाषिता च दानं यथाशक्ति कृतज्ञता च ॥

(பாரதம் உத்யோகபர்வம்- 33-106)

எட்டு குணங்கள் ஒரு மனிதனைப் பிரகாசப்படுத்துகின்றன. அவைகளாவன-நல்லறிவு, உயர்ந்த குலத்தில் பிறப்பு, இந்திரியங்களை

யடக்குவது, வேதத்தின் அர்த்தத்தை ஆசாரியனிடம் தெரிந்துகொள்வது, அயலாரை வெல்லும் ஸாமர்த்தியம், அதிகமாகப் பேசாமை, சக்திக்குத் தகுந்தபடி தாநம் செய்வது, பிறர் செய்த உபகாரத்தை நினைத்துக் கொண்டிருப்பது. இது பாரத ச்லோகத்தில் சொன்னபடி, எட்டு குணங்களை வேறாகவும் வியாக்கியாநம் பண்ணியிருக்கிறார்கள். அவைகளாவன - எல்லாரிடமும் தயை, பொறுமை, அஸூயையில்லாமை, சௌசம், மனதில் வருத்தமில்லாமை, நல்லதை நினைப்பது, கார்ப்பண்யமில்லாமை, ஒன்றிலும் ஆசையில்லாமை. ஒருவன் முக்தனாகப் போகும் போது வெளிக்கு வரும் எட்டு குணங்களென்றும் பொருள் கொள்ளலாம்.

நமோ நாராய - ततः प्रभाते विमले विनिवृत्ते च जागरे ।
नमो नारायणेत्युक्त्वा श्वपाकः पुनरागमत् ।।

---

### தமிழ் வசனங்கள்

135. *நின்திருவெட் - மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோ*
*டுற்றிலேன், உற்றதுமுன்னடியார்க்கடிமை*
*மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்*
*கற்று நான்கண்ணபுரத்துறையம்மானே.* (பெரிய திருமொழி - 8-10-3)

தேவரீருடைய எட்டெழுத்து மந்திரத்தைக் கற்று.

136. *எட்டுமெட்டுமெட்டுமா யொரேழுமேழுமேழுமாய்*
*எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனை*
*எட்டினாயபேதமோ டிறைஞ்சிநின்றவன்பெயர்*
*எட்டெழுத்துமோ துவார்கள் வல்லர்வானமாளவே.*
(திருச்சந்தவிருத்தம் - 77)

எட்டெழுத்து மந்திரத்தை ஆசாரியனிடம் பெற்று ஜபிக்கிறவர்கள் வைகுந்தத்தை ஆளுவதற்கு சக்தியுள்ளவர்கள்.

137. *சோர்விலாதகாதலால் தொடக்கறமனத்தராய்*
*நீர ராவணைக்கிடந்த நின்மலன்நலங்கழல்*
*ஆர்வமோடிறைஞ்சிநின்றவன் பெயரெட்டெழுத்தும்*
*வாரமாகவோ துவார்கள் வல்லர்வானமாளவே.*
(திருச்சந்தவிருத்தம் -78)

எட்டெழுத்து மந்திரத்தை எப்போதும் அதையே விரும்பி ஜபித்துக் கொண்டிருப்பவர்கள் வைகுந்தத்தை ஆள சக்தர்கள்.

138. நாடுநகர-

ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்தெங்கள் குழாம்புகுந்து
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைகூடுமினோ
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணாயவென்று
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டு கூறுமினே.

பெரியாழ்வார் திருமொழி 1-1-4.

தேசமும் பட்டணமும் நன்றாயறியும்படி நமோநாராயணாய என்று திருநாமத்தைப் பாடும் பக்தர்களாக நீங்கள் இருந்தீர். தேசம் (நாடு) என்பதற்கு நல்ல அறிவில்லாதவர்கள் என்றும், பட்டணம் (நகரம்) என்பதற்கு நல்ல அறிவுள்ளவர்கள் என்றும் கருத்து.

139. நல்வகையால்-

அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன்
அபிமானதுங்கன் செல்வனைப்போலத் திருமாலேநானுமுனக்குப்
பழவடியேன், நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பல
பரவி, பல்வகையாலும் பவித்திரனே உன்னைப் பல்லாண்டு
கூறுவனே. (திருப்பல்லாண்டு - 4)

நல்லவிதமாய் அதாவது ஒரு பிரயோஜநத்தையும் தேடாமல் நமோநாராயணாய என்று திருநாமத்தைப் பலதடவை சொல்லி.

நாமஞ்சொல்-

கிடந்தநம்பிகுடந்தைமேவிக் கேழலாயுலகை யிடந்த
நம்பி, எங்கள்நம்பி யெறிஞரரணழியக், கடந்த நம்பிகடியாரி
லங்கை உலகையீரடியால், நடந்தநம்பிநாமம்சொல்லில்
நமோ நாராயணமே.

140. நன்மாலைகொண்ட (முதல் திருவந்தாதி - 57)

நமோ நாராயணா என்கிற இந்த நல்ல மாலையை ஸம்பாதித்துக் கொண்டு.

141. நாவாயிலுண்டே நமோ நாரணாவென்று
ஓவாதுரைக்குமுரையுண்டே-மூவாத
மாக்கதிக்கட்செல்லும் வகையுண்டே, என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லும் திறம். (முதல் திருவந்தாதி - 95)

இதன் பொருளை உபாயவிபாகாதிகாரத்தில் காண்பது.

(48-வது பக்கம் 222-நெ. பார்க்க)

838. मुच्येतार्त: (பாரதம் சாந்திபர்வம் - 348-81)

இந்த கதையை ஆதிமுதல் கேட்டு, ஐசுவரியமிழந்தவன் அதனாலுண்டான வருத்தத்திலிருந்து விடுபடுவான். ஆத்மாவை அநுபவிக்க ஆசைப்படுகிறவன் பக்தியையடைவன்; பக்தன் பக்தர்கள் அடைய வேண்டிய மோக்ஷத்தையடைகிறான்.

839. योगिनाममृतं

प्राजापत्यं गृहस्थानां न्यासिनां ब्रह्मसंज्ञितम् ।
योगिनाममृतं स्थानं स्वात्मसन्तोषकारिणाम् ।। (விஷ்ணுபு. - 1-6-38)

ஸநகர் முதலான யோகிகளுக்கு அமிருதமென்று சொல்லப்பட்ட எந்த இடமோ, அதுவே தன்னுடைய ஆத்மாவின் அநுபவத்தை ஆசைப்பட்டு அதற்கு வேண்டிய உபாயத்தை செய்கிறவர்களுக்குமிடம்.

एकान्तिन: (22-வது பக்கம் 107-நெ. பார்க்க)

840. अप्रतीकालम्बनान् (ப்ரம்மஸூத்திரம் - 4-3-14)

ப்ரதீகத்தைத் தியாநம் பண்ணுகிறவர்கள் தவிர மற்றவர்களை ஆதிவாஹிகர்கள் அழைத்துக்கொண்டு போகிறார்கள் என்பது பாதராயணருடைய அபிப்பிராயம். முன்சொன்ன இரண்டு பக்ஷத்திலும் தோஷமிருப்பதால், தத்க்ரதுநியாயமும் பாதராயண மதத்துக்கு அநுகூலமாயிருக்கிறது.

841. श्रुतोपनिषत्क (ப்ரம்மஸூத்திரம் - 1-2-17)

வேதாந்தத்தைக் கேட்டு அதில் சொன்ன தியாநத்தைச் செய்கிறவன் போகவேண்டிய மார்க்கத்தைச் சொல்லுவதாலும்.

क्रियतामिति

परवानस्मि काकुत्स्थ ! त्वयि वर्षशतं स्थिते ।
स्वयं तु रुचिरे देशे क्रियतामिति मां वद ।।

(61-வது பக்கம் 294-நெ. பார்க்க)

842. दैवी सम्पत् , मा शुच: (கீதை - 16-5)

தேவப்பிரகிருதிக்குள்ள குணங்களாகிய ஸம்பத்து மோக்ஷத்துக்கு ஸாதநம். அஸுரப்பிரகிருதிகளுக்குள்ள குணங்கள் கர்மத்தினால் கட்டுப்படுவதற்கு ஸாதநங்கள். நீ துக்கப்படாதே. தேவப்பிரகிருதிகளின் ஸம்பத்தை அடைவதற்காக நீ பிறந்திருக்கிறாய். பாண்டவனே !

843. इति ते गुह्यम् (கீதை - 18-63)

இப்படி ரஹஸியங்களைக் காட்டிலும் அதிக ரஹஸ்யமான ஜ்ஞாநம் உனக்குச் சொல்லப்பட்டது. இவையெல்லாவற்றையும் ஆலோசித்து எதைச் செய்ய ஆசைப்படுகிறாயோ, அதை செய்.

844. परीक्षां च (விஷ்ணுதர்மம் - 74 89)

உலகத்துக்கு யஜமாநனான எம்பெருமான் இளநெஞ்சர்களை, அவர்களுடைய ஸொத்தை நாசம் பண்ணுவதாகிய உரை கல்லைக் கொண்டு பரீக்ஷை செய்கிறான். தம்முடைய ஸொத்துக்கு நாசம் வந்த காலத்திலும் தன்னை அவர்கள் விட்டுவிடுகிறார்களா இல்லையா என்று பார்க்கிறான் என்று கருத்து.

845. एष पन्था विदर्भाणामसौ गच्छति कोसलान् ।
अतः परं च देशोऽयं दक्षिणो दक्षिणापथः ।।

(பாரதம் ஆரண்யபர்வம் 50 - 48)

இது விதர்ப்பதேசத்துக்குப் போகும் வழி. இது கோஸலதேசத்துக்கு போவது. (இது தமயந்தியைப் பார்த்து நளன் சொல்லுவது)

846. अहं भीतोऽस्मि देवेश ! संसारेऽस्मिन् भयावहे ।
पाहि मां पुण्डरीकाक्ष ! न जाने शरणं परम् ।।

(ஜிதந்தாஸ்தோத்ரம் 1 - 8)

தேவச்ரேஷ்டனே! பயத்தைக் கொடுக்கும் இந்த ஸம்ஸாரத்தைக் கண்டு நான் நடுங்குகிறேன். ஏ தாமரைக்கண்ணனே! என்னை ரக்ஷிக்க வேணும். தேவரீரைக் காட்டிலும் வேறு உபாயத்தை நான் பார்க்கவில்லை.

847. अक्रियावत्

क्रियमाणं न कस्मैचिद्यदर्थाय प्रकल्पते ।
अक्रियावदनर्थाय तत्तु कर्म समाचरेत् ।। (லக்ஷ்மீதந்திரம் - 17)

எந்த கர்மமானது செய்யப்பட்டு ஒரு பலனையும் கொடுக்கிறதில் லையோ, செய்யப்படாவிட்டால் தோஷத்தையுண்டு பண்ணுமோ, அந்த கர்மத்தைச் செய்.

आर्त्य (35வது பக்கம் 177 நெ. பார்க்க)

आर्तो वा यदि वा दृप्तः परेषां शरणागतः ।
अरिः प्राणान् परित्यज्य रक्षितव्यः कृतात्मना ।।

(116வது பக்கம் 518 நெ. பார்க்க)

848. प्रारब्धमात्र

தத்துவத்தையறிந்து பிரபத்தி பண்ணினவன் அந்த சரீரத்துடன் இருக்கும் காலத்தில் பிராரப்த கர்மத்தை மாத்திரம் அநுபவித்துக்கொண்டு பிறகு மோக்ஷஸுகத்தையடைகிறான்.

न गाथा (57வது பக்கம் 273நெ பார்க்க)

849. न गाथा (பாரதம் ஸபாபர்வம் 42 - 21)

சாஸ்திரம் சாஸ்திரத்தைப் படித்தவனை அதை எத்தனை தடவை படித்தபோதிலும் திருத்துகிறதில்லை. பிராணிகள் தங்களுடைய வாஸனை யையநுஸரித்து நடக்கிறார்கள். குலிங்க பக்ஷியைப்போல.

न त्यजेयम् (116வது பக்கம் 519 நெ. பார்க்க)

850. देहे चेत्

मांसासृक्पूयविण्मूत्रस्नायुमज्जास्थिसंहतौ ।
देहे चेत् प्रीतिमान् मूढो भविता नरकेऽपि सः ।।

(விஷ்ணுபுராணம் 1-17-63)

மாம்ஸம், ரத்தம், சீ, மலம், மூத்திரம், ஸ்நாயு, மஜ்ஜா, எலும்பு இவைகளின் சேர்க்கையாகிய உடம்பிலும் ஒரு மூடன் பிரீதியுள்ளவனாய் இருந்தால் அவன் நரகத்திலும் பிரீதியுள்ளவனாயிருப்பன்.

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ।।

(18வது பக்கம் 99 நெ. பார்க்க)

851. यज्ञोऽनृतेन (மநுஸ்மிருதி - 4-237)

யஜ்ஞமானது பொய் சொல்லுவதாலும், தபஸ்ஸு கர்வத்தினாலும், ஆயுள் பிராம்மணர்களைத் தூஷிப்பதாலும், தாநம் அதை வெளியிடுவ தாலும் நாசத்தையடைகிறது.

---

## தமிழ் வசனங்கள்

அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகமூன் றுடையாய் என்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன் றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

(50 வது பக்கம் 48 நெ. பார்க்க)

குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள் நாலிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன் புனித நின்
இலங்குபாதமன்றிமற்றொர் பற்றிலேனெம்மீசனே

(69 வது பக்கம் 72 நெ. பார்க்க)

குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தணமைதன்னை
ஒளித்திட்டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன்
களிப்பதென்கொண்டுநம்பி கடல்வண்ணாகதறுகின்றேன்
அளித்தெனக்கருள் செய்கண்டா யரங்கமாநகருளானே.

(68 வது பக்கம் 71 நெ. பார்க்க)

அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகமூன் றுடையாய் என்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன் றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

(175 வது பக்கம் 156 நெ. பார்க்க)

160. நின்னருளே

சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய்,உலகு
தன்னைவாழ நின்றநம்பீ தாமோதராசதிரா,என்னையு
மென்னுடைமையையுமுன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு,
நின்னருளே புரிந்திருந்தேனினியென் திருக்குறிப்பே.

(பெரியாழ்வார் திருமொழி 5-4-1)

தேவரீருடைய கருணையே என்னை ரக்ஷிப்பதாக நம்பியிருந்தேன்.

161. துணியே

*அணியார்பொழில்சூழரங்கநகரப்பா*
*துணியேனினி நின்னருளல்லதெனக்கு*
*மணியேமணிமாணிக்கமே மதுசூதா*
*பணியாயெனக்குய்யும்வகை பரஞ்சோதீ.* (பெரிய திருமொழி 11-8-8)

தேவரீருடைய கருணையில்லாமல் வேறொன்று எனக்கு ரக்ஷகமென்று நான் நம்பமாட்டேன்.

162. உனதருளே

*வாளாலறுத்துச்சுடினும் மருத்துவன்பால்*
*மாளாதகாதல் நோயாளன்போல், மாயத்தால்*
*மீளாத்துயர்தரினும் வித்துவக்கோட்டம்மாநீ*
*ஆளாஉனதருளே பார்ப்பனடியேனே.* (பெருமாள் திருமொழி 5-4)

தேவரீருடைய கிருபையையே எனக்கு ரக்ஷகமென்று நான் பார்ப்பேன்.

163. திருமாம

*செற்றவன்தென்னிலங்கைமலங்கத் தேவபிரான் திருமா*
*மகளைப் பெற்றும், என்நெஞ்சகம்கோயில்கொண்ட பேரருளாளன்*
*பெருமைபேசக் கற்றவன், காமருசீர்க்கலியன் கண்ணகத்தும்*
*மனத்துமகலாக் கொற்றவன், முற்றுலகாளிநின்ற குறுங்*
*குடிக்கேயென்னையுய்த்திடுமின்.* (பெரிய திருமொழி 9-5-10)

மிகவும் மேன்மையான லக்ஷ்மியையடைந்திருந்தும், லீலைக்காக என் நெஞ்சில் வந்து ஸ்திரமாயிருக்கும்படியான மிகுந்த கருணையையுடையவனே.

164. நின் திருவ

*பண்டைநாளாலேநின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்*
*கொண்டு நின்கோயில் சீய்த்துப்பல் படிகால் குடிகுடி வழி*
*வந்தாட்செய்யும் தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்*
*தாமரைக் கண்களால் நோக்காய் தெண்டிரைப் பொருநல்தண்*
*பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே.* (திருவிருத்தம் - 62)

தேவரீருடைய கிருபையில்லாமல் என்னை ரக்ஷிப்பது முடியாத வேலை.

நின்றிருவெட்

*மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோ*
*டுற்றிலேன், உற்றதுமுன்னடியார்க்கடிமை*

*மற்றெல்லாம்பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்*
*கற்று நான்கண்ணபுரத்துறையம்மானே.* (19வது பக்கம் 8 நெ பார்க்க)

165. ஆவாவென்
*ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும்*
*நாவாய்போல், பிறவிக்கடலுள் நின்றுநான் துளங்கத்*
*தேவார்கோலத்தொடும் திருச்சக்கரம்சங்கினொடும்*
*ஆவாவென்றருள்செய்தடியேனொடுமானனே.*
(திருவாய்மொழி 9-1-5)

ஹா ஹா என்று கிருபை செய்து.

166. தன்னைத்தந்த
*பத்மநாபன் உயர்வற உயரும் பெருந்திறையோன்*
*எற்பரன் என்னையாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத்தந்த*
*கற்பகம் என் அமுதம் கார்முகில் போலும் வேங்கடநல்*
*வெற்பன் விசும்போர்பிரான் எந்தை தாமோதரனே.*
(திருவாய்மொழி 2-7-11)

கேட்டதைக் கொடுக்கும் கல்பகவிருக்ஷம் போல் தேவரீரே வேண்டுமென்கிற எனக்குத் தேவரீரைக் கொடுத்தவர்.

167. என்னுணர்
*உணர்விலும்பரொருவனை அவனதருளாலுறல்பொ*
*ருட்டு என்உணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்ன*
*ருளே உணர்வுமுயிருமுடம்பும் ற்றுலப்பிலனவும்பழுதேயாம்*
*உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானும்தானாயொழிந்தானே.*
(திருவாய்மொழி 8-8-3)

எம்பெருமானே எனக்கு உபாயமென்கிற எண்ணத்துக்கு அவனை விஷயமாகப் பண்ணினேன். இதுவும் அவனுடைய இனிமையான கருணையினாலே தான்.

168. *இசைவித்தென்னையுன்தாளிணைக் கீழிருத்துமம்மானே*
*அசைவிலமரர்தலைவர்தலைவா ஆதிப்பெருமூர்த்தி*
*திசைவில்வீசும்செழுமாமணிகள் சேரும்திருக்குடந்தை*
*அசைவிலுலகம்பரவக்கிடந்தாய் காணவாராயே. இசைவித்து*
(திருவாய்மொழி 5-8-9)

என்னை ஒப்புக்கொள்ளும்படி செய்து தேவரீர் திருவடியின் கீழே என்னையிருக்கும்படி செய்த ஸ்வாமியே!

169. *ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்*
*உனக்கோர்கைம்மா றுநானொன்றிலேனெனதாவியுமுனதே*
*சேறுகொள்கரும்புபெருஞ்செந்நெலும் மலிதண்சிரீவரமங்கை*
*நாறுபூந்தண்டுழாய்முடியாய் தெய்வநாயகனே.*

(திருவாய்மொழி 5-7-10)

தேவரீரே தேவரீருடைய திருவடிகளையே எனக்கு அடைய வேண்டிய வஸ்துவாகவும், அதற்கு உபாயத்தாலே கிடைக்கக்கூடிய பிராப்யத்தை லக்ஷணையால் சொல்லுகிறது.

170. *இருவல்வினை*
*சார்ந்தவிருவல்வினைகளும் சரித்துமாயப்பற்றறுத்துத்*
*தீர்ந்துதன்பால்மனம்வைக்கத் திருத்திவீடுதிருத்துவான்*
*ஆர்ந்தஞானச்சுடராகியகலம்கீழ்மேலளவிறந்து*
*நேர்ந்தவுருவாயருவாகுமிவற்றினுயிராம்நெடுமாலே.*

(திருவாய்மொழி 1-5-10)

புண்ணியம் பாபம் என்று சொல்லப்படுகிற இரண்டுவிதமான பலமான கர்மங்களைப் போக்கி.

171. *மன்னுறில்*
*அற்றதுபற்றெனில்,உற்றதுவீடுயிர்,*
*செற்றதுமன்னுறில், அற்றிறைபற்றே.* (திருவாய்மொழி 1-2-5)

விஷயங்களில் பற்றுவிட்டபோது, உடம்பைக் காட்டிலும் வேறாய் ஸுகமான ஆத்மா தோன்றும். அதில் அகப்படாமல் எம்பெருமானுக்குச் சேஷமாயிருக்கிற உன் ஸ்வரூபத்தையறிந்து ஸ்திரமாய் இருக்க ஆசைப்பட்டால், எம்பெருமானைப் பிடித்துக் கொண்டு விஷயத்தை விடு.

172. *இறுதிகூடா*
*குறுகாநீளா இறுதிகூடாஎனையூழி*
*சிறுகாபெருகா அளவிலின்பம்சேர்ந்தாலும்*
*மறுகாலின்றி மாயோனுனக்கேயாளாகும்*
*சிறுகாலத்தையுறுமோ அந்தோதெரியிலே.* (திருவாய்மொழி 6-9-10)

குறைவதும், அதிகமாவதுமில்லாமல், இறுதி கூடா- நாசமில்லாத- காலத்தினால் உண்டான குறைவும் பெருகுவதுமில்லாத அளவில்லாத ஆத்மாவின் அநுபவம் கிடைத்தாலும்.

173. பாவீதழு

**வம்புலாங்கூந்தல் மனைவியைத்துறந்து பிறர்பொருள் தாரமென்றிவற்றை, நம்பினாரிறந்தால் நமன்றமர்பற்றியெற்றி வைத்து, எரியெழுகின்ற செம்பினாலியன்ற பாவையைப் பாவீதழு வெனமொழிவதற்கஞ்சி, நம்பனே வந்துன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய்.** (திருமொழி -1-6-4)

ஒ பாவியே ! இந்தப் பழுக்கக் காய்ச்சப்பட்ட கம்பத்தைக் கட்டிக்கொள் என்று சொல்லுவதற்குப் பயப்பட்டு நம்பத்தகுந்த உன்னிடம் வந்து உன் திருவடிகளையடைந்தேன்.

174. அஞ்சின நீ

**தருமன்விடத்தாந்தூதுபோனர்வந்தார்**
**தரணிபொறாத் திண்பாரந்தவிர்த்தார்வந்தார்**
**அருமறையின்பொருளனைத்தும்விரித்தார்வந்தார்**
**அஞ்சின நீயென்னையடையென்றார்வந்தார்**
**தருமமெலாந்தாமாகிநிற்பார்வந்தார்**
**தாமேநம்வினையனைத்துந்தவிர்ப்பார்வந்தார்**
**பரமென துநீபுலம்பலென்றார்வந்தார்**
**பார்த்தனுக்குத்தேரூர்ந்தார்வந்தார்தாமே.**

(திருச்சின்னமாலை - 8)

ஸம்ஸாரத்தைக் கண்டு பயப்பட்ட நீ என்னை வந்து அடையென்று சொன்ன எம்பெருமான் வந்தார்.

மரணமானால்

**சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்**
**மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்**
**அரணமைந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரத்**
**தரணியாளன் தனதன்பர்க்கன்பாகுமே.** (89 வது பக்கம் 92 நெ பார்க்க)

175. உடலுமுயிரு

**ஊழிமுதல்வனொருவனேயென்னுமொருவனுலகெல் லாம் ஊழிதோறும்தன்னுள்ளேபடைத்துக் காத்துக்கெடுத் துழலும் ஆழிவண்ணனென்னம்மானந்தண்திருமாலிருஞ் சோலை வாழிமனமேகைவிடேலுடலுமுயிரும்மங்கவொட்டே-**

(திருவாய். 10-7-9)

உடம்பும் அதிலிருக்கும் பிராணனும் நசிக்கவேணும்.

---

### அரும்பதவுரை

கவடுகள் — கிளைகள்
தஞ்சம் — ரக்ஷகம்
சொல்லிற்றுச் செய்வார் — சொன்னதைக் கேட்டு செய்யும் பர தந்திரர்கள்.
அலமரவாதே — இது நம்மால் செய்யமுடியவில்லையென்று துக்கப்படாதே.
இளந்தலை — மெலிதான நுனி .
பெருந்தலை — பருத்திருக்கிற அடி.
பேரணி — ஒரு ராஜாவின் மூலபலம் (மூலகாரணம்)
இளவணி — நடுவிலிருக்கும் பலம்.
வளும்பு — புதிதாய் போட்ட கன்றின்மேலிருக்கும் அழுக்கு.
அசல்பிளந்து ஏறிடுகிற — முன்னிடத்திலிருந்து ஒன்றைப் பிளந்து வேறுஇடத்தில் வைப்பது.
உறாவுதல் — தைந்யம், அதாவது — வருத்தப்பட்டு அது முகத்தில் தெரியும்படி இருப்பது.
சுணை — அபிமாநம்.

---

## 30. ஆசார்யக்ருத்யாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

852. गुरुर्गरी

पिताऽसि लोकस्य चराचरस्य
त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो
लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ।। (கீதை 1 - 43)

தேவரீர் ஸ்தாவர ஜங்கமமான இந்த உலகத்திற்குத் தகப்பனா யிருக்கிறீர். இதற்குக் குருவாயுமிருக்கிறீர். ஆகையால் பூஜை செய்யத் தகுந்தவர்களில் தேவரீர் மிகவும் உயர்ந்தவராயிருக்கிறீர்.

तमिमं

केशवं केशिहन्तारमप्रमेयमरिन्दमम् ।
सर्वलोकेश्वरं कृष्णं विज्ञाय पुरुषोत्तमम् ।।

तमिमं सर्वसम्पन्नमाचार्यं पितरं गुरुम् ।
अर्च्यमर्चितमर्चामः सर्वे संमन्तुमर्हथ ।।

(1 வது பக்கம் 2 நெ. பார்க்க)

853. यो गोपायति

(ஸாத்யகிஸம்ஹிதை 25 - 375)

எவன் இந்த அர்த்தத்தை அயோக்கியர்களிடமிருந்து ரக்ஷித்து யோக்கியர்களுக்குக் கொடுக்கிறானோ, அவன் என்னால் பஹுமானம் செய்யத்தகுந்தவன், உங்களுக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் போகிறேன்.

854. इदं ते नातपस्काय

(கீதை 18-67,68)

இந்த கீதை தபஸ்ஸு செய்யாதவர்களுக்குச் சொல்லத் தகுந்த தன்று; அப்படியே பக்தியில்லாதவனுக்கும், இதைக் கேட்கவேணுமென்கிற ஆசையில்லாதவனுக்கும் ஒருபோதும் சொல்லத்தகுந்ததன்று; என்னிடத் தில் அஸூயை செய்கிறவனுக்கு ஒருபோதும் சொல்லத்தகுந்ததன்று. இந்த மிகவும் உயர்ந்த ரஹஸியத்தை என்னுடைய பக்தர்களிடத்தில் எவன் சொல்லுவனோ, அவன் என்னிடத்தில் பரபக்தியைச் செய்து என்னை யடைவன்; ஸந்தேஹமில்லை.

855. नावेदनिष्ठस्य

(பாரதம் சாந்திபர்வம் 313-32-38)

ஓ ராஜாவே! இந்த உயர்ந்த சாஸ்திரமானது வேதத்தை எப்போதும் சொல்லிக்கொண்டிருக்காத ஜனத்துக்குக்கொடுக்கத் தகுந்ததன்று, இந்த சாஸ்திரம் இதைத் தெரியவேணுமென்று ஆசைப்பட்டு, நல்ல அறிவு உண்டாவதற்காக பிரபத்தி பண்ணுகிறவனுக்கு, ஜ்ஞாநத்தை உண்டு பண்ணும்; பொய் சொல்லுவதே ஸ்வபாவமானவனுக்கும், வஞ்சகனுக்கும், நபும்ஸகனுக்கும், கோணலான புத்தியை யுடையவனுக்கும், பண்டிதனாக இல்லாமலிருக்கத் தன்னைப் பண்டிதனாக எண்ணுகிறவ னுக்கும், அயலாரை வருத்தப்படுத்துகிறவனுக்கும் இது கொடுக்கத் தகுந்ததன்று. எப்படிப்பட்டவனுக்குக் கொடுக்கத்தகுந்தது என்பதைச் சொல்லுகிறேன்; கேள். ச்ரத்தையுள்ளவனுக்கும் நல்ல குணங்கள் உள்ளவனுக்கும் அயலாரைத் தூஷிப்பதை எப்போதும் விட்டிருக் கிறவனுக்கும், நல்ல யுக்தியையறிந்தவனுக்கும், சொன்னதை கிரஹிக்கத் தகுந்தவனுக்கும், நல்ல அநுஷ்டாநமுடையவனுக்கும், அநுஷ்டாநத்தில் உண்டாகும் வருத்தத்தைப் பொறுத்துக் கொள்ளுகிறவனுக்கும், உலகத்துக்கு ஹிதத்தை எண்ணுகிறவ னுக்கும், ஏகாந்தவாஸத்தில் ஆசையுள்ளவனுக்கும்,

சாஸ்திரத்தில் பிரீதியுள்ளவனுக்கும் வீண் விவாதத்துக்கு பயப்படுகிற வனுக்கும், ஆசாரியர்களிடத்தில் அதிகமாய் கேட்டவனுக்கும், தான் பெற்ற உபகாரத்தை நினைத்துக் கொண்டிருப்பவனுக்கும், பொறுமையையும் தயையும் உடையவனுக்கும், நித்தியர்களான ஆத்மாக்களிடத்தில் தனக்கு ஸமர் என்கிற புத்தியை யுடையவனுக்கும் இந்த சாஸ்திரம் உபதேசிக்கத் தகுந்தது. ஒருவித தோஷமில்லாத பரப்ரம்மத்தைச் சொல்லுகிற இந்த சாஸ்திரமானது கீழே சொன்ன குணங்களில்லாதவனுக்குச் சொல்லக் கூடாதென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட தகாதவர் களிடத்தில் சொல்லப்பட்ட சாஸ்திரமானது சொல்லிக்கொடுக்கிறவனுடன் க்ஷேமத்தைச் சேர்க்காது, தகாதவனுக்குச் சொன்ன காரணத்தினாலே. ஓ ராஜாவே! இந்த பூமியை ரத்னங்களினால் நிறைத்து, அதைக் கொடுத் தாலும் விரதமில்லாதவனுக்கு இதைச் சொல்லக்கூடாது. இந்த உயர்ந்த சாஸ்திரமானது இந்திரியங்களை அடக்குகிறவனுக்கு ஸ்நதேஹமில்லாமல் சொல்லலாம். ஏ கராளனே ! நீ கொஞ்சமும் பயப்படவேண்டாம். இந்த பரப்பிரம்மவிஷயமான சாஸ்திரம் உன்னால் கேட்கப்பட்டது. ஆதியும் நடுவும் முடிவுமில்லாததும், சோகமில்லாததும், மிகவும் பரிசுத்தமானதுமான பரம்ப்ரம்மம் உள்ளபடி உனக்குச் சொல்லப்பட்டது.

856. विद्ययैव (மநுஸ்மிருதி - 2-113)

தகுந்த பாத்ரம் அகப்படாவிட்டால் தனக்குத் தெரிந்த வித்யையுடன் ப்ரம்மத்தை உபதேசிக்கத்தகுந்தவன்கூட இறந்து போகவேண்டியது. கடுமையான ஆபத்திலும் இந்த வித்யையை ஊஷரபூமியில் விதைக்கக் கூடாது.

857. मूर्खाश्च (சாண்டில்யஸ்மிருதி - 4-251+258)

அறிவில்லாதவர்களாயிருந்தும், தங்களைப் பண்டிதர்களாக எண்ணிக்கொள்கிறவர்களும், அதர்மத்தைச் செய்துகொண்டிருந்தும், தர்மத்தைச் செய்கிறவர்களைப்போல் தங்களைச் காண்பிப்பவர்கள் ஸாதுக்களுடைய வேஷத்தைப் போட்டுக்கொண்டு தர்மத்தோடு கூடினவர் களைத் துன்பப்படுத்துகிறார்கள். எவன் ஒரு இடத்தில் மோக்ஷத்துக்காக வேண்டிய வேலைகளை நன்றாய்ச் செய்வதாய்க் காண்பித்து, வேறிடத்தில் உலகத்தாரை அநுஸரித்து நடக்கிறானோ, அவன் தாழ்ந்த குருவாகச் சொல்லப்படுகிறான். கெட்ட புத்தியையுடையவர்கள் அநேகம் பேர்கள்; நல்ல புத்தியைஉடையவன் எங்கேயோ ஒருவன் இருக்கிறான். எவன் எப்போதும் கெட்ட புத்தியுள்ளவர்களாலே பயப்படுத்தப்பட்டபோதிலும்

கலங்காத புத்தியுள்ளவனோ, அவன் நல்ல புத்தியையுடையவன். ஒருவனிடத்திலும் நம்பிக்கை வைக்கக்கூடாது. கலியுகத்தில் இந்த விஷயத்தை அதிகமாய் கவனிக்கவேண்டியது. மிகுந்த பாபமுள்ளவர்கள் மந்த புத்திகளை மழை பொழிகிறதுபோல் துர்வாதங்களைச் சொல்லி மயக்குகிறார்கள். தர்மத்தைத் தகாதவர்களுக்கு வெளியிடாமல் ரக்ஷித்துக் கொண்டு, ஒருவன் தர்மத்தை செய்யவேண்டியது. ஒருவன் கேட்காதபோது அவனுக்கு ஒன்றையும் சொல்லக்கூடாது. அவன் கேட்டபோதிலும், ரஹஸியமான அர்த்தங்களையும் ஸித்தாந்தத்தையும் சொல்லக்கூடாது. தன்னையடைந்து மிகுந்த பக்தியுள்ளவனாய் சாஸ்திரத்தில் எப்போதும் நம்பிக்கையுள்ளவனாய், சுத்தியுள்ளவனாய் முறைப்படிகேட்கிறவனுக்கு எல்லாவற்றையும் சொல்லவேண்டியது. பிறர் தன்னைப் பூஜிப்பதற்காகவும், பொருள் ஸம்பாதிப்பதற்காகவும், பிறர் தன்னைக் கொண்டாடுவதற்காகவும், பிழைப்புக்காகவும் தகாதவர்களுக்குச் சாஸ்திரத்தைச் சொல்லுகிறவன் நல்ல மார்க்கத்திலிருந்து விலகுகிறான். ஊஷரபூமியில் விதை விதைக்கலாம், நபும்ஸகனுக்கு ஒரு பெண்ணைக் கொடுக்கலாம். குரங்கினிடத்தில் பூமாலையைக் கொடுக்கலாம். அயோக்கியனிடத்தில் சாஸ்திரத்தைச் கொடுக்கக்கூடாது.

858. न नास्तिकाय (ஸாத்யகிதந்திரம்)

நாஸ்திகனுக்கும், கபடமுள்ளவனுக்கும், பக்தியில்லாதவனுக்கும், பிறருக்கு ஹிம்ஸை செய்வதில் ருசியுள்ளவனுக்கும், இந்த மந்திரமானது இவ்விதமானவர்களுக்குச் சொல்லத்தகுந்ததன்று. கபடமில்லா-தவனுக்கும், குருவினிடத்தில் பக்தியுள்ளவனுக்கும், விஷ்ணுவினிடத்தில் பக்தியுள்ளவனுக்கும், எல்லாப் பிராணிகளிடத்திலும் அநுகூலமாயிருக்கிற-வனுக்கும், இந்த மந்திரம் ஆசாரியனால் உபதேசிக்கத் தகுந்தது. இந்த இரண்டு விஷயத்தையும் நன்றாய் கவனிக்கவேண்டியது.

859. अभयम् (கீதை 16-1-3)

பயமில்லாமை, ரஜஸ்ஸாலும் தமஸ்ஸாலும் தொடப்படாத மனதையுடையவனாயிருப்பது, ஆத்மஸ்வரூபத்தை நினைத்துக் கொண்டிருப்பது, தாநம், இந்திரியங்களையடக்குவது, யஜ்ஞம் செய்வது, தன்னுடைய வேதத்தைப் படித்துக்கொண்டிருப்பது, உபவாஸம் முதலான தபஸ், மனதும் வாக்கும் செய்கையும் ஒத்திருப்பது, ஒருவனுக்கும் தீங்கும் செய்யாமை, பிராணிகளுக்கு ஹிதமான உண்மையைப் பேசுவது, கோபமில்லாமை,

தனக்குக் கெடுதலானவைகளை விடுவது, மனதை அடக்குவது,கோள் சொல்லாமை, பிராணிகளிடத்தில் தயை, விஷயங்களில் ஆசையில்லாமை, நல்ல ஜநங்கள் கிட்ட வரும்படியிருப்பது, கெட்ட காரியங்களைச் செய்வதில் வெட்கப்படுவது , விஷயங்கள் கிட்ட இருக்கும்போதும் மனது கலங்காமை, அயோக்கியர்களாலே ஜயிக்கப் படாமை, பிறர்களாலே தனக்குத் தீங்கு நேரிடும் போதும் அதைப் பொறுத்துக்கொள்ளுவது, மிகுந்த ஆபத்திலும் செய்யவேண்டியதை விடாமல் செய்வது, சாஸ்திரத் தில் சொல்லப்பட்ட கர்மங்களை செய்வதற்குத் தகுந்த சுத்தியுள்ளவனாய் இருப்பது, பிறர் இஷ்டப்படி நடப்பதைத் தடுப்பது, தகுந்த காரண மில்லாமல் கர்வப்படுவது, இந்த குணங்கள் தேவ பிரகிருதிகளுக்கு வேண்டிய ஸம்பத்தையுத்தேசித்துப்பிறந்தவனுக்கு வரும். பாரதனே!

860. द्विविधो भूतसर्गोऽयं दैव आसुर एव च ।
विष्णुभक्तिपरो दैवो विपरीतस्तथाऽऽसुरः ।।

(விஷ்ணுதர்மம் 109 - 74)

பிராணிகளின் ஸிருஷ்டி இருவகைப்படும் - தைவமென்றும் ஆஸுரமென்றும். அவைகளில் தைவமென்பது விஷ்ணுவினிடத்தில் எப்போதும் பக்தியுள்ளவனாயிருக்கும் ஸ்வபாவம். இதற்கு எதிர் தட்டு ஆஸுரஸ்வபாவம்.

861. संवत्सरम् (சாண்டில்யஸ்மிருதி 1-116)

ஒரு வருஷம், அதில் பாதி, அல்லது மூன்று மாதம் சிஷ்யனைப் பலவித உபாயங்களாலே பரீக்ஷித்து, லாபம் முதலியவைகளில் ஆசை யில்லாமல் கருணையினாலேயே அவனுக்கு உபதேசம் செய்ய வேண்டியது.

862. यदृच्छया (ஸாத்வதஸம்ஹிதை 21-45)

தூரதேசத்திலிருந்து எம்பெருமானிடத்தில் பிரீதியுள்ள மனதை யுடைய ஒருவன் தற்செயலாய் தன்னிடம் வந்தால் அதிககாலம் பரீக்ஷை யில்லாமல் அவனுக்கு வேண்டியதைச் சொல்ல வேண்டியது.

863. श्रुतात्

சாஸ்த்திரத்தை கேட்பதில் மிகுந்த ஆவலுள்ளவனாய் அது தவிர, வேறு விஷயத்தில் ஆசையில்லாதவன். இங்கே ஸந்தோஷமென்கிற

சொல்லுக்கு அலம்புத்தியென்று பொருள். இது வேண்டாமென்கிற எண்ணம்.

864. डम्भो दर्पः (கீதை 16 -4)

பிறர் ஸ்தோத்திரத்துக்காகத் தர்மத்தைச் செய்வது, விஷயங்களில் அநுபவத்தாலுண்டான நல்லது கெட்டதென்று அறியாதபடி பண்ணும் படியான ஸந்தோஷம், தகுந்த காரணமில்லாமல் கர்வம், கோபம், கடுமையாய்ப் பேசுவது, அறிவில்லாமை - இவைகள் அஸுர ப்ரகிருதி களுடைய ஸம்பத்தையுத்தேசித்துப் பிறந்தவர்களுக்கு வரும்.

---

## *தமிழ் வசனங்கள்*

176. தொண்டர்க்கு

*கண்டுகொண்டென்கண்ணிணையாரக்களித்துப்*
*பண்டைவினையாயின பற்றோடறுத்துத்*
*தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்*
*அண்டத்தமரர் பெருமானடியேனே.* (திருவாய்மொழி 9-4-9)

எம்பெருமானுக்கு தாஸர்களானவர்களுக்கு மாலைபோல், எம்பெரு மானுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் நல்ல சொற்களை அமிருதம்போல் இனிமையாயிருக்கிற எம்பெருமானுடைய அநுபவத்திற்காகச் சொன்னேன்.

177. *நான்முகனை நாராயணன் படைத்தான் - நான்முகனும்*
*தான் முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான் - யான்முகமாய்*
*அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ்பொருளை*
*சிந்தாமல் கொண்டு மின் நீர் தேர்ந்து.* (நான்முகன் திருவந்தாதி 1)

ஆழமான அதாவது ரஹஸ்யமான அர்த்தங்களை அந்தாதியான பாட்டுக்களாலே சொன்னேன். இவைகளின் கௌரவத்தை நினைத்து, தகாதவர்களிடத்தில் இறைக்காமல் பெற்றுக் கொள்ளுங்கோள்.

---

## *அரும்பதவுரை*

சேமித்து — பிறருக்குக் கொடாமல் புதையல்போல் வைத்து

---

## 31. சிஷ்யகிருத்யாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

865. विद्याचोर:

வித்யையைத் திருடினவன், குருவுக்கு த்ரோஹம் பண்ணினவன், வேதத்தையும் எல்லாரையும் நியமிக்குமெம்பெருமானையும் தூஷிக்கிறவன், இவர்கள் மிகுந்த பாபமுள்ளவர்கள். இவர்கள் உடனே தண்டிக்கத் தகுந்தவர்களென்று வேதம் சொல்லுகிறது. வித்யையைத் திருடுவதாவது - ஆசாரியன் உத்திரவன்னியில் அவன் உபதேசம் பண்ணுவதை மறைந்திருந்து கேட்பது.

866. शरीरमर्थं प्राणांश्च सद्गुरुभ्यो निवेदयेत् ।

एवंलक्षणसंपन्न: शिष्य इत्यभिधीयते ।। (விஹகேச்வரஸம்ஹிதை)

சிஷ்யன் தன் உடம்பையும் பொருளையும் பிராணனையும் நல்ல குருக்கள் பொருட்டு ஸமர்ப்பிக்கவேண்டியது.

867. सर्वस्वम्

சிஷ்யன் தன் ஸொத்து முழுவதையாவது, அதில் பாதியாவது, அல்லது பாதியில் பாதியையாவது, குருவுக்கு தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டியது. இது முடியாவிட்டால் தன் சக்திக்கு தகுந்தபடி செய்ய வேண்டியது.

कृपया

अपराधसहस्रभाजनं पतितं भीमभवार्णवोदरे ।

अगतिं शरणागतं हरे ! कृपया केवलमात्मसात्कुरु ।।

(198 வது பக்கம் 861 நெ பார்க்க)

868. न प्रमाद्येत् (சாண்டில்யஸ்மிருதி 1-118)

சிஷ்யன் குருவினிடத்தில் மனது, வாக்கு, உடம்பு இவைகளின் வேலைகளாலே தவறுதலில்லாமலிருக்கவேண்டியது. தன்னை ஆசாரியனிடமிருந்து பிரிக்காமல் எம்பெருமானிடத்தில் போல் அவனிடத்தில் இருக்கவேண்டும்.

869. देवमिवाचार्यमुपासीताविकथयन् अविमना वादं शुश्रूषमाणोऽस्य ।।

(ஆபஸ்தம்பதர்மம் 1-2-6-13)

எம்பெருமானைப்போல் ஆசாரியனை உபாஸிக்கவேண்டும்.

870. ब्रह्मविद्या (சாண்டில்யஸ்மிருதி 1-117)

எம்பெருமான் விஷயமான ஜ்ஞாநத்தைக் கொடுத்ததற்குப் பதில் உபகாரம் செய்வது தேவர்களாலும் முடியாது. சிஷ்யன் பிரீதியுடன் சக்திக்குத் தகுந்தபடி அதை உபதேசம் பண்ணின ஆசாரியனுக்கு தக்ஷிணை கொடுக்க வேண்டியது.

871. कपालस्थं (பாரதம் சாந்திபர்வம் 35 -42)

மண்டையோட்டில் வைக்கப்பட்ட ஜலமும், நாய்த்தோலால் செய்யப்பட்ட துறுத்தியிலிருக்கும் பாலும், அந்த இடங்களின் குற்றத் தாலே எப்படி கெட்டுப்போகின்றனவோ, அப்படியே நல்ல நடவடிக்கை யில்லாதவனுக்கு உபதேசிக்கப்பட்ட சாஸ்திரம்.

872. यच्छ्रुतं न विरागाय (இதிஹாஸஸமுச்சயம் 14 - 43)

ஆசாரியனிடம் கேட்கப்பட்ட எந்த சாஸ்திரமானது ஆசையில்லா மையையும், தர்மஞ்செய்வதையும் சாந்தியையுமுண்டு பண்ணுகிற தில்லையோ, அது, சொற்கள் ஒன்றோடொன்று நன்றாய்ச் சேர்க்கப்பட்டு அழகாயிருந்தாலும் காக்கையின் சப்தம் போல் அவனுக்கு பிரயோஜந மில்லை.

873. पण्डितै:

பண்டிதர்கள் விஷயங்களை அடிக்கடி தாங்கள் நன்றாய்த் தெரிந்துகொண்டு மற்றவர்களுக்கு உதவும்படி பணத்தில் ஆசையினால் செய்கிறார்கள். விலைமாதர்கள் தங்கள் உடம்பை அடிக்கடி அலங்காரம் செய்துகொண்டு, அதை மற்றவர்களுக்கு உபயோகப்படுத்தவதுபோல்.

874. शेवधिष्टोऽस्मि (மநுஸ்மிருதி - 2-114)

வித்யையானது பிராம்மணனிடம் வந்து சொன்னதாவது- நான் உன்னுடைய தநம், என்னை ரக்ஷி. அஸூயையுள்ளவனிடம் என்னைக் கொடுக்காதே, இப்படி என்னை ரக்ஷித்தால் நான் மிகுந்த வீர்யமுள்ளவளா யிருப்பேன்.

एकान्ती ( 83-வது பக்கம் 376-நெ. பார்க்க)

875. वसिष्ठव्यपदेशिन: (ராமாயணம் - பாலகாண்டம் - 19-2)

பெரியவம்சத்தில் பிறந்து குருவான வஸிஷ்டரைக்கொண்டு தன்னைச் சொல்லிகொள்ளும் ஸ்வபாவனான உனக்குத் தான் இது தகுந்தது. வேறொருவன் இப்படிச் சொல்லமாட்டான். ராஜசிரேஷ்டனே !

876. कथयामि (விஷ்ணுபுராணம் - 12-8,9 )

எப்படி முன்னால் தக்ஷர் முதலான முநிச்ரேஷ்டர்களாலே வேண்டப்பட்டு தாமரையிலிருக்கும் எல்லாருக்கும் பாட்டனான பிரம்மா சொன்னானோ, அப்படியே அவர்களாலே புருகுத்ஸன் என்கிற ராஜாவுக்கு நர்மதையின் கரையில் சொல்லப்பட்டது. அவனாலே ஸாரஸ்வதனுக்கும், ஸாரஸ்வதனால் எனக்கும் சொல்லப்பட்டது. அதை அப்படியே உனக்குச் சொல்லுகிறேன்.

877. यदृच्छया (பாத்மஸம்ஹிதை சர்யாபாதம் - 23-49)

எந்த மந்திரமானது தற்செயலாயோ மறைந்துகொண்டோ ஒருவியாஜத்தினாலோ அல்லது புஸ்தகத்தைப்பார்த்தோ அறியப்படுகிறதோ, அது பிரயோஜநப்படாது. கெடுதலையும் செய்யும்.

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिन: ।।

( 92-வது பக்கம் 298-நெ. பார்க்க )

878. प्रणिपत्य

पराशरं मुनिवरं कृतपौर्वाह्णिकक्रियम् ।
मैत्रेय: परिपप्रच्छ प्रणिपत्याभिवाद्य च ।।

(விஷ்ணுபுராணம் - 1-1-1)

மைத்ரேயர் பராசரருக்கு நமஸ்காரத்தையும் அபிவாதநத்தையும் செய்து கேட்டார்.

879. यश्चाधर्मेण (பாரதம் சாந்திபர்வம் - 335-5)

முறைதப்பி எவன் உபதேசிக்கிறானோ, முறைதப்பி எவன்

கேட்கிறானோ, அவர்களிருவரில் ஒருவன் மரணத்தையடைகிறான், அல்லது மற்றவனிடத்தில் த்வேஷமுள்ளவனாக ஆகிறான்.

880. **स्वगुरूणाम्**

தன் சிஷ்யர்களுக்குத் தன் குருவைத் தெரியப்படுத்தாமலிருப்பது.

881. **ज्यौतिषम्** (சேஷதர்மம்)

எவன், ஜ்யோதிஷத்தையும், வியவஹாரத்தையும், பிராயச் சித்தத்தையும், வைத்யத்தையும், அந்தந்த சாஸ்திரமில்லாமல் சொல்லு கிறானோ, அவனைப் பிரும்மஹத்தி பண்ணினவனாகச் சொல்லுகிறார்கள்.

882. **पात्रस्थम्** (பௌஷ்கரம்)

தகுந்த பாத்திரத்தில் தன்னிடத்திலிருக்கும் ஆத்மஜ்ஞானத்தைக் கொடுத்துவிட்டு ஒருவன் உடம்பை விட்டுவிடவேண்டியது. ஜகத்துக்குக் காரணமான அந்த ஜ்ஞாநத்தைத் தகுந்த பாத்திரத்தில் கொடுக்காமல் மறைத்துவிட்டுப் போகக்கூடாது.

883. **व्यासप्रसादात्** (கீதை - 18-75)

ஜ்ஞாநம் முதலான குணங்களையுடைய கிருஷ்ணன் தானே சொன்ன இந்த உயர்ந்த யோகசாஸ்திரத்தை வியாஸருடைய அநுக் கிரஹத்தால் நான் நேரில் கேட்டேன்.

---

## தமிழ் வசனங்கள்

178. **என்னைத்தீ**

**வாமனனென்மரதகவண்ணன் தாமரைக்கண்ணி**
**னன் காமனைப்பயந்தாய் என்றென்றுன்கழல்பாடியே பணிந்து**
**தூமனத்தனனாய்ப் பிறவித்துழதிநீங்க, என்னைத்**
**தீமனங்கெடுத்தாயுனக்கென்செய்கேன் என்சிரீதரனே.**

( திருவாய்மொழி - 2-7-8 )

என்னைக் கெட்ட எண்ணம் இல்லாதவனாய்ச் செய்தாய், இதற்கு என்ன பதில் செய்வேன்.

---

### அரும்பதவுரை

மிடியனுக்கு — தரித்திரனுக்கு.

விழிகண் — கண்விழித்திருக்கையிலே கண் தெரியாதவன்.

அம்பலம் — மூடர்கள் கூடுமிடம்.

காலன்கொண்டு — காலபுருஷனைப்போல் செய்யப்பட்ட பொம்மையை தாநமாக வாங்கிக்கொண்டு.

வேரில்லாக்கொத்தான் — வேரில்லாமல் அந்தரத்தில் படரும் கொடி.

மிடுக்கு — மேன்மை.

---

## 32. நிகமநாதிகாரம்

### ஸம்ஸ்கிருத வசனங்கள்

यच्छ्रेयः स्यात्-

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वा धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥

(176-வது பக்கம் 764-நெ. பார்க்க)

884. सुव्याहृतानि (பாரதம் உத்யோகபர்வம் - 34-34)

பெரியோர்களுடைய நல்ல வார்த்தைகளையும் அவர்களுடைய நல்ல அநுஷ்டாநங்களையும் பார்த்து, அங்கங்கே இருந்து தனக்கு வேண்டியதை எடுத்துக்கொள்ளவேண்டியது. எப்படி இறைந்துகிடக்கிற நெல்லைப் பொருக்கிக்கொண்டு ருஷிகள் ஜீவிக்கிறார்களோ, அப்படி.

885. सूक्ष्मः परमदुर्ज्ञेयः सतां धर्मः प्लवङ्गम ! ।
हृदिस्थः सर्वभूतानामात्मा वेद शुभाशुभम् ॥

(ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் - 18-15)

குரங்கே ! பெரியோர்களுடைய தர்மமானது ஸூக்ஷ்மமானது. அதையறிவது மிகவும் கஷ்டம்.

886. धर्मस्य

तर्कोऽप्रतिष्ठः श्रुतयो विभिन्नाः नैको मुनिर्यस्य मतं प्रमाणम् ।
धर्मस्य तत्त्वं निहितं गुहायां महाजनो येन गतः स पन्था: ।।

(பார-ஆர - 314-119)

யுக்திகளுக்கு முடிவில்லை. வேதங்களோ வெவ்வேறாயிருக் கின்றன. எந்த ருஷிகளுடைய வாக்கியங்களைக் கொண்டு இது பிரமாண மென்று நிச்சயிக்கலாமோ, அவர்கள் அநேகர்கள். தர்மத்தினுடைய உண்மை குஹையில் வைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் பெரியோர்களான ஜநங்கள் எந்த வழி போகிறார்களோ, அதுதான் நல்ல வழி.

887. अणीयान् – न कल्माषो न कपिलो न कृष्णो न च रोहितः ।
अणीयान् क्षुरधारायाः को धर्मं वक्तुमर्हति ? ।।

(பாரதம் உத்யோகபர்வம் - 35-29)

கத்தியின் முனையைக் காட்டிலும் தர்மம் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. அது இன்னதென்று யார் சொல்லத் தகுந்தவன்.

888. धर्मशास्त्रं (போதாயன க்ருஹ்ய ஸூத்ரம் - 14-1-7 )

தர்மசாஸ்திரமாகிய ரதத்தில் ஏறி, வேதமாகிய கத்தியை வைத்துக் கொண்டிருக்கிற பிராம்மணர்கள் எதை விளையாட்டுக்காகச் சொல்லுகிறார் களோ, அது உயர்ந்த தர்மமாக எண்ணப் படுகிறது.

889. अविश्रान्तम् (பாரதம் சாந்திபர்வம் - 337-34 )

இளைப்பாறுகிற இடமும், ஊன்றிக்கொள்ள கழியும், பசிதீர்க்க சாப்பாடும், வழிகாட்டும் மனிதனுமில்லாமல் இருட்டினாலே போக முடியாமலும் இருக்கிற நரகத்துக்குப் போகும் வழியில் ஒருவன் எப்படித் தனியாகப் போகக்கூடும் ?

890. निष्पानीये (வங்கீபுரத்துநம்பி நித்யம் - 24)

குடிக்க ஜலமும், ஊன்றிக்கொள்ள கழியும், இளைப்பாற நிழலும், தங்கியிருக்க இடமுமில்லாமல் மிகவும் நீண்டதான துக்கத்தையுண்டு பண்ணுகிற யமனுடைய வீட்டுக்குப் போகும் வழியில்.

त्वं न्यञ्चद्भिः (17-வது பக்கம் 92-நெ. பார்க்க)

891. तेभ्यो विशिष्टां

सहोपनिषदान् वेदान् ये विप्राः सम्यगास्थिताः ।
पठन्ति विधिमास्थाय ये चापि यतिधर्मिणः ।
तेभ्यो विशिष्टां जानामि गतिमेकान्तिनां नृणाम् ।।

(பாரதம் சாந்திபர்வம் -358-6 )

ஏகாந்திகள் போகும் வழியை கீழே சொன்ன விஷ்ணு லோகம் முதலான உலகங்களுக்குப் போகும் வழிகளைக் காட்டிலும் உயர்ந்ததாக நான் அறிகிறேன்.

892. उत्क्रामति च

अथवा नेच्छते तत्र ब्रह्मकायनिषेवणम् ।
उत्क्रामति च मार्गस्थो नैव क्वचन जायते ।।
आत्मसिद्धिं समास्थाय शीतीभूतो निरामयः ।
अमृतं विरजाः शुद्धमात्मानं प्रतिपद्यते ।। (பாரதம் சாந்திப. - 194-27)

ஸம்ஸாரத்திலுண்டாயிருந்த தாபங்கள் போய், ஒருவிதமான துக்கங்களுமில்லாமல், தேவயாநம் என்கிற வழியில் நடக்கப் போகிறவனாய், ஜீவன் உடம்பிலிருந்து வெளிக்கிளம்புகிறான்.

893. देवयानः

யோகஞ்செய்கிறவர்களுக்கு க்லேசங்கள் போனபோது உயர்ந்ததான தேவயாநம் என்கிற வழி வருகிறது.

894. आत्मा केवलतां प्राप्तो यत्र गत्वा न शोचति ।
ईदृशं परमं स्थानं निरयास्ते च तादृशाः ।। (பாரதம் சாந்திப. -196-11)

ஜீவன் அவித்யையினால் விடபப்பட்டவனாய் எந்த இடத்தில் போய் துக்கப்படுகிறதில்லையோ, அந்த உயர்ந்த இடமானது இப்படிப்பட்டது. அப்படிப்பட்ட இடங்கள் நரகங்கள்போலிருக்கின்றன.

895. अत्यर्कानल ( பாரதம் ஆரண்யபர்வம் - 136-18 )

மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த இடமானது

ஸூரியனுடையவும் அக்கினியினுடையவும் பிரகாசத்தைக் காட்டிலும் அதிகமான பிரகாசத்தையுடையது. தன்னுடைய பிரகாசத்தாலேயே தேவர்களாலும் அஸுரர்களாலும் பார்க்கமுடியாததாயிருக்கிறது.

896. यत्र गत्वा (பாரதம் ஆரண்யபர்வம் - 136-23)

யோகத்தைச் செய்துமுடித்து அஜ்ஞாநம் மோஹம் இவைகளால் விடுபட்டவர்களான மஹாத்மாக்கள் எந்த இடத்திற்குப் போய் மறுபடியும் இந்த உலகத்திற்கு வருவதில்லையோ ? பாரதனே !

एते वै निर

रुद्रादित्यवसूनां च तथाऽन्येषां दिवौकसाम् ।
एते वै निरयास्तात ! स्थानस्य परमात्मनः ।।

( 41-வது பக்கம் 193-நெ. பார்க்க )

897. तत्प्रकाशित

तदोकोऽग्रज्वलनं तत्प्रकाशितद्वारो विद्यासामर्थ्या-
त्तच्छेषगत्यनुस्मृतियोगाच्च हार्दानुगृहीतः शताधिकया ।।

(ப்ரம்மஸூத்ரம் - 4-2-16)

ஹிருதயத்திலிருக்கிற ஹார்த்தனாலே காட்டப்பட்ட நாடியின் துவாரத்தின் வழியாய் வெளிக்கிளம்பி.

898. तत्प्रकाशितः (பாரதம் ஆரண்யபர்வம் - 44-13+16 )

பிறகு தங்கத்தாலும் ரத்நங்களாலும் அலங்கரிக்கப்பட்ட பெரிய ஸிம்மாஸநத்தில் மேருமலையின்மேலே ஒரு நீலமான மேகமிருந்ததுபோல் எழுந்தருளியிருக்கும் கிருஷ்ணனைக் கண்டார். அவர் திருமேனியினால் மிகவும் பிரகாசித்துக்கொண்டும் உயர்ந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டும், பொன்நிறமுள்ள பட்டைச் சாத்திக்கொண்டும், தங்கத்தின் மேலே இழைக்கப்பட்ட நீலரத்நம்போல் விளங்கியும், திருமார்பிலிருக்கிற கௌஸ்துபம் என்கிற மணியினால் விளங்கிக் கொண்டும், உதயமாகிற ஸூரியனால் சேர்க்கப்பட்ட மலைபோல் திருமுடியில் கிரீடத்தை வைத்துக்கொண்டும் இருந்தார். இப்படி இருப்பதனாலே மூன்று உலகங் களிலும் அவருக்கு உபமானமாகச் சொல்லத்தகுந்தவன் ஒருவனுமில்லை.

899. तं वैश्रवण (ராமாயணம் அயோத்யாகாண்டம் - 16-8-11)

மேலே விரிப்பையுடைய தங்கத்தினால் செய்யப்பட்ட ஸிம்மாஸ நத்தில் நல்ல அலங்காரத்துடன் குபேரனைப்போல் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமனை ஸுமந்திரர் பார்த்தார். பன்றி ரத்தம்போல் சிவந்ததாயும் சுத்த மாயும் நல்ல வாஸனையுள்ளதாயும் மிகவும் உயர்ந்ததாயுமுள்ள சந்தநத்தைப் பூசிக்கொண்டும், சாமரத்தைக் கையில் வைத்துக்கொண்டு, சித்திராநக்ஷத்ரம் சந்திரனைப் போலே பக்கத்தில் நின்றுகொண்டு இந்த ஸீதையுடன் கூடினவராய், பிரகாசித்துக் கொண்டிருக்கிற ஸூரியனைப்போல் தன்னுடைய தேஜஸ்ஸுடன் கூடினவராயிருந்த, சத்துருக்களை ஜயிக்கக்கூடிய, கேட்டதைக் கொடுக்கும் ஸ்ரீ ராமனை விநயம் தெரிந்த ஸுமந்திரர் ஸ்தோத்ரம் பண்ணி வணக்கத்துடன் நமஸ்காரம் செய்தார்.

---

## *தமிழ் வசனங்கள்*

ஒழிவில் ( 66-வது பக்கம் 52-நெ. பார்க்க )

---

## *அரும்பதவுரை*

புரிந்து — ஸம்ஸாரத்தை விட்டு விலகி.

நெஞ்சாரல் — துக்கம்.

பூட்டைக்குண்டிகை — ஏத்தச்சால்.

இறை — காணிக்கை.

---